உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியர்களாகிய

இம்மூவரும்

திருவாய்மலர்ந்தருளிய

தமிழ்வேதமாகிய

---

திருக்கைலாயபரம்பரைச்சந்தானகுரவருள் ஒருவராகிய

**உமாபதிசிவாசாரியசுவாமிகள்**

வகுத்தருளியவாறு,

ஷை கைலாயபரம்பரைத் தருமபுர ஆதீனம்

**ஸ்ரீலஸ்ரீ. சிவஞானதேசிகமூர்த்திகள்**

ஆஞ்ஞையின்படி,

திருப்பனந்தாட் காசிமடாதிபதி

**ஸ்ரீகாசிவாசி. சுவாமிநாதசுவாமிகள்**

விரும்பியவண்ணம்

திருமயிலை

திருமயிலை

**வி. சுந்தரமுதலியாரது**

விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விஜய ௵ சித்திரை ௴.



இதன் விலை ரூபா-௫.

Printed at K. R. Press —Madras

உ

சிவமயம்.

# திருமுறையினது வரலாறு.

புண்ணியபூமியாகிய பரதகண்டத்தில் சோழமண்டலத்திலே, பிறக்க முத்திதருந் தலமாகிய திருவாரூரின்கண், கல்வி, அறிவு, ஒழுக்கத்திலும், குரு லிங்க சங்கமபத்தியிலுஞ் சிறந்த அபயகுலசேகர சோழமகாராஜா பரமகருணாநிதியாகிய தியாகேசருடைய திருவருளினாலே வைதிகமாக்க முஞ் சைவமாக்கமுந் தழைத்தோங்கச் செங்கோல் நடாத்தி வ[illegible]க் லத்தில், அவர் சபைக்கு எழுந்தருளிவருஞ் சிவனடியார்கள், மூவ[illegible] பா ரத்திருப்பதிகங்களுள், ஒவ்வொன்று ஓதக்கேட்டு, ஆனந்தபரவசரா[illegible] தேவாரத்திருமுறையை எங்குந்தேடி, அகப்படாமையால் மனத்[illegible]ரங் கொண்டிருந்தனர்.

அப்போது, திருநாரையூரென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையாருக்குப் பூசைசெய்யும் ஆதிசைவரொருநாள் ஊருக்குப்போக, அவர் சற்புத்திரராகிய நம்பியாண்டார் நம்பி என்னும் சிறு பிள்ளை பொல்லாப் பிள்ளையாருக்கு அபிஷேக முதலியன வெல்லாஞ் செய்து, நைவேத்தியத்தை அவர் திருமுன் வைத்து, திருவமுதுசெய்த ருளும்படி பிரார்த்தித்தார். பொல்லாப்பிள்ளையார் திருவமுது செய்யாதிருப்பக்கண்டு, நம்பியாண்டார் நம்பி மனம் வெம்பி, அடியேன் நிவேதித் ததைத் திருவமுது செய்யாததென்னை என்று சொல்லிக்கொண்டு, தமது தலையைக் கல்லிலே மோதப்புகுந்தார். உடனே பொல்லாப்பிள்ளையார் "நம்பி பொறு" என்று தடுத்து, அந்நைவேத்திய முழுதையுந் திருவமுது செய்தருளி அவருக்கு ஆசிரியராய் வேதமுதலிய கலைகளெல்லாவற்றை யும் ஓதுவிக்க, நம்பியாண்டார்நம்பி மனமகிழ்ந்து நாடோறும் ஓதுவாராகி, அப்பிள்ளையார்மேல் "திருவிரட்டைமணிமாலை" பாடியருளினார்.

அதுசங்கதி அபயகுலசேகர சோழமகாராஜா கேள்வியுற்று மன மகிழ்ந்து, திருநாரையூரை யடைந்து, நம்பியாண்டார் நம்பியுடைய திரு வடிகளை வணங்கி, சுவாமீ, இங்குக்கொண்டுவந்திருக்கிற பழவர்க்க முதலிய வற்றைப் பொல்லாப்பிள்ளையாருக்கு நிவேதிக்கவேண்டும் என்று பிரா ர்த்திக்க, நம்பி பொல்லாப்பிள்ளையாரை வணங்கி, அவைகளெல்லாவற் றையும் நாற்சுத்திசெய்து படைக்க, பொல்லாப்பிள்ளையார் தமது துதி க்கையை நீட்டி அவைகளெல்லாவற்றையுந் திருவமுதுசெய்தருளினார்.

அதுகண்ட சோழமகாராஜா மனமகிழ்ந்து, நம்பியாண்டார் நம்பி யை வணங்கி, சுவாமி, சமயகுரவர் மூவர்கள் அருளிச்செய்த தமிழ் வேதமாகிய தேவாரத்திருமுறையும், திருத்தொண்டர்களுடைய சரித்தி ரமும் பூவுலகத்தில் விளங்கவேண்டும் என்று விண்ணப்பஞ்செய்தார். உடனே நம்பியாண்டார் நம்பி திருவுளமகிழ்ந்து, திருக்கோயிலினுள்ளே

## இப்போது உள்ள தேவாரத் திருப்பதிகத் தொகை.

| | ஸ்தலப்பதிகம். | பொதுப்பதிகம். | இரண்டின்றொகை. |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் | ௩௭௮ | ௭ | ௩௮௫. |
| திருநாவுக்கரசுநாயனார் | ௨௭௪ | ௩௭ | ௩௧௧. |
| சுந்தரமூர்த்திநாயனார் | ௯௬ | ௪ | ௧௦௦. |
| | ௭௪௮ | ௪௮ | ௭௯௬. |

இத்தேவாரத் திருப்பதிகங்கள் எழுநூற்றுத் தொண்ணூற்றாறும் அடங்கிய திருமுறை அடங்கன்முறை யெனப்படும்.

கலவி, அறிவு, ஒழுக்கங்களாற் சிறப்புற்று விளங்கிய சிவாலயமுனிவர் அவ்வடங்கன்முறையினது மகிமையையும், அதனை நாடோறும் விதிப்படி சிரத்தையோடு பாராயணஞ்செய்யின் முத்தி சித்திக்குமென்பதனையும் அறிந்து, தாம் அப்படிப் பாராயணஞ்செய்ய ஆசைகொண்டு, அது நிறைவேறுதல் கூடாமையால் வருத்தமுற்று, சிதம்பரத்தை அடைந்து, கனகசபையின்கண்ணே ஆனந்த தாண்டவஞ் செய்தருளும் சபாநாதரை வணங்கி, தமது கருத்து முற்றும்பொருட்டு நெடுங்காலம் அருந்தவஞ்செய்தார் அப்பொழுது சபாநாதருடைய திருவருளினாலே, "சிவாலயமுனிவனே, நீ பொதியமலையிலிருக்கின்ற அகத்தியமுனிவனிடத்துப் போவாயாயின் உன் கருத்து நிறைவேறும்" என்று ஓரசரீரிவாக்குத் தோன்றிற்று அதுகேட்ட சிவாலயமுனிவர் மனமகிழ்ந்து, சபாநாதரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, பொதியமலையை அடைந்து, அகத்தியமகாமுனிவரைச் சிந்தித்து, மூன்றுவருஷகாலம் அருந்தவஞ்செய்தார் அகத்தியமகாமுனிவர் அவருக்கு வெளிப்பட்டு, அடங்கன்முறை முழுதையும் அவருக்குபதேசித்து, அதினின்றும் இருபத்தைந்து திருப்பதிகங்களை எடுத்துத் திரட்டி, இவைகளை நாடோறும் பாராயணஞ்செய்பவர்கள் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ்செய்பவர்களாவர்கள் என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார் சிவாலயமுனிவர் அப்படியே அவ்விருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம்பாராயணஞ்செய்திருந்து, சிவபெருமானுடைய திருவருளைப்பெற்றார்

திருச்சிற்றம்பலம்.

### பகற்பண்.

புறநீர்மை, காந்தாரம், பியந்தைக்காந்தாரம், கௌசிகம், இந்தளம், தக்கேசி, சாதாரி, நட்டபாடை, நட்டராகம், பழம்பஞ்சுரம், காந்தாரபஞ்சமம், பஞ்சமம். ஆ ௧௨

### இராப்பண்.

தக்கராகம், பழந்தக்கராகம், சீகாமரம், கொல்லி, கொல்லிக்கௌவாணம், வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி, அந்தாளிக்குறிஞ்சி, குறிஞ்சி. ஆ ௯

### பொதுப்பண்.

செவ்வழி, செந்துருத்தி, திருத்தாண்டகம் ஆ ௩

ஆகப்பண் - ௨௪.

சிவமயம்

# தேவாரஸ்தலமுறை அட்டவணை

---

## இரண்டாம்பாகம்.

---

### காவேரிக்குத் தென்கரையில் உள்ள சிவஸ்தலப் பதிகங்கள்.

---

* இக்குறிப்புள்ள திருப்பதிகஙகளுககு அறபுதச சரிததிரசசுருககம சோகக பட்டிருக்கினறது.

இந்த ஸ்தலமுறைததேவாரம் முதறபாகததில, கஅக-வது பககம திருவேங் விக்குடியையும, இரணடாமபாகததில, கஉஅ-வது பககம திருததுருததியையு சோதது சுநதரமூாததிநாயனா அருளிச்செயத "மினனுமாமேக" மெனனும திரு பதிகம ஒனறே அவவிரணடிடததும பிரசுரிககபபடடிருககினறது.

சிவமயம்

# தேவார வைப்புஸ்தலங்கள்.

௧. திங்களூர்.
௨. நங்களூர்.
௩. தங்களூர்.
௪. எங்களூர்.
௫. பாசனூர்.
௬. நாசனூர்.
௭. ஈசனூர்.
௮. தேசனூர்.
௯. கூறனூர்.
௧௦. ஏறனூர்.
௧௧. தேறனூர்.
௧௨. பேறனூர்.
௧௩. காட்டூர்.
௧௪. மாட்டூர்.
௧௫. பூழியூர்.
௧௬. ஆழியூர்.
௧௭. வேலனூர்.
௧௮. மூலனூர்.
௧௯. நாலனூர்.
௨௦. வேங்கூர்.
௨௧. நாங்கூர்.
௨௨. பொன்னூர்.
௨௩. தென்னூர்.
௨௪. தாழையூர்.
௨௫. கூழையூர்.
௨௬. ஏழூர்.
௨௭. தோழூர்.
௨௮. விடங்களூர்.
௨௯. கடங்களூர்.
௩௦. முந்தையூர்.
௩௧. பந்தையூர்.
௩௨. மறையனூர்.
௩௩. நிறையனூர்.
௩௪. பிறையனூர்.
௩௫. இறைவனூர்.
௩௬. முதலவனூர்.
௩௭. நம்பனூர்.
௩௮. பாயஞ்ஞூர்.
௩௯. தேரூர்.
௪௦. பேரூர்.
௪௧. மாவூர்.
௪௨. பிடவூர்.
௪௩. கோவந்தபுத்தூர்.
௪௪. தேனூர்.
௪௫. ஆமாவூர்.
௪௬. அளப்பூர்.
௪௭. ஊற்றத்தூர்.
௪௮. மாற்றூர்.
௪௯. சேற்றூர்.
௫௦. நல்லாற்றூர்.
௫௧. ஏமப்பேற்றூர்.
௫௨. குன்றியூர்.
௫௩. செங்குன்றூர்.
௫௪. வெற்றியூர்.
௫௫. மூவலூர்.
௫௬. கருப்பூர்.
௫௭. தேவனூர்.
௫௮. ஏமநல்லூர்.
௫௯. பெருமூர்.
௬௦. பேராவூர்.
௬௧. வாதவூர்.
௬௨. வழுவூர்.
௬௩. நியமநல்லூர்.
௬௪. பொய்கைநல்லூர்.
௬௫. வடபேற்றூர்.
௬௬. கொடுங்கோளூர்.
௬௭. தகட்டூர்.
௬௮. துடையூர்.
௬௯. தக்களூர்.
௭௦. முழையூர்.
௭௧. வேளூர்.
௭௨. விளத்தூர்.
௭௩. துவையூர்.
௭௪. நாலூர்.
௭௫. தஞ்சையெழுமூர்.
௭௬. கூந்தலூர்.
௭௭. கச்சையூர்.
௭௮. பணங்காட்டூர்.
௭௯. கூரூர்.
௮௦. போற்றூர்.
௮௧. காற்றூர்.
௮௨. கறையூர்.
௮௩. பாட்டூர்.
௮௪. மூதூர்.
௮௫. பேறனூர்.
௮௬. அரணநல்லூர்.
௮௭. கொடுங்கோவலூர்.
௮௮. குழையூர்.
௮௯. பொய்கை.
௯௦. நெற்குன்றம்.
௯௧. நற்குன்றம்.
௯௨. திருமலை.
௯௩. பொதியின்மலை.
௯௪. மகாமேருமலை.
௯௫. உதயமலை.
௯௬. அத்தமயனமலை.
௯௭. மகேந்திரமலை.
௯௮. ஏமகூடமலை.
௯௯. கந்தமாதனமலை.
௧௦௦. விந்தமாமலை.
௧௦௧. சையமலை.
௧௦௨. நீலமலை.
௧௦௩. கொல்லிமலை.
௧௦௪. மந்தாரம்.
௧௦௫. இராப்பட்டீச்சுரம்.
௧௦௬. மயிண்டீச்சுரம்.
௧௦௭. திண்டீச்சுரம்.
௧௦௮. வெருளீச்சுரம்.
௧௦௯. மாகாளேச்சுரம்.
௧௧௦. அயனீச்சுரம்.
௧௧௧. அத்தீச்சுரம்.
௧௧௨. ஆடகேச்சுரம்.
௧௧௩. அகத்தீச்சுரம்.
௧௧௪. நந்திகேச்சுரம்.
௧௧௫. தேவீச்சுரம்.
௧௧௬. வேதீச்சுரம்.
௧௧௭. விவீச்சுரம்.
௧௧௮. ஏயீச்சுரம்.
௧௧௯. அக்கீச்சுரம்.
௧௨௦. குக்குடேச்சுரம்.
௧௨௧. நாகளேச்சுரம்.
௧௨௨. சோமேச்சம்.
௧௨௩. குருந்தங்குடி.
௧௨௪. மாணிகுடி.
௧௨௫. விடைவாய்க்குடி.
௧௨௬. கருந்திட்டைக்குடி.
௧௨௭. கடையக்குடி.
௧௨௮. செம்பங்குடி.
௧௨௯. புற்குடி.

௧௩௦. மத்தங்குடி.
௧௩௧. குத்தங்குடி.
௧௩௨. சாலைக்குடி.
௧௩௩. தனிச்சாத்தங்குடி.
௧௩௪. புதுக்குடி.
௧௩௫. தென்களக்குடி.
௧௩௬. நல்லக்குடி.
௧௩௭. கிளிகுடி.
௧௩௮. திருவணகுடி.
௧௩௯. மாகுடி.
௧௪௦. இடைப்பள்ளி.
௧௪௧. கொல்லி யறைப்பள்ளி.
௧௪௨. பரப்பள்ளி.
௧௪௩. பொருப்பள்ளி.
௧௪௪. தவப்பள்ளி.
௧௪௫. சிவப்பள்ளி.
௧௪௬. அறப்பள்ளி
௧௪௭. சிறப்பள்ளி
௧௪௮. நெடுவாயில்.
௧௪௯. நெய்தல்வாயில்.
௧௫௦. குணவாயில்.
௧௫௧. அண்ணல்வாயில்.
௧௫௨. ஞாழல்வாயில்.
௧௫௩. இடைக்குளம்.
௧௫௪. தஞ்சைத் தளிக்குளம்.
௧௫௫. பாற்குளம்.
௧௫௬. திருக்குளம்.
௧௫௭. வளைகுளம்.
௧௫௮. கஞ்சாறு.
௧௫௯. தெள்ளாறு.
௧௬௦. வெள்ளாறு.
௧௬௧. நாலாறு.
௧௬௨. பழையாறு.
௧௬௩. பூந்துறை.
௧௬௪. தவத்துறை.
௧௬௫. கோட்டுக்காடு.
௧௬௬. பனங்காடு.
௧௬௭. நிறைக்காடு.
௧௬௮. மிறைக்காடு.
௧௬௯. இறைக்காடு.
௧௭௦. தண்டலையாலங்காடு.
௧௭௧. ஞாழற்கோயில்.
௧௭௨. மணிக்கோயில்.
௧௭௩. கச்சிப்பலதளி.
௧௭௪. குரக்குத்தளி.
௧௭௫. ஆறைமேற்றளி.
௧௭௬. மாதானம்.
௧௭௭. இடைத்தானம்.
௧௭௮. நாறுணம்.
௧௭௯. தஞ்சாக்கை
௧௮௦. பஞ்சாக்கை.
௧௮௧. குருக்கேத்திரம்.
௧௮௨. விராடபுரம்.
௧௮௩. மாநிருபம்.
௧௮௪. சித்தவடம்.
௧௮௫. கொங்கணம்.
௧௮௬. காளிங்கம்.
௧௮௭. உஞ்சேனைமாகாளம்
௧௮௮. இடவை.
௧௮௯. பிரம்பில்
௧௯௦. மணற்கால்.
௧௯௧. கருமாரி
௧௯௨. களப்பாழ்
௧௯௩. காமபீலி.
௧௯௪. நாட்டுத்தஞ்சை.
௧௯௫. தஞ்சை.
௧௯௬. காரிக்கரை
௧௯௭. இறையான்சேரி.
௧௯௮. வாரணுசி.
௧௯௯. அசோகந்தி.
௨௦௦. தண்டந்தோட்டம்
௨௦௧. தண்டங்குறை.
௨௦௨. சடைமுடி.
௨௦௩. அரிச்சந்திரம்.
௨௦௪. பலிவலம்.
௨௦௫. மாநதி.
௨௦௬. குமரி.
௨௦௭. குலமங்கை
௨௦௮. புரிசை.
௨௦௯. சிக்காலி.
௨௧௦. திருவேட்டி.
௨௧௧. மணிமுத்தம்.
௨௧௨. கச்சிமயானம்.
௨௧௩. விளத்தொட்டி.
௨௧௪. உருத்திரகோடி.
௨௧௫. பாவநாசம்.
௨௧௬. கொண்டல்.
௨௧௭. கண்ணை.
௨௧௮. காறை.
௨௧௯. வளவி.
௨௨௦. நல்லாவூர்.
௨௨௧. திரிபுராந்தகம்.
௨௨௨. கோட்டுக்கா.
௨௨௩. மாகோணம்.
௨௨௪. சுரியல்.
௨௨௫. காவம்.
௨௨௬. வரந்தை.
௨௨௭. பசிலிளமா.
௨௨௮. நண்ணீர்.
௨௨௯. கோத்திட்டை.
௨௩௦. கரபுரம்.
௨௩௧. கிழையில்.
௨௩௨. கிழையம்.
௨௩௩. திருவாதிரையான்பட்டினம்.
௨௩௪. கீழைவழி.
௨௩௫. தேவன்குடி.
௨௩௬. கொடுமுடி.
௨௩௭. தென்கோடி.
௨௩௮. கொங்கு.
௨௩௯. கொழுநல்.
௨௪௦. பட்டி.
௨௪௧. கருகற்குரல்.
௨௪௨. பருத்திநியமம்.
௨௪௩. நல்வேலம்.
௨௪௪. மாகாளம்.
௨௪௫. பெருந்துறை.
௨௪௬. வடமாகறல்.
௨௪௭. படம்பக்கம்.
௨௪௮. அங்கணம்.
௨௪௯. ஆறை.

திருப்பதிகம்பெற்றசிவஸ்தலங்கள் - ௨௭௪ - உட்பட

ஆகத்தேவாரசிவஸ்தலங்கள் - ௫௨௩.

## திருவாசகம்பெறறஸ்தலங்கள்.

க. திருப்பெருந்துறை.
உ. திருவுததரகோசமஙகை. ஆ உ.

## திருவாசக வைபபுஸ் தலங்கள்.

க. கல்லாடம.
உ. பஞ்சபபள்ளி.
ங. நநதமபாடி.
ச. வேலமபுததூா.
ரு. தாபபணம.
சா. சாநதமபுததூா.
எ. மொக்கணி.
அ. பூவலம.
கூ. படடமஙகை.
க0. ஓரியூா.
கக. பாணடோ.
கஉ. மநதிரமாமலை. ஆ கஉ.

ஆகததிருவாசகஸதலஙகள - கச.

## திருவிசைபபாபபெறற ஸ்தலங்கள்.

க. திருவிடைககழி.
உ. திருககளநதையாதிதேசசரம.
ங. திருககீழககோடடோமணியமபலம.
ச. திருமுகததலை.
ரு. திரைலோககியசுநதரம.
சா. கஙகைகொணடசோளேசசரம.
எ. திருசசாடடியககுடி,
அ. தஞசையிராசராசேசசரம. ஆ அ.

அகத்தியமகாமுனிவர்

திரடடியருளிய

# தேவாரத்திரட்டினது

## திருபபதிகக்கருத்து.

நிலைமணடிலவாசிரியப்பா.

தோடு கூறறுப் பிததா மூனறும, பீடுடைத தேசிகன் பேரருளாகு
நீற்றுப பதிக நிகழுததுங காலை, மாறறுப பரையின வரலா றுருந
துஞசல காதல சொறறுணை மறறு, மஞசெழுத துணமை யருளிய தாகு
மாலூா திலலை காட்டு மூனறுஞ, சீரார கோயிற றிறமைய தாகு
மோருரு வரிய பானை வடிவே, மருவா ரென்ற வணடமி ழைநதும்
திருவாா மேனிச செயதிய தாகும, பொடியுடை யரவணை யநத ணாள
ணடியிணை தநத வருளே யாகும, பநது வேறறு கொனறிவை மூனறு
நநதலி லருசசனை நாட்டிய தாகும, வேயய குலந் திலலை யெனுமிவை மூன்று
நாயனு மடிமையு நாடடிய தாகு, மிப்பரி சகததிய முனிவ னிருநிலத
தொபபரு மூவ ரோதுதே வார, முழுதையுஞ சிவாலய முனிக்கறி வித்துப்
பழுதிலா வவையுட் பரிநதெடுத திருபத, தைநதுயா பதிகமு மறிவுறத் திரட்டி
யெண்ணரு மடஙக வியாவையு முணருமு, புணணியமிவைகொடு பொருந்துமென்ற
றனககருள செய்தனன றகவுற வதனுற, ரீதிலா வகததியத திரடடினை யுலகி [வன
லோதின ரடஙகலு மோதின ராவரே.

திருச்சிற்றமபலம்.

சிவமயம

திருச்சிற்றம்பலம

# திருப்பதிகக்கோவை.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம.

கோயிறிரு வேட்களநெல வாயிலகழிப பாலை குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முலலை, வாயிலகலிக காழூாசாயக காடுதிருப பலல வனீச்சரம வெண காடுவெளா திருககாட்டுப பள்ளி, தாயிலான குருகாவூா காழிகோ லக்கா தருககிளாபுள ளிருக்குமவே ளூாகணணா கோயின, ஞாயிலியற் கடைமுடியே நினறியூா புனகூா நாடியங் கேரனனி யூாவேளவிக குடியே ()

கருதெதிர்கொள பாடிமணஞ் சேரிதிருக கொறுக்கை கருபபறிய லூர்ககிடியே காட்டுகுரக குககா, மருவுமவாழ கொளிபுததுாா மணணிபடிக் கரையே வளருமோ மாமபுலியூா காளுடடு முளளூா, திருநாரை யூாகடம பூா பநதணநல லூாபொன நிகழகஞச ஞாகோடி காமஙகலக் குடியே, திருபபனநதா ளாபபாடி சேயஞலூா திருநது தேவனகுடி திருவியலூா திருக்கொடடையூரே. (உ)

இன்னமபா திருபபுறமப யமவிசய மஙகை யியலவைகா வூாநலவட குரங்காடு துறையே, பினனமறு பழனமை யாறுநெயத தானம பெரும புலியூா மழபாடி திருபபழூவூா காளூா, ரனனவனபி லாலநதுறை மாநது றைபாற் றுறையே யானைககா பைஞஞீலி பாசசிலாச சிராம, மனனுமீங கோயமலையி னேடறுபான மூனறே வடகறையிற பதிதெனபால வாட் போககி யாமே. (௩)

கடமபந்துறை திருபபராய்த்துறை கற்குடிமூக கீச்சரங கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறுமபி யூரே, நெடுஙகளமே லைககாட்டுப பளளியாலம பொழிலசிா நிகழதிருபபூந துருததிகணடி யூாசோறறுத துறைமா, லடும வேதி குடிதெனகுடித திடடைபுளள மஙகை யணியாாசக கரபபள்ளி யருங்கருகா வூரே, படாபாலைத துறைநலலூா திருவாவூ ரதனிற் பசுபதீச் சரஞ்சததி முற்றமபட டீசசரமே. (௪)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக் கதனிற்கீழ்க் கோட்டங் கா ரோணநா கேச்சரங, கூறுமிடை மருதுகுரங காடுதுறை நீலக குடிவை கன் மாடக்கோயி னலலஙகோ ழமபஞ, சாறமரா வடுதுறைதண டுருததி திரு வழூநதுாா சகமபுகழ்மா யூரமவிள னகாபறிய லூரே, வீறுசெமபொன் பள்ளிநனி பள்ளிவலமபுரமே வியன்றலைசசஙகாடாக்கூா விளஙகுகடவூரே.

திருக்கடவூா மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி தரு மபுர நள்ளாறு கோட்டா, றுரைககுமமபாப பெருநதிருக் கோயின்மாகாள முயர்மீயச் சூரிளங்கோ யிற்றிலதைப பதிபூ, மருக்கமழபாம புரநற்சிறு குடிவீழிமிழலை வனனியூா கருவிலிமன் பேணுபெருந துறையென, கருத் துடைக்கு நறையூாச்சித தீச்சரத்தோ டரிசொற கரைபபுத்துாா சிவபுரமுங் கலையநல்லூா காணே. (௬)

கருக்குடிவாஞ் சியநதிருநன னிலத்துப்பெருங் கோயில கவின்கொண டீச் சரமபனையூா விற்குடிதென புகலூா், ாிருக்குமவாதத மானேசசர மிரா மனதீச் சரமே யியலபயறறூா செஙகாடடங குடிமருக விருளே, முருக்கு திருச சாததமஙகை நாகைககாரோண முனறிருசசிக கற்றிருக்கீழ் வேளூா தே வூரே, யாிககாியான பள்ளியினமுக கூடறிரு வாரூ ராநெறிமூ லட் டானம பரவையுணமண டளியே. (எ)

மேலாகும விளமாகர வீரமபெரு வேளூா மிளிாதலையா லங்காடு குட வாயில சேறை, நாலூாம யானஙகடு வாயககரைப புததூா நவிலுமிரும பூளைதிரு வரதைப பெரும பாழி, மாலூரு மவளிவணல லூாபருதி நிய மம வாழ்வெணணி பூவனூா பாதாளேச சாீாச, சேலூருந திருககளாசிற் றேமமுசாத தானந திருவிடுமபா வனததோடு சோநதகடிக குளமே (அ)

தணடலைநீ ணெறிகோடடோ வெணடுறையோ டழகே தருகொள்ளம பூதூாபே ரெயிலகொளளிக காடு, கணடருதெங கூாநெலலிக்கா நாட்டியத தான குடியே காறுயில கனறுபபூா வலிவலஙகச சினதடேநா, டணடாபி ரான கோளிலிதென றிருவாயமூா மறைககா டகததியான் பள்ளிகோடிக் குழகருநதென கரையி, லெணடருநூற றிருபததே ழிபபாலீழததி லிசை கோண மாமலைகே தீசசரமென றிரணடே (கூ)

ஆலவா யாபபனூா பரஙகுன்றே டகததோ டருங்கொடுங்குன் றந திருபபுத தூாபுனவா யிலிஞ்ஞே, டேலுமிரா மேசசரமா டானைகானபபே ரெழிறறிருபபூ வணஞ்சுழிய லினபுறுகுற றுலம, பாலலோ சனன்றிருநெல வேலியொடு பாணடி பதினனகு மலைநாடடி லஞைசககள மொனறே, சீலமிகு மவிநாசி திருமுருகன பூணடி திருநணு கொடிமாடச செஙகுன் றூா தானே (கо)

வெஞ்சமாக கூடல்கொடு முடிகருவூா கொங்கின மேவுமே ழரத்து றைவண டீஙகானைமாட, மெஞ்சலில கூடலையாற றூரெருககத தமபுலியூ ாிணையகலுந திணைநகாசோ புரமதிகை 'புகழே, விஞசுதிரு நாவலூா முது குனறந திருநெல வெணணெயதிருக கோவலூா ரறையணிநல லூரே, மஞ சுதிக ழிடையாறு வெணணெயநலலூா துறையூா வடுகூாவீ டேயருளுந திருமாணி குழியே (கக)

தணஞாதண டலைபபாதி ாிபபுலியூா முணடீச சரமபுறவாா் பனங காட்டோ திருவாமாத தூரே, யெணஞரண ஞமலையு நடுநாட்டி லிருபத் திரணடாகு மிபபாலே கமபமேற றளிவிண, கணமேஞஙகு மதிலோண காநதன்றளி யனேக தங்காவ தஙகசசி நெறிககாரைக காடே, யுணஞடு குரங்கணின்முட் டநதிருமா கறலோத் தூாவனபாாத் தானபனஙகாட்டோ வலல மாற்பேறே. (கஉ)

ஊறலிலமபையஙகோட் டோ்விறகோல மாலஙகா டுயர்பாசூா வெண் பாக்கங கள்ளிலகா ளததி, மாறிறிரு வொறறியூா வலிதாயம பாலி வடமு லலை வாயிலவேற் காடுதிருமயிலை, யீறிறிரு வானமியூா கசசூரா லக்கோயி லிடைசசுரங் கழுககுன்ற மசசிறுபாக கமமே, மாறிறிரு வககரையே யரா சிலிதொல லிருமபை மாகாளந தொணடை நனாடடெணணிலமுபபா னிரணடே (கங)

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற் குலவுபருப் பதமலைப் பருப்பதமம் பிகைதன், பாகருறை யனேகதங்கா வதந்திருக்கேதாரம் பகா கொடித்தான மலைவடக்கிற் பதியைந்தே யிவற்றே, டாகவிருநூற்றெழுபா ஞன்கென்பா மூவ ரருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப்பு, தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள் சாராவாம் பிறப்பகலுஞ் சத்திய முத்தியுமே (௧௪)

திருச்சிற்றம்பலம்.

## சிவக்ஷேத்திரவிளக்கம்.

### தேவாரத்திருப்பதிகம்பெற்ற நாட்டின் சிவஸ்தலக்குறிப்பு.

ஈண்டுபுகழ்ச்சோணாட்டி லொருநூற்றுத்தொண்ணூறீழத்திரண்டு
பாண்டியிலீரேழ்மலைநாட் டொன்றுகொங்கேழ்மகத்தமிருபத்திரண்டு
பூண்டதொண்டை நன்னாட்டெண்ணான்குதுளு வொன்றுவடபுலத்தைந்தாக
வாண்டசிவஸ்தலமிருநூற்றெழுபத்துநான்குதொகையாகுமன்றே.

திருச்சிற்றம்பலம்.

## அட்டவீரட்டம்.

பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்
றேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.

இதன்கருத்து.

௧. திருக்கண்டியூர் - பிரமனது சிரங்கொய்ததலம்.
௨. திருக்கோவலூர் - அந்தகாசுரனைக் கொன்றதலம்.
௩. திருவதிகை - திரிபுரத்தை யெரித்ததலம்.
௪. திருப்பறியலூர் - தக்கனசிரத்தைத் தடிந்ததலம்.
௫. திருவிற்குடி - சலந்தரனைத் தலையரிந்ததலம்.
௬. திருவழுவூர் - யானையை யுரித்ததலம், இது வைப்புஸ்தலம்.
௭. திருக்குறுக்கை - மன்மதனை யெரித்ததலம்.
௮. திருக்கடவூர் - இயமனை யுதைத்ததலம். ஆக அ.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியர்களாகிய

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்
# திருநாவுக்கரசுநாயனார்
# சுந்தரமூர்த்திநாயனார்

இம்மூவரும்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரம்.

## ஸ்தலமுறை.

சோழநாட்டில் காவேரிக்கு வடகரையில் உள்ள ஸ்தலங்கள்.

## க. *கோயில்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-குறிஞ்சி. (௩. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றாவாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே (க)

பறப்பைப்படுத்தெங்குமபசுவேட்டெரியோம்புஞ்
சிறப்பர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
பிறபபில்பெருமானைபபின்றாழ்சடையானை
மறப்பிலார்கண்டீர்மையறீர்வாரே. (உ)

மையாரொண்கண்ணார்மாடநெடுவீதிக்
கையாற்பந்தோச்சுங்கழிசூழ்தில்லையுட்
பொய்யாமறைபாடல்புரிந்தானுலகேத்தச்
செய்யானுறைகோயில்சிற்றம்பலந்தானே. (௩)

நிறைவெண்கொடிமாடநெற்றிநேர்தீண்டப்
பிறைவந்திறைதாக்கும்பேரம்பலந்தில்லைச்
சிறைவண்டறையோவாச்சிற்றம்பலமேய
விறைவன்கழலேத்துமின்பமின்பமே. (௪)

* கோயில் என்பது சிதம்பரம்.

செல்வநெடுமாடஞ்சென்றுசேணோங்கிச்
செல்வமதிதோயச்செல்வமுயர்கின்ற
செல்வர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
செல்வன்கழலேத்துஞ்செல்வஞ்செல்வமே. (௫)

வருமாந்தளிர்மேனிமாதோர்பாகமாந்
திருமாந்தில்லையுட்சிற்றம்பலமேய
கருமானுரியாடைக்கறைசேர்கண்டத்தெம்
பெருமான்கழலல்லாற்பேணாதுள்ளமே. (௬)

அலையார்புனல்சூடியாகத்தொருபாக
மலையான்மகளோடுமகிழ்ந்தானுலகேத்தச்
சிலையாலெயிலெய்தான்சிற்றம்பலந்தன்னைத்
தலையால்வணங்குவார்தலையானார்களே. (௭)

கூர்வாளரக்கன்றன்வலியைக்குறைவித்துச்
சீராலேமல்குசிற்றம்பலமேய
நீரார்சடையானைநித்தலேத்துவார்
தீராநோயெல்லாந்தீர்தறிண்ணமே. (௮)

கோணாகணையானுங்குளிர்தாமரையானுங்
காணார்கழலேத்தக்கனலாயோங்கினான்
சேணார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேத்த
மாணாநோயெல்லாம்வாளாமாயுமே. (௯)

பட்டைத்துவராடைப்படிமங்கொண்டாடு
முட்டைக்கட்டுரைமொழிவகேளாதே
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
நட்டப்பெருமானைநாளுந்தொழுவோமே. (௧௦)

ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*ஆடினாய்நறுநெய்யொடுபாறயிரந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பலசடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயருளாய்சுருங்கவெமதொல்வினையே. (௧)

கொட்டமேகமழுங்குழலாளொடுகூடினாயெருதேறினாய்நுதல்
பட்டமேபுனைவாயிசைபாடுவபாரிடமா
நட்டமேநவில்வாய்மறையோர்தில்லைநல்லவர்பிரியாதசிற்றம்பல
மிட்டமாவுறைவாயிவைமேவியதென்னைகொலோ. (௨)

நீலத்தார்கரியமிடற்றார்நல்லநெற்றிமேலுற்றகண்ணினார்பற்று
சூலத்தார்சுடலைப்பொடிநீறணிவார்சடையார்
சீலத்தார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
கோலத்தாயருளாயுனகாரணங்கூறுதுமே. (௩)

கொம்பலைத்தழகெய்தியநுண்ணிடைக்கோலவாண்மதிபோலமுகத்திரண்
டம்பலைத்தகண்ணாண்முலைமேவியவார்சடையான்
கம்பலைத்தெழுகாமுறுகாளையர்காதலாற்கழற்சேவடிகைதொழ
வம்பலத்துறைவானடியார்க்கடையாவினையே. (௪)

தொல்லையாரமுதுண்ணநஞ்சுண்டதோர்தூமணிமிடறுபகுவாயதோர்
பல்லையார்தலையிற்பலியேற்றுழல்பண்டரங்கா
தில்லையார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழ
வில்லையாம்வினைதானெரியம்மதிலெய்தவனே. (௫)

ஆகந்தோயணிகொன்றையாயனலங்கையாயமராக்கமராவுமை
பாகந்தோய்பகவாபலியேற்றுழல்பண்டரங்கா
மாகந்தோய்பொழின்மல்குசிற்றம்பலமன்னினாய்மழுவாளினாயழ
னாகந்தோயரையாயடியாரைநண்ணாவினையே. (௬)

சாதியார்பளிங்கின்னொடுவெள்ளியசங்கவார்குழையாய்திகழப்படும்
வேதியாவிகிர்தாவிழவாரணிதில்லைதன்னு
ளாதியாய்க்கிடமாயசிற்றம்பலமங்கையாற்றொழவல்லடியார்களை
வாதியாதகலுந்நலியாமலிதீவினையே. (௭)

வேயினார்பணைத்தோளியொடாடலைவேண்டினாய்விகிர்தாவுயிர்கட்கமு
தாயினாயிடுகாட்டெரியாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற்புரமூன்றெய்தசெம்மையாய்திகழ்கின்றசிற்றம்பல
மேயினாய்கழலேதொழுதெய்துதுமேலுலகே. (௮)

தாரினார்விரிகொன்றையாய்மதிதாங்குநீள்சடையாய்தலைவநல்ல
தேரினார்மறுகிற்றிருவாரணிதில்லைதன்னுட்
சீரினால்வழிபாடொழியாததோர்செம்மையாலழகாயசிற்றம்பல
மேரினாலமர்ந்தாயுனசீரடியேத்துதுமே. (௯)

வெற்றரையுழல்வார்துவராடையவேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லா
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
வுற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே. (௧0)

நாறுபூம்பொழினண்ணியகாழியுணான்மறைவல்லஞானசம்பந்த
னூறுமின்றமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னு
ளேறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனையிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

* திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரைத் தரிசித்து, அத்திருப்பதியிலே எழுந்தருளியிருத்தற்கு அஞ்சி, திருவேட்களத்தில் இருந்துகொண்டே, சிதம்பரத்துக்கு வந்து சபாநாயகரைத் தரிசிப்பாராயினர். அப்படி யிருக்குநாளிலே, ஒருநாள் பிள்ளையார் வழக்கப்படி சிதம்பரத்தை அடைந்தபொழுது, சபாநாயகருடைய திருவருளினாலே தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் சிவகணநாதராய்த் தோன்றக் கண்டு அத்தன்மையைத் திருநீலகண்டப்பெரும்பாணருக்குங் காட்டினர். தில்லைவாழந்தணர்கள்

பிள்ளையாரைக் கண்டவுடனே வணங்க, பிள்ளையார் அவர்கள் வணங்குமுன் தாமும்வணங்கி, திருக்கோயிலிற் பிரவேசித்து, நடராஜரை வணங்கி, "ஆடினாய்நறுநெய்யொடுபாலுதயிர்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். அந்தத் திருப்பதிகத்திலே "நீலத்தார்கரியமிடற்றார்" என்னுந் திருப்பாட்டிலே தில்லைவாழந்தணரைத் தாங் கண்டபடி கூறி, அவர்கள் "தொழுதேத்து சிற்றம்பலம்" என்று அருளிச்செய்தார்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
யென்னம்பாலிக்குமாறுகண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே. (க)

அரும்பற்றப்படவாய்மலர்கொண்டுநீர்
சுரும்பற்றப்படத்தூவித்தொழுமினோ
கரும்பற்றச்சிலைக்காமனைக்காய்ந்தவன
பெரும்பற்றப்புலியூரெம்பிரானையே. (உ)

அரிச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீ
ரெரிச்சுற்றக்கிடந்தாரென்றயலவர்
சிரிச்சுற்றுப்பலபேசப்படாமுனந
திருச்சிற்றம்பலஞ்சென்றடைந்துய்ம்மினே. (௩)

அல்லலென்செயுமருவினையென்செயுந்
தொல்லைவல்வினைதொண்டன்றனென்செயுந்
தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோரடிமைபூண்டேனுக்கே. (௪)

ஊனிலாவியுயிர்க்கும்பொழுதெலா
நானிலாவியிருப்பனென்னாதனைத்
தேனிலாவியசிற்றம்பலவனார்
வானிலாவியிருக்கவும்வைப்பரே. (௫)

சிட்டர்வானவர்சென்றுவரங்கொளுஞ்
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலத்துறை
சிட்டன்சேவடிகைதொழச்செல்லுமச்
சிட்டர்பாலணுகான்செறுகாலனே. (௬)

ஒருத்தனாருலகங்கட்கொருசுடர்
திருத்தனார்தில்லைச்சிற்றம்பலவனார்
விருத்தனாரிளையார்விடமுண்டவெம்
மருத்தனாரடியாரையறிவரே. (௭)

விண்ணிறைந்ததோர்வெவ்வழலின்னுரு
வெண்ணிறைந்தவிருவர்க்கறிவொணாக்
கண்ணிறைந்தகடிபொழிலம்பலத்
துண்ணிறைந்துநின்றாடுமொருவனே. (அ)

வில்லைவட்டப்படவாங்கியவுணர்தம்
வல்லைவட்டம்மதின்மூன்றுடன்மாய்த்தவன்
றில்லைவட்டந்திசைகைதொழுவார்வினை
யொல்லைவட்டங்கடந்தோடுதலுண்மையே. (௯)

நாடிநாரணனான்முகனென்றிவர்
தேடியுந்திரிந்துங்காணவலலரோ
மாடமாளிகைசூழ்தில்லையமபலத்
தாடிபாதமென்னெஞ்சுளிருக்கவே. (௧௦)

மதுரவாய்மொழிமங்கையொர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்றிருமலை
யதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றடைந்துய்ம்மினே. (௧௧)

திருச்சிற்றமபலம.

திருக்குறுந்தொகை. (௫-ம திருமுறை )

திருச்சிற்றம்பலம.

பனைக்கைமும்மதவேழமுரித்தவ
னினைபபவாமனங்கோயிலாகக்கொணடவ
னனைத்துவேடமாமமபலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதுமமறநதுய்வனோ. (௧)

தீர்த்தனைச்சிவனைச்சிவலோகனை
மூர்த்தியைமுதலாயவொருவனைப்
பார்த்தனுக்கருள்செய்தசிறறமபலக்
கூத்தனைக்கொடியேன்மறநதுய்வனோ. (௨)

கட்டுமபாமபுங்கபாலங்கைமானமறி
யிட்டமாயிடுகாட்டெரியாடுவான்
சிட்டர்வாழ்திலலையமபலக்கூத்தனை
யெட்டனைபபொழுதும்மறநதுய்வனோ. (௩)

மாணிபாலகறந்தாட்டிவழிபட
நீணுலகெலாமாளக்கொடுத்தவ
னாணியைச்செம்பொனம்பலத்துண்ணின்ற
தாணுவைத்தமியேன்மறந்துய்வனோ. (௪)

பித்தனைப்பெருங்காடரங்காவுடை
முத்தனைமுளைவெணமதிசூடியைச்
சித்தனைச்செம்பொனம்பலத்துண்ணின்ற
வத்தனையடியேன்மறநதுய்வனோ. (௫)

நீதியைநிறைவைமறைநான்குட
னோதியையொருவர்க்குமறிவொணாச்
சோதியைச்சுடர்ச்செமபொனினம்பலத்
தாதியையடியேன்மறந்துய்வனோ. (௬)

மைகொள்கண்டனெண்டோளன்முக்கண்ணினன்
பைகொள்பாம்பரையார்த்தபரமனார்
செய்யமாதுறைசிற்றம்பலத்தெங்க
ளையனையடியேன்மறந்துய்வனோ. (எ)

முழுதும்வானுலகத்துள தேவர்க
ளொழுதுமபோற்றியுநதூயசெமபொன்னினு
லெழுதிமேய்ந்தசிற்றமபலக்கூத்தனை
யிழுதையேனமறந்தெங்ஙனமுய்வனே. (அ)

காருலாமலர்க்கொன்றையந்தாரனை
வாருலாமுலைமங்கைமணாளனைத்
தேருலாவியதில்லையுட்கூத்தனை
யாருலாவமுதைமறந்துய்வனோ. (கூ)

ஓங்குமாலவரையேந்தலுற்றான்சிரம
வீங்கிவிமமுறவூனறியதாளினன
றேங்குநீர்வயலசூழ்தில்லைக்கூத்தனைப்
பாங்கிலாததொண்டனேனமறந்துய்வனோ. (கல)

திருச்சிற்றமபலம்.

---

* திருநாவுக்கரசுநாயனார் சிதம்பர தரிசனஞ்செய்து, பின் திருவேட்களம், திருக்கழிப்பாலைகட்குச்சென்று, சிவதரிசனஞ்செயது பதிகமபாடி நீங்கி, வழியில் "பனைக்கை" என்று எடுதது "அமபலக்கூததனைத - தினைததனைபபொழுதும மறந்துய்வனோ" என்னும பதிகம பாடிக்கொண்டு மீணடும் தில்லையை அடைநதார.

---

திருநேரிசை

பண் - கொல்லி. (ச-ம். திருமுறை.)

---

திருச்சிற்றமபலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றததிளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமலகுசிறறமபலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே. (க)

ஏறனாரேறுதம்பாவிளநிலாவெறிக்குஞ்சென்னி
யாறனாராறுசூடியாயிழையாளோர்பாக
நாறுபூஞ்சோலைததில்லைநவின்றசிற்றமபலத்தே
நீறுமெய்பூசிநின்றுநீணெரியாடுமாறே. (உ)

சடையனார்சாந்தநீற்றர்தனிநிலாவெறிக்குஞ்சென்னி
யுடையனாருடைதலையிலுண்பதுமபிச்சையேற்றுக்
கடிகொள்பூந்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே.
யடிகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (௩)

பையரவசைத்தவல்குற்பணிநிலாவெறிக்குஞ்சென்னி
மையரிக்கண்ணியாளுமாலுமோர்பாகமாகிச்
செய்யெரிதில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
கையெரிவீசிநின்றுகனலெரியாடுமாறே. (ச)

ஓதினார்வேதம்வாயாலொளிநிலாவெறிக்குஞ்சென்னிப்
பூதனார்பூதஞ்சூழப்புலியுரியதளனார் தா
காதனார் தில்லைதன்னுணவின்றசிற்றம்பலத்தே
காதில்வெண்குழைகடாழக்கனலெரியாடுமாறே. (௫)

ஒருடம்பிருவராகியொளிநிலாவெறிக்குஞ்சென்னிப்
பாரிடம்பாணிசெய்யப்பயின்றவெம்பரமமூர்த்தி
காரிடந்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
பேரிடம்பெருகநின்றுபிறங்கெரியாடுமாறே. (௬)

முதற்றனிச்சடையைமூழ்கமுகிழ்நிலாவெறிக்குஞ்சென்னி
மதக்களிற்றுரிவைபோர்த்தமைந்தனைக்காணலாகு
மதத்துவண்டறையுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
கதத்ததோரரவமாடக்கனலெரியாடுமாறே. (எ)

மறையனாமழுவொன்றேந்திமணிநிலாவெறிக்குஞ்சென்னி
யிறைவனாரெம்பிரானாரேத்துவாரிடர்களபார
சிறைகொணீர்த்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
யறைகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (அ)

விருத்தனாய்ப்பாலனாகிவிரிநிலாவெறிக்குஞ்சென்னி
நிருத்தனார்நிருத்தஞ்செய்யநீண்டபுன்சடைகடாழக்
கருத்தனார்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
யருத்தமாமேனிதன்னோடனலெரியாடுமாறே. (௯)

பாலனாய்விருத்தனாகிப்பனிநிலாவெறிக்குஞ்சென்னிக்
காலனைக்காலாற்காய்ந்தகடவுளாரவிடையொன்றேறி
ஞாலமாந்தில்லைதன்னுணவின்றசிற்றம்பலத்தே
நீலஞ்சேர்கண்டனார்தாநீணெரியாடுமாறே. (௧௦)

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோன்றெரியவூன்றிநீடுருமபொழில்*கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுணமல்குசிற்றம்பலத்தே
யதிசயம்போலநின்றுவனலெரியாடுமாறே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருநேரிசை.

பண் - கொல்லி. (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய்ப்பாடமாட்டேனபரமனேபரமயோகீ
யெத்தினாற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டா
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
வத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே (௧)

கருத்தனைப்பாடமாட்டேன்காம்பனதோளிபங்கா
வொருத்தராலறியவொண்ணாத்திருவுருவுடையசோதீ
திருத்தமாந்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
நிருத்தநான்காணவேண்டிநேர்பட்வந்தவாறே. (௨)

---

* "நெதியில்" என்றும் பாடம்.

கேட்டிலேன்கிளைபிரியேன்கேட்குமாகேட்டியாகி
லூட்டினேனின்றன்பாதநெப்படநெஞ்சினுள்ளே
மாட்டினீர்வாளைபாயுமல்குசிற்றம்பலத்தே
கூட்டமாங்குவிமுலையாள்கூடநீயாடுமாறே. (௩)

சிந்தையைத்திகைப்பியாதேசெறிவுடையடிமைசெய்ய
வெந்தைநீயருளிச்செய்யாயாதுநானசெய்வதென்னே
செந்தியார்வேள்வியோவாத்தில்லைச்சிற்றம்பலத்தே
யந்தியும்பகலுமாடவடியிணையலசுங்கொல்லோ. (௪)

கண்டவாதிரிந்துநாளுங்கருத்தினானின்றன்பாதங்
கொண்டிருந்தாடிப்பாடிக்கூடுவன்குறிப்பினாலே
வண்டுபண்பாடுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
யெண்டிசையோருமேத்தவிறைவநீயாடுமாறே. (௫)

பார்த்திருந்தடியனேனான்பரவுவன்பாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னைமூவரின்முதல்வனென்ப
னேத்துவாரிடர்கடீர்ப்பாய்தில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன்கூத்துக்காண்பான்கூடநான்வந்தவாறே. (௬)

பொய்யினைத்தவிரவிட்டுப்புறமலாவடிமைசெய்ய
வையநீயருளிச்செய்யாயாதியேயாதிமூர்த்தி
வையகந்தன்னின்மிக்கமலகுசிற்றமபலத்தே
பையநுன்னாடல்காண்பான்பரமநான்வந்தவாறே. (௭)

மனத்தினார்திகைத்துநாளுமாணபலாநெறிகண்மேலே
கனைப்பராலென்செய்கேனோகறையணிகண்டத்தானே
தினைத்தனைவேதங்குன்றாத்திலலைச்சிற்றம்பலத்தே
யனைத்துநின்னிலயங்காணபானடியனேன்வந்தவாறே. (௮)

நெஞ்சினைத்தூய்மைசெய்துநினைக்குமாநினைப்பியாதே
வஞ்சமேசெய்தியாலோவானவர்தலைவனேநீ
மஞ்சடைச்சோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
யஞ்சொலாள்காணநின்றுவழகநீயாடுமாறே. (௯)

மண்ணுண்டமாலவனுமலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம்விருமபினாகாணமாட்டார்
திண்ணுண்டதிருவேமிக்கதில்லைச்சிற்றம்பலத்தே
பண்ணுண்டபாடலோடும்பரமநீயாடுமாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம்.

பண் - கொல்லி. (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பாளையுடைக்கமுகோங்கிப்பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந்தெறிவாழ்வயற்றில்லைதன்னு
ளாளவுடைக்கழற்சிற்றம்பலத்தரனாடல்கண்டாற்
பீளையுடைக்கண்களாற்பின்னைப்பேய்த்தொண்டர்காண்பதென்னே. (௧)

பொருவிடையொன்றுடைப்புண்ணியமூர்த்திபுலியதள
னுருவுடையம்மலைமங்கைமணாளனுலகுக்கெல்லாந்
திருவுடையந்தணர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
றிருவடியைக்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௨)

தொடுத்தமலரொடுதூபமுஞ்சாந்துங்கொண்டெப்பொழுது
மடுத்துவணங்குமயனொடுமாலுக்குங்காண்பரியான்
பொடிக்கொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவ
னுடுத்ததுகிலகண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௩)

வைச்சபொருணமக்காகுமென்றெண்ணிநமச்சிவாய
வச்சமொழிநதேனணிதில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபோநந்தியுந்தியின்மேலசைத்த
கச்சினழகுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௪)

செயஞ்ஞின்றநீலமலாகின்றதில்லைச்சிற்றம்பலவன்
மைஞ்ஞின்றவொண்கணமலைமகள்கண்டுமகிழ்ந்துநிற்க
செய்ஞ்ஞின்றெரியும்விளக்கொத்தநீலமணிமிடற்றான்
கைஞ்ஞின்றவாடலகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௫)

ஊனத்தைநீக்கியுலகறியவென்னையாட்கொண்டவன்
றேனைத்தெனக்கினியான்றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தவருய்யவன்னஞ்சையுண்டகண்டத்திலங்கு
மேனத்தெயிறுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௬)

தெரித்தகணையாற்றிரிபுரமூன்றுஞ்செந்தீயின்மூழ்க
விரித்தவிறைவனிமையவர்கோமானிணையடிக
டரித்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௭)

சுற்றுமமராசுரபதிநின்றிருப்பாதமல்லாற்
பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டான்
செற்றங்கநங்கனைத்தீவிழித்தான்றில்லையம்பலவ
னெற்றியிற்கண்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௮)

சித்தத்தெழுந்தசெழுங்கமலத்தன்னசேவடிகள்
வைத்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்துமவயிரமுமாணிக்கந்தன்னுள்விளங்கியதூ
மத்தமலர்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௯)

தருக்குமிகுத்துத்தன்றோள்வலியுன்னித்தடவரையை
வரைகைகளாலெடுத்தார்ப்பமலைமகள்கோன்சிரித்து
வரக்கனமணிமுடிபத்துமணிதில்லையம்பலவ
னெருக்கிமிதித்தவிரல்கண்டகண்கொண்டுகாண்பதென்னே, (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை)

---

### திருச்சிற்றம்பலம்.

*கருநட்டகண்டனையண்டத்தலைவனைக்கற்பகத்தைச்
செருநட்டமும்மதிலெய்யவல்லானைச்செந்தீமுழங்கத்
திருநட்டமாடியைத்தில்லைக்கிறையைச்சிற்றம்பலத்துப்
பெருநட்டமாடியைவானவர்கோனென்றுவாழ்த்துவனே. (௧)

ஒன்றியிருந்துநினைமின்களுந்தமக்கூனமில்லைக்
கன்றியகாலனைக்காலாற்கடிந்தானடியவர்க்காய்ச்
சென்றுதொழுமின்கடில்லையுட்சிற்றம்பலத்துநட்ட
மென்றுவந்தாயென்னுமெம்பெருமான்றன்றிருக்குறிப்பே. (௨)

கன்மனவீர்கழியுங்கருத்தேசொலிக்காண்பதென்னே
நன்மனவாநவிறில்லையுட்சிற்றம்பலத்துநட்டம்
பொன்மலையில்வெள்ளிக்குன்றதுபோலப்பொலிந்திலங்கி
யென்மனமேயொன்றிப்புக்கனன்போந்தசுவடில்லையே. (௩)

குனித்தபுருவமுங்கொவ்வைச்செவ்வாயிற்குமிண்சிரிப்பும்
பனித்தசடையும்பவளம்போன்மேனியிற்பால்வெண்ணீறு
மினித்தமுடையவெடுத்தபொற்பாதமுங்காணப்பெற்றான்
மனித்தப்பிறவியும்வேண்டுவதேயிந்தமாநிலத்தே. (௪)

வாய்த்ததுநந்தமக்கீதோர்பிறவிமதித்திடுமின்
பார்த்தற்குப்பாசுபதமருள்செய்தவன்பத்தருள்ளீர்
கோத்தன்றுமுப்புரந்தீவளைத்தான்றில்லையம்பலத்துக்
கூத்தனுக்காட்பட்டிருப்பதன்றோநந்தங்கூழைமையே. (௫)

பூத்தனபொற்சடைபொன்போன்மிளிரப்புரிகணங்க
ளார்த்தனகொட்டியரித்தனபல்குறட்பூதகண
ந்தேத்தெனவென்றிசைவண்டுகள்பாடுசிற்றம்பலத்துக்
கூத்தனிற்கூத்துவல்லாருளரோவென்றன்கோல்வளைக்கே. (௬)

முடிகொண்டமத்தமுமுக்கண்ணினோக்குமுறுவலிப்புந்
துடிகொண்டகையுந்துதைந்தவெண்ணீறுஞ்சுரிகுழலாள்
படிகொண்டபாகமும்பாய்புலித்தோலுமென்பாவிநெஞ்சிற்
குடிகொண்டவாதில்லையம்பலக்கூத்தன்குரைகழலே. (௭)

படைக்கலமாகவுன்னாமத்தெழுத்தஞ்சென்னாவிற்கொண்டே
னிடைக்கலமல்லேனெழுபிறப்புமுனக்காட்செய்கின்றேன்
றுடைக்கினும்போகேன்றொழுதுவணங்கித்தூநீறணிந்துன்
னடைக்கலங்கண்டாயணிதில்லைச்சிற்றம்பலத்தரனே. (௮)

பொன்னொத்தமேனிமேல்வெண்ணீறணிந்துபுரிசடைகண்
மின்னொத்திலங்கப்பலிதேர்ந்துழலும்விடங்கவேடச்
சின்னத்தினான்மலிதில்லையுட்சிற்றம்பலத்துநட்ட
மென்னத்தனாடல்கண்டின்புற்றதாலிவ்விருநிலமே. (௯)

சாடவெடுத்ததுதக்கன்றன்வேள்வியிற்சந்திரனை
வீடவெடுத்ததுகாலனைநாரணனான்முகனும்
தேடவெடுத்ததுதில்லையுட்சிற்றம்பலத்துநட்ட
மாடவெடுத்திட்டபாதமன்றோநம்மையாட்கொண்டதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

*திருநாவுக்கரசுநாயனார் சிதம்பர க்ஷேத்திரத்தை அடைந்து, திருச்சிற்றம்பலத்திலே திருநிருத்தஞ் செய்தருளுகின்ற சபாநாயகரைத் தரிசித்து விழுந்து நமஸ்கரித்து எழுந்து, இரண்டு கைகளும் சிரசின்மேலேறிக் குவிய, இரண்டு கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சொரிய, அக்கினியிற்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருக, என்றுவந்தாய் என்னுந் திருக்குறிப்போடு நடனஞ் செய்கின்ற சுவாமியுடைய திருநயனத்தினின்றும் பொழிகின்ற திருவருளாலாகிய ஆனந்த மேலீட்டினாலே "கருநட்டகண்டனை" என்னுந் திருவிருத்த முதலியவற்றைப் பாடினார். அத்திருப்பதிகத்திலே "ஒன்றியிருந்து" என்னுந் திருப்பாட்டிலே, நடராஜர் தமக்குக் காட்டியருளிய திருக்குறிப்பை "தில்லையுட் சிற்றம்பலத்து நட்டமென்று வந்தாயென்னு மெம்பெருமான்றன் திருக்குறிப்பே" என்று அருளிச் செய்தார்.

## பெரிய திருத்தாண்டகம் (௬-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானை
யருமறையினகத்தானையணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்
திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்
கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௧)

கற்றானைக்கங்கைவார்சடையான்றன்னைக்
காவிரிசூழ்வலஞ்சுழியுங்கருதினானை
யற்றார்க்குமலந்தார்க்குமருள்செய்வானை
யாரூரும்புகுவானையறிந்தோமன்றே
மற்றொருவர்தன்னொப்பாரில்லாதானை
வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தப்
பெற்றானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௨)

கருமானினுரியதளேயுடையாவீக்கிக்
கனைகழல்கள்கலந்தொலிப்பவனல்கையேந்தி
வருமானத்திரடோள்கண்மட்டித்தாட
வளர்மதியஞ்சடைக்கணிந்துமானேநோக்கி
யருமானவாண்முகத்தாளமர்ந்துகாண
வமரர்கணமுடிவணங்கவாடுகின்ற
பெருமானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௩)

அருந்தவர்கடொழுதேத்துமப்பன்றன்னை
யமரர்கடம்பெருமானையரனைமூவா
மருந்தமரர்க்கருள்புரிந்தமைந்தன்றன்னை
மறிகடலுங்குலவரையும்மண்ணும்விண்ணுந்
திருந்தொளியதாரகையுந்திசைகளெட்டுந்
திரிசுடர்களோரிரண்டும்பிறவுமாய
பெருந்தகையைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௪)

அருந்துணையையடியார்தமல்லறீர்க்கு
மருமருந்தையகன்ஞாலத்தகத்துட்டோன்றி
வருந்துணையுஞ்சுற்றமும்பற்றுமவிட்டு
வான்புலன்களகத்தடக்கிமடவாரோடும்
பொருந்தணைமேல்வரும்பயனைப்போகமாற்றிப
பொதுநீக்கித்தனைநினையவல்லோர்க்கென்றும
பெருந்துணையைப்பெரும்பற்றப்புலியூரானைப
பேசாதநாளெல்லாமபிறவாநாளே. (௫)

கரும்பமருமொழிமடவாள்பங்கன்றன்னைக்
கனவயிரக்குன்றனையகாட்சியானை
யரும்பமருமபூங்கொன்றைத்தாரான்றனனை
யருமறையோடாறங்கமாயினானைச்
சுரும்பமருங்கடிபொழிலகள்சூழ்தென்னாரூர்ச்
சுடாக்கொழுந்தைத்துளக்கிலாவிளக்கைமிக்க
பெரும்பொருளைபபெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாமபிறவாநாளே. (௬)

வரும்பயனையெழுநரம்பினோசையானை
வரைசிலையாவானவர்கண்முயன்றவாளி
யரும்பயஞ்செயவுணாபுரமெரியக்கோத்த
வம்மானையலைகடனஞ்சயின்றான்றன்னைச்
சுரும்பமருங்குழன்மடவார்கடைக்கணோக்கிற்
றுளங்காதசிந்தையராய்த்துறந்தோருள்ளப
பெருமபயனைப்பெரும்பற்றப்புலியூரானைப
பேசாதநாளெலலாமபிறவாநாளே. (௭)

காரானையீருரிவைப்போர்வையானைக்
காமருபூங்கச்சியேகம்பன்றன்னை
யாரேனுமடியவர்கட்கணியான்றன்னை
யமரர்களுக்கறிவரியவளவிலானைப்
பாரோரும்விண்ணோரும்பணியநட்டம்
பயில்கின்றபரஞ்சுடரைப்பரனையெண்ணில்
பேரானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௮)

முற்றாதபான்மதியஞ்சூடினானை
மூவுலகுந்தானாயமுதல்வன்றன்னைச்

செற்றார்கள்புரமூன்றுஞ்செற்றான்றன்னைத்
திகழொளியைமரகதத்தைத்தேனைப்பாலைக்
குற்றாலத்தமர்ந்துறையுங்குழகன்றன்னைக்
கூத்தாடவல்லானைக்கோனைஞானம்
பெற்றார்கள்பெருமபற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௯)

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்
கடிக்கமலத்திருந்தயனுங்காணாவண்ணஞ்
சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்
திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கு
மேரொளியையிருநிலனும்விசும்பும்விண்ணு
மேழுலகுங்கடந்தண்டத்தப்பானின்ற
பேரொளியைபபெருமபற்றப்புலியூரானைப்
பேசாதநாளெலலாமபிறவாநாளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

புக்க திருத்தாணடகம. (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மங்குன்மதிதவழுமாடவீதி
மயிலாபபிலுள்ளாரமருகலுள்ளார்
கொஙகிற்கொடுமுடியாகுற்றாலத்தா
குடமூக்கிலுள்ளார்போய்க்கொள்ளம்பூதூர்த்
தங்குமிடமறியாசாலநாளார்
தருமபுரத்துள்ளாரதக்களூரார்
பொங்குவெண்ணீறணிந்துபூதஞ்சூழப்
புலியூரச்சிற்றம்பலமேபுக்காரதாமே. (௧)

நாகமரைக்கசைத்தநம்பரிந்நா
ணனிபள்ளியுள்ளார்போய்நல்லூர்த்தங்கிப்
பாகப்பொழுதெலாம்பாசூர்த்தங்கிப்
பரிதிநியமத்தார்பன்னிருநாள்
வேதமும்வேள்விப்புகையுமோவா
விரிநீர்மிழலையெழுநாட்டங்கிப்
போகமும்பொய்யாப்பொருளுமானா
புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே. (௨)

துறங்காட்டியெல்லாம்விரித்தார்போலுந்
தூமதியுமபாம்புமுடையார்போலு
மறங்காட்டிமும்மதிலுமெய்தார்போலு
மந்திரமுந்தந்திரமுந்தாமேபோலு
மறங்காட்டியந்தணர்க்கன்றாலக்கீழ
லறமருளிச்செய்தவாறிங்காட்
புறங்காட்டெரியாடிப்பூதஞ்சூழப்
புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே. (௩)

வாரேறுவனமுலையாள்பாகமாக
மழுவாள்கையேந்திமயானத்தாடிச்
சீரேறுதணவயல்சூழோதவேலித்
திருவாஞ்சியத்தார்திருநள்ளாற்றார்
காரேறுகண்டத்தார்காமற்காய்ந்த
கணவிளங்குநெற்றியாகடலஞ்சுண்டார்
போரேறுதாமேறிப்பூதஞ்சூழப்
புலியூர்ச்சிற்றமபலமேபுக்கார்தாமே. (ச)

காராகமழ்கொன்றைக்கண்ணிசூடிக்
கபாலங்கையேந்திக்கணங்கள்பாட
வூராரிடுபிச்சைகொண்டுழலு
முத்தமராய்நின்றவொருவனார்தாஞ்
சீரார்கழல்வணங்குநதேவதேவர்
திருவாரூாத்திருமூலட்டானமேயார்
போராரவிடையேறிபபூகஞ்சூழப்
புலியூாச்சிற்றமபலமேபுக்காாதாமே. (ரு)

காதார்குழையினர்கட்டங்கத்தர்
கயிலாயமாமலையாாகாரோணத்தார்
மூதாயாமூதாதையிலலாாபோலு
முதலுமிறுதியுந்தாமேபோலு
மாதாயமாதாமகிழவன்று
வனமதவேடனுடலங்காய்ந்தாாிகாட்
போதாாசடைதாழபபூதஞ்சூழப்
புலியூர்சசிறறமபலமேபுக்கார்தாமே. (சா)

இறந்தாாக்குமென்றுமிறவாதார்க்கு
மிமையவாக்குமேகமாயநின்றுசென்று
பிறந்தாாக்குமென்றுமபிறவாதாாக்கும
பெரியான்றனபெருமையேபேசநின்று
மறநதாாமனத்தென்றுமருவாாபோலு
மறைக்காட்டுறையுமழுவாட்செல்வர்
புறநதாழ்சடைதாழபபூதஞசூழப்
புலியூாசசிற்றமபலமேபுக்கார்தாமே. (எ)

குலாவெண்டலைமாலையென்புபூண்டு
குளிாகொனறைத்தாரணிந்துகொல்லேறேறிக்
கலாவெங்களிற்றுரிவைபபோாவைமூடிக்
கையோடனலேநதிக்காடுறைவாா
நிலாவெணமதியுரிஞ்சநீணடமாட
நிறைவயலசூழ்நெய்த்தானமேயசெல்வர்
புலால்வெண்டலையேந்திபபூதஞ்சூழப்
புலியூாசசிற்றமபலமேபுக்கார்தாமே. (அ)

சந்தித்தகோவணத்தர்வெண்ணூன்மார்பர்
சங்கரனைக்கண்டீரோகண்டோமிகாட்

பாதித்தவெள்விடையைப்பாயவேறிப
படுதலையிலென்கொலோவேந்திக்கொண்டு
வாதிங்கென்வெள்வளையுந்தாழுமெல்லா
மணியாரூரானறந்திகொள்ளக்கொள்ளப
பொன்றீமணிவிளக்குப்பூதம்பற்றப்
புலியூர்ச்சிற்றமபலமேபுக்கார்தாமே. (கூ)

பாதங்கணல்லார்பரவியேத்திப்
பதிமையாற்பணிசெய்யுந்தொண்டர்தங்க
ளேதங்கடீரவிருந்தாரபோலு
மெழுபிறப்புமாளுடையவீசனாதாம
வேதங்களோதியோர்வீணையேந்தி
விடையொன்றுதாமேறிவேதகீதா
பூதங்களசூழபபுலிததோலவிக்கிப
புலியூரச்சிறறமபலமேபுக்காாதாமே. (கக)

பட்டுடுத்துததோலபோாத்துபபாமபொன்றூர்த்துப்
பகவனாபாரிடங்கள்சூழநடடஞ்
சிட்டராய்ததீயேநதிசசெலவாாதமமைத
தில்லைசசிறறமபலத்தேகண்டோமிநாள்
விட்டிலங்குசூலமேவெண்ணூலுணடே
யோதுவதுமவேதமேவீணையுண்டே
கடடஙகஙகையதேசென்றுகாணீா
கறைசேர்மிடறறெஙகபாலியாாக்கே. (கக)

திருசசிற்றமபலம.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண - குறிஞ்சி. (எ-ம. திருமுறை)

---

திருச்சிற்றம்பலம.

*மடித்தாடுமடிமைக்கணன்றியேமனனேநீவாழுநாளுந
தடுத்தாட்டித்தருமனாாதமர்செக்கிலிடும்போதுதடுததாட்கொள்வான்
கடுத்தாடுகரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாமபும்
பிடித்தாடிபபுலியூாசசிற்றமபலத்தெமபெருமானைப்பெற்றாமன்றே. (க)

போராதுகாமத்திற்சென்றாற்போலன்றியேபிரியாதுள்கிச்
சீராாநதவன்பாாய்ச்சென்றுமுன்னடிவீழுந்திருவினாரை
யோராதுதருமனார்தமாசெக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
பேராளர்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே. (உ)

நரியாாதங்கள்ளத்தாற்பக்கானபரிசொழிந்துநாளுமூழ்கிப்
பிரியாதவன்பாாய்ச்சென்றுமுன்னடிவீழுஞ்சிந்தையாரைத்
தரியாதுதருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
பெரியோர்கள்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமனறே. (ந)

கருமையாற்றருமனார்தமாகம்மைக்கட்டியகட்டறுபபிப்பானை
யருமையாகதன்னுலகந்தருவானை மண்ணுலகங்காவலபூண்ட
வுரிமையாற்பல்லவர்க்குத்திறைகொடாமன்னவரைமறுக்கஞ்செய்யும்
பெருமையார்புலியூர்ச்சிற்றமபலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே. (ச)

கருமானினுரியாடைச்செஞ்சடைமேல்வெண்மதியக்கண்ணியானை
யுருமன்னகூற்றத்தையுருண்டோடவுதைத்துகந்துவுலவாவின்பந
தருவானைத்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
பெருமானாபுலியூாச்சிற்றமபலத்தெம்பெருமானைபபெற்றாமன்றே. (ரு)

உய்த்தாடித்திரியாதேயுள்ளமேயொழிகண்டாயூன்கணோட்ட
மெத்தாலுங்குறைவில்லையென்பர்காணெஞ்சமேநம்மைநாளும்
பைத்தாடுமரவினன்படாசடையன்பரஞ்சோதிபாவந்தீர்க்கும
பித்தாடிபுலியூர்ச்சிற்றமபலத்தெம்பெருமானைபபெற்றாமனறே. (சு)

முட்டாதமுச்சந்திமூவாயிரவர்க்குமூர்த்தியென்னப்
பட்டானைபபத்தாய்ப்பாவிப்பாாபாவமும்வினையுமபோக
விட்டானை மலையெடுத்தவிராவணனைத்தலைபத்துநெரியக்காலாற
றொட்டானைபபுலியூர்ச்சிற்றம்பலத்தெமபெருமானைப்பெற்றாமன்றே. (எ)

கற்றானுங்குழையுமாறன்றியேகருதுமாகருதுகிற்றார்க்
கெற்றாலுங்குறைவிலலையென்பாகாணுள்ளமேநமமைநாளுஞ்
செற்றாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
பெற்றேறிப்புலியூாச்சிற்றமபலதெமபெருமானைபபெற்றாமன்றே. (அ)

நாடுடையநாதன்பாலன்றென்றுஞ்செய்மனமேநம்மைநாளுந்
தாடுடையதருமனாதமாசெக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
மோடுடையசமணாக்குமுடையுடையசாக்கியாக்குமூடமவைத்த
பீடுடையபுலியூாச்சிற்றமபலத்தெமபெருமானைப்பெற்றாமனறே. (கூ)

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனாதமாசெக்கிலிடுமபோதுதடுத்தாட்கொள்வா
னாரூரன்றமபிரானாரூரன்மீகோங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூராபெருமானைப்புலியூாச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

ஆகக்கோயிற்றிருப்பதிகம் - கக.

---

சுவாமி - சபாநாயகர், திருமூலநாயகர்.

தேவி - சிவகாமியம்மை, உமையம்மை.

---

* சுந்தரமூர்த்திநாயனார், கொங்கநாட்டிலே, விராட்புருடனுக்கு லிங்கஸ்தானமாய், தக்ஷிணகைலாசம், பிப்பிலாரணியம், மேலைச்சிதம்பரம் என்பன முதலாகிய திருநாமங்களை யுடைத்தாய் விளங்கும் திருப்பேரூரை அடைந்து, அங்கே சிவபிரான், அரிபிரமராதியோர்க்கு ஆனந்தத் தாண்டவஞ் செய்துகாட்டிய இரசிதசபையிலே, விராட்புருடனுக்கு இருதயஸ்தானமாய் விளங்கும் சிதம்பரத்தின் கண்ணதாகிய கனகசபையிலே, நடனஞ்செய்யும் திருக்கோலத்தைத் தமக்குக்காட்டக்கண்டு, வணங்கிப் பேரானந்தக் கடலின் மூழ்கி, மீண்டு சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரை நமஸ்கரித்து, "மடித்தாடு மடிமைக்க ணன்றியே" என்னுந் திருப்பதிகம் பாடினார். தாம் சபாநாதருடைய

திருவொளிகாணியபேதுறுகின்றதிசைமுகனுந்திசைமேலளந்த
கருவரையேந்தியமாலுங்கைதொழநின்றதுமல்லா
லருவரையொல்கவெடுத்தவரக்கனாடெழிற்றோள்களாழத்தழுந்த
வெருவுறவூன்றியபெம்மான்வேட்களநன்னகராரே. (௯)

அத்தமண்டோய்துவராரமண்குண்டர்யாதுமல்லாவுரையேயுரைத்துப்
பொய்த்தவம்பேசுவதல்லாற்புறனுரையானொன்றுங்கொள்ளேன
முத்தனவெண்முறுவல்லுமையஞ்சமூரிவல்லானையினீருரிபோர்த்த
வித்தகவேதமுதல்வர்வேட்களநன்னகராரே. (௧௦)

விண்ணியன்மாடம்விளங்கொளிவீதிவெண்கொடியெங்கும்விரிந்திலங்க
நண்ணியசீர்வளர்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
பெண்ணினல்லாளொருபாகமமர்ந்துபேணியவேட்களமேன்மொழிந்த
பண்ணியல்பாடல்வல்லார்கள்பழியொடுபாவமிலரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

திருக்குறுந்தொகை (ரு-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

நன்றுநாடொறுநம்வினைபோயறு
மென்றுமின்பந்தழைக்கவிருக்கலாஞ்
சென்றுநீர்திருவேட்களத்துள்ளுறை
துன்றுபொற்சடையானைத்தொழுமினே (௧)

கருப்புவெஞ்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பொருப்புவெஞ்சிலையாற்புரஞ்செற்றவன்
விருப்பன்மேவியவேட்களங்கைதொழ
திருப்பனாகிலெனக்கிடரில்லையே. (௨)

வேட்களத்துறைவேதியனெம்மிறை
யாக்களேறுவானஞ்சுமாடுவா
பூக்கள்கொண்டவன்பொன்னடிபோற்றினா
காப்பர்நம்மைக்கறைமிடற்றண்ணலே. (௩)

அல்லலில்லையருவினைதானில்லை
மல்குவெண்பிறைசூடுமணாளனா
செல்வனார்திருவேட்களங்கைதொழ
வல்லராகில்வழியதுகாண்மினே. (௪)

துன்பமில்லைத்துயரில்லையாமினி
நம்பனாகியநன்மணிகண்டனா
ரென்பொனாருறைவேட்களநன்னக
ரின்பன்சேவடியேத்தியிருப்பதே. (௫)

கட்டப்பட்டுக்கவலையில்வீழாதே
பொட்டவல்லுயிர்போவதன்முன்னமே
சிட்டனார்திருவேட்களங்கைதொழப்
பட்டவல்வினையாயினபாறுமே (௬)

வட்டமென்முலையாளுமைபங்கனை
ரெட்டுமொன்றுமிரண்டுமூன்றுமாயினா
சிட்டன்சேர்திருவேட்களங்கைதொழு
திட்டமாகியிருமடநெஞ்சமே. (௭)

நட்டமாடியநம்பனைநாடொறு
மிட்டத்தாலினிதாகநினைமினோ
வட்டவார்முலையாளுமைபங்கனார்
சிட்டனார்திருவேட்களத்தனையே (௮)

வட்டமாமதின்மூன்றுடன்வல்லரண்
சுட்டகொள்கையராயினுஞ்சூழ்ந்தவர்
குட்டவல்வினைதீர்த்துக்குளிர்விக்கும்
சிட்டர்போற்றிருவேட்களச்செல்வரே. (௯)

சேடனுறையுஞ்செழுமாமலை
யோடியாங்கெடுத்தானமுடிபத்திற
வாடவூன்றிமலரடிவாங்கிய
வேடனுறைவேட்களஞ்சேர்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவேட்களத்திருப்பதிகம் - ௨.

சுவாமி - பாசுபதேசர். தேவி - நல்லநாயகி.

ஆகத் திருப்பதிகம் - ௧௩.

## ௩. திருநெல்வாயில்*.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். (௨-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

புடையினார்புள்ளிகால்பொருந்திய
மடையினார்மணிநீர்நெல்வாயிலார்
நடையினால்விரற்கோவணநீநயந்
துடையினாரெமதுச்சியாரே. (௧)

வாங்கினார்மதின்மேற்கணைவெள்ளநீ
தாங்கினார்தலையாயதன்மையர்
நீங்குநீர்நெல்வாயிலார்தொழ
வோங்கினாரெமதுச்சியாரே. (௨)

* திருநெல்வாயில் என்பது சிவபுரி.

நிசசலேத்துநெலவாயிலாரதொழு
விசசையாலுறைவாரெமமீசனா
கசசையாவதோரபாமபினாகவி
னிசசையாரெமதுச்சியாரே (௩)

மறையினாமழுவாளினாமலகு
பிறையினாபிறையோடிலஙகிய
நிறையினாநெலவாயிலாரதொழு
மிறைவனாரெமதுச்சியாரே (௪)

விருத்தனாகிவெணணீறுபூசிய
கருத்தனாகனலாடுகநதவா
நிருததனாரநெலவாயினமேவிய
வொருததனாரெமதுசசியாரே (௫)

காரினாகொனறைக்கணணியாரமலகு
பேரினாபிறையோடிலஙகிய
நீரினாரநெலவாயிலாரதொழு
மேரினாரெமதுசசியாரே (௬)

ஆதியாரநதமாயினாவினை
கோதியாரமதிலகூடடழித்தவா
நீதியாரநெலவாயிலாரமறை
யோதியாரெமதுசசியாரே (௭)

பறறினாரககனகயிலையை
யொறறினாரொருகாலவிரலூற
நெறறியாரநெலவாயிலாரதொழும
பெறறியாரெமதுசசியாரே (௮)

நாடினாமணிவணணனானமுகன
கூடினாகுறுகாதகொளகையா
நீடினாரநெலவாயிலாரதலை
யோடினாரெமதுசசியாரே (௯)

குணடமணடுவாககூறைமூடாசொற
பணடமாகவையாதபணபினா
விணடயஙகுநெலவாயிலாரநஞசை
யுணடகணடரெமமுச்சியாரே (௧௦)

நெணபயங்குநெலவாயிலீசனைச
சணபைஞானசமபநதனசொலலிவை
பணபயனகொளபபாடவலலவா
விணபயனகொளுமவேடகையாளரே (௧௧)

திருசசிறறமபலம.

---

சுவாமி - உசசிநாதா. தேவி - கனகாமபிகை

---

௪ திருபபதிகம - ௧௪.

# ௪. திருக்கழிப்பாலை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-இந்தளம். (௨-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

புனலாடியபுனசடையாயரண
மனலாகவிழித்தவனேயழகார
கனலாடலினாய்கழிப்பாலையுளா
யுனவாரகழலகைதொழுதுளகுதுமே (௧)

துணையாகவொரதூவளமாதினையும
மிணையாகவுகநதவனேயிறைவா
கணையாலெயிலெய்கழிப்பாலையுளா
யிணையாரகழலேததவிடாகெடுமே (௨)

நெடியாயகுறியாயநிமிரபுனசடையின
முடியாயசுடுவெணபொடிமுறறணிவாய
கடியாரபொழிலசூழகழிப்பாலையுளா
யடியாரககடையாவவலமமவையே (௩)

எளியாயரியாயநிலநீரொடுதீ
வளிகாயமெனவெளிமனனியதூ
வொளியாயுனையேதொழுதுனனுமவாக
களியாயகழிப்பாலையமாநதவனே (௪)

நடநணணியொரநாகமசைததவனே
விடநணணியதூமிடறுவிகிரதா
கடனணணுகழிப்பதிகாவலனே
யுடனணணிவணஙகுவனுனனடியே (௫)

பிறையாரசடையாயபெரியாய்பெரிய
மறையாரதருவாயமையினுயுலகிற
கறையாரபொழிலசூழ்கழிப்பாலையுளா
யிறையாரகழலேததவிடாகெடுமே (௬)

முதிருஞசடையினமுடிமேலவிளஙகுங
கதிரவெணபிறையாயகழிப்பாலையுளா
யெதிரகொணமொழியாலிரநதேததுமவாக
கதிருமவினையாயினவாசறுமே (௭)

எரியாரகணையாலெயிலெய்தவனே
விரியாரதருவீழ்சடையாயிரவிற
கரிகாடலினாய்கழிப்பாலையுளா
யுரிதாகிவணங்குவனுனனடியே. (௮)

நலநாரணனானமுகனணணலுறக்
கனலானவனைகழிபபாலையுளா
யுனவா..கழலேதொழுதுன்னுமவாக்
கிலதாமவினைதானெயிலெய்தவனே. (௯)

தவாகொணடதொழிற்சமணவேடரொடு
துவாகொணடனாநுணடுகிலாடையரு
மவாகொணடனவிடடடிகளுறையு
முவாகொணடகழிபபதியுளகுதுமே (௧௦)

கழியாாபதிகாவலனைபடுகலிப
பழியாமறைஞானசமபநதனசொல
வழிபாடிவைகொணடடிவாழ்ததவலலா..
கெழியாரிமையோரொடுகேடிலரே (௧௧)

திருசசிறறம்பலம.

---

பண-கௌசிகம (௩-ம திருமுறை)

---

திருசசிறறம்பலம.

வெநதகுஙகிலியபபுகைவிமமவே
கநதநினறுலவுஙகழிபபாலையா
ரநதமுமமளவுமமறியாததோா
சநதமாலவாமேவியசாநதமே (௧)

வானிலஙகவிளஙகுமிளமபிறை
தானலஙகலுகநததலைவனா
கானிலஙகவருங்கழிபபாலையாா
மானலமமடநோக்குடையாளொடே. (௨)

கொடிகொளேறறினாகூற்றையுதைத்தனா
பொடிகொணமாாபினிற்பூணடதொராமையா
கடிகொள்பூமபொழிலசூழ்கழிபபாலையு
ளடிகள்செயவனவாாக்கறிவொணணுமே. (௩)

பணணலமபடவணடறைகொனறையின
றணணலஙகலுகநததலைவனா
கணணலங்கவருங்கழிபபாலையு
ளணணலெங்கடவுளளவனலலனே. (௪)

ஏரினுருலகததிமையோரொடும
பாரினுருடனேபரவப்படுங்
காரினாபொழிலசூழ்கழிபபாலையெஞ்
சீரினாகழலேசிநதைசெயமமினே. (௫)

துள்ளுமான்மறியங்கையிலேந்தியூர்
கொளவனாரிடுவெணடலையிற்பலி
கள்வனாருறையுங்கழிபபாலையை
யுள்ளுவாாவினையாயினவோயுமே. (௬)

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி. (எ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

*சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்
தன்னருடந்தவெந்தலைவனைமலையின்
மாதினைமதித்தங்கோர்பால்கொண்டமணியை
வருபுனல்சடையிடைவைத்தவெம்மானை
யேதிலென்மனத்துக்கோரிரும்புண்டநீரை
யெண்வகையொருவனையெங்கள்பிரானைக்
காதில்வெண்குழையனைக்கடல்கொளமிதந்த
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௧)

மற்றொருதுணையினிமறுமைக்குங்காணேன்
வருந்தலுற்றேன்மறவாவரம்பெற்றேன்
சுற்றியசுற்றமுந்துணையென்றுகருதேன்
றுணையென்றுநான்றொழப்பட்டவொண்சுடரை
முத்தியுஞானமும்வானவரறியா
முறைமுறைபலபலநெறிகளுங்காட்டிக்
கற்பனைகற்பித்தகடவுளையடியேன்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௨)

திருத்தினைநகருறைசேந்தனப்பனென்
செய்வினையறுத்திடுஞ்செம்பொனையம்பொ
னொருத்தனையல்லதிங்காரையுமுணரே
னுணர்வுபெற்றேனுய்யுங்காரணந்தன்னால்
விருத்தனைப்பாலனைக்கனவிடைவிரவி
விழித்தெங்குங்காணமாட்டாதுவிட்டிருந்தேன்
கருத்தனைநிருத்தஞ்செய்காலனைவேலைக்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே. (௩)

மழைக்கரும்புமலர்க்கொன்றையினானை
வளைக்கலுற்றேன்மறவாமனம்பெற்றேன்
பிழைத்தொருகாலினிப்போய்ப்பிறவாமைப்
பெருமைபெற்றேன்பெற்றதார்பெறுகிற்பார்
குழைக்கருங்கண்டனைக்கண்டுகொள்வானே
பாடுகின்றேன்சென்றுகூடவும்வல்லேன்
கழைக்கரும்புங்கதலிப்பலசோலைக்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே. (௪)

குண்டலங்குழைதிகழ்காதனேயென்றுங்
கொடுமழுவாட்படைக்குழகனேயென்றும்
வண்டலம்புமலர்க்கொன்றையனென்றும்
வாய்வெருவித்தொழுதேன்விதியாலே
பண்டைநம்பலமனமுங்களைந்தொன்றாய்ப்
பசுபதிபதிவினவிப்பலநாளுங்

கண்டலங்கழிக்கரையோதம்வந்துலவுங்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே. (௫)

வரும்பெரும்வல்வினையென்றிருந்தெண்ணி
வருந்தலுற்றேன்மறவாமனம்பெற்றேன்
விரும்பியென்மனத்திடைமெய்குளிரப்பெய்தி
வேண்டினேற்றொழுதேன்விதியாலே
யருமையினலரினையமுதினைத்தேனை
யையனையறவனையென்பிறவிவேரறுக்குங்
கரும்பினைப்பெருஞ்செந்நெனெருங்கியகழனிக்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௬)

அயலவர்பரவவுமடியவர்தொழவு
மன்பர்கள்சாயலுளடையலுற்றிருந்தேன்
முயல்பவர்பின்சென்றுமுயல்வலையானை
படுமெனமொழிந்தவர்வழிமுழுதெண்ணிப்
புயலினைத்திருவினைப்பொன்னினைத்தொளியை
மின்னினதுருவையென்னிடைப்பொருளைக்
கயலினஞ்சேலொடுவயல்விளையாடுங்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௭)

நினைதருபாவங்களுசங்களாக
நினைந்துமுன்றொழுதெழப்பட்டவொண்சுடரை
மலைதருமலைமகள்கணவனைவானோ
ரமணிமாணிக்கத்தைமறைப்பொருளைப்
புனைதருபுகழினையெங்களதொளியை
யிருவருமொருவனென்றுணர்வரியவனைக்
கனைதருகருங்கடலோதம்வந்துலவுங்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௮)

மறையிடைத்துணிந்தவர்மனையிடையிருப்ப
வஞ்சனைசெய்தவர்பொய்கையுமாயத்
துறைபுறக்குளித்துளதாகவைத்துய்த்த
வுண்மையெனுந்தகவினைமையையோரேன்
பிறையுடைச்சடையனையெங்கள்பிரானைப்
பேரருளாளனைக்காரிருள்போன்ற
கறையணிமிடறுடையடிகளையடியேன்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே (௯)

செழுமலர்க்கொன்றையுங்கூவிளமலரும்
விரவியசடைமுடியடிகளைநினைந்திட்
டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல்லா
லறிவரிதவன்றிருவடியிணையிரண்டுங்
கழுமலவளநகர்க்கண்டுகொண்டூரன்
சடையனறன்காதலன்பாடியபத்துந்
தொழுமலரெடுத்தகையடியவர்தம்மைத்
துன்பமுமிடும்பையுஞ்சூழகிலாவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* சுந்தரமூர்த்திநாயனார், சிதம்பரத்திலிருந்து சபாநாயகருடைய கட்டளையினால் திருவாரூருக்குப்போம்போது வழியில் சீர்காழியைச் சமீபித்தார். அது திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தருளிய திருப்பதியாதலால், அதனுள்ளே மிதிக்கலாகாதென்று நினைந்து, அதின் புறவெல்லையை வணங்கிப் பிரதக்ஷிணம் செய்யும் பொழுது, சிவபெருமான் காட்சிகொடுத்தருள அது கண்டு, "சாதலும்பிறத்தலுந்தவிர்த்து" என்னும் திருப்பதிகம் பாடியருளினார்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### மொழிமாற்று.

பண் - வியாழக்குறிஞ்சி. (௧. திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

காடதணிகலங்காரரவம்பதிகாலதனிற்
றோடதணிகுவர்சுந்தரர்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்
பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே (௧)

கற்றைச்சடையதுகங்கணமுன்கையிற்றிங்கள்கங்கை
பற்றித்துமுப்புரம்பார்படைத்தோன்றலைசுட்டதுபண்
டெற்றித்துப்பாம்பையணிந்ததுகூற்றையெழில்விளங்கும்
வெற்றிச்சிலைமதில்வேணுபுரத்தெங்கள்வேதியரே. (௨)

கூவிளங்கையதுபேரிசடைமுடிக்கூட்டத்தது
தூவிளங்கும்பொடிபூண்டதுபூசிற்றுத்துத்திநாக
மேவிளங்குநுதலாளையும்பாகமுரித்தனரின
பூவிளஞ்சோலைப்புகலியுண்மேவியபுண்ணியரே. (௩)

உரித்ததுபாம்பையுடன்மிசையிட்டதோரொண்களிற்றை
யெரித்ததோராமையையின்புறப்பூண்டதுமுப்புரத்தைச்
செருத்ததுசூலத்தையேந்திற்றுத்தக்கனைவேள்விபன்னூல்
விரித்தவர்வாழ்தருவெங்குருவில்வீற்றிருந்தவரே. (௪)

கொட்டுவரக்கரையார்ப்பதுதக்கைகுறுந்தாளன
விட்டுவர்பூதங்கலப்பிலரின்புகழென்புலவின
மட்டுவருந்தழல்சூடுவர்மத்தமுமேந்துவர்வான்
றொட்டுவருங்கொடித்தோணிபுரத்துறைசுந்தரரே. (௫)

சாத்துவர்பாசந்தடக்கையிலேந்துவர்கோவணந்தங்
கூத்தவர்கச்சுக்குலாவிநின்றாடுவர்கொக்கிறகும்
போத்தவர்பலபடைபேயவைசூடுவர்பேரெழிலார்
பூத்தவர்கைதொழுபூந்தராய்மேவியபுண்ணியரே. (௬)

காலதுகங்கைகற்றைச்சடையுள்ளாற்கழல்சிலம்பு
மாலதுவேந்தன்மழுவதுபாகம்வளர்கொழுங்கோட்
டாலதுவூர்வரடலேறிருப்பரணிமணிநீர்ச்
சேலதுகண்ணியோர்பங்கர்சிரபுரமேயவரே. (௭)

நெருப்புருவெள்விடைமேனியரேறுவர்நெற்றியின்கண்
மருப்புருவன்கண்ணர்தாதையைக்காட்டுவர்மாமுருகன
விருப்புறுபாம்புக்குமெய்த்தந்தையார்விறன்மாதவர்வாழ்
பொருப்புறுமாளிகைத்தென்புறவத்தணிபுண்ணியரே. (அ)

இலங்கைத்தலைவனையேந்திற்றிறுத்ததிரலையின்னாட்
கலங்கியகூற்றுயிர்பெற்றதுமாணிகுமைபெற்றது
கலங்கிளர்மொந்தையினாடுவர்கொட்டுவர்காட்டகத்துச்
சலங்கிளர்வாழ்வயற்சண்பையுண்மேவியதத்துவரே. (கூ)

அடியிணைகண்டிலன்றாமரையோன்மான்முடிகண்டிலன்
கொடியணியும்புலியேறுகந்தேறுவர்தோலுடுப்பர்
பிடியணியுந்நடையாள்வெற்பிருப்பதோர்கூறுடையர்
கடியணியும்பொழிற்காழியுண்மேயகறைக்கண்டரே. (க0)

கையதுவெண்குழைகாததுசூலமமணர்புத்த
ரெய்துவர்தம்மையடியவரெய்தாரோரேனக்கொம்பு
மெய்திகழ்கோவணம்பூண்பதுமுடுப்பதுமேதகைய
கொய்தலர்பூம்பொழிற்கொச்சையுண்மேவியகொற்றவரே. (கக)

கல்லுயர்கழுமலவிஞ்சியுண்மேவியகடவுடன்னை
நல்லுரைஞானசம்பந்தன்ஞானத்தமிழ்நன்குணரச்
சொல்லிடல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களோடுஞ்
செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## ஏகபாதம்.

பண் - வியாழக்குறிஞ்சி. (ஙூ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான். (க)

விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான். (உ)

புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே. (ங)

விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன
விளஙகொளிதிகழ்தருவெஙகுருமேவினன
விளங்கொளிதிகழ்தருவெஙகுருமேவினன (௬)

சுடாமணிமாளிகைத்தோணிபுரத்தவன
சுடாமணிமாளிகைததோணிபுரததவன
சுடர்மணிமாளிகைததோணிபுரததவன
சுடாமணிமாளிகைததோணிபுரததவன (௫)

பூசுராசேர்பூநதராயவன்பொன்னடி
பூசுராசோபூநதராயவன்பொனனடி
பூசுராசோபூநதராயவனபொனனடி
பூசுராசோபூநதராயவனபொனனடி. (௬)

செருக்குவாய்பபுடையானசிரபுரமெனனிற
செருக்குவாயபபுடையானசிரபுரமெனனிற
செருக்குவாயபபுடையானசிரபுரமெனனிற
செருக்குவாய்பபுடையானசிரபுரமெனனில. (௭)

பொனனடிமாதவாசோபுறவததவன
பொனனடிமாதவாசோபுறவததவன
பொனனடிமாதவாசோபுறவததவன
பொனனடிமாதவாசோபுறவததவன (௮)

தசமுகனெரிதரவூனறுசண்பையான
றசமுகனெரிதரவூனறுசணபையான
றசமுகனெரிதரவூனறுசணபையான
றசமுகனெரிதரவூன்றுசணபையான. (௯)

காழியானயனுள்ளவாகாணபரே
காழியானயனுள்ளவாகாணபரே
காழியானயனுளளவாகாணபரே
காழியானயனுள்ளவாகாணபரே. (௧௦)

கொச்சையணணலைக்கூடகிலாருடன்மூடரே
கொசசையணணலைக்கூடகிலாருடனமூடரே
கொச்சையணணலைக்கூடகிலாருடனமூடரே
கொச்சையணணலைககூடகிலாருடனமூடரே. (௧௧)

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனகட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனகடடுரை
கழுமலமுதுபதிக்கவுணியனகட்டுரை. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

## ஏகபாதத் திருவுள்ளக்கருத்து.

திருச்சிற்றம்பலம்.

(க) பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(இதன் பதப்பொருள்.)

பிரமம்-ஞானாகாசமாகியபராசத்தியை, புரத்துறை-அந்தப பரிபூரணத்தை மிகுதியாக வியக்கப்பட்டது, பெம்மான-பெருமான, எம்மான-எந்தப்பெரியோன் என்க.

(பொழிப்பு.)

ஞான காசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாகவியந்து அந்தப் பராசத்திக் கதீதமாகிய சுகமே வடிவாய் முதலுமிறுதி காணப்படாதவஸ்து எந்தப்பெரியோன.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான.

(பதப்பொருள.) பிரமபுரத்து-மேல்நிலத்து, உறை-தண்ணீர, பெம-விருப்பம், மான்-மானபோலும விழியையுடையபெண், எம-எமமுடைய, ஆன-ஆனமா என்க.

(பொழிபபு.) மேலநிலமாகிய ஆகாசத்தினகணணே யோடாநின்ற கஙகாதேவியை விருமபித திருமுடியிலே வைத்தவன், எமமை நீஙகாத நிலைமையையுடைய எமதுயிர.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(பதபபொருள.) பிரமம-பிரமத்துவம், புரம-சரீரம், உறை-எண்ணுதல், பெம்-ஆசை, ஆன-அமையாமை, எம்மான-என்னை யொககவநதவன எனக.

(பொழிபபு.) பிரமரூபத்திலே யெண்ணபபட்ட எனனை முத்தியிலே விடுகைககு அமையாத விருபபமுளளவனு யெனனை யொககவநதவன.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான.

(பதப்பொருள.) பிரமபுரத்துறை-பிரமபுரமெனகிற சீகாழிப்பதியிலே வீற்றிராநினற, பெம்மான-காததாவானவன, எம்மான-எனனுடையசுவாமி என்க.

(பொழிபபு.) பிரமபுரமெனகிற சீகாழிபபதியிலே வீற்றிராநினற காததாவானவன எனனுடையசுவாமி. பெரியோனும எனக்குயிரானவனும எனனை யொக்க வந்தவனும சீகாழிப்பதியில வீறறிருக்குங் கடவுளெனக்கூட்டிப் பொருளகொள்க.

(உ) விணடலாபொழிலணி வேணுபுரத்தரன்.

(பதப்பொருள்) விணடு-மலை, அலா-ஒலி, பொழில்-உலகம, அணிவு-அகப்படுததல, ஏண-பெருமை, நுபுரம-சிலமபு, தரன-தரிததுளளவன எனக.

(பொழிபபு.) அஷடகுலபாவதஙகளும ஒலிசிறநத தரிசுமணியாகவும, அகிலலோகங்களையும உளளேயகபபடுததுந தனமயவாயும், பெரிதாயுமுளள திருச்சிலமபினைத் தரித்துளளவன்.—நூபுரம எனறபாலது-நுபுரம எனக்குறுகிகினறது.

விணடலாபொழிலணி வேணுபுரத்தரன்.

(பதப்பொருள்.) விண்டு - விஷ்ணு, அலா-புறனுரை, பொழில் - அரசினிழல், அணி-பொருந்தி, வேணு-விருப்பம, புரத்துஅரன்-புரத்தையரித்தவன் எனக.

(பொழிப்பு.) விஷ்ணுவின் புறனுரையாகிய சிவதூஷணத்தை அரசமரத்தினிழலில் அவனுடனிருநது விரும்பியுள்ள முப்புரங்களைச் சங்கரிததுள்ளவன்.—அண்ணியெனற்பாலது-அணியென இடைக்குறையாய் நின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(பதப்பொருள்.) விண்தலர்-தேவர்கள், பொழில்-கற்பகப்பூஞ்சோலை, அணிவு-சூடுதல, ஏனு-என்னும், புரத்தரன்-தேவேந்திரன் என்க.

(பொழிப்பு.) தேவர்கள் கற்பகப்பூஞ்சோலை மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற தேவேந்திரனுடைய. எனு என்றபாலது - ஏனு னென்னிட்டது. புரந்தரன் என்றபாலது-புரத்தரனென்ன வலித்துநின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்

(பதப்பொருள்.) விண்டு-இதழவிண்டு, அலர்-மலர்கின்ற, பொழில் அணி சோலைசூழ்ந்த, வேணுபுரத்து அரன்-வேணுபுரமென்று மொருபெயருள்ள சீகாழிப்பதிக்குக் காத்தா எனக.

(பொழிப்பு.) இதழ்கள் விண்டுமலர்கின்ற சோலைசூழ்ந்த சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன்.—தேவேந்திரன் மூங்கிலுருவமாகவந்து பூசித்ததால் வேணுபுரமென்னும் பெயர்பெற்றது.—சிலப்பிரீனத் தரிக்குள்ளவரும், முப்புரத்தை யெரித்தவரும், தேவேந்திரனுடைய சோலைசூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவனெனக்கூட்டி யுரைத்துக்கொள்க.

(கூ) புண்டரிகத்தவன் மேவியபுகலியே

(பதப்பொருள்.) புண்டரிகத்தவன் - இதய கமலத்திலுள்ளவன், மேவியபுகலியே-எனக் கின்பந்தருவானுமாய மீளாவழியாகிய புகலிடமாயு முள்ளவன் எனக.

(பொழிப்பு.) இதயகமலத்திலிருந் திடையறாத வானந்தமளிப்பதுமாகிய பெரும்பேறு பின்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக்கடைக்கலப் பொருளாயுள்ளவன்.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே

(பதப்பொருள்.) புண்டரிகம்-திரிபுண்டரம், தவன்-மிக்க பெருமையையுடையவன், மேவிய-பொருந்திய, புகலி-சொல்லப்பட்டவன், ஏ-எண்ணிடைச்சொல் எனக

(பொழிப்பு.) ஆன்மாக்களுக்கு இன்றியமையாத முண்டமபோலிராத திருநீற்றையணியப்பட்ட மிக்க கருணையானவனே யான்பாடும் பாடலே யுரைத்துள்ளவன்.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே

(பதப்பொருள்.) புண்டரிகம் புலி, தவன் - தவமுனி, மே-கூத்து, வியம்-பொன், பு-பொது, கலி-கற்றவன் எனக.

(பொழிப்பு) புலிக்காலும், புலிக்கையும் பெற்றுள்ள வியாக்கிரபாத முனிவருக்கு ஞானானந்தமாகிய நாடகத்தைக் கனகசபையிலே யாடல்செய்யும் பாதவிந்தத்தைக் கற்றுள்ளான். வியம் என்றபாலது-வியமெனக் கடைகுறைந்து நின்றது.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே

(பதப்பொருள்.) புண்டரிகத்தவன்-பிரமதேவன், மேவிய - தனது போதத்தாலே பணியவுற்ற, புகலியே-புகலியென்னுஞ் சீகாழிப்பதியே யெனக.

(பொழிப்பு.) கீழ்ச்சொன்ன லீலைகளெல்லாஞ்செய்கின்ற சிவன் தனதிச்சையால் பொருந்தியிருக்குமூர் பிரமாவானவன் பூசித்தபுகலியென்னுந் திருப்பதி.

(ச) விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன்

(பதப்பொருள்.) விள-விளாம்பழத்தை, கொளி - கன்றுகுணிலாக எறிந்துகொண்டவனாகிய விஷ்ணு, தி-விட்டு விளங்காநின்ற, கழ்தரு-நின்மலநீடிய, எங்கு-எவ்விடத்தில், உருமேவினன்-தனது திருமேனியிலே மேவினன் எனக.

(பொழிப்பு.) கன்றுகுணிலாக எறிந்து விளவின்கனியைக்கொண்ட நாரணனைப் பிரகாசஞ்செய்யப்பட்டு நின்மலமாயிருந்துள்ள தனது பெரியதிருமேனியிலே யொன்றுபாதியாக வைத்துள்ளான் என்க.—தீ என்றபாலது - தி எனக்குறுகிநின்றது. கழுதரு என்றபாலது-கழ்தரு என்நின்றது.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன்.

(பதப்பொருள்.) விலங்கு என்றபாலது - விளங்கு எனவும், ஒலிஎன்றபாலது-ஒளி எனவுந் திரிந்து நின்றது. விலங்கு-மாறுபாடாய், ஒலி - கதறப்பட்ட பௌத்த னுடைய தலையிலே, தி-அக்கினியைச்சொரிந்து, கழதரு-மிக்கபயத்தோடும் விழுகின்ற, எங்கு-ஒலிக்கும, உருமு-இடியை, ஏவினன-விழும்படியேவினன எனக.

(பொழிப்பு.) மாறுபாடாயக கதறப்பட்ட பௌத்தனது தலையிலே அக்கினி யைசசொரிந்து மிக்க பயத்தோடும விழுகின்ற இடியை விழும்படி யேவிப் பௌத் தரை வேரறுத்தானுந் தானேயன்றி யானன்றுகும.

தீ என்றபாலது-தி எனவும,—காழதரு என்றபாலது - கழ்தரு எனவும,—ஏங்கு என்றபாலது-எங்கு எனவுங குறுகின்றன.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன.

(பதப்பொருள்) விள-நீங்குதல, அங்கு-அவ்விடத்தில, ஒளிது-ஒள்ளியது, இக ழ்தரு-இகழப்படும, எங்குரு-எமமுடையகுரு, மேவினன-கலந்தனன எனக.

(பொழிப்பு.) தனது பரிபூரணத்திலே தனனையிழந்து இரண்டாய விசுவமுரு வித தான விஷமாகத தூஷணப்பட்டு நிறகின்ற எனக்கும குருமூர்த்தியாயவந்து எனபிறவியை யொழித்துத தனது பேரினபமாகிய பரிபூரணத்திலே எனதடிமை குலையாம லிரணடறவைத்தவன.

விளங்கொளிதிகழதரு வெங்குருமேவினன்

(பதப்பொருள்) விளங்கு ஒளி-எங்கும பிரகாசியாநின்ற கீர்த்தி, திகழ்தரு-சிற ந்தல, வெங்குரு-இயமனுற்பூசிக்கப்பட்ட திருப்பதி, மேவினன-விரும்பினன எனக.

(பொழிப்பு) கிழச்சொலலிப்போந்த செயதிகளெலலாமுடைய னெத்தனமை யிலேருவெனனில, எங்கும பிரகாசியாநின்ற கீர்த்தியினுற சிறக்கப்பட்டுள்ள இயம னுற்பூசிக்கப்பட்ட வெங்குருவெனனும திருப்பதியை விரும்பியுள்ளான. வெங்குரு என்பதும - சீகாழி.

(௫) சுடாமணிமாளிகைத் தோணிபுரத்தவன

(பதப்பொருள.) சுடாமண - சூடாமண, இம - சமம, ஆளி - ஆளப்பட்டவன, கைததோணி-போர்தொலைத்த துமபைமாலை, புரத்து திரிபுரங்களையும, அவன-அவம் பண்ணினவன எனக.

(பொழிப்பு.) சுடுநிலமாகிய மயானத்தை நடமாடு பீடமாகக்கொண்டும, முப் புரங்களையும நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப்போரையுடைய துமபைமாலைககட வுள.—சூடார என்றபாலது-சுடரெனவும, சமம என்றபாலது-இம எனவும குறுகி நின்றன.—துரோண மென்றபாலது-தோணியெனமருவிற்று.

சுடாமணிமாளிகைத தோணிபுரத்தவன.

(பதப்பொருள.) சுடர்மணி-சூடாமணி, மாளி-மாலி, கைததோள்-துதிக்கையி னையுடைய யானையை, நிபுரததவன-வடிவில்லாமற்செயதோன எனக.

(பொழிப்பு.) எனனுச்சிக்குச சூடாமணியுமாய் எனமேலவைத்த மாலினையு டையனுமாய் யாகத்தினகண்வந்த யானையை வடிவொழித்துப் போக்குந்தனமை யை யுடையவன்.

சூடாமணியென்றபாலது - சுடாமணியெனவும், மாலியென்றபாலது-மாளி என வும, தோல் என்றபாலது - தோள் எனவும நின்றன.—மாலையுடையவன் - மாலி - தோல-யானை.

சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(பதப்பொருள்.) சுடர்-சூரியன, மணி-கழுவி, மாளி - கெட்டவன. கைத்தோ ணி-தெப்பம், புரத்தவன்-புரந்தவன என்க.

(பொழிப்பு.) சூரியனுடைய களங்கத்தைக் கழுவப்பட்ட சமுத்திரம்போன்ற செனனக்கடலிலே கீழ்ப்பட்டழுந்திக்கெடாநின்ற ஆனமாக்களுக்குக் கைப்பறறிக் கரையேறுந்தெப்பமாகப் பிரணவமெனகிற மந்திரததை அவரது செவியின கண்ணே யுண்டாக்காநின்றவன்.

மண்ணி என்பது-மணியென இடைகுறைந்து நின்றது.—புரந்தவன் எனற்பாலது-புரத்தவன் என வலிததல் விகாரமாயிற்று.

சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(பதப்பொருள்.) சுடர்-விளக்கத்தையுடைய, மணி-நவரததினங்களாலே அலங்கரிக்கப்பட்ட, மாளிகை-மாளிகைகள்சூழ்ந்த, தோணிபுரததவன-திருததோணிபுரத்தினகண்ணே வாழ்கினறவன எனக.

(பொழிப்பு.) விளக்கத்தையுடைய நவரததினஙகளாலே அலஙகரிககப்பட்ட மாளிகைசூழ்ந்த திருததோணிபுரததிலே வீறறிருககுஞ சிவன இததன்மையன்.

(சு) பூசுராசோபூநதராயவன பொன்னடி.

(பதப்பொருள்.) பூ-பூமியிலுள்ளோா, சுரா-தேவாகள, சோ-தோனறுதல், பூ-இதயகமலம், தராயவன-தரிததவன, பொன-பொலிவு, அடி-கணணுடி எனக.

(பொழிப்பு.) பூமியிலுள்ளாரையுந தேவகணஙகளாயுளளாரையுந தனது நாபிக்கமலததிலே தோறறுவிககப்பட்ட பிரமா விஷ்ணுவினது போததிலே கணணுடியும நிழலும்போலப பிரதிவிமபியா நினறவன.—ஆடி எனபது - அடியெனககுறுகிநின்றது.

பூசுராசோபூநதராயவன பொனனடி.

(பதப்பொருள.) பூசுரா - மலததைக்கழுவிய சிவஞானிகள், சோ-திரடசி, பூ-பொலிவு, தராய-பெறபபட்ட, அவன-அககடவுள, பொன-வனபபு, நடி-நாடகமாடப்படடவன எனக.

(பொழிப்பு.) மலத்திரயங்களைக கழுவபபடட சிவஞானிகள கூடடம பொலிவுபெறத்தக்க வனபபையுடைய ஆனநதநிருததஞ் செயதருளபவன.

பூசுராசோபூநதராயவன பொனனடி

(பதப்பொருள.) பூசு-திருநீறறை யுதறளிககபபடட, ராா மாலையையுடையவர், சோபு-அரிதல, ஊநதராய-தளளுதல, யவண-யௌவனம, பொன-அழகு, அடி-மூலம் என்க.

(பொழிப்பு.) சாவாஙகமு முத்தூளனமபணணின மாலையையுடைய சிவஞானிகளும், புண்ணியபாவக் கட்டையரிநது விசுவததைத தளளபபடட சிறபபையுடையருமா யிராநினறவாகளுக்கு மிகுதியான மூலமாயுளளவன.—ஊநதராய என்பது ஊந்தராயென நீண்டது.

பூசுராசேர்பூநதராயவன் பொன்னடி.

(பதப்பொருள.) பூசுரா-மறையோா, சேர்-திரடசி, பூந்தராயவன் - பூந்தராயென்னுந் திருபபதியிலேயுளளவன, பொனனடி-அழகிய திருவடிததாமரை என்க.

(பொழிப்பு.) மறுவிலா மறையோாவாழ்கினற திருப்பூநதராயெனனுந் திருப்பதியின்கண் வீற்றிராநினற சிவனது அழகியதிருவடித்தாமரை யெனனையாண்டிடுவதாக.—பூநதராயெனபதுஞ் சீகாழி.

(எ) செருக்குவாய்ப்புடையான் சிரபுரமென்னில.

(பதப்பொருள்.) செருக்கு-மயக்கம், வாய்ப்பு-மேலீடு, உடையான் - கேடுசெய்யான், சிரபுரம-மேலாகிய இருப்பு; என்னில்-என்னுடையபோதமே என்க.

(பொழிப்பு.) தனது திருவடிப்பிரசாத மில்லாதார்க்கு மலமயக்கத்தின் மேலீட்டைக்கெடாத சிவனுக்கு விசுவாதீதமான இருப்பிடம் எனது சைதன்னியமே.

செருக்குவாய்ப்புடையான் சிரபுரமென்னில்.

(பதப்பொருள்.) சொ-சத்தாதிக ளஞ்சுஞ்சேரப்பட்ட, உக்கு-அந்தப்பூமி, வாயப்புடையான்-தன வாயினிடமாகவுள்ள விஷ்ணு, சிா-சிறப்பு, அபுரம்-உயிாபோன களேபரம், எனனில-மேனியிலே எனக.

(பொழிப்பு.) சததாதிக ளஞ்சுஞசேரப்பட்ட உலகததைத் தன்வாயினிடமாகவுடைய விஷ்ணுவின களேபரததைத திருமேனியிலே தரிததுளளான்.—சோ எனறபாலது-சொ எனவும், சீா எனறபாலது-சிா எனவுங குறுகினறன.

செருககுவாய்பபுடையான் சிரபுரமெனனில.

(பதப்பொருள.) செருக்கு - ஆததுமவிகாரமாகிய காவம, வாய் - இந்திரியம், புடையான-இடததான, சிரம-மேல, புரம-சரீரம, எனனில-சததியம் எனக.

(பொழிபபு.) ஆததுமவிகாரமாகிய காமததிருலே இநதிரியஙகளுககு விடயமாகிய சுவாககததி விசசையையுடையானுககு அநதசசுவாககம மெயயாக விசேஷிததிருககுமனறே.

செருக்குவாய்பபுடையான சிரபுரமென்னில

(பதப்பொருள.) செருககு-இநதிரியயுத்ததநிறகு, ஆயப்பு-இளைப்பு, உள்ளையானா-உள ளைககபபடடான, சிரபுரமமெனனில-சிரபுரமெனறுரைககில எனக.

(பொழிபபு.) இநதிரியவனமையாகிய யுததததுககு இளையாமல அநத இந்திரியமாகிய பாணஙகள தனதறிவுக்குள ளைககபபடடான.—(நாறபரியம.) ஒருகாற சிரபுரமெனறு சொனனவிடததுப பஞசேநதிரியஙகளையும அவியபபொருது சிவனுடையதிருவடியிலே அடையாநிறபன எனபதாம.

(அ) பொனனடிமாதவா சோபுறவததவன்.

(பதப்பொருள்.) பொன-பொலிவு, நடி-கூததுடையான, மாது-பததிரகாளி, அவா-பூதகணஙகள, சோ-தஙகுதல், புறவததவன-சுடுகாடடிலுளளவன எனக.

(பொழிப்பு.) பொலிவினையுடைய மாயாநிருத்தம புரிகினற பத்திரகாளியும், பூதபசாசமபொருநதிய மயானமே திருககோயிலாகவுளளவன.

பொன்னடிமாதவா சோபுறவத்தவன்

(பதபபொருள.) பொன-தூய்மை, அடி-வழி, மாதவா-தபோதனா, சோ-திரட்சி, புறவம-முலலைநிலம. தவன-தவமபுரிநதுளளான எனக.

(பொழிபபு.) சுததமான வழியைததரபபட்ட மகா இருஷிகள திரணடு தவம பணணுகிறகும ஆரணியததில தனித்துத தவமபுரியாநிறகுந தபோதனன.

பொனனடிமாதவா சோபுறவத்தவன்.

(பதப்பொருள.) பொன-இலககுமி, அடி-ஆபரணததொகுதி, மாது அவா-இருடிபததினிகள, சோபுஉறு - பிசசையிட வநதணைதல, அவததவன-கலைசோாதலைசெயத நிருவாணி எனக.

(பொழிப்பு.) அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள இலக்குமியையொதத இருடிபததினிகள பிசசையிடவந தணையுமிடததுத தனக்குளள நிருவாணத்தை அவர்களுக்குக் கொடுததவன.

பொனனடிமாதவா சேர்புறவத்தவன்.

(பதப்பொருள்.) பொன் - பொனனுற்செய்யப்பட்ட பாடகநூபுர காலாழிகள் முதலியவுமிடப்பட்ட, அடி-பாதம், மாதவர்-கன்னியா, சேர்-இனமாயவிளையாடுதல், புறவததவன-திருப்புறவமெனகின்ற திருப்பதியில் வாழ்கின்றவன எனக.

(பொழிப்பு.) பொன்னாற்செய்யப்பட்ட பாடகநூபுராதிகளைப் பாதங்களிலே யணிந்துள்ள கன்னியாதிரண்டு விளையாடும் புறவமென்னும் திருப்பதியில் வாழ் கின்ற சிவன்.—புறவம் என்பதும் சீகாழி.

(கூ) தசமுகனெரிதர வூன்றுசணபையான

(பதப்பொருள்.) தசமுகன-தயவையுடையான, எரிதர-எரிவீசு, ஊன்று-அழு ந்து, சண-வேகம், பையான-படமபொருந்திய பாமபையுடையான எனக.

(பொழிப்பு.) ஆதந்துமாககளிடத்துக கருணைபிறககு மிடமாயுள்ளவன். அகனி வீசபபடடுத திருவரையிலே அழுநதச சாததியுள்ள விரிநத படததினையுடைய பாமபை அரைஞாணாக வுடையான்.

தசமுகனெரிதர வூனறுசணபையான

(பதப்பொருள்.) த-அது, சமுகம-திரடசி, நெரி-நேரானவன, தர-பலி, ஊன-மாமிசம, தூசு-தூசு, அணபையான-விரிததுடுததான எனக.

(பொழிப்பு.) எலலாமிறநது அநதமாயுள்ள சிவஞானிகள் சூழாததுககு நேரி தாகிய சூனியமாயுள்ள பொருளைத தோற்றுவிததுள்ளானுமாயப புலியினது ஊன பொருநதிய தோலாடையைத திருவரையிலே விரிததுடுததவன — நேரி என்ற பாலது - நெரி எனக குறுகிநின்றது. தரககு எனறபாலது - தா எனக குறைநது தூசு எனறபாலது - துசு எனக குறுகிநினறது பாயான எனறபாலது - பையானெ னக் குறுகிப போலியாயிறறு.

தசமுகனெரிதர வூனறுசணபையான

(பதப்பொருள்.) தசம-தைசதம, உக-கெட, நெரி-எதிர்பபடடவன, தரம-மலை, ஊன-திருவுளததடைததல, து-விசேஷஞானமுள்ளவன, சண-சடசமயம, பையா ன-பயனுயுள்ளவன எனக.

(பொழிப்பு.) ஆததுமவிகாரமான அகஙகாரம போயபடி எனனறிவிலெதிரபப டடவன கயிலாயமலையைத திருவுளளத தடைததெழுந்தருளியிருநது ஆததுமா க்களை யிரக்ஷியாநின்ற விசேஷததையுடையவனென வேததும சடசமயஙகளுக்கும அவரவாகொணட பயனுயுள்ளவன, நேரி எனறபாலது-நெரியெனக குறுகிநினறது.

தசமுகனெரிதர வூனறுசணபையான

(பதப்பொருள்.) தசமுகன-பததுததலைகளையுடைய இராவணன. நெரிதர மு றிய, ஊனறு-அமுககிய, சணபையான-சணபையெனனும் திருபபதியில வீறறிருப பவன எனக.

(பொழிப்பு.) பததுததலையுள்ள இராவணன முறியுமபடி திருவிரலாலடாதத வன் யாரெனனில் சணபையெனனும் திருபபதியிலே வீறறிருககுங கடவுள்.

(க௦) காழியானயனுள்ளவாகாணபரே.

(பதப்பொருள்.) காழியான - நிலைபெறறு நினமலமான, சித்ததததையுடைய யன-பததரிடதது, உளளவா-சததியம், காணபரே-நோககுவா எனக.

(பொழிப்பு.) நிலைபெறறுநின்ற நினமலமாகிய சித்தத்தையுடைய பததரிடத துச் சத்தியபபொருள் விளையுமபொருட்டு ஞானநாட்டத்தினாலே அவாகளைக கடா க்ஷிக்கின்றவன

காழியானயனுள்ளவாகாணபரே.

(பதப்பொருள்.) காழியான - களங்கமுள்ளவன், நயனுளளவா - ஞானக்கண் ணுளளவாறு, காண்பரே-நிலைமையாக நினைப்பரே என்க.

(பொழிப்பு.) திருமிடறறிற் களங்கமுடையானது கருணையை நினைதது ஞான நாட்டததையுடைய சிவஞானிகள சிவனுககிசசை தனனடியாககே ஆங்காரத தைததடுக்குமதே பணியெனத தமதறிவிலே கருதாநிற்பா.

காழியானயனுளளவாகாணபரே.

(பதப்பொருள.) காழியான-விஷ்ணு, அயன-பிரமா, உள்ள-நினைக்க, ஆ-அதி சயம, கண-கருதுதல, பரே-அனனியம எனக.

(பொழிபபு.) விஷ்ணுவும - பிரமாவும திருமுடியுந திருவடியுங காணுமபொரு டடு வராகமு மனனமுமாகககருதி வடிவுகொணடாா ஐயோ உளளபடி கருதிச் சிவனைபபெருமல அவா கருதியதேதெனனில, அனனியமேகணடனா. கண எனற பாலது-காண எனநினடது.

காழியானயனுளளவாகாணபரே

(பதபபொருள.) காழியான - காழிபபதியிலுளளான, அயன-ஐயன, உள-என னறிவிலுணடான அவா-ஆசை, காணபரே-தரிசிபபரே எனக

(பொழிபபு) எனபொருட்டாற காழியெனனுந திருபபதியைப படைததானை எனனையனை எனதாசையை கீழ்ச்சொனன, விருவாகளும தாஙகளதேடுந தேடட பயிறிவின மயககததிலே தேட்டமழிந்துத தோனறுநிரபனை தேடி மறததலொ ழிந தெவவாறுகாணபா.

(கக) கொசசைசயணணலைக கூடகிலாருடனமூடரே.

(பதபபொருள.) கொசசை - அறியாமையைப பொருநதியுளள ஆணவமலம, அணணலை-பொருநதுதலே, கூடகிலா-மாறுபட்டார், உடல-உடலாலே, மூடரே-மூடாரோ எனக.

(பொழிபபு) ஆணவமலததோடுகூடியுளள மயககததுடன மாறுபட்டோாகள மாயாதனுவாலு மநதிரதனுவாலு மறைககபபடாாகள மூடாா எனறபாலது-மூடா எனக குறுகிநினறது.

கொசசையணணலைக கூடகிலாருடனமூடரே

(பதபபொருள.) கொசசை - புலாலநாற்றம, அணணலை - அணுகுதல், கூடகி லாா-மனமபொருநதமாட்டாதா, உடலமூடரே-சரீரததைப புதைபபரே எனக.

(பொழிபபு.) புலாலநாற்றததைப பொருநதிய வழுககு மெயனையபபொயயெ னறு மனங்கொளளமாட்டாமல அதுவே தமது நிலைபெற்றவுருவாக நினைததுத துவ ராடையாலே யுடமபைச சூழபபட்ட பெளத்தரே.

கொசசையணணலைக கூடகிலாருடனமூடரே

(பதபபொருள.) கொசசையள-பேதைத்தனமையையுடைய மசசியகநதி, நலை புலபபடாநினற அவளது நலததைககருதி, கூடு-சரீரம, அலிலா-அகிலமணமபொ ருநதிய, உடன-அததனமையாளுடன, மூடரே - மோயககுமாறுபணணினது அத பொருந்துதல் எனக.

(பொழிப்பு.) பேதைத தனமையையுடைய மசசியகநதியினுடைய நலத்தை கருகொளளும்பொருடடு அவளது சரீரமெல்லாம சுகநதமோயககுமபடி யவளுடனே பொருந்திய பராசரனுடைய மகாவிருடிவநது சிவனைப்பொருநதி யருசசிக்கப்படுதலால.

கொச்சையணணலைக் கூடகிலாருடன்மூடரே.

(பதப்பொருள்.) கொச்சை-கொச்சையாகிய பராசரன் பேராலுள்ள கொச்சை யெனனுந் திருப்பதி, அண்ணலை-கர்த்தாவை, கூடகிலா-நோபடமாட்டாா, உள்தல்-உள்ளுதல், மூடரே-அர்த்தகாரநிறைந்த போகத்தை யுடையவரே எனக.

(பொழிப்பு.) பராசர முனிவனாற் பூசிக்கப்பட்டு அவன பெயரால் பெயர்பெற்றுள்ள கொச்சை நகரெனனுந திருப்பதியிலே எழுநதருளியிராநின்ற தலைமையோனை உள்ளபடி தரிசனமபணணி வழிபடமாடடாாகளது நினைவு எவவாறிருககுமென்னில், மழைக்காலிருளும வெளிசெதன இருணட மயககததையுடைய ஆணவபோதமாயிருக்கும.

(கஉ) கழுமலமுதுபதிக் கவுணியனகட்டுரை

(பதபொருள.) கழுமல-மிகுதிபபட்டகுறறம, அமுது-செலம், பதிக்க-விளைவிக்க, உளநீ-உளளநீ, கடடு-வடிவாகக்கட்டுணடல, உரை-தேய்தல எனக.

(பொழிபபு.) மிகுதிபபடட தோஷமாயுளள சுககில சுரோணிதமாகிய இருவகை நீரினகணபதிநது விளைதறகுளள நீயுமாயாநதக் கருபபாசைய நீரினகணணே சிரமுதலாகிய அவயவமாகததோறறிப் பூமியினகண்செனிததுப பரிணமிததுப் பினபு தேய்நதுமரிககினற செனமததையும. பரிணமிததல-வேறுபடுதல்.

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை

(பதப்பொருள.) கழு-கழுவபபடும, மலமுது-ஆணவமலமு மறறதனுடன சுட்டிச சொலலபபடட மாயாமலததையுங கனமமலததையும, பதி-பாதி, கவுணி-உளளே அகப்படுததிக கவுளிகரிததுககொளளுதல, அனகண - ஆநதமாயினிடதது, துரை-இறைவா எனக.

(பொழிபபு.) கீழசசொலலிப்போநத செனமததையுங காரவி மலததிரயஙகளையுங கழுவாநிறகும. (எனற பதமநிறக. இனிச செனனது நாமததை ... றறு.) தனதுபாதியாகிய திருவருளிலே எனனையகபபடுததிக கவுளிகரிதது ... கொணடாத அருளவழியாக எனறிடததி லிடையமுமல மூழுந தனனை யெனககுந தாடிமைகுலையாமலெக்கன்றுமவிட்டு விளஙகுஙகாதத... பாதி எனறபாலது பதுமெனககுறுகினறது.

கழுமலமுதுபதிக கவுணியனகடடுரை.

(பதபபொருள) கழும-மயககம, அலம அலககணபடுதல, அமுது-அமுதம், பதி-கர்ததா, க-சிரசு, உணியன-உணணபபடடவா, கடடு - விளககப, உரை-பொனஎனக.

(பொழிபபு.) மாயா மயககததினகணணே மயஙகிப் பெறறமூதறி யிரணடுந தெரியாமல திணடாடபபட்ட மலபோதாககு அமுதமபோனறு அரிதாயுளளவனுமாய்விட்டு விளஙகப்படாநினற பொனனுருவையுடையவனும ... சிருக் கர்ததாவாகிய பிரமனது சிரக்கபாலததிலே பிசசைகொணடு நுகரும கருணையாளனே.

கழுமலமுதுபதிக் கவுணியனகட்டுரை

(பதபபொருள.) கழுமலமுதுபதி-கீழ்சசொனன பதியினகண், கவுணியன்-கவுணியகோததிரததுவநத மறையோனுகிய யான, கடடு-காடடு, உரை-உரைப்பீராக எனக.

(பொழிப்பு.) திருக்கழுமலமென்னும மூவாப்பழஙகிழமைப் பன்னிருபெயாபெறற அனுதிமூலமாகிய பதியிடததுக் கவுணியகோததிரததிலே தோன்றப்பட்டயான் நிவேதிககப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்சசொனனவறறிலு மலத்திரயஙகளிலும அழுந்தாநினற ஒருததராகிலும பலராகிலும் உரைசெய்வாா உ...நதாரே யாதலா லிப்பாடலை யிடைவிடாம லுரைசெய்வீராக. காட்டு எனப... கட்டெனக் குறுகினறது.

திருச்சிற்றம்பலம்.

---

உரை - முற்றியது.

## திருவெழுகூற்றிருக்கை.

---

பண் - வியாழக்குறிஞ்சி (௩ திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*ஓருருவாயினை மானாங்காரத்
தீரியல்பாயொருவிண்முதல்பூதல
மொன்றியவிருசுடருமபர்கள்பிறவும
படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை
யிருவரோடொருவனாகிநின்றனை
யோராநீழலொண்கழலிரண்டு
முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறி
காட்டினைநாட்டமூன்றாகக்கோட்டினை
யிருநதியரவமோடொருமதிசூடினை
யொருதாளீரயின்மூவிலைச்சூல
நாற்கான்மான்மறியைந்தலையரவ
மேந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத்
திருகோட்டொருகரியீடழித்துரித்தனை
யொருதனுவிருகால்வளையவாங்கி
முப்புரத்தோடுநானிலமஞ்சக்
கொன்றுதலத்துறவவுணரையறுத்தனை
யைம்புலனாலாமந்தக்கரண
முக்குணமிருவளியொருங்கியவானோ
ரேத்தநின்றனையொருங்கியமனத்தோ
டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து
நான்மறையோதியைவகைவேள்வி
யமைத்தாறங்கமுதலெழுத்தோதி
வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும
பிரமபுரம்பேணினை
யறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை
யிகலியமைந்துணர்புகலியமர்ந்தனை
பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை
பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த
தோணிபுரத்துறைந்தனைதொலையாவிருநிதி
வாய்ந்தபூந்தராயேய்ந்தனை
வரபுரமென்றுணர்சிரபுரத்துறைந்தனை
யொருமலையெடுத்தவிருதிறலரக்கன்
விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை

முகநீத்துயின்றோனுன்முகனறியாப
பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை
யையுறுமமணருமறுவகைத்தேரரு
மூழியுமுணராக்காழியமர்ந்தனை
யெச்சனேழிசையோன்கொச்சையைமேவினை
யாறுபதமுமைந்தமாகல்வியு
மறைமுதனான்கு
மூன்றுகாலமுந்தோன்றநின்றனை
யிருமையினொருமையுமொருமையின்பெருமையு
மறுவிலாமறையோர
கழுமலமுதுபதிககவுணியனகட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனறியு
மனையதனமையையாதலினின்னை
நினையவலலவரிலலைநீணிலததே

திருச்சிற்றம்பலம்.

---

* சிவபாதவிருதயா, நித்திய காமாநுட்டானங்களை முடித்தவுடனே, ஓதினோர்க்குப் புத்தி முத்திகளைத் தரத்தக்க பிள்ளையாருடைய திருப்பதிகங்களைப் பாராயணஞ்செய்து, போஜனஞ் செய்வதாகிய நியமத்தைக் கைக்கொண்டொழுகுவாராயினர். அங்ஙனஞ் சிலகாலம் நிகழ்ந்துவரும்போது, திருப்பதிகங்கள் பெருகுதலபற்றி, தந்தையார் கருத்துமுற்றுப்பெறுதல அருமையைநோக்கி, முற்றுணர்வுடைய ஆளுடையபிள்ளையார் அதுவரையும பாடியருளிய திருப்பதிகங்களின்பொருளை அமைத்து, "ஓருருவாயினை'' என்னும் திருவெழுகூற்றிருக்கையைத் திருவாய்மலாந்தருளி, இதனைத் தினந்தோறுமநியமமாக ஓதினோர், திருப்பதிகங்கள் முற்றும் ஓதிய பயனபெறுவர் எனச் சிவபாதவிருதயருக்கு அருளிச்செய்தனா.

திருவெழுகூற்றிருக்கைத் - திருவுள்ளக்கருத்து.

---

திருச்சிற்றம்பலம்.

ஓருருவாயினை-என்றது. எல்லாத்தத்துவங்களையுங் கடந்து வாக்குமனதிகளுக்குமெட்டாமலிருந்துள்ள தற்சுரூபந்தான் பஞ்சகிர்த்தியங்களையும் நிகழ்த்தவேண்டினதிச்சையாலெடுத்துக்கொண்டிருக்குந் திருமேனியை என்றவாறு.

மானாங்காரத்தீரியல்பாய்-என்றது. மானென்பது - சத்தி - யாங்காரத்தீரியல்பாய் - தற்சத்தியைக்கொண்டு சர்வானுக்கிரகமான பஞ்ச கிர்த்தியங்களை நடத்தவேண்டிச் சத்திசிவமாகிய விரண்டுருவாயினை எ-று.

ஒரு - என்றது. அந்தச்சத்தியுடனேகூடி யொன்றாகிநின்றனை எ-று.

விண்முதல்பூதல மொன்றியவிருசுடரும்பர்கள் பிறவும் படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை-என்றது. ஆகாசமுதலாகப் பூமியீறாகவுள்ள பஞ்சபூதங்களை

யுஞ் சந்திராதித்தர்களையுந் தேவர்களையு மற்றுமுள்ள ஆத்மாக்களையும் படைக்கைக்கும், காக்கைக்கும, அழிக்கைக்கும், பிர்மா-விஷ்ணு-ருத்திரரெனகின்ற திரிமூர்த்திகளுமாயினை எ-று.

இருவரோ டொருவனாகிநின்றனை-என்றது. பிர்மாவையும் விஷ்ணுவையும் இடத்திலும் வலத்திலும அடக்கிக்கொண்டு ஏகமாய்த் திரிமூர்த்தியாகி நின்றனை எ-று.

ஓரால்நீழலுணகழலிரண்டு முப்பொழு தேத்திய நால்வாக்கொளிநெறி காட்டினை-என்றது. விருக்ஷங்களுக்கெல்லாந் தலைமையாயிருப்பதொரு வடவிருக்ஷத்தினீழலிலே யெழுந்தருளியிருந்து நின்னழகிய ஸ்ரீபாதங்களை உதய-மத்தியான-அத்தமனமென்கின்ற மூன்றுகாலமுந் தோத்திரஞ்செய்யாநின்ற அகத்தியன்-புலத்தியன்-ஜனகன் - சனற்குமாரனென்னும நால்வகை இருடிகளுக்குந் தற்சுரூபமான திருமேனியைக்காட்டி யருளினை எ-று.

நாட்டமூன்றாகக்கோட்டினை-என்றது. பிரமா முதலாயிருந்துள்ள ஆத்மாக்கள ரூபமெனனும புலனாலே சாவ பதார்த்தங்களையுங் காணுதபடியாலே சந்திராதித்தர்களையு மக்கினியையு மூன்றுகணணுகக் கொண்டருளி அந்தகாரமான விருளையோட்டினை எ-று.

இருநதியரவமோடொருமதிசூடினை-என்றது. பெரிதாகிய கங்கையையும் ஒப்பில்லாத பாமபினையும ஒருகாலத்திலுமுதிராத பிறைககண்ணியையுஞ் சூடியருளினை எ-று.

ஒருதாளீரயின்மூவிலைச்சூல நாற்கான்மானமறியைந்தலை யரவமேந்தினை - என்றது. பிரணவமாயிருந்துள்ள ஒருகாமபினையும், ஈருகின்ற கூர்மையினையும், பிர்மா-விஷ்ணு-ருத்திரனென்கின்ற மூன்றிலையினையுமுடையதொரு சூலத்தினையும், இருக்கு-யசுர்-சாமம-அதர்வணமென்கின்ற நாலுவேதங்களையும நாலுகாலாயிருந்துள்ளதொரு மான்கன்றினையும், ஸ்ரீபஞ்சாக்ஷரங்களையும, அஞ்சுதலையாகவுடையதொரு மகாநாகத்தினையும் அஸ்தங்களிலேதரித்தருளினை எ-று.

காய்ந்தநால்வாய் மும்மதத்திருகோட் டொருகரியீடழிதுரித்தனை - என்றது. தன்னிழலைக்காயத்தக்க கோபத்தினையும் தொங்குமவாயினையு மிரண்டு கொம்பினையுமுடையதொரு ஒப்பில்லாத ஆனையினுடைய பெலங்களையெல்லாங் கெடுத்து உரித்துப்போர்த்தனை எ-று.

ஒருதனுவிருகால்வளையவாங்கி முப்புரத்தோடு நானிலமஞ்சக்கொன்று தலத்துறு மவுணரையறுத்தனை-என்றது. ஒப்பில்லாத பொன்மலையாகிய வில்லை யிருதலையும் வளையவாங்கி அஸ்திரத்தைததொடுத்து, மூன்றுபுராதிகளாகிய அவுணரையறுத்தனை எ-று.

ஐம்புலனாலா மந்தக்கரண முக்குணமிருவளி யொருங்கியவானோ ரேத்தநின்றனை-என்றது. சத்த-பரிச-ரூப-ரச-கந்தமென்னப்பட்ட ஐம்புலன்களையும், மனம்-புத்தி-

யாங்கார-சித்தமென்கின்ற அந்தக்கரணங்கள் நான்கினையும், ராசத-தாமத-சாத்துவி தமென்கின்ற மூன்றுகுணங்களையும், பிராணன்-அபானனென்கின்ற விரண்டுவாயு வையும், மூலாதாரத்திலே யொடுக்கிக்கொண்டு ஏகாக்கிரசித்தராயிருந்துள்ள தேவர் களேத்தநின்றனை எ-று.

ஒருங்கிய மனத்தோடிருபிறப்போர்ந்து முப்பொழுது குறைமுடித்து நான்மறை யோதி ஐவகைவேள்வியமைத்தாறங்க முதலெழுத்தோதிவரன்முறைபயின்றெழு வான்றனைவளாக்கும பிரமபுரம்பேணினை-என்றது. ஆகாரம்-நித்திரை-பயம்-மைது ன மிவற்றில் செல்லுகின்ற மனத்தைப் பரமேசுவரனுடைய ஸ்ரீபாதங்களிலே யொ ருக்கி முன்பு தாம் மாதாவின் உதரத்திலே பிறந்த பிறப்பும், உபநயநத்தின்பின்பு உண் டான பிறப்புமாகிய இரண்டையும் விசாரித்து மூன்று சந்தியும், செபதாப்பண-அனு ட்டான-ஓமங்களையுமுடித்து, இருக்கு-யசுர்-சாம-அதர்வணமென்கின்ற நாலுவேதங் களையுமோதி, சிவபூசை-குருபூசை-மகேசுரபூசை-பிராமணபோசனம்-அதிதி புசிப்பு என்கின்ற வைந்துவேள்வியு முடித்து, ஓதல்-ஓதுவித்தல்-வேட்டல்-வேட்பித்தல்- ஈதல்-ஏற்றல்-என்னு மாறங்கங்களையும் நடத்தி, இவைகளுக்கு முதலாயிருந்துள்ள பிரணவத்தையு முச்சரித்துத் தேவலோகத்திலுள்ள தேவர்களுக்கு மவிகொடுத்து மழையைப்பெய்விக்கும் பிராமணராலே பூசிக்கப்பட்ட பிரமபுரமே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு.—ஆறங்கமாவன-மந்திரம்-வியாகரணம்-நிகண் டு-சந்தோபிதம்-நிருத்தம்-சோதிடம்-இவ்வாறு வழங்கப்படுகின்ற முறையொன்று.

அறுபதமுரலும்வேணுபுரம் விரும்பினை-என்றது. அறுகாலுடைய வண்டுகளி சைபாடும் பொழில்சூழ்ந்த வேணுபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளினை என்ற வாறு.—வேணுபுரமென்பதற்குக் காரணம்-வேணு என்பானொரு இந்திரனுடன் கச முகனென்பானொரு வசுரன்வந்து யுத்தம்பண்ண வவனுடனே பொருது அபசெயப் பட்டுப் பிரமபுரமென்று முன்சொன்ன பதியிலேவந்து பரமேசுவரன் திருவடிகளி லே தம்பிரானே யடியேனுக்கமைத்தருளின சுவர்க்கலோகத்தைக் கசமுகன் சங்கரி க்க அவனுடன் யுத்தம்பண்ணி அபசெயப்பட்டுப் போந்தேனென்று விண்ணப்பஞ் செய்து பூசிக்கையாலே தம்பிரானுங் கணேசுரனைத் திருவுள்ளத்தடைத்து வாராய் கணேசுரனே கசமுகன் வரப்பிரசாதமுடையவன் ஒருவராலு மவனைச் செயிக்கப்போ காது நீயு மவன் வடிவாகச்சென்று உன் வலக்கொம்பை முறித்தெறிந்து அவனைக் கொன்று வேணுவென்கின்ற இந்திரனைச் சுவர்க்கலோகத்திலே குடிபுகவிடுவாயெ ன்று திருவுளம்பற்றக் கணேசுரனு மவன்வடிவாகச்சென்று தன்வலக்கொம்பை முறி த்தெறிந்து அவனையுங்கொன்று வேணுவென்கின்ற இந்திரனையும் சுவர்க்கலோகத்தி லே குடிபுகவிட உண்டானதெனக.

இகலியமைந்துணர்புகலியமர்ந்தனை-என்றது. தேவர்கள் முன்பு புகலிடமென்று புகுதலால் திருப்புகலியென்பதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை என்றவாறு. தேவலோகமான வமராபதியைச் சூரபதுமா என்பானொரு வசுரன்வந்து சங்காரம்பண் ண அவனுடனே தேவேந்திரன் முதலாயுள்ளார் பொருது அபசெயப்பட்டு யுத்தத் தையொழிந்து இனி நமக்குப் பரமேசுவரன் ஸ்ரீபாதமொழிய, புகலிடமில்லையென்று வேணுபுரத்திலேவந்து பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி யவனுலுண்டான நலிகை யை விண்ணப்பஞ் செய்து எங்களை ரக்ஷித்தருளவேண்டுமென்னப் பரமேசுவரனும்- சுப்பிரமணியனைத் திருவுளத்தடைத்து வாராய் சுப்பிரமணியனே நீ-ஆறுமுகமும் பன்

னிரண்டு கையுமாகப்போய்ச் சூரபதுமாவையுஞ்செயித்துத் தேவலோகத்திலே தேவர்களையும் குடிபுகவிட்டுவாவென வருகைகாரணம்.

பொங்குநீர்க்கடல்சூழ்வெங்குருவிளங்கினை - என்றது. மிகவும் கோபிக்கப்பட்ட கடல்சூழ்ந்த வெங்குருவென்றதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை என்றவாறு. லோகங்களுக்கெல்லாந் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் தன்னையொழிந்து வேறு காத்தாவுண்டோவென்று மனோகர்வமடைந்தமையாலே, பரமேசுவரனும் இவன் மகாகொவியாயிருப்பதாலிவனுடைய கொவத்தை யடக்கவேண்டுமென்று திருவுளத்தடைத்தருளித் தேவர்க்குக் குருவாகிய அதிகாரத்தை மாற்றியருளப் பயப்பட்டு புகலியென்கின்ற திருப்பதியிலேபோய்ப் பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி அடியேன்செய்த அபராதங்களைப் பொறுத்தருளி அடியேனை ரக்ஷித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத் தம்பிரானும் திருவுள்ளமாய் முன்போல தேவர்களுக்குக் குருவாகிய வதிகாரத்தைக் கொடுத்தகாரணத்தால் வெங்குரு என்கின்ற பெயருண்டாயது.

பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த தோணிபுரத்துறைந்தனை என்றது. பாணியென்கின்ற சலம் பிரளயமாய்ப் பூமி-அந்தர-சுவர்க்க மூன்றுலோகங்களையும் புதைப்ப அதைச் சங்காரம்பண்ணியருளி யதின்மேலே தோணிபோல மிதந்த வெங்குருவாகிய தோணிபுரமென்றதே திருப்பதியாகவெழுந்தருளியிருந்தனை எ-று.

தொலையாவிருநிதிவாய்ந்த பூந்தராயேய்ந்தனை-என்றது. வேண்டினோர் வேண்டியதுகொடுத்துத் தொலைவறச் சங்கநிதி-பதுமநிதியென்று சொல்லப்பட்ட இரண்டு நிதிகளும், பூவும், தாராயும் பூசிக்கையாலே திருப்பூந்தராயென்னப்பட்ட திருப்பதியிலே எழுந்தருளியிருந்தனை எ-று.—ஒருகாலத்துந் தொலையாதவரத்தைப்பெறுவது காரணமாகத் திருத்தோணிபுரத்திலேவந்து, அவைகள் தம்பிரானைப்பூசித்தளவில் உங்களுக்கு வேண்டுவதெதனென்றுகேட்டருள, தம்பிரானே அடியோங்களுக்கு எந்தக்காலங்களிலுந் தொலையாமல் கொடுக்கத்தக்க வரத்தை பிரசாதித்தருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவ்வாறே தொலையாத வரத்தையுங்கொடுத்தருளி, மகாசங்காரத்திலுந் தம்முடைய ஸ்ரீ அஸ்தங்களிலே தரித்தருளும் வரப்பிரசாதமுங் கொடுத்தருளினதால் பூந்தராயெனப் பெயருண்டாயது.

வரபுரமென்றுணர் சிரபுரத்துறைந்தனை - என்றது, வரத்தைத்தருவதான புரமென்றுணரத்தக்க சிரபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை எ-று. தேவர்களும்-பிரம்மா-விஷ்ணுக்களுமாகக்கூடி அமிர்தத்தையுண்டாக்கித் தேவர்களையிருத்தி விஷ்ணுபகவான் அமிர்தம்படைத்துக்கொண்டு வருகிறவேளையில் ராகு, கேதுவென்கின்ற இரண்டு பாம்புங்கூடிக் கரந்திருந்து அமிர்தபானம்பண்ணுவதாக இருப்பதுகண்டு விஷ்ணுபகவான் அமிர்தம்படைத்துவருகின்ற சட்டுவத்தைக்கொண்டு தலையறவெட்டுகையா லுடலிழந்து நாகமிரண்டும் நம்முடல்தரக்கடவான் பரமேசுவரனொழிய வேறில்லையென்று திருப்பூந்தராயிலேவந்து பரமேசுவரனைநோக்கி இரண்டுசிரங்களும் பூசித்ததால் சிரபுரமென்று பெயருண்டாயது.

ஒருமலையெடுத்த விருதிறலரக்கன் விறல்கெடுத்தருளினை - என்றது. பெருமையுள்ள கயிலாயமென்னும் பேரையுடைத்தாய் -உனக்கே ஆலயமாயிருப்பதொரு

வெள்ளிமலையையெடுத்த பெரிய புசபெலங்கொண்ட இராவணனுடைய கொவத்தைக்கெடுத்தருளினை எ-று.

புறவம்புரிந்தனை-என்றது. பிரசாபதியென்கின்ற பிரமரிஷி - கௌதமரிஷியை நோக்கி நீ ஸ்திரீபோகத்தைக்கைவிடாமலிருக்கிறவனல்லவோவென்று தூஷணிக்கையாலே கௌதமரிஷியும் பிரசாபதி பகவானைப்பார்த்து நீ புறாவென்னும் பக்ஷியாய் நரமாமிசம் புசிப்பாயாகவென்று சபிக்கப் பிரசாபதியும் ஒரு புறாவாகப்பிறந்து, பலவிடத்திலும் நரமாமிசம் புசிக்கையில், ஒருநாள் மாமிசந்தேடிச் சோழவமிஸத்திலே யொருராசா தினசரிதனாயிருக்கிறவிடத்திலே யிந்தப்புறாவாகிய ரிஷியும்போய் ராசாவைப்பார்த்து எனக்கு அதிக தாகமாயிருக்கின்றது சற்று நரமாமிசம் இடவல்லையோவென்ன, ராசாவும் உனக்கு எவ்வளவு மாமிசம் வேணுமென்னப் புறாவும் உன் சரீரத்திலே பாதிதரவேணுமென்ன ராசாவுந் தன் சரீரத்திலே பாதி யரிந்திடப் புறாவுக்கு நிறையப் போதாமல் சாவ மாமிசத்தையு மரிந்திட்டு ராசாவுஞ் சோர்ந்துவிழ, இந்தப் புறாவாகிய பக்ஷியும் நமக்குத் தன் சரீரத்தை யரிந்திடப் பிழைப்பித்த ராசா சரீரம் பெறும்படி செய்பவராரென்று விசாரிக்குமளவில் பரமேசுவரனொழிய வேறில்லையென்று சிரபுரத்திலேவந்து பரமேசுவரனை நோக்கி ஆச்சிக்கப் பரமேசுவரனுந் திருவுளத் தடைத்தருளப் புறாவுந் தம்பிரானே யடியேன் தாகந்தீரத் தன் சரீரத்தை யரிந்திட்ட ராசாவுக்கு முன்போல உடலைப் பிரசாதித்து அடியேனுக்கு மிந்தச் சாபதோஷம் நீக்கவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ராசாவுக்குச் சரீரமுங்கொடுத்துப் புறாவுக்கு வேண்டும் வரப்பிரசாதங்களையும் பிரசாதித்துச் சாபதோஷமு மாற்றியருளிப் புறாவும் பூசிக்கையாலே புறவமென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளி யிருந்தனை எ-று.

முந்நீர்த்துயின்றோ னான்முகனறியாப் பண்பொடுநின்றனை-என்றது. ஆற்று நீர், வேற்று நீர், ஊற்று நீர் என்று சொல்லப்பட்ட முந்நீராகிய சமுத்திரத்திலே துயிலாநின்ற நாராயணனும் நான்குமுகத்தினையுடைய பிரமாவும் அடியு முடியுந் தேடற்கரிதாய்நின்ற பண்பினையுடையவரா யெழுந்தருளி யிருந்தனை எ-று.

சண்பையமர்ந்தனை-என்றது. தூர்வாச மகாரிஷியாசிரமத்தில் கிருஷ்ணாவதாரத்திலுள்ள கோபாலப்பிள்ளைகளெல்லா மிந்த இருஷியை அசங்கதித்துத் தங்களிலே யொருவனைக் கொப்பிணியாகப் பாவித்துச்சென்று இவள் பெறுவது ஆணோ, பெண்ணோவென்று அந்த இருஷியைக் கேட்கையில், அவர் கோபித்து இவள் பெறுவது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, உங்கள் வமிசத்தாரையெல்லாஞ் சங்கரிக்கைக்கு ஒரு இருப்புலக்கை பிறக்கக் கடவதென்று சபிக்கையால், அவன் வயிற்றிலிருந்து ஒரு இருப்புலக்கைவிழ அந்தச்செய்தியைக் கிருஷ்ணன்கேட்டுத் தூர்வாசமகாரிஷி சாபந் கேவலமல்லவென்று அந்த இருப்புலக்கையைப் பொடியாக அராவி அந்தப் பொடியைச் சமுத்திரத்திலே போட அராவுதலுக்குப் பிடிபடாத ஒரு வேப்பம்விதைப் பிரமாணமுள்ள இரும்பை ஒருமீன் விழுங்கி ஒரு வலைக்காரன்கையிலே யகப்பட்டது. அதின் வயிற்றிலகிடந்த இரும்பைத் தன் னம்புத்தலையிலேவைத்தான். மற்றுஞ் சமுத்திரத்திற்போட்ட இரும்புப் பொடிகளெல்லாம் அலையுடனே வந்து கரைசேர்ந்து சண்பையாக முளைத்துக் கதிராய் நின்றவிடத்திலே கோபாலகுமாரர்கள் விளையாடி வருவோமென்று இரண்டுவகையாகப் பிரிந்து சென்று அந்தச் சண்பைக்கதிரைப்பிடுங்கி யெறிந்துகொண்டு அதனாலே பட்டுவிழுந்திறந்தார்கள். அதைக் கிருஷ்ணன் கேட்டு இதனாலே நமக்கு மரணமாயிருக்குமென்று விசாரித்து, ஆலின்மேலே யொரு

இலையிலே யேகாசனமாக வொருபாததததை மடித்து, ஒருபாதத்தைத் தூக்கி யமர்ந்திருக்கிறசமையததிலே அந்தமீன்வேடன பக்ஷிசாலங்களைத்தேடி வருகிறபோது, தூக்கிய பாதத்தை யொரு செமபருநதிருக்கிறதாகப பாவிததது அந்த அமபைத் தொடுத்தெய்யக் கிருஷ்ணனும படடுப பரமபதததையடைந்தான. அந்தச்சாபதோஷம் தூர்வாசமகாரிஷியைசசென்று நலிகையாலே, இநதத தோஷததை நீக்கப பரமேசுவரனை நோக்கி அர்சசிக்கப் பரமேசுவரனுந திருவுளததடைததருள இருஷியுந தெண்டனபண்ணித தம்பிரானே அடியேனுடைய சாபததாலே கிருஷணனுடைய வமிசததிலுள்ள கோபாலரெல்லாருஞ் சணபைககதிகளால சங்காரபபடடமையாலே அந்தத் தோஷ மடியேனைவந்து நலியாதபடி திருவுளத தடைததருளி ரக்ஷிககவேணடுமென்று விண்ணப்பஞ்செய்யத தூர்வாசமகாரிஷிக்குச சணபைசசாபததினுலுள்ள தோஷததை நீக்கிச சணபைமுனியென்கின்ற நாமததையுந தரிததருளிச சணபையென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளி யிருநதனை எ-று.

ஐயுறுமமணரு மறுவகைததேரரு மூழியுமுணராக் காழியமாந்தனை-என்றது. வேதாகம புராணசாததிரஙகளிலுள்ளவுணமையை யிலலையென்று ஐயமுற்றிருக்கின்ற அமணருமு, சைபபுப-புளிபபுக-காரபபுத-துவாப்பு-கூரபபுத-திததிபபு என்கின்ற அறுவகைரசஙகளையும உசசிககுமுனனேபுசிககிறதே பொருளென்றிருக்கிறபுததருமஊழிகாலததுமறியாமல மிகவுங காளிதமான விஷததையுடைய காளியென்கின்ற நாகம பூசிக்கையாலே சீகாழியென்கின்றதே திருப்பதியாக வெழுநதருளி யிருநதனை எ-று.

எசசனேழிசையோன கொசசையை மெசசினை-என்றது. குரல்-துததம. கைககிளை-உழை-இளி-விளரி-தாரம எனபதேழிசை.—குரலாவது - சஙகதொனி, துததமாவது-ஆணமீனபிளிறு, கைககிளையாவது-குதிரையினகுரல, உழையாவது-மானினகுரல, இளியாவது-மயிலினகுரல, விளரியாவது - கடலோசை, தாரமாவது - காடையினகுரல என்னும நாதஙகளையு மெசசினே. மகததான இருடிகள எலலாரினும் விருததராயுள்ள பராசரபபிரமரிஷியானவர், மறற ரிஷிகளெலலாரையும நோககி நீஙகள் சமுசாரிகளொழிய விரததததை யனுஷடிபபாரிலலையென்று அவரகளைத தூஷிக்க, அவரகளுமநீ மசசகநதியைப புணாநது மசசகநதமுமுனனைப்பறறி விடாமலனுபவிப்பாயென்று சபிக்கையாலே அநதச சாபததினபடிபோய மசசகநதியைப் புணாநது அநதத தூக்கநத மிவரைபபறறி யொரு யோசனைதூரம தூககநதிததபடியாலே இது போக்கவலலவர் பரமேசுவரனையொழிய வேறிலலையென்று அவர சீகாழியிலே வந்து பரமேசுவரனை அரசசிககப பரமேசுவரன உனககு வேணடின தெனனென்று கேட்கத தமபிரானே அடியேனைப்பறறின தூக்கநதததை விடுவிககவேண்டுமென்று விணணப்பஞ்செய்யத தமபிரானுமிவனெனன கொச்சை முனியோவென்று திருவுளமா யிவனமேறபறறின தூக்கநதததையும போக்கிச சுகநதததையும பிரசாதித்தருளிக் கொச்சையென்கின்ற சந்தானநாமத்தையுந் தரித்தருளி கொச்சையென்கின்றதே திருப்பதியாக வெழுநதருளி யிருந்தனை எ-று.

ஆறுபதமு மைந்தமர்வேள்வியு மறைமுதல்நான்கு மூன்றுகாலமுந் தோன்றநின்றனை-என்றது. பிரததி-பிரத்தியாகாரம-துல்லியம்-துல்லியாதீதம்-வித்தை-அவிததையென்கின்ற ஆறுபதங்களும், ஆசு-மதுரஞ்-சித்திரம்-வித்தாரம்-விரையம-என்கின்ற வைந்தும், இருக்கு-யசுர்-சாமம்-அதாவணமென்கின்ற நாலுவேதங்களும், செல்காலம் - வருகாலம் - நிகழ்காலமென்கின்ற மூன்றுகாலமுந் தோன்றநின்ற மூர்த்தியாயினை எ-று.

இருமையி னொருமையும்-என்றது. சத்தி சிவங்களாயிருந்துள்ள இரண்டுமொன்றாய் அர்த்தநாரீசுவரமாயிருந் துள்ளது எ-று.

ஒருமையின்பெருமை-என்றது. தானேயொரு எல்லையில்லாத சிவமாயிருந்துள்ளது எ-று.

மறுவிலாமறையோர் கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை கழுமலமுதுபதிக் கவுணியனறியும்-என்றது. மறுவற்ற பிரமவமிசத்தில் தோன்றித தீக்கைகளாலே மலத்தைக் கழுவப்பட்ட கவுணியர் கோத்திரத்திலே வந்த சீகாழிப்பிள்ளையார் கட்டுரையை விரும்பிக் கழுமலமென்கின்ற முதுபதியிலே எழுந்தருளினை. கமமென்கின்ற பிரமசிரசிலே உண்கின்றவனே அறியும் எ-று.

அனையதன்மையையாதலின் - என்றது. அத்தன்மையாகிய வியல்பினையுடைமையையாதலின் எ-று.

நினைநினைய வல்லவரில்லை நீணிலத்தே-என்றது. நின்னை நினைக்க வல்லார்களுக்குப் பிறப்பில்லை என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

உரைமுற்றியது.

—◇◇—

## திருச்சக்கரமாற்று.

பண்-காந்தாரம் (உ-ம. திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

விளங்கியசீர்ப்பிரமனூர் வேணுபுரம்புகலிவெங்குருமேற்சோலை
வளங்கவருந்தோணிபுரம்பூந்தராய்சிரபுரம்வண்புறவம்மண்மேற்
களங்கமில்லூர்சண்பைகமழ்காழிவயங்கொச்சைகழுமலமென்றின்ன
விளங்குமரன்றனைப்பெற்றிமையவர்தம்பகையெறிவித்திறைவனூரே (க)

திருவளருங்கழுமலமேகொச்சைதேவேந்திரனூரயனூர்தெய்வத்
தருவளரும்பொழிற்புறவஞ்சிலம்பனூர்காழிதகுசண்பையொண்பா
வுருவளர்வெங்குருப்புகலியோங்குதராய்தோணிபுரமுயர்ந்ததேவர்
வெருவவளர்கடல்விடமதுண்டணிகொள்கண்டத்தோன்விரும்புமூரே. (உ)

வாய்ந்தபுகழ்மறைவளருந்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்வாழூ
ரேய்ந்தபுறவந்திகழுஞ்சண்பையெழிற்காழியிறைகொச்சையம்பொன்
வேய்ந்தமதிற்கழுமலம்விண்ணோர்பணியமிக்கயனூரமரர்கோனூ
ராய்ந்தகலையார்புகலிவெங்குருவந்தரனுளுமமருமூரே. (ங)

மாமலையாள்கணவனமகிழ்வெங்குருமாப்புகலிதராய்தோணிபுரம்வான்
சேமமதில்புடைதிகழுங்கழுமலமேகொச்சைதேவேந்திரனூர்சீர்ப்
பூமகனூர்பொலிவுடையபுறவம்விறற்சிலம்பனூர்காழிசண்பை
பாமருவுகலையெட்டெட்டுணர்ந்தவற்றின்பயனுகர்வோர்பரவுமூரே. (ச)

தரைத்தேவர்பணிசண்பைதமிழ்க்காழிவயங்கொச்சைதயங்குபூமேல்
விரைச்சேருங்கழுமலமெய்யுணர்ந்தயனூர்விண்ணவர்தங்கோனூர்வென்றி
திரைச்சேரும்புனற்புகலிவெங்குருச்செல்வம்பெருகுதோணிபுரஞ்சீ [த்
துரைச்சேர்பூந்தராய்சிலம்பனூர்புறவமுலகத்திலுயர்ந்தவூரே. (ரு)

புண்டரிகத்தார்வயல்சூழ்புறவமிகுசிரபுரம்பூங்காழிசண்பை
யெண்டிசையோரிறைஞ்சியவெங்குருப்புகலிபூந்தராய்தோணிபுரஞ்சீர்
வண்டமரும்பொழின்மல்குகழுமலநற்கொச்சைவானவர்தங்கோனூ
ரண்டயனூரிவையென்பரருங்கூற்றையுதைத்துகந்தவப்பனூரே. (சு)

வண்மைவளாவரத்தயனூர்வானவர்தங்கோனூர்வண்புகலியிஞ்சி
வெண்மதிசேர்வெங்குருமிக்கோரிறைஞ்சுசண்பைவியன்காழிகொச்சை
கண்மகிழுங்கழுமலங்கற்றோர்புகழுந்தோணிபுரம்பூந்தராய்சீர்ப்
பண்மலியுஞ்சிரபுரம்பார்புகழ்புறவம்பாலவண்ணனபயிலுமூரே. (எ)

மோடிபுறங்காக்குமூர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்காழிமூதூர்
நீடியலுஞ்சண்பைகழுமலங்கொச்சைவேணுபுரங்கமலநீடு
கூடியயனூர்வளர்வெங்குருப்புகலிதராய்தோணிபுரங்கூடப்போர்
தேடியுழலவுணர்பயிறிரிபுரங்கள்செற்றமலைச்சிலையனூரே. (அ)

இரக்கமுடையிறையவனூர்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்றனூர்
கிரக்கவருபுனற்புறவநின்றதவத்தயனூர்சீர்த்தேவர்கோனூர்
வரக்கரவார்புகலிவெங்குருமாசிலாச்சண்பைகாழிகொச்சை
யரக்கனவிறலழித்தருளிகழுமலந்தண்ணார்வேதமறாதவூரே. (கூ)

மேலோதுங்கழுமலமெய்த்தவமவளருங்கொச்சையிந்திரனூர்மெய்ம்மை
நூலோதுமயனறனூர்நுண்ணறிவார்குருப்புகலிதராய்தூநீர்மேற்
சேலோடுந்தோணிபுரந்திகழ்புறவஞ்சிலம்பனூர்செருச்செய்தன்று
மாலோடுமயனறியான்வண்காழிசண்பைமண்ணோர்வாழ்தருமூரே. (க0)

ஆக்கமார்சீரூர்சண்பைகாழியமர்கொச்சைகழுமலமன்பானூ
ரோக்கமுடைத்தோணிபுரம்பூந்தராய்சிரபுரமொண்புறவநண்பார்
பூக்கமலத்தோன்மகிழூர்புரந்தரனூர்புகலிவெங்குருவுமென்பர்
சாக்கியரோடமணகையார்தாமறியாவகைநின்றான்றங்குமூரே. (கக)

அரக்கனுஞ்சோதருமனூர்புகலிதராய்தோணிபுரமணிநீர்ப்பொய்கை
புக்கரனுஞ்சோபுறவஞ்சீர்ச்சிலம்பனூர்புகழ்க்காழிசண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க்கழுமலமேகொச்சைவயம்வேணுபுரமயனூர்மேவிச்
சக்கரஞ்சீர்த்தமிழ்விரகன்றான்சொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தோரே

திருச்சிற்றம்பலம்.

---

## கோழத்திரி.

பண் - காந்தாரம். (உ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பூமகனூர்புத்தேளுக்கிறைவனூர்குறைவிலாப்புகலிபூமேன்
மாமகளூர்வெங்குருநற்றோணிபுரம்பூந்தராய்வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகுசிரபுரஞ்சீர்ப்புறவநிறைபுகழ்ச்சண்பைகாழிகொச்சை
காமனைமுன்காய்ந்தநுதற்கண்ணவனூர்கழுமலநாங்கருதுமூரே. (க)

கருத்துடையமறையவர்சேர்கழுமலமெய்த்தோணிபுரங்கனகமாட
வுருத்திகழ்வெங்குருப்புகலியோங்குதராயுலகாருங்கொச்சைகாழி
திருத்திகழுஞ்சிரபுரந்தேவேந்திரனூர்செங்கமலத்தயனூர்தெய்வத்
தருத்திகழும்பொழிற்புறவஞ்சண்பைசடைமுடியண்ணறங்குமூரே. (உ)

ஊர்மதியைக்கதுவவுயர்மதிற்சண்பையொளிமருவுகாழிகொச்சை
காரமலியும்பொழில்புடைசூழ்கழுமலமெய்த்தோணிபுரங்கற்றோர்த்துஞ்
சீர்மருவுபூந்தராய்சிரபுரமெய்ப்புறவமயனூர்பூங்கற்பத்
தார்மருவுமிந்திரனூர்புகலிவெங்குருக்கங்கைதரித்தோனூரே. (ங)

தரித்தமறையாளர்மிகுவெங்குருச்சீர்த்தோணிபுரந்தரியாரிஞ்சி
யெரித்தவன்சேர்கழுமலமேகொச்சைபூந்தராய்புகலியிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்ச்சிரபுரஞ்சீர்திகழ்காழிசண்பைசெழுமறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப்புறவம்விரைக்கமலத்தோனூருலகில்விளங்குமூரே (௪)

விளங்கயனூர்பூந்தராய்மிகுசண்பைவேணுபுரமேகமேய்க்கு
மிளங்கமுகம்பொழிற்றோணிபுரங்காழியெழிற்புகலிபுறவமேரார்
வளங்கவரும்வயற்கொச்சைவெங்குருமாச்சிரபுரமவ்வனஞ்சமுண்டு
களங்கமலிகளத்தவன்சீர்க்கழுமலங்காமனுடலங்காய்ந்தோனூரே (ரு)

காய்ந்துவருங்காலனையன்றுதைத்தவனூர்கழுமலமாத்தோணிபுரஞ்சீ
ரேய்ந்தவெங்குருப்புகலியிந்திரனூரிருங்கமலத்தயனூரின்பம்
வாய்ந்தபுறவந்திகழுஞ்சிரபுரம்பூந்தராய்கொச்சைகாழிசண்பை
சேர்ந்தவனைமுன்பயந்துலகிற்றேவர்கட்டம்பகைகெடுத்தோனதிகழுமூரே (சா)

திகழ்மாடமலிசண்பைபூந்தராய்பிரமனூர்காழிதேசார்
மிகுதோணிபுரந்திகழும்வேணுபுரம்வயங்கொச்சைபுறவம்விண்ணோர்
புகழ்புகலிகழுமலஞ்சீர்ச்சிரபுரம்வெங்குருவெம்போர்மகிடற்செற்று
நிகழ்நீலிநின்மலன்றன்னடியிணைகள்பணிந்துலகினின்றவூரே (எ)

நின்றமதில்சூழ்தருவெங்குருத்தோணிபுரநிகழும்வேணுமன்றி
லொன்றுகழுமலங்கொச்சையுயர்காழிசண்பைவளர்புறவமோடி
சென்றுபுரங்காக்குமூர்சிரபுரம்பூந்தராய்புகலிதேவர்கோனூர்
வென்றிமலிபிரமபுரம்பூதங்கட்டாங்காக்கமிக்கவூரே (அ)

மிக்ககமலத்தயனூர்விளங்குபுறவஞ்சண்பைகாழிகொச்சை
தொக்கபொழிற்கழுமலந்தூத்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்சேரூர்
மைக்கொள்பொழில்வேணுபுரமதிற்புகலிவெங்குருவல்லரக்கன்றிண்டோ
ளொக்கவிருபதுமுடிகளொருபதுமீட்டழித்துகந்தவெம்மானூரே. (கூ)

எம்மான்சேர்வெங்குருச்சீர்ச்சிலம்பனூர்கழுமலநற்புகலியென்றும்
பொய்ம்மாணபிலோர்புறவங்கொச்சைபுரந்தரனூர்நற்றோணிபுரம்போர்க்
கைம்மாவையுரிசெய்தோன்காழியயனூர்தராய்சண்பைகாரின்
மெய்ம்மால்பூமகனுணராவகைதழலாய்விளங்கியவெம்மிறைவனூரே (க0)

இறைவனமர்சண்பையெழிற்புறவமயனூரிமையோர்க்கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப்புகலிவெங்குருத்தோணிபுரங்குணமார்பூந்தராய்நீர்ச்
சிறைமலிநற்சிரபுரஞ்சீர்க்காழிவளர்கொச்சைகழுமலந்தேசின்றிப்
பறிதலையோடமணர்கையர்சாக்கியர்களறிவரியவம்மானூரே. (கக)

அம்மான்சேர்கழுமலமாச்சிரபுரம்வெங்குருக்கொச்சைபுறவஞ்சீர்
மெய்ம்மானத்தோணபுகலிமிகுகாழிதோணிபுரந்தேவர்கோனூ
ரம்மானமன்னுயர்சண்பைதராயயனூர்வழிமுட்டக்குமாவின்பாச்ச
றம்மானைநறியஞானசம்பந்தன்றமிழ்கற்போர்தக்கோர்தாமே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சக்கரமாற்று.

பண் - காநதாரம. (உ-ம திருமுறை.)

திருசசிறறமபலம.

*பிரமனூாவேணுபுரமபுகலிவெஙகுருபபெருநீாத்தோணி
புரமனனுபூநதராய்பொனனஞ்சிரபுரமபுறவஞசணபை
யரனமனனுதணகாழிகொசசைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூாபனனிரணடாய்நினறதிருககழுமலநாமபரவுமூரே (க)

வேணுபுரமபிரமனூாபுகலிபெருவெஙகுருவெள்ளத்தோங்குந
தோணிபுரமபூநதராய்தூநீாசசிரபுரமபுறவங்காழி
கோணியகோட்டாறறுக்கொச்சைவயஞசணபைகூருஞ்செலவங
காணியவையகததாரேததுஙகழுமலநாஙகருதுமூரே. (உ)

புகலிசிரபுரமவேணுபுரஞ்சணபைபுறவஙகாழி
நிகரிலபிரமபுரஙகொசசைவயநீாமேனினறமூதூ
ரகலியவெஙகுருவோடநதணடராயமரா பெருமாற்கினபம
பகருநகாநலலகழுமலநாஙகைதொழுதுபாடுமூரே (ங)

வெஙகுருததணபுகலிவேணுபுரஞசணபைவெள்ளஙகொள்ளத்
தொஙகியதோணிபுரமபூநதராயதொகுபிரமபுரநதொலகாழி
தஙகுபொழிறபுறவஙகொசசைவயநதலைபணடாணடமூதூா
கஙகைசடைமுடிமேலேறறுனகழுமலநாஙகருதுமூரே (ச)

தொன்னீரிற்றோணிபுரமபுகலிவெஙகுருததுயாதீாகாழி
யினனீரவேணுபுரநதராயபிரமனூரெழிலாசணபை
நனனீரபூமபுறவஙகொச்சைவயஞசிலமபனகாரநலல
பொனனீரபுனசடையானபூநதணகழுமலநாமபுகழுமூரே (ரு)

தணணநதராய்புகலிதாமரையானூாசணபைதலைமுனணட
வணணனகாகொசசைவயநதணபுறவஞசீரணியாாகாழி
விணணியலசீாவெஙகுருநலவேணுபுரநதோணிபுரமேலாலேநது
கணணுதலானமேவியநறகழுமலநாஙகைதொழுதுகருதுமூரே (சு)

சீராாசிரபுரமுஙகொசசைவயஞசணபையொடுபுறவநலல
வாராததராய்பிரமனூாபுகலிவெங்குருவொடநதண்காழி
யோராகழுமலமுமவேணுபுரநதோணிபுரமெனறெனறுளகிப
பேராநெடியவனுநான்முகனுஙகாணபரியபெருமானூரே. (எ)

புறவஞ்சிரபுரமுநதோணிபுரஞ்சணபைமிகுபுகலிகாழி
நறவமிகுசோலைககொச்சைவயநதராயநான்முகனறனூா
விறலாயவெஙகுருவுமவேணுபுரமவிசயனமேலமபெயது
திறலாலரக்கனைசசெற்றுனறனகழுமலநாஞ்சேருமூரே. (அ)

சணபைபிரமபுரநதணபுகலிவெங்குருநற்காழிசாயாப்
பணபாாசிரபுரமுஙகொசசைவயநதராய்புறவமபாாமே
னணபாாகழுமலஞசீாவேணுபுரநதோணிபுரநாணிலாத
வெணபற்சமணரொடுசாககியரைவியபபழிததவிமலனூரே. (கூ)

செழுமலியபூங்காழிபுறவஞ்சிரபுரஞ்சீர்ப்புகலிசெய்ய
கொழுமலரானன்னகரந்தோணிபுரங்கொச்சைவயஞ்சணபையாய
விழுமியசீரவெங்குருவொடோங்குதராய்வேணுபுரமிகுனமாடக
கழுமலமென்றின்னபெயர்பனனிரணடுங்கண்ணுதலானகருதுமூரே. (கο)

கொச்சைவயம்பிரமனூர்புகலிவெங்குருப்புறவங்காழி
கச்சல்விழுவோவாசீடார்சிரபுரசீள்சணபைமூதூா
நச்சினியபூந்தராய்வேணுபுரநதோணிபுரமாகிநமமே
லச்சங்கடீாத்தருளுமமமானகழுமலநாமமருமூரே. (கக)

காவிமலர்புரையுங்கணணூர்கழுமலத்தின்பெயரைநாளும்
பாவியசீாப்பன்னிரணடுநன்னூலாபபத்திமையாற்பனுவன்மாலை
நாவினலமபுகழ்சீாநான்மறையானஞானசமபநதன்சொனன
மேவியிசைமொழிவாாவிண்ணவரிலெணணுதலைவிருபபுளாரே. (கஉ)

திருச்சிற்றமபலம்.

* திருஞானசம்பந்தப்பிள்ளையார், மதுரையில் மங்கையர்க்கரசியார், குலச்சிறை நாயனூா வேண்டுகோளுககிசைநது பாணடியன சுரநோயைத தீாக்குமபொருட்டு அவன் அரமனையுட்செலல பாணடியன பிள்ளையாரைக்கணடவுடனே அஞசலி செய்து, இரத்திஞசனததில் இருத்திப் பிள்ளையாருடைய திருமேனியைத தரிசிக் கப்பெற்றதனல் வெப்புநோய் சிறிது நீஙகி, சுவாமி, தேவரீருடையஊா யாது எனறு வினவ, பிளளையாா "பிரமனூா வேணுபுரம" எனனும திருபபதிகததினலே உதத ரங்கொடுததருளினா.

திருமாலைமாற்று.

பண் - கௌசிகம (ந-ம. திருமுறை.)

திருச்சிற்றமபலம்.

யாமாமாநீயாமாமாயாழீகாமாகாணுகா
காணுகாமாகாழீயாமாமாயாநீமாமாயா. (க)

யாகாயாழீகாயாகாதாயாராராதாயாயா
யாயாதாராராயாதாகாயாகாழீயாகாயா (உ)

தாவாமூவாதாசாகாழீநாதாநீயாமாமா
மாமாயாநீதாநாழீகாசாதாவாமூவாதா. (௩)

நீவாவாயாகாயாழீகாவாவானோவாராமே
மேராவானோவாவாகாழீயாகாயாவாவாநீ. (ச)

யாகாலாமேயாகாழீயாமேதாவீதாயாவீ
வீயாதாவீதாமேயாழீகாயாமேலாகாயா. (ரு)

மேலேபோகாமேதேழீகாலாலேகாலானேயே
யேனலாகாலேலாகாழீதேமேகாபோலேமே. (சு)

நீயாமாநீயேயாமாதாவேழீகாநீதானே
நேதாநீகாழீவேதாமாயாயேநீமாயாநீ. (எ)

நேணவராவிழயாசைழியேவேகதளேரியளாயுழிகா
காழியுளாயரிளேதகவேயேழிசையாழவிராவணனே. (அ)

காலேமேமேலகாணீகாழீகாலேமாலேமேபூ
பூமேலேமாலேகாழீகாணீகாலேமேலேகா. (கூ)

வேரியுமேணவகாழியொயேயேனேகிணேமடளோகரதே
தேரகளோடமணேகினேயேயேயொழிகாவணமேயுரிவே. (க0)

நேரகழாமிதயாசழிதாயேனனியேனனிளாயுழிகா
காழியுளானினயேனினயேதாழிசயாதமிழாகரனே. (கக)

திருச்சிற்றமபலம்.

---

### திருவியமகம்.

---

பண - கௌசிகம். (ரு-ம திருமுறை)

---

திருச்சிற்றமபலம்.

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருணமெய்யினையே
கற்றவாகாய்வதுகாமனையேகனலவிழிகாய்வதுகாமனையே
யறறமறைபபதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுனபணியே
பெற்றுமுகநததுகந்தனையேபிரமபுரததையுகநதனையே. (க)

சதிமிகவநதசலநதரனேதடிசிரநோகொள்சலநதரனே
யதிரொளிசோதிகிரிபபடையாலமாநதனருமபாதுதிபபடையால
மதிதவழ்வெற்பதுகைச்சிலையேமருவிடமேற்பதுகைச்சிலையே
விதியினினிட்டவிருமபரனேவேணுபுரததைவிருமபரனே. (உ)

காதமரத்திகழ்தோடினனேகானவனுய்க்கடிதோடினனே
பாதமதாற்கூற்றுதைததனனேபாரதனுடலமபுதைததனனே
தாதவிழ்கொன்றைதரிததனனேசாரநதவினையதரித்தனனே
போதமமருமுரைபபொருளேபுகலியமர்நதபரமபொருளே. (ரு)

மைததிகழ்நஞ்சுமிழ்மாசுணமேமகிழ்நதரைசேர்வதுமாசுணமே
மெய்ததுடலபூசுவர்மேன்மதியேவேதமதோதுவர்மேன்மதியே
பொயத்தலையோடொருமத்தமதேபுரிசடைவைத்ததுமத்தமதே
விததகராகியவெங்குருவேவிருமபியமாநதனர்வெங்குருவே. (ச)

உடனபயிலகின்றனன்மாதவனேயுறுபொறிகாய்நதிசைமாதவனே
திடமபடமாமறைகணடனனேதிரிகுணமேவியகணடனனே
படங்கொளரவரைசெய்தனனேபகடுரிகொணடரைசெய்தனனே
தொடர்ந்ததுயர்க்கொருநஞ்சிவனேதோணிபுரத்துறைநஞ்சிவனே. (ரு)

திகழ்கையதுமபுகைதங்கழலேதேவர்தொழுவதுந்தங்கழலே
யிகழ்பவர்தாமொருமானிடமேயிருநதனுவோடெழின்மானிடமே
மிகவருநீர்கொளுமஞ்சடையேமின்னனிகாகின்றதுமஞ்சடையே
தகவிரதங்கொள்வர்சுநதரரேதக்கதராயுறைசுநதரரே. (சு)

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மட்டுவார்குழலாளொடுமால்விடை
யிட்டமாவுகந்தேறுமிறைவனார்
கட்டுநீத்தவர்க்கின்னருள்செய்யுஞ்
சிட்டர்போலுஞ்சிராப்பள்ளிச்செல்வரே (௧)

அரியயன்றலைவெட்டிவட்டாடினா
ரரியயன்றொழுதேத்துமருமபொருள்
பெரியவன்சிராப்பள்ளியைப்பேணுவா
ரரியயன்றொழவங்கிருப்பார்களே. (௨)

அரிச்சிராப்பகலைவராலாட்டுண்டு
சுரிச்சிராதுநெஞ்சேயொன்றுசொல்லக்கே
டிருச்சிராப்பள்ளியென்றலுந்தீவினை
நரிச்சிராதுநடக்குநடக்குமே (௩)

தாயுமாயெனக்கேதலைக்கண்ணுமாயப்
பேயனேனையுமாண்டபெருந்தகை
தேயநாதன்சிராப்பள்ளிமேவிய
நாயனாரென்னநம்வினைநாசமே (௪,௫,௬,௭,௮,௯,௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிராப்பள்ளித் திருப்பதிகம் - ௨.

சுவாமி - தாயுமானவர்
தேவி - மட்டுவார்குழலி

ஆக திருப்பதிகம் - ௧௦.

# ௭. திருவெறும்பியூர்.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

விரும்பியூறுவிடேன்மடநெஞ்சமே
கரும்பினூறல்கண்டாய்கலந்தார்க்கவ
ணிரும்பினூறலறாததோர்வெண்டலை
யெறும்பியூர்மலையானெங்களீசனே. (௧)

பிறங்குசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுசீர்க்
கறங்குபூதகணமுடைக்கண்ணுத
னறுங்குழன்மடவாளொடுநாடொறு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (உ)

மருந்துவானவர்தானவர்க்கின்சுவை
புரிந்தபுன்சடைப்புண்ணியன்கண்ணுதல்
பொருந்துபூண்முலைமங்கைநல்லாளொடு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (௩)

நிறங்கொள்கண்டத்துநின்மலனெம்மிறை
மறங்கொள்வேற்கண்ணிவாணுதல்பாகமா
வறம்புரிந்தருள்செய்தவெம்மங்கண
னெறும்பியூர்மலையானெங்களீசனே. (௪)

நறும்பொனாண்மலர்க்கொன்றையுநாகமுந்
துறும்புசெஞ்சடைத்தூமதிவைத்துவா
னுறும்பொன்மால்வரைப்பேதையொடோர்தொறு
மெறும்பியூர்மலையானெங்களீசனே. (௫)

கறும்பியூர்வனைவைந்துளகாயத்திற்
றிறம்பியூர்வனமற்றும்பலவுள
குறும்பியூர்வதோர்கூட்டகத்திட்டெனை
யெறும்பியூரரன்செய்தவியறகையே. (௬)

மறந்துமற்றிதுபேரிடர்நாடொறுந்
திறம்பிநீநினையேலெமடநெஞ்சமே
புறஞ்செய்கோலக்குரம்பையிலிட்டெனை
யெறும்பியூரரன்செய்தவியறகையே (௭)

இன்பமும்பிறப்பும்மிறப்பினொடு
துன்பமும்முடனேவைத்தசோதியா
னன்பனேயரனேயென்றரற்றுவார்க்
கின்பனாகுமெறும்பியூரீசனே. (௮)

கண்ணிறைந்தகனபவளத்திரள்
விண்ணிறைந்தவிரிசுடர்ச்சோதியா
னுண்ணிறைந்துருவாயுயிராயவ
னெண்ணிறைந்தவெறும்பியூரீசனே. (௯)

நிறங்கொண்மால்வரையூன்றியெடுத்தலு
நறுங்குழன்மடவாணடுக்கெய்திட
மறங்கொள்வாளரக்கன்வலிவாட்டினா
னெறும்பியூர்மலையெம்மிறைகாண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பன்னியசெந்தமிழறியேன்கவியேன்மாட்டே
னெண்ணோடுபண்ணிறைந்தகலைகளாய

தன்னையுந்தன்றிறத்தறியாப்பொறியிலேனைத்
தன்றிறமுமறிவித்துநெறியுங்காட்டி
யன்னையையுமத்தனையும்போலவன்பா
யடைந்தேனைத்தொடர்ந்தென்னையாளாக்கொண்ட
தென்னெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனனே. (க)

பளிங்கினிழலுட்பதித்தசோதியானைப்
பசுபதியைப்பாசுபதவேடத்தானை
விளிந்தெழுந்தசலந்தரனைவீட்டினானை
வேதியனைவிண்ணவனைமேவிவையய
மளந்தவனைநான்முகனையலலநீர்கரு
மருமருந்தையாமாறறிந்தெனுள்ளந்
தெளிந்தெறும்பியூர்மலைமேன்மாணிககத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனனே. (உ)

கருவையென்றன்மனத்திருந்தகருத்தைஞானக
கடுஞ்சுடரைபபடிந்துகிடந்தமரரேத்து
முருவையண்டத்தொருமுதலையோதவேலி
யுலகினிறைதொழிலிறுதிநடுவாய்நின்ற
மருவைவென்றகுழன்மடவாள்பாகம்வைத்த
மயானத்துமாசிலாமணியைவாசத்
திருவெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனனே. (ந)

பகழிபொழிந்தடலரககர்புரங்கண்மூன்றும்
பாழ்படுத்தபரஞ்சுடரைப்பரிந்துதன்னைப்
புகழுமன்பர்க்கின்பமருமமுதைத்தேனைப்
புண்ணியனைப்புவனியதுமுழுதுமபோத
வுமிழுமம்பொற்குன்றத்தைமுத்தின்றானை
யுமையவடம்பெருமானையிமையோரேத்துந்
திகழெறும்பியூர்மலைமேன்மாணிககத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனனே. (ச)

பாரிடங்களுடன்பாடப்பயின்றுநட்டம்
பயில்வானையயில்வாயசூலமேந்தி
நேரிடும்போர்மிகவலலநிமலன்றன்னை
நின்மலனையம்மலர்கொண்டயனுமாலும்
பாரிடந்துமேலுயர்ந்துங்காணவண்ணம்
பரந்தானைநிமிர்ந்துமுனிகணங்களேத்துஞ்
சீரெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனனே. (ரு)

கார்முகிலாய்ப்பொழிவானைப்பொழிந்தமுந்நீர்
கரப்பானைக்கடியநடைவிடையொன்றேறி
யூர்பலவுந்திரிவானையூரதாக
வொற்றியூருடையனைமுற்றுமாண்டு

பேரெழுத்தொன்றுடையானைப்பிரமனோடு
மாலவனுமிந்திரனுமந்திரத்தாலேத்துஞ்
சீரெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (சு)

நீணிலவுமந்தியுநீருமற்றை
நெறியிலங்குமிகுகாலுமாகாசமும்
வாணிலவுதாரகையுமண்ணும்விண்ணு
மன்னுயிருமென்னுயிருந்தானுஞ்செம்பொ
னாணியென்றுமஞ்சனமாமலையேயென்று
மம்பவளத்திரளென்றுமறிந்தோரேத்துஞ்
சேணெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (எ)

அறந்தெறியாவூத்தைவாயறிவிலசிந்தை
யாரம்பக்குண்டரோடயர்த்துநாளு
மறந்துமரன்றிருவடிகணினையமாட்டா
மதியிலியேன்வாழ்வெலாம்வாளாமண்மேற்
பிறந்தநாளுளலலவாளாவீசன்
பேர்பிதற்றிச்சீரடிமைதிறத்துளன்பு
செறிந்தெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (அ)

அறிவிலங்குமனத்தானையறிவாாககன்றி
யறியாதார்தந்திறத்தொன்றறியாதானைப்
பொறியிலங்குவாளரவம்புனைந்துபூண்ட
புண்ணியனைப்பொருதிரைவாய்நஞ்சமுண்ட
குறியிலங்குமிடற்றானைமடற்றேன்கொன்றைச்
சடையானைமடைதோறுங்கமலமென்பூச்
செறியெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (கூ)

அருந்தவத்தின்பெருவலியாலறிவதன்றி
யடலரக்கன்றடவரையையெடுத்தான்றிண்டோண்
முரிந்துநெரிந்தழிந்துபாதாளமுற்று
முன்கைநரம்பினையெடுத்துககீதம்பாட
விருந்தவனையேழுலகுமாகினானை
யெம்மானைக்கைம்மாவினுரிவைபோர்த்த
திருந்தெறும்பியூர்மலைமேன்மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச்சென்றடையப்பெற்றேனானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருவெறும்பியூர்த்திருப்பதிகம் - உ.

---

சுவாமி - எறும்பீசர்.
தேவி - நறுங்குழனாயகி.

---

ஆ திருப்பதிகம் - கஉ.

---

# அ. திருநெடுங்களம்.



## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம். ([illegible]-திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மறையுடையாய்தோலுடையாய்வார்சடைமேல்வளரும்
பிறையுடையாய்பிஞ்ஞகனேயென்றுன்னைப்பேசினல்லாற்
குறையுடையார்குற்றமோராய்கொள்கையினாலுயர்ந்த
நிறையுடையாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (க)

கனைத்தெழுந்தவெண்டிரைசூழ்கடலிடைநஞ்சுதன்னைத்
தினைத்தனையாமிடற்றிலவைத்ததிருந்தியதேவநின்னை
மனத்தகத்தோர்பாடலாடல்பேணியிராப்பகலு
நினைத்தெழுவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (உ)

நின்னடியேவழிபடுவானிமலாநினைக்கருத
வென்னடியானுயிரைவவ்வேலென்றடற்கூற்றுதைத்த
பொன்னடியேபரவிநாளும்பூவொடுநீர்சுமக்கு
நின்னடியாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ங)

மலைபுரிந்தமன்னவன்றன்மகளையோர்பான்மகிழ்ந்தா
யலைபுரிந்தகங்கைதங்குமவிர்சடையாயாரூரா
தலைபுரிந்தபலிமகிழ்வாய்தலைவநின்றாணிழற்கீழ்
நிலைபுரிந்தாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ச)

பாங்கினல்லார்படிமஞ்செய்வார்பாரிடமும்பலிசேர்
தூங்கிநல்லார்பாடலோடுதொழுகழலேவணங்கித்
தாங்கிநில்லாவன்பினோடுந்தலைவநின்றாணிழற்கீழ்
நீங்கிநில்லாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ரு)

விருத்தனாகிப்பாலனாகிவேதமோர்நான்குணர்ந்து
கருத்தனாகிக்கங்கையாளைக்கமழ்சடைமேற்கரந்தாய்
யருத்தனாயவாதிதேவனடியிணையேபரவு
நிருத்தர்கீதரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (சா)

கூறுகொண்டாய்மூன்றுமொன்றாக்கூட்டியோர்வெங்கணையான்
மாறுகொண்டார்புரமெரித்தமன்னவனேகொடிமே
லேறுகொண்டாய்சாந்தமீதென்றெம்பெருமானணிந்த
நீறுகொண்டாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (எ)

குன்றினுச்சிமேல்விளங்குங்கொடிமதில்சூழிலங்கை
யன்றிநின்றவரக்கர்கோனையருவரைக்கீழடர்த்தா
யென்றுநல்லவாய்மொழியாலேத்தியிராப்பகலு
நின்றுநைவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (அ)

வேழவெண்கொம்பொசித்தமாலும்விளங்கியநான்முகனுஞ்
சூழவெங்குநேடவாங்கோர்சோதியுளாகிநின்றாய்
கேழலவெண்கொம்பணிந்தபெம்மான்கேடிலாப்பொன்னடியி
னீழல்வாழ்வாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (கூ)

வெஞ்சொற்றஞ்சொலாக்கிநின்றவேடமிலாச்சமணும்
தஞ்சமில்லாச்சாக்கியருந்தத்துவமொன்றறியார்
துஞ்சலிலலாவாய்மொழியாற்றோத்திரநின்னடியே
நெஞ்சில்வைப்பாரிடர்களையாயநெடுங்களமேயவனே. (கo)

நீடவல்லவார்சடையான்மேயநெடுங்களத்தைச்
சேடர்வாழுமாமறுகிற்சிரபுரக்கோனலத்தா
னாடவலலபனுவன்மாலைஞானசம்பந்தன்சொன்ன
பாடல்பத்தும்பாடவல்லார்பாவமபறையுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - நித்தியசுந்தரர்.
தேவி - ஒப்பிலாநாயகி.

---

ஆ௨ திருபபதிகம் - கரு.

---

# கூ. மேலைத்திருக்காட்டுப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொலலி. (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வாருமன்னும்முலைமங்கையோர்பங்கின
னூருமன்னும்பலியுண்பதும்வெண்டலை
காருமன்னும்பொழில்சூழ்ந்தகாட்டுபபள்ளி
நீருமன்னுஞ்சடைநிமலர்தந்நீர்மையே (க)

நிருத்தனார்நீள்சடைமதியொடுபாம்பணி
கருத்தனார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யருத்தனாரழகமர்மங்கையோர்பாகமாப்
பொருத்தினார்கழலிணைபோற்றுதல்பொருளதே. (௨)

பண்ணினாரருமறைபாடினார்நெற்றியோர்
கண்ணினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
விண்ணினார்விரிபுனன்மேவினார்சடைமுடி
யண்ணலாரெம்மையாளுடையவெம்மடிகளே. (௩)

பணங்கொணுகம்மரைக்கார்ப்பதுபலபலி
யுணங்கலோடுண்கலனுறைவதுகாட்டிடை
கணங்கள்கூடித்தொழுதேத்துகாட்டுப்பள்ளி
நிணங்கொள்சூலப்படைநிமலர்தந்நீர்மையே. (ச)

வரையுலாஞ்சந்தொடுவந்திழிகாவிரிக்
கரையுலாமிடுமணல்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
திரையுலாங்கங்கையுந்திங்களுஞ்சூடியங்
கரையுலாங்கோவணத்தடிகள்வேடங்களே. (ரு)

வேதனார்வெண்மழுவேந்திஞரங்கமுன்
னோதினாருமையொருகூறனுரொண்குழைக்
காதினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
நாதனார்திருவடிநாளுநின்றேத்துமே. (சு)

மையினார்மிடறனார்மான்மழுவேந்திய
கையினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
தையலோர்பாகமாத்தணமதிசூடிய
வையனாரடிதொழவல்லலொன்றிலலையே. (எ)

சிலைதனுன்முப்புரஞ்செற்றவன்சீரினார்
மலைதனலவல்லரககன்வலிவாட்டினான்
கலைதனார்புறவணிமலகுகாட்டுப்பளளி
தலைதனல்வணங்கிடத்தவமதுவாகுமே. (அ)

செங்கண்மாறிகழ்தருமலருறைதிசைமுகன்
றங்கையாற்றொழுதெழத்தழலுருவாயினான்
கங்கையார்சடையினன்கருதுகாட்டுப்பள்ளி
யங்கையாற்றொழுமவர்ககலலலொன்றில்லையே. (கூ)

போதியார்பிண்டியாரென்றவப்பொய்யர்கள்
வாதினாலுரையவைமெய்யலவைகலும்
காரினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யேரினாற்றொழுதெழவின்பமவந்தெய்துமே. (க0)

பொருபுனல்புடையணிபுறவநன்னகர்மன
னருமறையவைவல்லவணிகொள்சமபந்தன்சொற்
கருமணிமிடற்றினன்கருதுகாட்டுப்பள்ளி
பரவியதமிழ்சொலப்பறையுமெய்ப்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனர்.

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மாட்டுப்பள்ளிமகிழ்ந்துறைவீர்க்கெலாங்
கேட்டுப்பள்ளிகண்டீர்கெடுவீரிது
வோட்டுப்பள்ளிவிட்டோடலுறுமுனங்
காட்டுப்பள்ளியுளான்கழல்சேர்மினே. (க)

மாட்டைத்தேடிமகிழ்ந்துநீர்நும்முளே
நாட்டுப்பொய்யெலாம்பேசிடுநாணிலீர்
கூட்டைவிட்டுயிர்போவதன்முன்னமே
காட்டுப்பள்ளியுளான்கழல்சேர்மினே. (உ)

தேனைவென்றசொல்லாளொடுசெல்வமு
மூனைவிட்டுயிர்போவதன்முன்னமே
கானவேடர்கருதுங்காட்டுப்பள்ளி
ஞானநாயகனைச்சென்றுநண்ணுமே. (௩)

அருத்தமும்மனையாளொடுமக்களும்
பொருத்தமில்லைபொல்லாததுபோக்கிடுங்
கருத்தன்கணணுதலண்ணல்காட்டுப்பள்ளித்
திருத்தன்சேவடியைச்சென்றுசேர்மினே. (௪)

சுற்றமுந்துணையும்மனைவாழ்க்கையு
மற்றபோதணையாரவரென்றென்றே
கற்றவர்கள்கருதுங்காட்டுப்பள்ளிப்
பெற்றமேறும்பிரானடிசேர்மினே. (௫)

அடம்புங்கொன்றையும்வன்னியுமத்தமுந்
துடும்பலசெய்சடைத்தூமணிச்சோதியான்
கடம்பன்றாதைகருதுங்காட்டுப்பள்ளி
யுடம்பினார்க்கோருறுதுணையாகுமே. (௬)

மெய்யின்மாசுடையாருடன்மூடுவார்
பொய்யைமெய்யென்றுபுக்குடன்வீழன்மின்
கையின்மானுடையான்காட்டுப்பள்ளியெம
மையன்றன்னடியேயடைந்துய்ம்மினே. (௭)

வேலைவென்றகண்ணாரைவிரும்பிநீர்
சீலங்கெட்டுத்திகையன்மின்பேதைகாள்
காலையேதொழுங்காட்டுப்பள்ளியுறை
நீலகண்டனைநித்தனினைமினே. (௮)

இன்றுளார்நாளையில்லையெனும்பொரு
ளொன்றுமோராதுழிதருமூமர்கா
ளன்றுவானவர்க்காகவிடமுண்ட
கண்டனார்காட்டுப்பள்ளிகண்டுய்ம்மினே. (௯)

எண்ணிலாவரக்கனமலையேந்திட
வெண்ணிநீண்முடிபத்துமிறுத்தவன்
கண்ணுளார்கருதுங்காட்டுபபள்ளியை
நண்ணுவாரவர்தம்வினைநாசமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

மேலைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் - உ.

---

சுவாமி - தியாடிநாதர்.
தேவி - வார்கொண்டமுலையாள்.

---

ஆரூ திருப்பதிகம் - கரு.

# கo. திருவாலம்பொழில்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம். (ஙா-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

கருவாகிக்கண்ணுதலாய்நின்றான்றன்னைக்
கமலத்தோன்றலையரிந்தகாபாலியை
யுருவார்ந்தமலைமகளோர்பாகத்தானை
யுணர்வெலாமானானையோசையாகி
வருவானைவலஞ்சுழியெம்பெருமான்றன்னை
மறைக்காடுமாவடுதண்டுறையுமேய
திருவானைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே, (க)

உரித்தானைக்களிறதன்றோல்போர்வையாக
வுடையானையுடைபுலியினதளேயாகத்
தரித்தானைச்சடையதன்மேற்கங்கையங்கைத்
தழலுருவைவிடமமுதாவுண்டிதெல்லாம்
பரித்தானைப்பவளமாலவரையன்னானைப்
பாம்பணையான்றனககன்றங்காழிநல்கிச்
சிரித்தானைத்தென்பரம்பைகுடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (உ)

உருமூன்றாயுணர்வின்கணொன்றானானை
யோங்காரமெய்ப்பொருளையுடம்பினுள்ளாற்
கருவீன்றவெங்களவையறிவான்றன்னைக
காலனைத்தன்கழலடியாற்காய்ந்துமாணிக்
கருளீன்றவாரமுதையமரர்கோனை
யள்ளூறியெம்பெருமானென்பார்கடகென்றும்
திருவீன்றதென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (ங)

பார்முழுதாய்விசும்பாகிப்பாதாளமாம்
பரம்பரனைச்சுரும்பமருங்குழலாள்பாகத்
தாரமுதாமணிதில்லைக்கூத்தன்றன்னை
வாட்போக்கியம்மானையெம்மானென்று
வாரமதாமடியார்க்குவாரமாகி
வஞ்சனைசெய்வார்க்கென்றும்வஞ்சனாகுஞ்
சீரரசைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (ச)

வரையார்ந்தமடமங்கைபங்கன்றன்னை
வானவர்க்கும்வானவனைமணியைமுத்தை

யரையார்ந்தபுலித்தோன்மேலரவமார்த்த
வம்மானைத்தம்மானையடியார்க்கென்றும்
புரையார்ந்தகோவணத்தெம்புனிதன்றன்னைப்
பூந்துருத்திமேயானைப்புகலூரானைத்
திரையார்ந்ததென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௫)

விரித்தானைக்குவிந்தானைவேதவித்தை
வியன்பிறப்போடிறப்பாகினின்றான்றன்னை
யரிந்தானைச்சலந்தரன்றனுடலம்வேறா
வாழ்கடனஞ்சுண்டிமையோரெல்லாமுய்யப்
பரிந்தானைப்பலசுரர்புரங்கண்மூன்றும்
பாழ்படுப்பான்சிலைமலைநாணேற்றியம்பு
தெரிந்தானைத்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௬)

பொல்லாதவென்னழுக்கிற்புகுவானென்னைப்
புறம்புறமேசோதித்தபுனிதன்றன்னை
யெல்லாருந்தன்னையேயிகழவந்நா
ளிடுபலியென்றகந்திரியுமெம்பிரானைச்
சொல்லாதாரவர்தம்மைச்சொல்லாதானைத்
தொடர்ந்துதன்பொன்னடியேபேணுவாரைச்
செல்லாதநெறிசெலுத்தவல்லான்றன்னைத்
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௭)

ஐந்தலைபநாகவணைகிடந்தமாலோ
டயன்றேடிநாடரியவம்மான்றன்னைப்
பந்தணவுமெல்விரலாள்பாகத்தானைப்
பராய்த்துறையும்வெண்காடும்பயின்றான்றன்னைப்
பொந்துடையவெண்டலையிற்பலிகொள்வானைப்
பூவணமும்புறம்பயமும்பொருந்தினானைச்
சிந்தியவெந்தீவினைகடீரநின்ற
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௮)

கையிலுண்டுழல்வாருஞ்சாக்கியருங்
கல்லாதவன்மூடர்க்கல்லாதானைப்
பொய்யிலாதவர்க்கென்றும்பொய்யிலானைப்
பூணநாணகப்பொருப்புவில்லாக்
கையினாரம்பெரிகாலீர்க்குக்கோலாக்
கடுந்தவத்தோர்நெடும்புரங்கள்கனல்வாய்வீழ்த்த
செய்யினார்தென்பரம்பைக்குடியின்மேய
திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே. (௯,௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - ஆத்மநாதர்.
தேவி - ஞானம்பிகை.

---

ஆ௨ திருப்பதிகம் - ௧௬.

# கக. திருப்பூந்துருத்தி.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கொடிகொள்செல்வவிழாக்குணலையறாக்
கடிகொள்பூம்பொழிற்கச்சியேகம்பனார்
பொடிகள்பூசியபூந்துருத்திந்நக
ரடிகள்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (க)

ஆர்த்ததோலுடைகட்டியோர்வேடனாய்ப்
பார்த்தனோடுபடைதொடமொகிலும்
பூத்தநீள்பொழிற்பூந்துருத்திந்நகர்த்
தீர்த்தன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (உ)

மாதினைமதித்தானொருபாகமாக
காதலாற்கரந்தான்சடைக்கங்கையைப்
பூதநாயகன்பூந்துருத்திந்நகர்க
காதிசேவடிகீழ்நாமிருப்பதே. (ங)

மூவனாய்முதலாயிவ்வுலகெலாங்
காவனாய்க்கடுங்காலனைக்காய்ந்தவன்
பூவினாயகன்பூந்துருத்திந்நகர்த
தேவன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (ச)

செம்பொனேயொக்குமேனியன்றேசத்தி
லும்பராரவரோடங்கிருக்கிலும்
பொன்பொனார்செல்வப்பூந்துருத்திந்நகர்
நம்பன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (ரு)

வல்லம்பேசிவலிசெய்மூன்றூரினைக்
கொல்லம்பேசிக்கொடுஞ்சரநூறினான்
புல்லம்பேசியும்பூந்துருத்திந்நகர்ச்
செல்வன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (சா)

ஒருத்தனையுலகேழுந்தொழநின்று
பருத்தபாம்பொடுபான்மதிகங்கையும்
பொருத்தனாகிலும்பூந்துருத்திந்நகர்த்
திருத்தன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (எ)

அதிரர்தேவரியக்கர்விச்சாதரர்
கருதநின்றவர்காண்பரிதாயினான்
பொருதநீர்வருபூந்துருத்திந்நகர்ச்
சதுரன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (அ)

செதுகருமனத்தார்புறங்கூறினுங்
கொதுகருக்கண்ணினோன்பிகள்கூறினும்
பொதுவினாயகன்பூந்துருத்திநகர்க்
கதிபன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௯)

துடித்ததோள்வலிவாளரக்கன்றனைப்
பிடித்தகைஞ்ஞெரிந்துற்றனகண்ணெலாம்
பொடிக்கவூன்றியபூந்துருத்திநகர்ப்
படிக்கொளசேவடிக்கீழ்நாமிருப்பதே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மாலினைமாலுறநின்றான்மலைமகடன்னுடைய
பாலனைப்பான்மதிசூடியைப்பண்புணரார்மதின்மேற்
போலனைப்போர்விடையேறியைப்பூந்துருத்திமகிழு
மாலனையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (௧)

மறியுடையான்மழுவாளினன்மாமலைமங்கையொர்பாற்
குறியுடையான்குணமொன்றறிந்தாரிலைகூறிலவன்
பொறியுடைவாளரவத்தவன்பூந்துருத்தியுறையு
மறிவுடையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (௨)

மறுத்தவர்மும்மதின்மாயவொர்வெஞ்சிலைகோத்தொரம்பா
லறுத்தனையாலதன்கீழனையால்விடமுண்டதனைப்
பொறுத்தனைப்பூதப்படையனைப்பூந்துருத்தியுறையு
நிறத்தனைநீலமிடற்றனையானடிபோற்றுவதே. (௩)

உருவினையூழிமுதல்வனையோதிநிறைந்துநின்ற
திருவினைத்தேசம்படைத்தனைச்சென்றடைந்தேனுடைய
பொருவினையெல்லாந்துரந்தனைப்பூந்துருத்தியுறையுங்
கருவினைக்கண்மூன்றுடையனையானடிபோற்றுவதே. (௪)

தக்கன்றன்வேள்விதகர்த்தவன்சாரமதுவன்றுகொண்
மிக்கனமும்மதில்வீயவொர்வெஞ்சிலைகோத்தொரம்பாற்
புக்கனன்பொன்றிகழந்தன்னதொர்பூந்துருத்தியுறையு
நக்கனைநங்கள்பிரான்றனைநானடிபோற்றுவதே. (௫)

அருகடைமாலையுந்தானுடையானழகாலமைந்த
வுருவுடைமங்கையுந்தன்னொருபாலுலகாயுநின்றான்
பொருபடைவேலினன்வில்லினன்பூந்துருத்தியுறையுந்
திருவுடைத்தேசமதியனையானடிபோற்றுவதே. (௬)

மன்றியுநின்றமதிலரைமாயவகைகெடுக்கக்
கன்றியுநின்றுகடுஞ்சிலைவாங்கிக்கனலம்பினாற்
பொன்றியும்போகப்புரட்டினன்பூந்துருத்தியுறையு
மன்றியுஞ்செய்தபிரான்றனையானடிபோற்றுவதே. (௭)

மின்னிறமிக்கவிடையுமைநங்கையொர்பான்மகிழ்ந்தா
னென்னிறமென்றமரர்பெரியாரின்னந்தாமறியார்
பொன்னிறமிக்கசடையவன்பூந்துருத்தியுறையு
மென்னிறவெந்தைபிரான்றனையானடிபோற்றுவதே. (அ)

அந்தியைநல்லமதியினையார்க்குமறிவரிய
செந்தியைவாட்டுஞ்செம்பொன்னினைச்சென்றடைந்தேனுடைய
புந்தியைப்புக்கவறிவினைப்பூந்துருத்தியுறையு
நந்தியைநங்கள்பிரான்றனைநானடிபோற்றுவதே (கூ)

பைகனையும்பாந்திவிழிகனையும்பாம்புசடையிடையே
வைக்கையும்வானிழிகங்கையுமங்கைநடுக்குறவே
மொய்க்கையரக்கனையூன்றினன்பூந்துருத்தியுறையு
மிக்கநல்வேதவிகிர்தனைநானடிபோற்றுவதே (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். (சா-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

நில்லாதநீர்சடைமேனிற்பித்தானை
நினையாவென்னெஞ்சைநினைவித்தானைக்
கல்லாதனவெல்லாங்கற்பித்தானைக்
காணாதனவெல்லாங்காட்டினானைச்
சொல்லாதனவெல்லாஞ்சொல்லிஎன்னைத்
தொடர்ந்திங்கடியேனையாளாக்கொண்டு
பொல்லாவென்னோயதீர்த்தபுநிதன்றன்னைப்
புண்ணியனைப்பூந்துருத்திகண்டேனானே. (க)

குற்றாலங்கோகரணமேவினானைக்
கொடுங்கைக்கடுங்கூற்றைப்பாய்ந்தான்றன்னை
யுற்றாலநஞ்சுண்டொடுக்கினானை
யுணராவென்னெஞ்சையுணர்வித்தானைப்
பற்றாலின்கீழங்கிருந்தான்றன்னைப்
பண்ணார்ந்தவீணைபயின்றான்றன்னைப்
புற்றாடரவார்த்தபுநிதன்றன்னைப்
புண்ணியனைப்பூந்துருத்திகண்டேனானே. (உ)

எனக்கென்றுமினியானையெம்மான்றன்னை
யெழிலாருமேகம்பமேயான்றன்னை
மனக்கென்றும்வருவானைவஞ்சர்நெஞ்சி
னில்லானைநின்றியூர்மேயான்றன்னைத்
தனக்கென்றுமடியேனையாளாக்கொண்ட
சங்கரனைச்சங்கவார்குழையான்றன்னைப்
புனக்கொன்றைத்தாரணிந்தபுநிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திகண்டேனானே. (ங)

வெறியார்மலர்க்கொன்றைசூடினானை
வெள்ளானைவந்திறைஞ்சும்வெண்காட்டானை
யறியாதடிநாயேனகப்பட்டேனை
யல்லற்கடனின்றுமேறவாங்கி
நெறிதானிதுவென்றுகாட்டினானை
நிச்சலிப்பிணிகடீர்ப்பானைறனைப்
பொறியாடரவார்த்தபுனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திகண்டேனானே. (ச)

மிக்கானைவெண்ணீறுசண்ணித்தானை
விண்டார்புரமூன்றுமவேவநோக்கி
நக்கானைநான்மறைகள்பாடினானை
நல்லார்கள்பேணிப்பரவநின்ற
தக்கானைத்தண்டாமரைமேலண்ண
றலைகொண்டுமாத்திரைக்கணுலகமெல்லாம்
புக்கானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திகண்டேனானே. (ரு)

ஆர்த்தானைவாசுகியையரைக்கோர்கச்சா
வசைத்தானையழகாயபொன்னார்மேனிப்
பூத்தானத்தான்முடியைப்பொருந்தாவண்ணம்
புணர்ந்தானைப்பூங்கணையானுடலம்வேவப்
பார்த்தானைப்பரிந்தானைப்பனிநீர்க்கங்கை
படர்சடைமேற்பயின்றானைப்பதைப்பயானை
போர்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே (சு)

எரித்தானைப்பேணார்புரங்கண்மூன்று
மிமைப்பளவிற்பொடியாகவெழிலார்கையா
லுரித்தானைமதகரியையுற்றுப்பற்றி
யுமையவளைக்கண்டஞ்சிநடுங்கக்கண்டு
சிரித்தானைச்சீரார்ந்தபூதஞ்சூழத்
திருச்சடைமேற்றிங்களும்பாம்பும்நீரும்
புரித்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (எ)

வைத்தானைவானோருலகமெல்லாம்
வந்திறைஞ்சிமலர்கொண்டுநின்றுபோற்றும்
வித்தானைவேண்டிற்றொன்றீவான்றன்னை
விண்ணவர்தம்பெருமானைவினைகள்போக
வுய்த்தானையொலிகங்கைசடைமேற்றாங்கி
யொளித்தானையொருபாகத்துமையோடாங்கே
பொய்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே (அ)

ஆண்டானைவானோருலகமெல்லா
மந்நாளறியாததக்கன்வேள்வி

மீண்டானை விண்ணவர்களோடுங்கூடி
விரைமலர்மேலானு முகனுமாலுந்தேர
நீண்டானை நெருப்புருவமானானைத் தன்னை
நிலையிலார் மும்மதிலுமவேவவில்லைப்
பூண்டானைப் புண்ணியனைப் புநிதன்றன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திகண்டேனானே. (௯)

மறுத்தானை மலைகோத்தங்கெடுத்தான்றன்னை
மணிமுடியோடிருபதுதோளிறியக்கால்
விறுத்தானை யெழுநரம்பினிசைகேட்டானை
யெண்டிசைக்குங்கண்ணானான் சிரமேலொன்றை
யறுத்தானை யமரர்களுக்கமுதீந்தானை
யாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு
பொறுத்தானைப் புண்ணியனைப் புநிதன்றன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திகண்டேனானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பூந்துருத்தித்திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - புஷ்பவனநாதர்.

தேவி - அழகார்ந்தநாயகி.

---

ஆக திருப்பதிகம் - ௧௫.

---

# ௧௨. திருக்கண்டியூர்வீரட்டம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

---

பண் - கொல்லி. (௩-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வினவினேனறியாமையிலுரைசெய்மினீரருள்வேண்டுவீர்
கனைவிலார்புனற்காவிரிக்கரைமேயகண்டியூர்வீரட்டன்
றனமுனேதனக்கின்மையோதமராயினாரண்டமாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண்டாடிப்பாடியிவ்வையமாப்பலிதேர்ந்ததே. (௧)

உள்ளவாறெனக்குரைசெய்மின்னுயர்வாயமாதவம்பேணுவீர்
கள்ளவிழ்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகாதலான்
பிள்ளைவான்பிறைசெஞ்சடைம்மிசைவைத்ததும்பெருநீரொலி
வெள்ளந்தாங்கியதென்கொலோமிகுமங்கையாளுடனாகவே. (௨)

அடியராயினீர்சொல்லுமின்னறிகின்றிலேனரன்செய்கையைப்
படியெலாந்தொழுதேத்துகண்டியூர்வீரட்டத்துறைபான்மையான்
முடிவுமாய்முதலாயிவ்வையகமுழுதுமாயழகாயதோர்
பொடியதார்திருமார்பினிற்புரிநூலும்பூண்டெழுபொற்பதே. (ங)

பழையதொண்டர்கள்பகருமின்பலவாயவேதியன்பான்மையைக்
கழையுலாம்புனன்மலகுகாவிரிமன்னுகண்டியூர்வீரட்டன்
குழையொர்காதினிற்பெய்துகந்தொருகுன்றின்மங்கைவெருவுறப்
புழைநெடுங்கைநன்மாவுரித்ததுபோர்த்துகந்தபொலிவதே. (ச)

விரவிலாதுமைக்கேட்கின்றேனடிவிரும்பியாட்செய்வீர்விளம்புமின்
கரவெலாந்திரைமண்டுகாவிரிக்கண்டியூருறைவீரட்டன்
முரவமொந்தைமுழாவொலிக்கமுழக்குப்பேயொடுங்கூடிப்போய்ப்
பரவுவானவர்க்காகவார்கடனஞ்சமுண்டபரிசதே (ரு)

இயலுமாறெனக்கியம்புமின்னிறைவன்னுமாய்நிறைசெய்கையைக்
கயனெடுங்கணினார்கடாமபொலிகண்டியூருறைவீரட்டன்
புயல்பொழிந்திழிவானுளோர்களுக்காகவன்றயன்பொய்ச்சிர
மயனகவ்வதரிந்துமற்றதிலூணுகந்தவருத்தியே (சு)

திருந்துதொண்டர்கள்செப்புமின்மிகச்செல்வன்றன்னதுதிறமெலாங்
கருந்தடங்கண்ணினார்கடாந்தொழுகண்டியூருறைவீரட்ட
னிருந்துநால்வரொடானிழலறமுரைத்ததுமிகுவெமமையார்
வருந்தவன்சிலையாலமாமதின்மூன்றுமாட்டியவண்ணமே. (எ)

நாவிரித்தரன்றொல்புகழ்பலபேணுவீர்கிறைநல்குமின்
காவிரித்தடம்புனல்செய்கண்டியூர்வீரட்டத்துறைகண்ணுதல்
கோவிரிப்பயனானஞ்சாடியகொள்கையுங்கொடிவரைபெற
மாவரைத்தலத்தாலரக்கனைவலியைவாட்டியமாணபதே (அ)

பெருமையேசரணாகவாழ்வுறுமாந்தர்காளிறைபேசுமின்
கருமையார்பொழிலசூழுந்தண்வயற்கண்டியூருறைவீரட்ட
னொருமையாலுயர்மாலுமற்றைமலரவனுணர்ந்தேத்தவே
யருமையாலவருக்குயர்ந்தெரியாகிநின்றவதனமையே (கூ)

நமரெழுபிறப்பறுக்குமாந்தர்கணவிலுமின்னுமைகேட்கின்றேன்
கமரழிவயல்சூழுந்தண்புனற்கண்டியூருறைவீரட்டன்
றமரழிந்தெழுசாக்கியச்சமணாதரோதுமதுகொளா
தமரரானவரேத்தவந்தகன்றன்னைச்சூலத்திலாய்ந்ததே. (கo)

கருத்தனைப்பொழிலசூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகள்வனை
யருத்தனைத்திறமடியர்பான்மிககேட்டுகந்தவினாவுரை
திருத்தமாந்திகழ்காழிஞானசம்பந்தன்செப்பியசெந்தமி
ழொருத்தராகிலும்பலர்களாகிலுமுரைசெய்வாருயர்ந்தார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வானவர்தானவர்வைகன்மலர்கொணர்ந்திட்டிறைஞ்சித்
தானவர்மாலபிரமனறியாததகைமையினா
ஞானவனாதிபுராணனன்றோடியபன்றியெய்த
கானவனைக்கண்டியூரண்டவாணர்தொழுகின்றதே (௧)

வானமதியமும்வாளரவும்புனலோடுசடைத்
தானமதுவெனவைத்துழல்வான்றழல்போலுருவன்
கானமறியொன்றுகையுடையான்கண்டியூரிருந்த
வூனமில்வேதமுடையனைநாமடியுள்குதுமே (௨)

பண்டங்கறுத்ததொர்கையுடையான்படைத்தான்றலையை
யுண்டங்கறுத்ததுமூரொடுநாடவைதானறியுங்
கண்டங்கறுத்தமிடறுடையான்கண்டியூரிருந்த
தொண்டர்பிரானைக்கண்டீரண்டவாணர்தொழுகின்றதே. (௩)

முடியின்முற்றாததொன்றில்லையெல்லாமுடன்றானுடையான்
கொடியமுற்றவிடையேறியொர்கூற்றொருபாலுடையான்
கடியமுற்றவ்வினைநோய்களைவான்கண்டியூரிருந்தா
னடியுமுற்றார்தொண்டரில்லைகண்டீரண்டவானவரே. (௪)

பற்றியொரானையுரித்தபிரான்பவளத்திரள்போன்
முற்றுமணிந்ததொர்நீறுடையான்முன்னமேகொடுத்த
கற்றங்குடையவன்றானறியான்கண்டியூரிருந்த
குற்றமில்வேதமுடையானையாமண்டர்கூறுவதே. (௫)

போர்ப்பனையானையுரித்தபிரான்பொறிவாயரவஞ்
சேர்ப்பதுவானத்திரைக்கடல்சூழுலகமிதனைக்
காப்பதுகாரணமாகக்கொண்டான்கண்டியூரிருந்த
கூப்புடையொள்வாண்மழுவனையாமண்டர்கூறுவதே (௬)

அட்டதுகாலனையாய்ந்ததுவேதமாறங்கமன்று
சுட்டதுகாமனைக்கண்ணதனாலேதொடர்ந்தெரியக்
கட்டவைமூன்றுமெறித்தபிரான்கண்டியூரிருந்த
குட்டமுன்வேதப்படையனையாமண்டர்கூறுவதே. (௭)

அட்டுமொலிநீரணிமதியுமலரானவெல்லா
மிட்டும்பொதியுஞ்சடைமுடியானிண்டைமாலையங்கைக்
கட்டுமரவதுதானுடையான்கண்டியூரிருந்த
கொட்டும்பறையுடைக்கூத்தனையாமண்டர்கூறுவதே. (௮)

மாய்ந்தனதீவினைமங்கினநோய்கண்மறுகிவிழத்
தேய்ந்தனபாவஞ்செறுக்ககிலாநம்மைச்சேற்றநங்கைக்
காய்ந்தபிரான்கண்டியூரெம்பிரானங்கமாறினையு
மாய்ந்தபிரானல்லனோவடியேனையாட்கொண்டவனே. (௯)

மண்டிமலையையெடுத்துமத்தாக்கியவ்வாசுகியைத்
தண்டியமரர்கடைந்தகடல்விடங்கண்டருளி
யுண்டபிரானஞ்சொளித்தபிரானஞ்சியோடிநண்ணக்
கண்டபிரானல்லனோகண்டியூரண்டவானவனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

திருக்கண்டியூர் திருப்பதிகம் - ௨.

சுவாமி - வீரட்டேசர்

தேவி - மங்களநாயகி.

ஆ திருப்பதிகம் - ௨௧.

# ௧௩. திருச்சோற்றுத்துறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம் (௧ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

செப்பநெஞ்சேநெறிகொள்சிற்றின்பந்
துப்பனென்னாதருளேதுணையாக
வொப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே (௧)

பாலுநெய்யுந்தயிரும்பயின்றாடித்
தோலுநூலுந்துதைந்தவரைமார்பர்
மாலுஞ்சோலைபுடைசூழ்மடமஞ்ஞை
யாலுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே (௨)

செய்யர்செய்யசடையர்விடையூர்வர்
கைகொள்வேலர்கழலர்கரிகாடர்
தையலாளோர்பாகமாயவெம
மையர்சோற்றுத்துறைசென்றடைவோமே (௩)

பிணிகொளாக்கையொழியப்பிறப்புளீர்
துணிகொள்போரார்துளங்குமழுவாளர்
மணிகொள்கண்டர்மேயவார்பொழி
லணிகொள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௪)

பிறையும்மரவும்புனலுஞ்சடைவைத்து
மறையுமோதிமயானமிடமாக
வுறையுஞ்செல்வமுடையார்காவிரி
யறையுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௫)

துடிகளோடுமுழவம்விம்மவே
பொடிகள்பூசிப்புறங்காடரங்காகப்
படிகொள்பாணிபாடல்பயின்ருடு
மடிகள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௬)

சாடிக்காலன்மாளத்தலைமாலை
சூடிமிக்குச்சுவண்டாய்வருவார்தாம்
பாடியாடிப்பரவுவாருள்ளத்
தாடிசோற்றுத்துறைசென்றடைவோமே. (௭)

பெண்ணேர்பாகமுடையார்பிறைச்சென்னிக்
கண்ணேர்பாகங்கலந்தநுதலிஞ
ரெண்ணுதரக்கனெடுக்கவூன்றிய
வண்ணலசோற்றுத்துறைசென்றடைவோமே. (௮)

தொழுவாரிருவர்துயரநீங்கவே
யழலாயோங்கியருள்கள்செய்தவன்
விழவார்மறுகில்விதியான்மிக்கவெம
மெழிலார்சோறறுத்துறைசென்றடைவோமே (௯)

கோதுசாற்றித்திரிவாரமண்குண்ட
ரோதுமோதுதையுணராதெழுநெஞ்சே
நீதிநின்றுநினைவார்வேடமா
மாதிசோற்றுத்துறைசென்றடைவோமே. (௧0)

அந்தண்சோற்றுததுறையெம்மாதியைச்
சிந்தைசெயம்மினடியராயினீர்
சந்தம்பரவுஞானசம்பந்தன்
வந்தவாறேபுனைதலவழிபாடே. (௧௧)

திருச்சிறறம்பலம்.

## திருநாவுக்கரசு நாயஞர்.

திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

---

பொய்விராமேனிதன்னைப்பொருளெனககாலம்போக்கி
மெய்விராமனத்தனலலேன்வேதியாவேதநாவா
வைவராலலைக்கப்பட்டவாக்கைகொண்டயர்த்துப்போனேன்
செய்வராலுகளுஞ்செம்மைததிருச்சோற்றுத்துறையஞரே. (௧)

கட்டராய்நின்றுநீங்கள்காலத்தைக்கழிக்கவேண்டா
வெட்டவாங்கைகள்வீசியெல்லிநின்ருடுவானை
யட்டகாமலர்கள்கொண்டேயானஞ்சுமாட்டவாடிச்
சிட்டராயருள்கள்செய்வார்திருச்சோற்றுத்துறையஞரே. (௨)

கல்லினற்புரமூன்றெய்தகடவுளைக்காதலாலே
யெல்லியும்பகலுமுள்ளேயேகாந்தமாகவேத்தும்
பல்லில்வெண்டலைகையேந்திப்பல்லிலங்கிரியுஞ்செல்வர்
சொல்லுநன்பொருளுமாவார்திருச்சோற்றுத்துறையஞரே. (௩)

கறையராய்க்கண்டநெற்றிக்கண்ணராய்ப்பெண்ணோர்பாக
மிறையராயினியராகித்தனியராய்ப்பனிவெண்டிங்கட்
பிறையராய்ச்செய்தவெல்லாம்பீடராய்க்கெடிலச்சோற்றுத்
துறையராய்ப்புகுந்தென்னுள்ளஞ்சோர்வுகண்டருளினாரே (௪)

பொந்தையைப்பொருளாவெண்ணிப்பொருக்கெனக்காலம்போனே
னெந்தையேயேகமூர்த்தியென்றுநின்றேத்துமாட்டேன்
பந்தமாய்வீடுமாகிப்பரம்பரமாகிநின்று
சிந்தையுட்டேறல்போலுந்திருச்சோற்றுத்துறையனாரே. (௫)

போத்தினிப்பிறவாவண்ணம்பிதற்றுமின்பேதைபங்கன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபாசுபதத்திறமே
யார்த்துவந்திழிவதொத்தவலைபுனற்கங்கையேற்றுத்
தீர்த்தமாப்போதவிட்டார்திருச்சோற்றுத்துறையனாரே (௬)

கொந்தார்பூங்குழலினாரைக்கூறியேகாலம்போன
வெந்தையெம்பிரானையின்றவிறைவனையேத்தாதந்தோ
முந்தாரவல்குலாளையுடனைவைத்தவர்திருந்தி
செந்தாதுடுங்கள்சூழ்ந்ததிருச்சோற்றுத்துறையனாரே (௭)

அங்கதிரோனவனையண்ணலை *கருத்தவேண்டா
வெங்கதிரோன்வழியேபோவதற்கமைந்துகொண்மின்
னங்கதிரோனவனையுடனைவைத்தவாதிமூர்த்தி
செங்கதிரோன்வணங்குந்திருச்சோற்றுத்துறையனாரே (௮)

ஓதியேகழிக்கின்றீர்களுலகத்தீரொருவன்றன்னை
நீதியானினையமாட்டீர்நின்மலனென்றுசொல்லீர்
சாதியாநான்முகனுஞ்சக்கரத்தானுங்காணாச்
சோதியாய்ச்சுடராவானார்திருச்சோற்றுத்துறையனாரே. (௯)

மற்றுநீர்மனம்வையாதேமறுமையைக்கழிக்கவேண்டிற்
பெற்றதோருபாயந்தன்னாற்பிரானையேபிதற்றுமின்கள்
கற்றுவந்தரக்கனோடிக்கயிலாயமலையெடுக்கச்
செற்றுகந்தருளிச்செய்தார்திருச்சோற்றுத்துறையனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

காலையெழுந்துகடிமலர்தூயனதாங்கொணர்ந்து
மேலையமரர்விரும்புமிடம்விரையான்மலிந்த
சோலைமணங்கமழ்சோற்றுத்துறையுறைவார்சடைமேன்
மாலைமதியமன்றோவெம்பிரானுக்கழகியதே (௧)

* "யண்ணமா" என்றும் பாடம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கொல்லையேற்றினர்கோளரவத்தினர்
தில்லைச்சிற்றம்பலத்துறைசெல்வனார்
தொல்லையூழியர்சோற்றுத்துறையர்க்கே
வல்லையாய்ப்பணிசெய்மடநெஞ்சமே (௧)

முத்தியாகவொருதவஞ்செய்திலை
யத்தியாலடியார்க்கொன்றளித்திலை
தொத்தினாவலர்சோற்றுத்துறையர்க்கே
பத்தியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே (௨)

ஒட்டிநின்றவுடலுறுநோய்வினை
கட்டிநின்றபழிங்கனைபோயறத்
தொட்டுநின்றுமச்சோற்றுத்துறையர்க்கே
பாடியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே (௩)

ஆதியானையமரர்க்கருணையரு
நீதியானைநன்றுநினைப்போர்க்கென்றும்
சோதியானென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
வாதியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே (௪)

ஆட்டிஞயடியேனைவினையாயின
வோட்டிடுஞ்செயாருகாதில்லைக்குவெண்ண
கோட்டிடுஞ்செயன்றுசோற்றுத்துறையர்க்கே
நீட்டிநீபணிசெய்மடநெஞ்சமே (௫)

பொங்கிநின்றெழுந்தகடல்நஞ்சினைப்
பங்கியுண்டதோர்தெய்வமுண்டோ [illegible]
தொங்கிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்குந்
தங்கிநீபணிசெய்மடநெஞ்சமே (௬)

ஆணிபோலநீயாற்றவலியைகா
ஏணிபோலிழிந்தேறியுமேங்கியுந்
தோணியாகியசோற்றுத்துறையர்க்கே
பூணியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே (௭)

பெற்றமேறிலென்பேய்ப்படையாகிலென்
புற்றிலாடரவேயதுபூணிலென்
சுற்றிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
பற்றிநீபணிசெய்மடநெஞ்சமே. (௮)

அலவியானரவைந்தலைநாகணைப்
பள்ளியானறியாதபரிசெலாஞ்
சொலவிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
புல்கிநீபணிசெய்மடநெஞ்சமே. (௯)

மிண்டரோடுவிரவியும்வீறிலாக
குண்டர்தம்மைகைகழிந்துய்யப்போந்துநீ
தொண்டுசெய்தென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
யுண்டுநீபணிசெயமடநெஞ்சமே. (௧௦)

வாழ்ந்தவன்வலிவாளரக்கன்றனை
யாழ்ந்துபோயலறவ்விரலூன்றினான்
சூழ்ந்தபாரிடஞ்சோற்றுத்துறையர்க்குத்
தாழ்ந்துநீபணிசெய்மடநெஞ்சமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம (௬-ம. திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனையுலகுக்குமுந்தினானை
முறைமையாலெல்லாம்படைக்கின்றானை
யேத்தவனையேழுலகுமாயினானை
யின்பனைத்துன்பங்களைகின்றானை
காத்தவனையெல்லாந்தானகாண்கின்றானை
கடுவினையேன்றீவினையைக்கண்டுபோகத்
தீர்த்தவனைத்திருச்சோற்றுத்துறையுளானை
திகழொளியேசிவனேயுன்னபயநானே. (௧)

தலையவனையுலகுக்கோர்தன்மையானை
தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமுதானானை
நிலையவனாய்நின்றனைபாரெல்லாந்தானை
நின்றுணராக்கூற்றத்தைச்சீறிப்பாய்ந்த
கொலையவனைகொலையானைத்தோலேயிட
கூற்றுவனைகொடிமதில்கண்மூன்றுமெய்த
சிலையவனைத்திருச்சோற்றுத்துறையுளானை
திகழொளியேசிவனேயுன்னபயநானே (௨)

முற்றுதபான்மதியஞ்சூடினானை
முளைத்தெழுந்தகற்பகத்தின்கொழுந்தொப்பானை
யுற்றானென்றொருவரையுமில்லாதானை
யுலகோம்புமொண்சுடரேயோதுமவேதிய
கற்றானையெல்லாக்கலைஞானமும்
கல்லாதேன்றீவினைநோய்கண்டுபோகச்
செற்றானைத்திருச்சோற்றுத்துறையுளானை
திகழொளியேசிவனேயுன்னபயநானே. (௩)

கண்ணவனையுலகெலாங்காக்கின்றானை
காலங்களூழிகண்டிருக்கின்றானை
விண்ணவனைவிண்ணவர்க்குமருள்செய்வானை
வேதனைவேதம்விரித்திட்டானை
யெண்ணவனையெண்ணார்புரங்கண்மூன்று
மிமையாமுனெரிகொளுவநோக்கிநக்க

தின்னவனே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே (௪)

நம்பனே நான்மறைகளாயினானே
நடமாடவல்லானே ஞானக்கூத்தா
கம்பனே கச்சிமாநகருளானே
கடிமதில்கண்மூன்றினையும்பொடியாவெய்த
வம்பனேயளவிலாப்பெருமையானே
யடியார்கட்காரமுதேயானேறேறுஞ்
செம்பொனே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே (௫)

ஆர்ந்தவனேயுலகெலாநீயேயாகி
யமைந்தவனேயளவிலாப்பெருமையானே
கூர்ந்தவனே குற்றாலமேயகூத்தா
கொடுமழுவிலையதோர்சூலமேந்திப்
பேர்ந்தவனே *பிலயங்களெல்லாமாய
பெம்மானென்றெப்போதும்பேசுநெஞ்சிற்
சேர்ந்தவனே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே (௬)

வானவனாய்வண்மைமனத்தினானே
மாமணிசேர்வானோர்பெருமானீயே
கானவனாயேனத்தினைப்பின்சென்றானே
கடியவரணங்களைமூன்றட்டானே
தானவனாத்தனைக்கயிலைமேவினானே
தன்னொப்பாரில்லாதமங்கைநகமென்றாந்
தேனவனே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௭)

தன்னவனாயுலகெலாந்தானேயாகித்
தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமுதானானே
யென்னவனாயென்னிதயமேவினானே
யீசனேபாசவினைபடாபகு
மன்னவனேமலைமங்கைபாகமாக
வைத்தவனேவானோர்வணங்கும்பொன்னித்
தென்னவனே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௮)

எறிந்தானேயெண்டிசைக்குங்கண்ணானானே
யேழுலகமெல்லாமுன்னாயினின்றானே
யறிந்தார்தாமோரிருவரறியாவண்ண
மாதியுமந்தமுமாகியங்கே
பிறிந்தானேபிறரொருவரறியாவண்ணம்
பெம்மானென்றெப்போதுமேத்துநெஞ்சிற்
செறிந்தானே திருச்சோற்றுத்துறையுளானே
திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௯)

* "பிரளயம்" என்றும் பாடம்.

காமன்பொடியாக்கண்ணொன்றிமைத்த
வோமக்கடலாருகந்தவிடமாந்
தேமென்குழலார்சேக்கைபுகைத்த
தூமம்விசும்பார்சோற்றுத்துறையே. (௮)

இலையாலன்பாலேத்துமவர்க்கு
நிலையாவாழ்வைநீத்தாரிடமாந்
தலையாற்றருந்தவத்தோர்கள்கொண்டாந்
தொலையாச்செல்வச்சோற்றுத்துறையே (௯)

சுற்றார்தருநீர்ச்சோற்றுத்துறையுள்
முற்றாமதிசேர்முதல்வனைப்பாதத்
தற்றாரடியாரடிநாயூரன்
சொற்றுணிவைப்பாடுவார்துன்பிலரே (௧0

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சோற்றுத்துறைத் திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - தொலையாச் செல்வர்
தேவி - ஒப்பிலாம்மை

---

ஆக திருப்பதிகம் - ௨௭.

# ௧௪. திருவேதிகுடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - சாதாரி (௩-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

நீறுவரியாடரவொடாமைமனைவென்புநிரைபூண்பரிடப
மேறுவரியாவருமிறைஞ்சுகழலாதியரிருந்தவிடமாந்
தாறுவிரிபூகமலிவாழைவிரைநாறவிணைவாளைமடுவில்
வேறுபிரியாதுவிளையாடவளமாருமயல்வேதிகுடியே. (௧)

சொற்பிரிவிலாதமறைபாடிநடமாடுவர்தொலானையுரிவை
மற்புரியுயத்தினிதுமேவுவரெந்நாளுமவளர்வானவர்தொழுத
தற்பரியநஞ்சமுதமாகமுனிவின்றவரியனறதொகுசீர்
வெற்பரையன்மங்கையொருபங்கர்நகரென்பர்திருவேதிகுடியே (௨)

போழுமதிபூணரவுகொன்றைமலர்துன்றுசடைவென்றிபுகமேல
வாழுநதிதாழுமருளாளரிருளார்மிடறர்மாதரிமையோர்
சூழுமிரவாளர்திருமார்பில்விரிநூலர்வரிதோலருடைமேல
வேழவுரிபோர்வையினர்மேவுபதியென்பர்திருவேதிகுடியே. (௩)

காடர்கரிகாலர்கனல்கையரனன்மெய்யருடல்செய்யர்செவியிற்
றோடர்தெரிகீளர்சரிகோவணவராவணவர்தொல்லைநகர்தான்
பாடலுடையார்களடியார்கண்மலரோடுபுனல்கொண்டுபணிவார்
வேடமொளியானபொடிபூசியிசைமேவுதிருவேதிகுடியே. (௪)

சொக்கர்துணைமிக்கவெயிலுக்கறமுனிந்துதொழுமூவர்மகிழத்
தக்கவருள்பக்கமுறவைத்தவரனாரினிதுதங்குநகர்தான்
கொக்கரவமுற்றபொழில்வெற்றிநிழல்பற்றிவரிவண்டிசைகுலா
மிக்கமரர்மெச்சியினிதச்சமிடர்போகநல்குவேதிகுடியே. (௫)

செய்யதிருமேனிமிசைவெண்பொடியணிந்துகருமானுரிவைபோர்த்
தையமிடுமென்றுமடமங்கையொடகந்திரியுமண்ணலிடமாம்
வையம்விலைமாறிடினுமேறுபுகழ்மிக்கிழிவிலாதவகையார்
வெய்யமொழிதண்புலவருக்குரைசெயாதவர்வேதிகுடியே. (௬)

உன்னியிருபோதுமடிபேணுமடியார்தமிடரொல்கவருளித்
துன்னியொருநால்வருடனானிழலிருந்ததுணைவன்றனிடமாங்
கன்னியரொடாடவர்கணமாமணம்விரும்பியருமங்கலமிக
மின்னியலுநுண்ணிடைநன்மங்கையரியற்றுபதிவேதிகுடியே (௭)

உரக்கரநெருப்பெழநெருக்கிவரைபற்றியவொருத்தன்முடிதோ
ளரக்கனையடர்த்தவனிசைக்கினிதுநல்கியருணக்கணனிட
முருக்கிதழ்மடக்கொடிமடந்தையருமாடவருமொய்த்தகலவை
விரைக்குழன்மிக்ககமழவிண்ணிசையுலாவுதிருவேதிகுடியே. (அ)

பூவின்மிசையந்தணனொடாழிபொலியங்கையனுநேடவெரியாய்த்
தேவுமிவரல்லரினியாவரெனநின்றுதிகழ்கின்றவரிடம்
பாவலர்களோசையியல்கேள்வியதூஉத்தகொடையாளர்பயில்வா
மேவரியசெல்வநெடுமாடம்வளர்வீதிநிகழ்வேதிகுடியே. (௯)

வஞ்சமணர்தேரர்மதிகேடர்தம்மனத்தறிவிலாதவர்மொழி
தஞ்சமெனவென்றுமுணராதவடியார்கருதுசைவனிடமா
மஞ்சுபுலன்வென்றறுவகைப்பொருடெரிந்தெழுவிசைக்கிளவியால்
வெஞ்சினமொழித்தவர்கண்மேவிநிகழ்கின்றதிருவேதிகுடியே. (௧0)

கந்தமலிதண்பொழினன்மாடமிடைகாழிவளர்ஞானமுணர்சம்
பந்தன்மலிசெந்தமிழின்மாலைகொடுவேதிகுடியாதிகழலே
சிந்தைசெயவல்லவர்கணல்லவர்களென்னநிகழ்வெய்தியிமையோ
ரந்தவுலகெய்தியரசாளுமதுவேசரதமாணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கையதுகாலெரிநாகங்கனல்விடுசூலமது
வெய்யதுவேலைநஞ்சுண்டவிரிசடைவிண்ணவர்கோன்
செய்யினினீலமணங்கமழுந்திருவேதிகுடி
யையனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (௧)

கைத்தலைமான்மறியேந்தியகையன்கனன்மழுவன்
பொய்த்தலையேந்திநற்பூதியணிந்துபலிதிரிவான்
செய்த்தலைவாளைகள்பாய்ந்துகளுந்திருவேதிகுடி
யத்தனையாரவமுதினைநாமடைந்தாடுதுமே. (௨)

முன்பின்முதலவன்முனிவனம்மேலைவினைகழித்தா
னன்பினிலையிலவுணர்புரமபொடியானசெய்யுஞ்
செம்பொனைநன்மலர்மேலவன்சேர்திருவேதிகுடி
யன்பனைநம்மையுடையானைநாமடைந்தாடுதுமே. (௩)

பத்தர்களுளுமறவார்பிறவியையொன்றறுப்பான்
முத்தர்கணமுன்னம்பணிசெயதுபாரிடமுன்னுயர்த்தான்
கொத்தனகொன்றைமணங்கமழுந்திருவேதிகுடி
யத்தனையாரவமுதினைநாமடைந்தாடுதுமே. (௪)

ஆனணைந்தேறுங்குறிகுணமாரறிவாரவர்கை
மானணைந்தாடுமதியும்புனலுஞ்சடைமுடியன்
றேனணைந்தாடியவண்டுபயிறிருவேதிகுடி
யானணைந்தாடுமழுவனைநாமடைந்தாடுதுமே. (௫)

எண்ணுமெழுததுங்குறியுமறிபவர்தாமொழியப்
பண்ணினிசைமொழிபாடியவானவர்தாமபணிவார்
திண்ணென்வினைகளைதீர்க்கும்பிரான்றிருவேதிகுடி
நண்ணவரியவமுதினைநாமடைந்தாடுதுமே. (௬)

ஊர்ந்தவிடையுகந்தேறியசெலவனைநாமறியோ
மார்ந்தமடமொழிமங்கையொருபாகமகிழ்ந்துடையான
சேர்ந்தபுனற்சடைச்செலவப்பிரான்றிருவேதிகுடிச்
சார்நதவயலணிதண்ணமுதையடைந்தாடுதுமே. (௭)

எரியுமழுவினனெணணியுமறறொருவன்றலையுட்
டிரியும்பலியினன்றேயமுநாடுமெல்லாமுடையான்
விரியும்பொழிலணிசேறுதிகழ்திருவேதிகுடி
யரியவமுதினையன்பர்களோடடைந்தாடுதுமே. (௮)

மையணிகண்டன்மறைவிரிநாவன்மதித்துகந்த
மெய்யணிநீற்றன்விழுமியவெண்மழுவாட்படையான்
செய்யகமலமணங்கமழுந்திருவேதிகுடி
யையனையாரவமுதினைநாமடைந்தாடுதுமே. (௯)

வருத்தனைவாளரககன்முடிதோளொடுபத்திறுத்த
பொருத்தனைப்பொய்யாவருளனைப்பூதப்படையுடைய
திருத்தனைத்தேவர்பிரான்றிருவேதிகுடியுடைய
வருததனையாரவமுதினைநாமடைந்தாடுதுமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேதிகுடித் திருப்பதிகம் - ௨.

---

சுவாமி - வேதபுரியீசர்.
தேவி - மங்கையர்க்கரசி.

---

ஆ திருப்பதிகம் - உக.

# ௧௫. திருத்தென்குடித்திட்டை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி. (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்

முன்னைநான்மறையவைமுறைமுறைகுறையொடுந்
தன்னதாடொழுதெழநின்றவன்றன்னிட
மன்னுமாகாவிரிவந்தடிவருடநற்
செந்நெலார்வளவயற்றென்குடித்திட்டையே (௧)

மகரமாடுங்கொடிமன்மதவேடனை
நிகரலாகாநெருப்பெழவிழித்தானிடம்
பகரபாணித்திலம்பன்மகரதொடுஞ்
சிகரமாளிகைதொகுந்தென்குடித்திட்டையே (௨)

கருவினாலன்றியேகருவெலாமாயவ
னுருவினாலன்றியேயுருவுசெய்தானிடம்
பருவநாள்விழவொடும்பாடலோடாடலுந்
திருவினான்மிகுபுகழ்த்தென்குடித்திட்டையே. (௩)

உண்ணிலாவாவியாயோங்குதன்றன்மையை
விண்ணிலாரறிகிலாவேதவேதாந்தனூ
ரெண்ணிலாரெழின்மணிக்கனகமாளிகையிளந்
தெண்ணிலாவிரிதருந்தென்குடித்திட்டையே. (௪)

வருந்திவானோர்கள்வந்தடையமாநஞ்சுதா
னருந்தியாரமுதவர்க்கருள்செய்தானமரூர்
செருந்திபூமாதவிப்பந்தர்வண்செண்பகந்
திருந்துநீள்வளர்பொழிற்றென்குடித்திட்டையே (௫)

ஊறினோசையுள்ளொன்றினொன்றிமால
கூறினாரமர்தருங்குமரவேடாதையூ
ராறினார்பொய்யகத்தையுணர்வெய்திமெய்
தேறினார்வழிபடுந்தென்குடித்திட்டையே (௬)

கானலைக்கும்மவன்கண்ணிடந்தப்பநீள்
வானலைக்குந்தவத்தேவுவைத்தானிடந்
தானலைத்தெள்ளமூர்தாமரைத்தண்டுறை
தேனலைக்கும்வயற்றென்குடித்திட்டையே. (௭)

மாலொடும்பொருதிறல்வாளரக்கன்னெறிந்
தோலிடும்படிவிரலொன்றுவைத்தானிடங்
காலொடுங்கனகமூக்குடன்வரக்கயல்வரால்
சேலொடும்பாய்வயற்றென்குடித்திட்டையே. (௮)

நாரணன்றன்னொடுநான்முகன்றானுமாய்க்
காரணன்னடிமுடிகாணவொண்ணானிட
மாரணங்கொண்டுபூசுரர்களவந்தடிதொழச்
சீரணங்கும்புகழ்த்தென்குடித்திட்டையே. (௯)

குண்டிகைக்கையுடைக்குண்டரும்புத்தரும்
பண்டுரைத்தேயிடும்பற்றுவிட்டீர்தொழும்
வண்டிரைக்கும்பொழிற்றண்டலைக்கொண்டலார்
தெண்டிரைத்தண்புனற்றென்குடித்திட்டையே. (௧௦)

தேனலார்சோலைசூழ்தென்குடித்திட்டையைக்
கானலார்கடிபொழில்சூழ்தருங்காழியுண்
ஞானமார்ஞானசம்பந்தனசெந்தமிழ்
பானலார்மொழிவலார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - பசுபதிநாதர்.
தேவி - உலகநாயகி

ஆக திருப்பதிகம் - ௩௰.

## ௧௬. திருப்புள்ளமங்கை. *

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை (௧. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பாலுந்துறுதிரளாயினன்பரமன்பிரமன்றான்
போலுந்திறலவர்வாழ்தருபொழில்சூழ்புள்ளமங்கைக்
காலன்றிறலறச்சாடியகடவுளிடங்கருதி
லாலந்துறைதொழுவார்தமையடையாவினைதானே. (௧)

மலையான்மகள்கணவன்மலிகடல்சூழ்தருதன்மைப்
புலையாயினகளைவானிடம்பொழில்சூழ்புள்ளமங்கைக்
கலையான்மலிமறையோரவர்கருதித்தொழுதேத்த
வலையார்புனல்வருகாவிரியாலந்துறையதுவே. (௨)

கறையார்மிடறுடையான்கமழ்கொன்றைச்சடைமுடிமேற்
பொறையார்தருகங்கைப்புனலுடையான்புள்ளமங்கை
சிறையார்தருகளிவண்டறைபொழில்சூழ்திருவாலந்
துறையானவனறையார்கழறொழுமின்றுதிசெய்தே. (௩)

தணியார்மதியரவின்னொடுவைத்தானிடமொய்த்தெம்
பணியாயவனடியார்தொழுதேத்தும்புள்ளமங்கை
மணியார்தருகனகம்மவைவயிரத்திரளோடு
மணியார்மணலணைகாவிரியாலந்துறையதுவே. (௪)

* திருப்புள்ளமங்கையென்பது ஆலந்துறை.

மெய்த்தன்னூறும்வினைதீர்வகைதொழுமின்செழுமலரின்
கொத்தின்னொடுசந்தாரகில்கொணர்காவிரிக்கரைமேற்
பொத்தின்னிடையாந்தைபலபாடும்புளமங்கை
யத்தன்னமையாள்வானிடமாலந்துறையதுவே. (௫)

மன்னானவனுலகிற்கொருமழையானவன்பிழையில
பொன்னானவன்முதலானவன்பொழில்சூழ்புளமங்கை
யென்னானவனிசையானவனிளஞாயிறின்சோதி
யன்னானவனுறையுமிடமாலந்துறையதுவே (௬)

முடியார்தருசடைமேன்முளையிளவெண்மதிசூடிப்
பொடியாடியதிருமேனியர்பொழில்சூழ்புளமங்கைக்
கடியார்மலர்புனல்கொண்டுதன்கழலேதொழுதேத்து
மடியார்தமக்கினியானிடமாலந்துறையதுவே (எ)

இலங்கைம்மன்னன்முடிதோளிறவெழிலார்திருவிரலால்
விலங்கலிலிடையடர்த்தானிடமவேதம்பயின்றேத்திப்
புலன்கடமைவென்றார்புகழவர்வாழ்புளமங்கை
யலங்கன்மலிசடையானிடமாலந்துறையதுவே. (அ)

செறியார்தருவெள்ளைத்திருநீற்றின்றிருமுண்டப்
பொறியார்தருபுரிநூலவரைமார்பன்புளமங்கை
வெறியார்தருகமலத்தயன்மாலுந்தனைநாடி
யறியாவகைநின்றானிடமாலந்துறையதுவே. (௯)

நீதியறியாதாரமண்கையரொடுமண்டைப்
போதியவரோதும்முரைகொள்ளார்புளமங்கை
யாதியவர்கோயிறிருவாலந்துறைதொழுமின்
சாதிம்மிகுவானோர்தொழுதன்மைபெறலாமே. (௧௦)

பொந்தின்னிடைத்தேனூறியபொழில்சூழ்புளமங்கை
யந்தண்புனல்வருகாவிரியாலந்துறையானைக்
கந்தம்மலிகமழ்காழியுட்கலைஞானசம்பந்தன
சந்தம்மலிபாடல்சொலியாடத்தவமாமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - பசுபதிநாதர்.
தேவி - பல்வளைநாயகி.

---

௮௨ திருப்பதிகம் - ௩௧.

# ௧௭. திருச்சக்கரப்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி. (௩-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

படையினார்வெண்மழுப்பாய்புலித்தோலரை
யுடையினாருமையொருகூறனாரூர்வதோர்
விடையினார்வெண்பொடிப்பூசியார்விரிபுனற்
சடையினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. (௧)

பாடினாரருமறைபனிமதிசடைமிசைச்
சூடினார்படுதலைதுன்னெருக்கத்தொடு
நாடினாரிடுபலிநண்ணியோர்காலனைச்
சாடினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௨)

மின்னினார்சடைமிசைவிரிகதிர்மதியமும்
பொன்னினார்கொன்றையும்பொறிகிளரரவமுந்
துன்னினாருலகெலாந்தொழுதெழநான்மறை
தன்னினார்வளநகர்சக்கரப்பள்ளியே (௩)

நலமலிகொள்கையார்நான்மறைபாடலார்
வலமலிமழுவினார்மகிழுமூர்வண்டறை
மலர்மலிசலமொடுவந்திழிகாவிரி
சலசலமணிகொழிசக்கரப்பள்ளியே. (௪)

வெந்தவெண்பொடியணிவேதியர்விரிபுன
லந்தமிலணிமலைமங்கையோடமருமூர்
கந்தமார்மலரொடுகாரகில்பன்மணி
சந்தினோடணைபுனற்சக்கரப்பள்ளியே (௫)

பாங்கினான்முப்புரம்பாழ்படவெஞ்சிலை
வாங்கினார்வானவர்தானவர்வணங்கிட
வோங்கினாருமையொருகூறொடுமொலிபுன
றாங்கினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. (௬)

பாரினார்தொழுதெழுபரவுபல்லாயிரம்
பேரினார்பெண்ணொருகூறனார்பேரொலி
நீரினார்சடைமுடிநிறைமலர்க்கொன்றையந்
தாரினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௭)

முதிரிலாவெண்பிறைசூடினார்முன்னநா
ளெதிரிலாமுப்புரமெரிசெய்தார்வரைதனா
லதிரிலாவல்லரக்கன்வலிவாட்டிய
சதுரனார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௮)

துணிபடுகோவணஞ்சுண்ணவெண்பொடியினர்
பணிபடுமார்பினர்பனிமதிச்சடையினர்
மணிவணனவனொடுமலர்மிசையானையுந்
தணிவினர்வளநகர்சக்கரப்பள்ளியே. (கூ)

உடம்புபோர்சீவரருண்டொழிறசமணர்கள்
விடம்படுமுரையவைமெய்யலவிரிபுனல
வடம்படுமலர்கொடுவணங்குமின்வைகலுந்
தடமபுனலசூழ்தருசககரப்பள்ளியே. (க0)

தண்வயல்புடையணிசககரப்பள்ளியெங்
கண்ணுதலவனடிகழுமலவளநகர்
நண்ணியசெந்தமிழ்ஞானசமபந்தன்சொற்
பண்ணியவிவைசொலப்பறையுமெய்ப்பாவமே (கக)

திருசசிறறம்பலம்.

சுவாமி - ஆலந்துறைநாதா.
தேவி - அலலியங்கோதை.

ஆ திருபபதிகம் - ௩உ.

# கஅ. திருக்கருகாவூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கௌசிகம். (௩-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

முத்திலங்குமுறுவலலுமையஞ்சவே
மத்தயானைமறுகவ்வுரிவாஙகியக
கத்தைபோர்த்தகடவுள்கருகாவூரெம்
மத்தர்வண்ணம்மழலும்மழலவண்ணமே. (க)

விமுதவலலசடையான்வினையுள்குவார்க
கமுதநீழலகலாததோர்செல்வமாங்
கமுதமுலலைகமழ்கின்றகருகாவூ
ரமுதர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. (உ)

பழகவல்லசிறுத்தொண்டர்பாவின்னிசை
குழகரென்றுகுழையாவழையாவரும்
கழல்கொள்பாடலுடையார்கருகாவூரெம்
மழகர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. (௩)

பொடிமெய்பூசிமலர்கொய்துபுணர்ந்துடன்
செடியரல்லாவுள்ளநல்கியசெல்வத்தர்
கடிகொண்முல்லைகமழுங்கருகாவூரெம்
மடிகள்வண்ணம்மழலும்மழலவண்ணமே. (ச)

மையலின்றிமலர்கொய்துவணங்கிடச்
செய்யவுள்ளம்மிகநல்கியசெல்வத்தர்
கைதன்முல்லைகமழுங்கருகாவூரெம்
மையாவண்ணம்மழலுமழலவண்ணமே. (ரு)

மாசின்றொண்டர்மலர்கொண்டுவணங்கிட
வாசையாரவருணல்கியசெல்வத்தர்
காயசினத்தவிடையார்கருகாவூரெம்
மீசர்வண்ணமெரியுமெரிவண்ணமே. (சா)

வெந்தநீறுமெய்பூசியவேதியன்
சிந்தைநின்றருணல்கியசெல்வத்தன்
கந்தமவ்வல்கமழுங்கருகாவூரெம்
மெந்தைவண்ணமெரியுமெரிவண்ணமே. (எ,அ)

பண்ணினேர்மொழியாளையொர்பாகனார்
மண்ணுகோலமுடையம்மலரானொடும்
கண்ணனேடவரியார்கருகாவூரெம்
மண்ணல்வண்ணமழலுமழல்வண்ணமே. (கூ)

போர்த்தமெய்யினர்போதுழல்வார்கள்சொற்
றீர்த்தமென்றுதெளிவீர்தெளியேன்மின்
கார்த்தண்முல்லைகமழுங்கருகாவூரெம்
மாத்தர்வண்ணமழலுமழலவண்ணமே. (க0)

கலவமஞ்ஞையுலவுங்கருகாவூர்
நிலவுபாடலுடையானைநன்னீள்கழல்
குலவுஞானசம்பந்தனசெந்தமிழ்
சொலவல்லாரவர்தொல்வினைதீருமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

குருகாம்வயிரமாங்கூறுநாளாங்
கொள்ளுங்கிழமையாங்கோளேதானும்
பருகாவமிர்தமாம்பாலினெய்யாம்
பழத்தினிரதமாம்பாட்டிற்பண்ணா
மொருகாலுமையாளோர்பாகனுமா
முண்ணின்றநாவிற்குரையாடியாங்
கருவாயுலகுக்குமுன்னேதோன்றுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (க)

வித்தாமுளையாகும்வேரேதானும்
வேண்டுமுருவமாம்விரும்பிநின்ற
பத்தாமடியார்க்கோர்பாங்கனுமாம்
பானிரமாம்பரஞ்சோதிதானேயாகுந்
தொத்தாமமரர்கணஞ்சூழ்ந்துபோற்றத்
தோன்றாதென்னுள்ளத்தினுள்ளேநின்ற
கத்தாமடியேற்குக்காணாகாட்டுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௨)

பூத்தானும்பூவினிறத்தானுமாம்
பூக்குளால்வாசமாய்மன்னிநின்ற
கோத்தானுங்கோல்வளையாள்கூறனாகுங்
கொண்டசமயத்தார்தேவனாகி
யேத்தாதார்க்கென்றுமிடரேதுன்ப
மீவானுமென்னெஞ்சத்துள்ளேநின்று
காத்தானுங்காலநடையாவண்ணங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே (௩)

இரவனுமெல்லியின்னடமாடியா
மெண்டிசைக்குந்தேவனுமென்னுளானு
மரவனுமல்லலறுப்பானுமா
மாகாயமூர்த்தியாமானேறேறுங்
குரவனுங்கூற்றையுதைத்தான்றானுங்
கூறாதவஞ்சக்குயலர்க்கென்றுங்
கரவனுங்காட்சிக்கெளியானுமாங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௪)

படைத்தானும்பாரையிடந்தானாகும்
பரிசொன்றறியாமைநின்றான்றானு
முடைத்தானுமொன்னார்புரங்கண்மூன்று
மொள்ளழலான்மூட்டியொருக்கிநின்று
வடைத்தானுஞ்சூலமழுவோர்நாக
மசைத்தானுமானேறொன்றூர்ந்தானாகுங்
கடைத்தானுங்கள்ளமறிவார்நெஞ்சிற்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௫)

மூலனுமூர்த்தியாமுன்னேதானு
மூவாதமேனிமுக்கண்ணினானுஞ்
சீலனுஞ்சேர்ந்தாரிடர்கடீர்க்குஞ்
செல்வனுஞ்செஞ்சுடர்க்கோர்சோதிதானு
மாலனுமங்கையோர்பங்கனாகு
மன்றாடியாம்வானோர்தங்கட்கெல்லாங்
காலனுங்காலனைக்காய்ந்தானாகுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௬)

அரைசேரரவனுமாலத்தானு
மாதிரைநாளானுமண்டவானோர்
திரைசேர்திருமுடித்திங்களானுந்
தீவினைநாசனென்சிந்தையானு

முரைசேருலகத்தாருள்ளானுமா
முமையாளோர்பாகனுமோதவேலிக்
கரைசேர்கடனஞ்சையுண்டானுக்குங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௭)

துடியாந்துடியின்முழக்கந்தானுஞ்
சொல்லுவார்சொல்லெல்லாஞ்சோதிப்பனும்
படிதானும்பாவமறுப்பானுக்கும்
பானீற்றனும்பரஞ்சோதிதானுங்
கொடியானுங்கூற்றையுதைத்தானுக்குங்
கூறுதவஞ்சக்குயலர்கடென்றுங்
கடியானுங்காட்சிக்கரியானுக்குங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௮)

விட்டுருவங்கிளர்கின்றசோதியானும்
விண்ணவர்க்குமறியாதசூழலானும்
பட்டுருவமால்யானைத்தோல்கீண்டானும்
பலபலவும்பாணிபயின்றான்றானு
மெட்டுருவமூர்த்தியாமெண்டோளனு
மென்னுச்சிமேலானெம்பிரானுங்
கட்டுருவங்கடியானைக்காயந்தானுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௯)

பொறுத்திருந்தபுள்ளூர்வானுள்ளானி
யுள்ளிருந்தங்குன்னேயக்களைவான்றானுஞ்
செறுத்திருந்தமும்மதில்கண்மூன்றும்வேவச்
சிலைகுனியத்தீமூட்டுந்திண்மைதானு
மறுத்திருந்தகையானுமந்தாரலலி
யிருந்தானையொருதலையைத்தெரியநோக்கிக்
கறுத்திருந்தகண்டமுடையான்போலுங்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௰)

ஒறுத்தானுமொன்னார்புரங்கண்மூன்று
மொள்ளழலைமாட்டியுடனேவைத்து
விறுத்தானுமென்னன்முடிகள்பத்து
மிசைந்தானுமின்னிசைகள்கேட்டானுக்கு
மறுத்தானுமஞ்சமடக்கியங்கை
யாகாயமந்திரமுமானானுக்குங்
கறுத்தானுங்காலனைக்காலால்வீழக்
கண்ணுங்கருகாவூரெந்தைதானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கருகாவூர்த் திருப்பதிகம் - ௨.

---

சுவாமி - முல்லைவனநாதர்.
தேவி - கரும்பனையாள்.

---

ஆ திருப்பதிகம் - ௩௪.

---

# ககூ. திருப்பாலைத்துறை.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. (ரு-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

நீலமாமணிகண்டத்தர்நீள்சடைக்
கோலமாமதிகங்கையுங்கூட்டினார்
சூலமான்மழுவேந்திச்சுடர்முடிப்
பாலனையாடுவர்பாலைத்துறையரே (க)

கவளமால்களிற்றின்னுரிபோர்த்தவர்
தவளவெண்ணகைமங்கையோர்பங்கினர்
திவளவானவர்போற்றித்திசைதொழும்
பவளமேனியர்பாலைத்துறையரே. (உ)

மின்னினுண்ணிடைக்கன்னியர்மிக்கெங்கும்
பொன்னிநீர்மூழ்கிப்போற்றியடிதொழ
மன்னிநான்மறையோடுபலகீதமும்
பன்னினாரவர்பாலைத்துறையரே. (ங)

நீடுகாடிடமாய்நின்றபேய்க்கணங்
கூடுபூதங்குழுமிநின்றார்க்கவே
யாடினாரழகாகியநான்மறை
பாடினாரவர்பாலைத்துறையரே. (ச)

சித்தர்கன்னியர்தேவர்கடானவர்
பித்தர்நான்மறைவேதியர்பேணிய
வத்தனேநமையாளுடையாயெனும்
பத்தர்கட்கன்பர்பாலைத்துறையரே. (ரு)

விண்ணினார்பணிந்தேத்தவியப்புறு
மண்ணினார்மறவாதுசிவாயவென்
றெண்ணினார்க்கிடமாவெழில்வானகம்
பண்ணினாரவர்பாலைத்துறையரே. (சா)

குரவனார்கொடுகொட்டியுங்கொக்கரை
விரவினார்பண்கெழுமியவீணையு
மருவுநாண்மலர்மல்லிகைசெண்பகம்
பரவுநீர்ப்பொன்னிப்பாலைத்துறையரே. (எ)

தொடருந்தொண்டரைத்துக்கந்தொடர்ந்துவந்
தடரும்போதரனையருள்செய்பவர்
கடலினஞ்சணிகண்டர்கடிபுனற்
படருஞ்செஞ்சடைப்பாலைத்துறையரே. (அ)

மேகந்தோயபிறைசூடுவர்மேகலை
நாகந்தோய்ந்தவரையினர்நல்லியற்
போகந்தோய்ந்தபுணர்முலைமங்கையோர்
பாகந்தோய்ந்தவர்பாலைத்துறையரே. (கூ)

வெங்கண்வாளரவாட்டிவெருட்டுவ
ரங்கணாரடியார்க்கருணல்குவர்
செங்கண்மாலயன்றேடற்கரியவர்
பைங்கணேற்றினர்பாலைத்துறையரே. (க0)

உரத்தினாலரக்கன்னுயர்மாமலை
நெருக்கினானைநெரித்தவன்பாடலு
மிரக்கமாவருள்செய்தபாலைத்துறை
கரத்தினாற்றொழுவார்வினையோயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - பாலைவனநாதர்.
தேவி - தவளவெண்ணகையாள்.

ஆ திருப்பதிகம் - ௬௫.

# உ0. திருநல்லூர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி (ஆ. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கொட்டும்பறைசீராற்குழுமவனலேந்தி
நட்டம்பயின்றாடுநல்லூர்ப்பெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுந்தன்பு
பட்டமனத்தார்களறியார்பாவமே (க)

ஏறிலெருதேறுமெழிலாயிழையோடும்
வேறும்முடனுமாம்விகிர்தரவரென்ன
நாறும்மலர்ப்பொய்கைநல்லூர்ப்பெருமானைக்
கூறும்மடியார்கட்கடையாகுற்றமே. (உ)

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதாழ
வோடுண்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுநெறியானைநல்லூர்ப்பெருமானைப்
பாடும்மடியார்கட்கடையாபாவமே. (௩)

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நாத்தநெறியானைநல்லூர்ப்பெருமானைக
காத்தநெறியானைக்கைகூப்பிதமதொழு
தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே. (ச)

ஆகத்துமைகேள்வனரவச்சடைதாழ
நாகமசைத்தானைநல்லூாப்பெருமானைத்
தாகம்புகுந்தண்மித்தாள்கடொழுந்தொண்டர்
போகமனத்தராய்ப்புகழத்திரிவாரே (ரு)

கொல்லுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
நல்லநெறியானைநல்லூர்பபெருமானைச்
செல்லுநெறியானைசசேர்ந்தாரிடர்தீரச்
சொல்லுமடியார்களறியார்துககமே. (சா)

எங்கள்பெருமானையிமையோர்தொழுதேத்து
நங்கள்பெருமானைநல்லூர்பிரிவிலலா
தங்கைதலைகதேற்றியாளென்றடிநீழற்
றங்குமனத்தார்கடமொற்றறுப்பாரே. (எ)

காமனெழிலவாட்டிககடலசூழிலஙகைககோ
னுமமிறுத்தானைநலலூர்ப்பெருமானை
யேமமனத்தராயிகழாதெழுநதொண்டர்
தீபமனத்தாரகடறியார்தீயவே (அ)

வணணமலரானும்வையமளந்தானு
நண்ணலரியானைநலலூர்ப்பெருமானைத்
தண்ணமலர்தூவிததாள்கடொழுதேதத
வெண்ணுமடியார்கட்கில்லையிடுககணே. (கூ)

பிச்சக்குடைநீழற்சமணர்சாககியா
நிச்சமலர்தூறறநின்றபெருமானை
நச்சுமிடற்றானைநலலூர்ப்பெருமானை
யெச்சுமடியார்கட்கில்லையிடாதானே (கO)

தண்ணம்புனற்காழிஞானசமபந்த
னண்ணும்புனல்வேலிநல்லூர்ப்பெருமானை
வண்ணம்புனைமாலைவைகலேத்துவார்
விண்ணுநிலனுமாய்விளங்குமபுகழாரே. (கக)

திருச்சிறறமபலம்.

---

பண் - காந்தாரம். (உ-ம். திருமுறை.)

---

திருச்சிறறம்பலம.

பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமருநான்மறையேபாடியாடல்பயிலகின்றீா
திண்ணமரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநலலூர்
மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (க)

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடியங்கையிற்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (உ)

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (ங)

கூனமரும்வெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமருமென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமரும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (ச)

நிணங்கவருமூவிலையுமனலுமேந்திநெறிகுழலா
ளணங்கமரும்பாடலோடாடன்மேவுமழகினீர்
திணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடித்திருநல்லூர்
மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (ரு)

கார்மருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வார்மருவுமென்முலையாளபாகமாகுமாண்பினீர்
தேர்மருவுநெடுவீதிகொடிகளாடுந்திருநல்லூ
ரேர்மருவுகோயிலேகோயிலாகவிருந்தீரே. (சா)

ஊன்றோயும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீன்றோயுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்
தேன்றோயும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வான்றோயுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (எ)

காதமரும்வெண்குழையீர்கறுத்தவரக்கன்மலையெடுப்ப
மாதமருமென்மொழியாண்மறுகும்வண்ணங்கண்டுகந்தீர்
தீதமராவந்தணர்கள்பரவியேற்றுந்திருநல்லூர்
மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (அ)

போதின்மேலயன்திருமாலபோற்றியும்மைக்காணாது
நாதனேயிவனென்றுநயந்தேத்தமகிழ்ந்தளித்தீர்
தீதிலாவந்தணர்கடீமூன்றோம்புந்திருநல்லூர்
மாதராளவளோடுமன்னுகோயின்மகிழ்ந்தீரே. (கூ)

பொல்லாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன்
றல்லாதாரறவுரைவிட்டடியார்கள்போற்றோவா
நல்லார்களந்தணர்களுமேத்துந்திருநல்லூர்
மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (கo)

கொந்தணவும்பொழிலபுடைசூழ்கொச்சைமேவுகுலவேந்தன்
செந்தமிழின்சம்பந்தன்சிறைவண்புனல்சூழ்திருநல்லூர்ப்
பந்தணவுமெல்விரலாள்பங்கன்றன்னைப்பயிலபாடல
சிந்தனையாலுரைசெய்வார்சிவலோகஞ்சேர்ந்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

---

பண்-சாதாரி. (௩-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வண்டிரியவிண்டமலர்மலகுசடைதாழவிடையேறிப்
பண்டெரிகைகொண்டபரமன்பதியதென்பரதனயலே
நண்டிரியநாரையிரைதேரவரைமேலருவிமுத்தம்
தெண்டிரைகண்மோதவிரிபோதுகமழுந்திருநலூரே. (௧)

பல்வளருநாகமரையார்த்துவரைமங்கையொருபாக
மல்வளர்புயத்திலணைவித்துமகிழும்பரமனிடமாஞ்
சொல்வளரிசைக்கிளவிபாடிமடவார்நடமதாடச்
செல்வமறையோர்கண்முறையேத்தவளருந்திருநலூரே. (௨)

நீடுவரைமேருவிலதாகநிகழ்நாகமழலம்பாற்
கூடலர்கண்மூவெயிலெரித்தகுழகன்குலவுசடைமே
லேடுலவுகொன்றைபுனனின்றுதிகழுந்நிமலனிடமாஞ்
சேடுலவுதாமரைகணீடுவயலார்திருநலூரே. (௩)

கருகுபுரிமிடறர்கரிகாடரெரிகையதனிலேந்தி
யருகுவருகரியினுரியதளாபடவரவரிடமவினைவின்
முருகுவிரிபொழிலின்மணநாறமயிலாலமரமேறித்
திருகுசினமந்திகனிசிந்தமதுவார்திருநலூரே. (௪)

பொடிகொடிருமார்பர்புரிநூலர்புனலபொங்கரவுதங்கு
முடிகொள்சடைதாழவிடையேறுமுதலாளரவரிடமா
மிடிகொண்முழவோசையெழிலார்செய்தொழிலாளர்விழமல்கச்
செடிகொள்வினையகலமனமினியவர்கள்சேர்திருநலூரே. (௫)

புற்றரவர்நெற்றியொர்கணொற்றைவிடையூர்வரடையாளஞ்
சுற்றமிருள்பற்றியபல்பூதமிசைபாடநசையாலே
கற்றமறையுற்றுணர்வர்பற்றலர்கண்முற்றுமெயின்மாளச்
செற்றவரிருப்பிடநெருக்குபுனலார்திருநலூரே. (௬)

பொங்கரவரங்கமுடன்மேலணிவர்ஞாலமிடுபிச்சை
தங்கரவமாகவுழிதந்துமெய்துலங்கியவெணீற்றர்
கங்கையரவம்விரவுதிங்கள்சடையடிகளிடம்விளைவிற்
செங்கயல்வதிக்குதிகொளும்புனலதார்திருநலூரே. (௭)

ஏறுபுகழ்பெற்றதெனிலங்கையவர்கோனையருவரையிற்
சீறியவனுக்கருளுமெங்கள்சிவலோகனிடமாகுங்
கூறுமடியார்களிசைபாடிவலம்வந்தயருமருவிச்
சேறுகமரானவழியத்திகழ்தருந்திருநலூரே. (௮)

மாலுமலர்மேலயனுநேடியறியாமையெரியாய
கோலமுடையானுணர்வுகோதில்புகழானிடமதாகு
நாலுமறையங்கமுதலாறுமெரிமூன்றுதழலோம்புஞ்
சீலமுடையார்கணெடுமாடம்வளருந்திருநலூரே. (௯)

சீறுமுடை கோவணமிலாமையிலொலோவியதவத்தர்
பாறுமுடன்மூடுதுவராடையர்கள்வேடமவைபாரே
லேறுமடவாளொடினிதேறிமுனிருந்தவிடமென்பர்
தேறுமனவாரமுடையார்குடிசெயுந்திருநலூரே. (௧௦)

திரைகளிருகரையும்வருபொன்னிநிலவுந்திருநலூர்மேற்
பரசுதருபாணியைநலந்திகழ்செய்தோணிபுரநாத
னுரைசெய்தமிழ்ஞானசம்பந்தனிசைமாலைமொழிவார்போய்
விரைசெய்மலர்தூவவிதிபேணுகதிபேறுபெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

அட்டுமினில்பலியென்றென்றகங்கடைதோறும்வந்து
மட்டவிழுங்குழலார்வளைகொள்ளும்வகையென்கொலோ
கொட்டியபாணியெடுத்திட்டபாதமுங்கோளரவு
நட்டநின்றாடியநாதர்நல்லூரிடங்கொண்டவரே. (௧)

பெண்ணிட்டம்பன்னடையதன்றிவைபெயபலிக்கென்றுழல்வார்
நண்ணிட்டுவந்துமனைபுகுந்தாருநல்லூரகத்தே
பண்ணிட்டபாடலராடலராயப்பற்றிநோக்கிநின்று
கண்ணிட்டுப்போயிற்றுக்காரணமுண்டுகறைக்கண்டரே. (௨)

படவேரரவல்குற்பாவைநல்லீர்பகலேயொருவ
ரிடுவாரிடைப்பலிகொள்பவர்போலவந்தில்புகுந்து
நடவாரடிகணடம்பயின்றாடியகூத்தர்கொலோ
வடபாற்கயிலையுந்தென்பானல்லூருந்தம்வாழ்பதியே. (௩)

செஞ்சுடர்ச்சோதிப்பவளத்திரடிகழ்முத்தனைய
நஞ்சணிகண்டனல்லூருறைநம்பனைநானொருகாற்
றுஞ்சிடைக்கண்டுகனவின்றலைத்தொழுதேறகவன்று
னெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநின்றனனே. (௪)

வெண்மதிசூடிவிளங்கநின்றானைவிண்ணோர்கடொழ
நண்ணிலயத்தொடுபாடலறாநல்லூரகத்தே
திண்ணியங்கொடுநின்னுன்றிரிபுரமூன்றெரித்தான்
கண்ணுளுநெஞ்சத்தகத்துமுளகழற்சேவடியே. (௫)

தேற்றப்படத்திருநல்லூரகத்தேசிவனிருந்தாற்
றோற்றப்படச்சென்றுகண்டுகொள்ளார்தொண்டர்துன்மதியா
லாற்றிற்கெடுத்துக்குளத்தினிற்றேடியவாதரைப்போற்
காற்றிற்கடுத்துலகெல்லாந்திரிதர்வர்காண்பதற்கே. (௬)

நாட்கொண்டதாமரைப்பூந்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கொர்வாணிகனை
யாட்கொண்டவார்த்தையுரைக்குமன்றோவிவ்வகலிடமே. (எ)

அறைமல்குபைங்கழலார்க்கநின்றானணியார்சடைமே
னறைமலருகொன்றையந்தாருடையானலலூரகத்தே
பறைமல்குபாடலனுடலனுகிப்பரிசழித்தான்
பிறைமல்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (அ)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்குந்
துன்னியதொண்டர்களின்னிசைபாடித்தொழுதுநல்லூர்
கன்னியர்தாமுங்கனவிடையுன்னியகாதலரை
யன்னியரற்றவரங்கணனேயருணலகென்பரே. (௯)

திருவமர்தாமரைசீர்வளர்செங்கழுநீர்கொணெய்தல
குருவமர்கோங்கநகுராமகிழ்சண்பகங்கொன்றைவன்னி
மருவமர்நீள்கொடிமாடமலிமறையோர்கணலலூ
ருருவமர்பாகத்துமையவள்பாகனையுள்குதுமே. (௧௦)

செல்லோகொடியன்சிவன்பெருங்கோயிலசிவபுரமும்
வலலேன்புகவுமதிலசூழிலங்கையர்காவலனை
கலலார்முடியொடுதோளிறச்செறறகழலடியா
னல்லூரிருந்தபிரானலலனேநம்மையாள்பவனே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்
நிலலாமேதீவினைகணீங்கவைத்தார்
சினந்திருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார்
செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோ
ரினந்துருவிமணிமகுடத்தேறத்துற்ற
வினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்பில்கி
நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௧)

பொன்னலத்தநறுங்கொன்றைசடைமேல்வைத்தார்
புலியுரியினதள்வைத்தார்புனலும்வைத்தார்
மன்னலத்ததிரடோண்மேன்மழுவாள்வைத்தார்
வார்காதிற்குழைவைத்தாாமதியம்வைத்தார்
மின்னலத்தநுண்ணிடையாள்பாகம்வைத்தார்
வேழத்தினுரிவைத்தார்வெண்ணூல்வைத்தார்
நன்னலத்ததிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௨)

தோடேறுமலர்க்கொன்றைசடைமேல்வைத்தார்
துன்னெருக்கின்வடம்வைத்தார்துவலைசிந்தப்
பாடேறுபடுதலைகளேறியவைத்தார்
பனிமத்தமலர்வைத்தார்பாம்பும்வைத்தார்
சேடேறுதிருநுதன்மேனாட்டம்வைத்தார்
சிலைவைத்தார்மலைபெற்றமகளைவைத்தார்
நாடேறுதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ஙு)

வில்லருளிவருபுருவத்தொருத்திபாகம்
பொருத்தாகிவிரிசடைமேலருவிவைத்தார்
கல்லருளிவரிசிலையாவைத்தாரூராக
கைலாயமலைவைத்தார்கடவூர்வைத்தார்
சொல்லருளியறநால்வார்க்கறியவைத்தார்
சுடுசுடலைப்பொடிவைத்தார்துறவிவைத்தார்
நல்லருளாற்றிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ச)

விண்ணிரியுந்திரிபுரங்களெரியவைத்தார்
வினைதொழுவார்க்கறவைத்தார்துறவிவைத்தார்
கண்ணெரியாற்காமனையும்பொடியாவைத்தார்
கடிக்கமலமலர்வைத்தார்கைலைவைத்தார்
திண்ணெரியுந்தணபுனலுமுடனேவைத்தார்
திசைதொழுதுமிசையமரர்திகழ்ந்துவாழ்த்தி
நண்ணரியதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே (ரு)

உற்றுலவுபிணியுலகத்தெழுமைவைத்தா
ருயிர்வைத்தாருயிர்செல்லுங்கதிகள்வைத்தார்
மற்றமரர்கணம்வைத்தாரமரர்காணு
மறைவைத்தார்குறைமதியமவளரவைத்தார்
செற்றமலியார்வமொடுகாமலோபஞ்
சிறவாதநெறிவைத்தார்துறவிவைத்தார்
நற்றவர்சேர்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (சா)

மாறுமலைந்தாரரணமெரியவைத்தார்
மணிமுடிமேலரவைத்தாரணிகொண்மேனி
நீறுமலிந்தெரியாடனிலவவைத்தார்
நெற்றிமேற்கண்வைத்தார்நிலயம்வைத்தா
ராறுமலிந்துறுதிரைகளெறியவைத்தா
ரார்வத்தாலடியமரர்பரவவைத்தார்
நாறுமலர்த்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (எ)

குலங்கண்மிகுமலைகடலகண்ஞாலம்வைத்தார்
குருமணிசேரரவைத்தார்கோலம்வைத்தா

ருலங்கிளருமரவத்தினுச்சிவைத்தா
　　ருண்டருளிவிடம்வைத்தாரெண்டோள்வைத்தார்
நிலங்கிளறும்புனல்கனலுளனிலம்வைத்தார்
　　நிமிர்விசும்பின்மிசைவைத்தார்நினைந்தாரிந்நா
ணலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
　　நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (அ)

சென்றுருளுங்கதிரிரண்டும்விசும்பில்வைத்தார்
　　திசைபத்துமிருநிலத்திற்றிருந்தவைத்தார்
நின்றருளியடியமரர்வணங்கவைத்தார்
　　நிறைதவமுமறைபொருளுநிலவவைத்தார்
கொன்றருளிக்கொடுங்கூற்றநடுங்கியோட
　　குரைகழற்சேவடிவைத்தார்விடையூர்வைத்தார்
நன்றருளுந்திருவடியென்றலைமேலவைத்தார்
　　நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கூ)

பாம்புரிஞ்சிமதிகிடந்துதிரைகளேங்கப்
　　பனிக்கொன்றைசடைவைத்தார்பணிசெயவானோ
ராம்பரிசுதமக்கெல்லாமருளுமவைத்தா
　　ரடுசுடலைப்பொடிவைத்தாரழகும்வைத்தா
ரோம்பரியவல்வினைநோயதீரவைத்தா
　　ருமையையொருபாலவைத்தாருகந்துவானோர்
நாம்பரவுந்திருவடியென்றலைமேலவைத்தார்
　　நல்லூரெம்பெருமானார்நல்லவாரே (க0)

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்
　　குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையா
லுலங்கிளரவெடுத்தவன்றோணமுடியுநோவ
　　வொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று
புலம்புதலுமருளொடுபோர்வாளும்வைத்தார்
　　புகழ்வைத்தார்புரிந்தாளாகக்கொள்ளவைத்தார்
நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
　　நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

* திருநாவுக்கரசுநாயனார் திருச்சத்திமுற்றத்தை அடைந்து, அங்கு சுவாமி தரிசனஞ்செய்து, திருவடிசூட்டும்படி திருப்பதிகம் பாடச் சிவபிரான் "நல்லூருக்குவா" என்று அருளிச்செய்தனர். நாயனார் திருநல்லூருக்குச்சென்று சுவாமியை வணங்கி எழும்பொழுது சுவாமி "உன்னுடையநினைப்பதனை முடிக்கின்றோம்" என்று சொல்லித் தம்முடைய திருவடியை அவர்சிரசின்மேலே சூட்டியருளினார். நாயனார் "நினைந்துருகுமடியாரை" என்று திருத்தாண்டகமெடுத்து, திருப்பாட்டிறுதிதோறும "திருவடியென்றலைமேல்வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" என்று பாடியருளினார்.

திருநல்லூர்த் திருப்பதிகம் - ரு.

---

சுவாமி - பெரியவாண்டவர்.

தேவி - பருவதசுந்தரி.

ஆ திருப்பதிகம் - சO.

# ௨௧. திருவாவூர்ப்பசுபதீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. (௩ஆம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

புண்ணியர்பூதியர்பூதநாதர்புடைபடுவார்தம்மனத்தார்திங்கட்
கண்ணியரென்றென்றுகாதலாளர்கைதொழுதேத்தவிருந்தவூராம்
விண்ணுயர்மாளிகைமாடவீதிவிரைகமழ்சோலைசுலாவியெங்கும்
பண்ணியல்பாடலறாதவாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௧)

முத்தியர்மூப்பிலராப்பினுள்ளார்முக்கணர்தக்கன்றன்வேள்விசாடு
மத்தியரென்றென்றடியரேத்துமையனணங்கொடிருந்தவூராந் [யிற்
தொத்தியலும்பொழின்மாடுவண்டுதுதைந்தெங்குந்தூமதுப்பாயக்கோ
பத்திமைப்பாடலறாதவாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௨)

பொங்கிவரும்புனல்சென்னிவைத்தார்போம்வழிவந்திழிவேற்றமானா
ரிங்குயர்ஞானத்தர்வானோரேத்துமிறையவரென்றுமிருந்தவூராந்
தெங்குயர்சோலைசேராலைசாலிதிளைக்கும்விளைவயல்சேரும்பொய்கை
பங்கயமங்கைவிரும்புமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௩)

தேவியோர்கூறினரேறதேறுஞ்செலவினர்நல்குரவென்னைநீக்கு
மாவியரந்தணரல்லறீர்க்குமப்பனாரங்கேயமர்ந்தவூராம்
பூவியலும்பொழில்வாசம்வீசப்புரிகுழலார்சுவடொற்றிமுற்றப்
பாவியல்பாடலறாதவாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே (௪)

இந்தணையுஞ்சடையார்விடையாரிப்பிறப்பென்னையறுக்கவல்லார்
வந்தணைந்தின்னிசைபாடுவார்பான்மன்னினர்மன்னியிருந்தவூராங்
கொந்தணையுங்குழலார்விழவிற்கூட்டமிடையிடைசேரும்வீதிப்
பந்தணையும்விரலார்தமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௫)

குற்றமறுத்தார்குணத்தினுள்ளார்கும்பிடுவார்தமக்கன்புசெய்வா
ரொற்றைவிடையினர்நெற்றிக்கண்ணாருறைபதியாகுஞ்செறிகொண்மா
சுற்றியவாசலின்மாதர்விழாச்சொற்கவிபாடநிதானநல்கப் [டஞ்
பற்றியகையினர்வாழுமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௬)

நீறுடையார்நெடுமாலவணங்குநிமிர்சடையார்நினைவார்தமுள்ளங்
கூறுடையாருடைகோவணத்தார்குவலயமேத்தவிருந்தவூராந்
தாறுடைவாழையிற்கூழைமந்திதகுகனியுண்டுமிண்டிட்டினத்தைப்
பாறிடப்பாய்ந்துபயிலுமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௭)

வெண்டலைமாலைவிரவிப்பூண்டமெய்யுடையார்விறலாரரக்கன்
வண்டமர்பூமுடிசெற்றுகந்தமைந்தரிடம்வளமோங்கியெங்கும்
கண்டவர்சிந்தைக்கருத்தின்மிக்கார்கதியருளென்றுகையாரக்கூப்பிப்
பண்டலர்கொண்டுபயிலுமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௮)

மாலுமயனும்வணங்கிநேடமற்றவருக்கெரியாகிநீண்ட
சீலமறிவரிதாகிநின்றசெம்மையினாரவர்சேருமூராங்
கோலவிழாவினரங்கதேறிக்கொடியிடைமாதர்கண்மைந்தரோடும்
பாலெனவேமொழிந்தேத்துமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௯)

பின்னியதாழ்சடையார்பிதற்றும்பேதையராஞ்சமண்சாக்கியர்க
டன்னியலும்முரைகொள்ளகில்லாச்சைவரிடந்தளவேறுசோலைத்
துன்னியமாதருமைந்தர்தாமுஞ்சுனையிடைமூழ்கித்தொடர்ந்துசிந்தைப்
பன்னியபாடல்பயிலுமாவூர்ப்பசுபதியீச்சரம்பாடுநாவே. (௧௦)

எண்டிசையாரும்வணங்கியேத்துமெம்பெருமானையெழில்கொளாவூர்ப்
பண்டுரியாசிலர்தொண்டர்போற்றும்பசுபதியீச்சரத்தாதிதன்மேற்
கண்டலகண்மிண்டியகானற்காழிக்கவுணியன்ஞானசம்பந்தன்சொன்ன
கொண்டினிதாவிசைபாடியாடிக்கூடுமவருடையார்கள்வானே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - பசுபதிநாதர்
தேவி - மங்களநாயகி

---

ஆக திருப்பதிகம் - ௫௧.

---

# ௨௨. திருச்சத்திமுற்றம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

திருவிருத்தம். (௪-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

*கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧)

காய்ந்தாயனங்கனுடலம்பொடிபடக்காலனைமுன்
பாய்ந்தாயுயிர்செகப்பாதம்பணிவார்தம்பல்பிறவி
யாய்ந்தாய்ந்தறுப்பாயடியேற்கருளாயுன்னன்பர்சிந்தை
சேர்ந்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௨)

பொத்தார்குரம்பைபுகுந்தைவர்நாளும்புகலழிப்ப
மத்தார்தயிர்போன்மறுகுமென்சிந்தைமறுக்கொழிவி
யத்தாவடியேனடைக்கலங்கண்டாயமரர்கடஞ்
சித்தாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௩)

நிலவாக்குரம்பைநிலையாக்கருதியிந்நீணிலத்தொன்
றல்லாக்குழிவீழ்ந்தயர்வுறுவேனைவந்தாண்டுகொண்டாய்
வில்லேர்புருவத்துமையாள்கணவாவிடிற்கெடுவேன்
செல்வாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (ச)

கருவுற்றிருந்துன்கழலேநினைந்தேன்கருப்புவியிற்
றெருவிற்புகுந்தேன்றிகைத்தடியேனைத்திகைப்பொழிவி
யுருவிற்றிகழுமுமையாள்கணவாவிடிற்கெடுவேன்
றிருவிற்பொலிசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (ரு)

வெம்மைநமன்றமர்மிக்குவிரவிவிழுப்பதன்முன்
னிம்மையுன்றாளென்றனெஞ்சத்தெழுதிவையீங்கிகழி
லம்மையடியேற்கருளுதியென்பதிங்காரறிவார்
செம்மைதருசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (சா)

விட்டார்புரங்களொருநொடிவேவவொர்வெங்கணையாற்
சுட்டாயென்பாசத்தொடர்பறுத்தாண்டுகொண்டும்பிபம்பு
மட்டார்குழலிமலைமகள்பூசைமகிழ்ந்தருளுஞ்
சிட்டாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (எ)

இகழ்ந்தவன்வேள்வியழித்திட்டிமையோர்பொறையிரப்ப
நிகழ்ந்திடவன்றேவிசயமுங்கொண்டதுநீலகண்டா
புகழ்ந்தவடியேன்றன்புன்மைகடீரப்புரிந்துநல்காய்
திகழ்ந்ததிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (அ)

தக்கார்வமெய்திச்சமண்டவிர்ந்துன்றன்சரண்புகுந்தே
னெக்காதலைப்பட்டுநின்றிறமல்லாலெனக்குளதே
மிக்கார்தில்லையுள்விருப்பாமிகவடமேருவென்னுந்
திக்காதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (கூ)

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோ
ளிறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

* திருநாவுக்கரசுநாயனார் திருச்சத்திமுற்றத்தை அடைந்து அங்கு சுவாமிதரிசனஞ் செய்து "கோவாய் முடுகி" என்னும் திருப்பதிகம் பாட, சிவபிரான் "நல்லூருக்கு வா" என்று அருளிச்செய்தார்.

சுவாமி - சிவக்கொழுந்துநாதர்.
தேவி - பெரியநாயகி.

---

ஆ திருப்பதிகம் - சஉ.

---

# உங. திருப்பட்டீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம்.

பண் - சாதாரி. (ங-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறைசூடன்மதிபல்வளையொர்பாகமதின்மூன்றொர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூடுபொழில்சூழ்பழையையுண்
மாடமழபாடியுறைபட்டிசரமேயகடிகட்டரவினார்
வேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரே. (க)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்பழையைபட்டிசரமேத்தவினைபற்றழியுமே. (உ)

காலைமடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டிசரமேபரவுவார்
மேலையொருமால்கடல்கள்போலபெருகிவிண்ணுலகமாளுமவரே. (ங)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேதுதுகமழ்செஞ்சடையினன்
பண்ணின்மிசைநின்றுபலபாணிபடவாடவல்லபான்மதியினன்
மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டிசரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (ச)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்ககவரையார்
பருவமழைபண்கவர்செய்பட்டிசரமேயபடர்புன்சடையினன்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரையடையாவினைகளே. (ரு)

மறையினொலிகீதமொடுபாடுவனபூதமடிமருவிவிரவார்
பறையினொலிபெருகநிகழ்நட்டமமர்பட்டிசரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதொர்சடையினிடையேற்றபுனறோற்றநிலையா
மிறைவனடிமுறைமுறையினேதுமவர்தீத்தொழில்களிலர்மிகவே.()

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாயதொருசீ
ரிறைவனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரே. (எ)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
ஈசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணலெளிதாமமரர்விண்ணுலகமே. (அ)

தூயமலரானுநெடியானுமறியாரவனதோற்றநிலேயி
னேயவகையானதனேயாரதறிவாரணிகொண்மார்பினகலம்
பாயநலநீறதணிவானுமைதனேடுமுறைபட்டிசரமே
மேயவனதிரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே. (௯)

தடுககினேயிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழறருங்
கடுப்பொடியுடற்கவசர்கத்துமொழிகாதல்செயதிடாதுகமழ்சேர்
மடைககயலவயற்கொண்மழபாடிநகர்நீடுபழையாறையதனுட்
படைககொருகரத்தன்மிகுபட்டிசரமேததவினேபற்றறுதலே. (௧0)

மந்தமலிசோலேமழபாடிநகர்நீடுபழையாறையதனிற்
பந்தமுயர்வீடுநலபட்டிசரமேயபர்புன்சடையனே
யந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தலணியார்
செந்தமிழ்கள்கொண்டினிதுசெப்பவலதொண்டர்வினேநிற்பிலவே. ()

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பநதபபிள்ளேயார திருபபடடீச்சரத்திற்குப போம்போது வழியில் அவருககு வெய்யிலவெபபதடதைத தணிககும்பொருட்டு சிவபிரான் ஆஞ்ஞையால் ஒரு சிவபூதம் முததுபபநதரைத தாஙகியது, பிள்ளேயார அதைக்கண்டு மகிழ்ந்து வணங் கினார.

---

சுவாமி - பட்டீசுவரநாதர்.
தேவி - பலவளேநாயகி

---

ஆ திருபபதிகம - சங.

---

# உச. திருப்பழையாறைவடதளி.

## திருநாவுக்கரசுநாயனர்.

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

*தலேயெலாம்பறிக்குஞ்சமண்கையரு
ணிலேயினன்மறைத்தான்மறைககொண்ணுமே
யலேயினர்பொழிலாறைவடதளி
நிலேயினனடியேநினேந்துய்ம்மினே. (க)

மூக்கினன்முரன்றேதியக்குண்டிகை
தூக்கினர்குலந்தூரறுத்தேதனக்
காக்கினனணியாறைவடதளி
நோக்கினர்ககில்லேயாலருநோய்களே. (உ)

குண்டரைக்குணமிலலரைக்கூறையின்
மிண்டரைத்துரந்தவிமலன்றனே
யண்டரைப்பழையாறைவடதளிக்
கண்டரைத்தொழுதுய்ந்தனகைகளே. (ஙு)

முடையரைத்தலைமுண்டிக்குமொட்டரைக்
கடையரைக்கடிந்தார்கனல்வெண்மழுப்
படையனைப்பழையாறைவடதளி
யுடையனைக்குளிர்ந்துள்குமென்னுள்ளமே. (௪)

ஒள்ளரிக்கணார்முன்னமணின்றுணுங்
கள்ளரைககடிந்தகருப்பூறலை
யள்ளலம்புனலாறைவடதளி
வள்ளலைப்புகழத்துயர்வாடுமே. (௫)

நீதியைகெடநின்றமணேயுணுஞ்
சாதியைககெடுமாசெய்தசங்கர
ஞதியைப்பழையாறைவடதளிச்
சோதியைத்தொழுவார்துயர்தீருமே. (௬)

திரட்டிரைக்கவளந்திணிகருஞ்சமண்
பிரட்டரைபபிரித்தபெருமான்றனை
யரட்டிறத்தணியாறைவடதளித்
தெருட்டரைததொழத்தீவினைதீருமே. (௭)

ஓதினத்தெழுத்தஞ்சுணராச்சமண்
வேதினைபபடுத்தானைவெங்கூற்றுதை
பாதனைப்பழையாறைவடதளி
நாதனைத்தொழநம்வினைநாசமே. (௮)

வாயிருந்தமிழேபடித்தாளுரு
வாயிரஞ்சமணும்மழிவாக்கினன்
பாயிரும்புனலாறைவடதளி
மேயவன்னெனவல்வினைவீடுமே. (௯)

செருத்தனைச்செயுஞ்சேணரககனுட
லெருத்திறவிரலாலிறையூன்றிய
வருத்தனைப்பழையாறைவடதளித்
திருத்தனைத்தொழுவார்வினைதேயுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருநாவுக்கரசுநாயனா பழையாறையிற்சென்று, அங்கு வடதளி என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கபபெருமானைச் சமணாகள் மறைத்திருத்தலைக் கேள்வியுற்று, அதற்குச்சமீபமாய் ஓரிடததிலிருந்துகொண்டு திருவமுது செய்யாமல் சமணாகளால் மறைக்கபபட்டிருநத சிவபெருமானைத தரிசிக்க விருப்பங்கொண்டனா. அதைச் சிவபெருமான அரசனுக்குச்சொபபனத்தில் தெரிவிக்க, அரசன் சமணாகளை யானைகளாலே மிதிப்பிததுககொன்று, ஆலயத்தைப் புதுக்கினன். நாயனா ஆலயததுட்சென்று சுவாமியைத தரிசித்து "தலையெலாம" என்னும் திருபபதிகம் பாடியருளினா.

---

சுவாமி - சோமநாதர். வடதளிநாதர்.
தேவி - சோமகலாநாயகி. கௌரியமமை.

---

௮௨ திருப்பதிகம் - ௪௪.

# உரு. திருவலஞ்சுழி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (உ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

விண்டெலாமலரவ்விரைநாறுதண்டேன்விம்மி
வண்டெலாநசையாலிசைபாடும்வலஞ்சுழித்
தொண்டெலாம்பரவுஞ்சுடர்போலொளியீர்சொலீர்
பண்டெலாம்பலிதேர்ந்தொலிபாடல்பயின்றதே (க)

பாரல்வெண்குருகும்பகுவாயனநாரையும்
வாரல்வெண்டிரைவாயிரைதேரும்வலஞ்சுழி
மூரல்வெண்முறுவன்னகுமொய்யொளியீர்சொலீ
ரூரல்வெண்டலைகொண்டுலகொக்கவுழன்றதே. (உ)

கிண்ணவண்ணமலருங்கிளர்தாமரைத்தாதளாய்
வண்ணநுண்மணன்மேலனம்வைகும்வலஞ்சுழிச்
சுண்ணவெண்பொடிக்கொண்டுமெய்பூசவல்லீர்சொலீர்
விண்ணவர்தொழவெண்டலையிற்பலிகொண்டதே. (ங)

கோடெலாநிறையக்குவளைம்மலருங்குழி
மாடெலாமலிநீர்மணநாறும்வலஞ்சுழிச்
சேடெலாமுடையீர்சிறுமான்மறியீர்சொலீர்
நாடெலாமறியத்தலையின்னறவேற்றதே (ச)

கொல்லைவென்றபுனத்திற்குருமாமணிகொண்டுபோய்
வல்லைநுண்மணன்மேலனம்வைகும்வலஞ்சுழி
முல்லைவெண்முறுவன்னகையாளொளியீர்சொலீர்
சில்லைவெண்டலையிற்பலிகொண்டுழல்செல்வமே. (ரு)

பூசநீர்பொழியும்புனற்பொன்னியிற்பன்மலர்
வாசநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழித்
தேசநீர்திருநீர்சிறுமான்மறியீர்சொலீ
ரேசவெண்டலையிற்பலிகொள்வதிலாமையே. (சு)

கந்தமாமலர்ச்சந்தொடுகாரகிலுந்தழீஇ
வந்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
யந்தநீர்முதனீர்நடுவாமடிகேள்சொலீர்
பந்தநீர்கருதாதுலகிற்பலிகொள்வதே. (எ)

தேனுற்றநறுமாமலர்ச்சோலையில்வண்டினம்
வானுற்றநசையாலிசைபாடும்வலஞ்சுழிக்
கானுற்றகளிற்றின்னுரிபோர்க்கவல்லீர்சொலீ
ரூனுற்றதலைகொண்டுலகொக்கவுழன்றதே. (அ)

தீர்த்தநீர்வந்திழிபுனற்பொன்னியிற்பன்மலர்
வார்த்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
யார்த்துவந்தவரக்கனையன்றடர்த்தீர்சொலீர்
சீர்த்தவெண்டலையிற்பலிகொள்வதுஞ்சீர்மையே. (௯)

உரமனுஞ்சடையீர்விடையீருமதின்னருள்
வரமனும்பெறலாவதுமெந்தைவலஞ்சுழிப்
பிரமனுந்திருமாலுமளப்பரியீர்சொலீர்
சிரமெனுங்கலனிற்பலிவேண்டியசெல்வமே. (௧0)

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னவதுமெந்தைவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - நட்டராகம். (உ-ம. திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்

என்னபுண்ணியஞ்செய்தனைநெஞ்சமேயிருங்கடலவையத்து
முன்னைநீபுரிநல்வினைப்பயனிடைமுழுமணித்தரளங்கண்
மன்னுகாவிரிசூழ்திருவலஞ்சுழிவாணனைவாயாரப்
பன்னியாதரித்தேத்தியும்பாடியுமவழிபடுமதனுலே. (௧)

விண்டொழிந்தனநம்முடைவல்வினைவிரிகடலவருநஞ்ச
முண்டிறைஞ்சுவானவர்தமைத்தாங்கியவிறைவனையுலகத்தில
வண்டுவார்குழன்மங்கையோர்பங்கனைவலஞ்சுழியிடமாகக
கொண்டநாதன்மெய்த்தொழிலபுரிதொண்டரோடினிதிருந்தமையாலே.

திருந்தலார்புரந்தீயெழச்செறுவனவிறலின்கணடியாரைப்
பரிந்துகாப்பனபத்தியில்வருவனமத்தமாமபிணிநோயகரு
மருந்துமாவனமந்திரமாவனவலஞ்சுழியிடமாக
விருந்தநாயகனிமையவரேத்தியவிணையடித்தலந்தானே. (௩)

கறைகொள்கண்டத்தர்காய்கதிர்நிறத்தினரறத்திறமுனிவர்க்கன்
றிறைவராலிடைநீழலிலிருந்துகந்தினிதருள்பெருமானுர்
மறைகளோதுவர்வருபுனலவலஞ்சுழியிடமகிழ்ந்தருங்கானத்
தறைகழல்சிலம்பார்க்கநின்றாடியவற்புதமறியோமே. (௪)

மண்ணர்நீரர்விண்காற்றினராற்றலாமெரியுருவொருபாகம்
பெண்ணராணெனத்தெரிவருவடிவினர்பெருங்கடற்பவளம்போல்
வண்ணராகிலும்வலஞ்சுழிபிரிகிலார்பரிபவர்மனம்புக்க
வெண்ணராகிலுமெனைப்பலவியம்புவரிணையடிதொழுவாரே. (௫)

ஒருவராலுவமிப்பதையரியதோர்மேனியர்மடமாத
ரிருவராதரிப்பார்பலபூதமும்பேய்களுமடையாள
மருவராததோர்வெண்டலைகைப்பிடித்தகந்தொறும்பலிக்கென்று
வருவரேலவர்வலஞ்சுழியடிகளேவரிவளைகவர்ந்தாரே. (௬)

குன்றியூர்குடமூக்கிடம்வலம்புரங்குலவியநெய்த்தான
மென்றிவ்வூர்களிலோமென்றுமியம்புவரிமையவர்பணிகேட்பா
ரன்றியூர்தமக்குள்ளனவறிகிலோம்வலஞ்சுழியரனார்பாற்
சென்றவூர்தனிற்றலைப்படலாமென்றுசேயிழைதளர்வாமே. (எ)

குயிலினேர்மொழிககொடியிடைவெருவுறக்குலவரைப்*பார்ப்பாய
கயிலையைப்பிடித்தெடுத்தவன்கதிர்முடிதோளிருபதுமூன்றி
மயிலினேரனசாயலோடமர்ந்தவன்வலஞ்சுழியெம்மானைப்
பயிலவல்லவர்பரகதிகாண்பவரலலவர்காணாரே. (அ)

அழலதோம்பியவலர்மிசையன்னலுமரவணைத்துயின்றானுங்
கழலுஞ்சென்னியுங்காண்பரிதாயவர்மாண்பமர்தடக்கையின்
மழலைவீணையர்மகிழ்திருவலஞ்சுழிவலஙகொடுபாதத்தாற்
சுழலுமாந்தர்கடொல்வினையதனொடுதுன்பங்கள்களைவாரே. (௯)

அறிவிலாதவன்சமணர்கள்சாக்கியர்தவம்புரிந்தவஞ்செய்வார்
நெறியலாதனகூறுவர்மற்றவைதேறன்மின்மாறாநீர்
மறியுலாந்திரைக்காவிரிவலஞ்சுழிமருவியபெருமானைப்
பிறிவிலாதவர்பெறுகதிபேசிடிலளவறுப்பொணாதே. (௧௦)

மாதொர்கூறனைவலஞசுழிமருவியமருந்தினைவயற்காழி
நாதன்வேதியன்ஞானசமபநதனவாயநவிறறியதமிழ்மாலை
யாதரித்திசைகறறுவலலார்சொலககேடடுகந்தவர்தம்மை
வாதியாவினைமறுமைககுமிமமைககும்வருததம்வந்தடையாவே. (௧௧)

திருசசிற்றமபலம.

---

பண - பழமபஞ்சுரம் (௩-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பள்ளமதாயபடர்சடைமேற்பயிலுந்திரைககங்கை
வெள்ளமதாரவிருமபிநின்றவிகிர்தன்விடையேறும்
வள்ளலவலஞ்சுழிவாணனென்றுமருவிநினைந்தேத்தி
யுள்ளமுருகவுணருமின்களூறுநோயடையாவே. (௧)

காரணிவெள்ளைமதியஞ்சூடிக்கமழ்புன்சடைதன்மேற்
றாரணிகொன்றையுந்தண்ணெருக்குநதழையுந்நுழைவித்து
வாரணிகொஙகைநலலாடனோடும்வலஞ்சுழிமேவியவ
ரூரணிபெய்பலிகொண்டுகந்தவுவகையறியோமே. (௨)

பொன்னியலுந்திருமேனிதன்மேற்புரிநூல்பொலிவித்து
மின்னியலுஞ்சடைதாழவேவுரிபோர்த்தரவாட
மன்னியமாமறையோர்கள்போற்றும்வலஞ்சுழிவாணவர்தம்மே
லுன்னியசிந்தையினீங்ககிலலார்க்குயர்வாமபிணிபோமே. (௩)

விடையொருபாலொருமால்விரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொடாழ்குழல்போற்றிசைப்ப
நடையொருபாலொருபால்சிலம்புநாளும்வலஞ்சுழிசே
ரடையொருபாலடையாதசெய்யுஞ்செய்கையறியோமே. (௪)

---

* "பரப்பாய" என்றும்பாடம்.

கையமரும்மழுநாகம்வீணைகலைமான்மறியேந்தி
மெய்யமரும்பொடிப்பூசிவீசுகுழையார்தருதோடும்
பையமரும்மரவாடவாடும்படர்சடையார்க்கிடமா
மையமரும்பொழில்சூழும்வேலிவலஞ்சுழிமாநகரே. (௫)

தண்டொடுசூலந்தழையவேந்தித்தையலொருபாகங்
கண்டிடுபெய்யபலிபேணிநாணார்கரியினுரிதோலர்
வண்டிடுமொய்யபொழில்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவர்
தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடர்பைத்தொடர்வோமே. (௬)

கல்லியலும்மலையங்கைநீங்கவளைத்துவளையாதார்
சொல்லியலும்மதின்மூன்றுஞ்செற்றசுடரானிடர்நீங்க
மல்லியலுந்திரடோளெம்மானிவலஞ்சுழிமாநகரே
புல்கியவேந்தனைப்புல்கியேத்தியிருப்பவர்புண்ணியரே. (௭)

வெஞ்சினவாளரக்கன்வரையைவிறலாலெடுத்தான்றோ
ளஞ்சுமொராறிருநான்குமொன்றுமடர்த்தாரழகாய
நஞ்சிருள்கண்டத்துநாதரென்றுநணுகுமிடம்போலு
மஞ்சுலவும்பொழில்வண்டுகெண்டும்வலஞ்சுழிமாநகரே. (௮)

ஏடியனான்முகன்சீர்நெடுமாலெனநின்றவர்காணார்
கூடியகூரெரியாய்நிமிர்ந்தகுழகருலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயவெம்மான்
பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. (௯)

குண்டரும்புத்தருங்கூறையின்றிக்குழுவாருரைநீத்துத்
தொண்டருந்தன்றொழில்பேணநின்றகழலானழலாடி
வண்டமரும்பொழின்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெம்மான்
பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. (௧௦)

வாழியெம்மானெனக்கெந்தைமேயவலஞ்சுழிமாநகர்மேற்
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னகருத்தின்றமிழ்மாலை
யாழியிவையகத்தேத்தவல்லாரவர்க்குந்தமர்க்கு
மூழியொருபெருமின்பமோர்க்குமுருவுமுயர்வாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

ஓதமார்கடலின்விடமுண்டவர்
பூதநாயகர்பொற்கயிலைக்கிறை
மாதொர்பாகன்வலஞ்சுழியீசனைப்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௧)

கயிலைநாதன்கறுத்தவர்முப்புர
மெயில்கடயெழவெல்லவல்லவித்தகன்
மயில்களாலும்வலஞ்சுழியீசனைப்
பயில்கிலார்சிலர்பாவிதொழும்பரே. (௨)

இளையகாலமெம்மானையடைகிலாத்
துளையிலாச்செவித்தொண்டர்காணுமுடல்
வளையுங்காலம்வலஞ்சுழியீசனைக்
களைகணாககருதிநீருய்ம்மினே. (௩)

நறைகொள்பூம்புனல்கொண்டெழுமாணிக்காய்க்
குறைவிலாகக்கொடுங்கூற்றுதைத்திட்டவன்
மறைகொணாவன்வலஞ்சுழிமேவிய
விறைவனையினியென்றுகொலகாண்பதே (௪)

விண்டவர்புரமூன்றுமெரிகொளத்
திண்டிறற்சிலையாலெரிசெய்தவன்
வண்டுபண்முரலுந்தண்வலஞ்சுழி
யண்டனுக்கடிமைத்திறத்தாவனே. (௫)

படங்கொள்பாம்பொடுபான்மதியஞ்சடை
யடங்கவாழவல்லானும்பாதம்பிரான்
மடந்தைபாகன்வலஞ்சுழியானடி
யடைந்தவர்க்கடிமைத்திறத்தாவனே. (௬)

நாக்கொண்டுபரவும்மடியார்வினை
போகக்கவல்லபுரிசடைப்புண்ணியன்
மாக்கொள்சோலைவலஞ்சுழியீசன்ற
னேக்கொளப்புரமூன்றெரியானவே. (௭)

தேடுவார்பிரமன்றிருமாலவ
ராடுபாதமவருமறிகிலார்
மாடவீதிவலஞ்சுழியீசனைத்
தேடுவானுறுகின்றதென்சிந்தையே (௮)

கண்பனிக்குங்கைகூப்புங்கண்மூன்றுடை
நண்பனுக்கெனைநான்கொடுப்பேனெனும்
வண்பொனித்தென்வலஞ்சுழிமேவிய
பண்பனிப்பொனைச்செய்தபரிசிதே. (௯)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
நலங்கொள்பாதத்தொருவிரலூன்றினான்
மலங்குபாய்வயல்சூழ்ந்தவலஞ்சுழி
வலங்கொள்வாரடியென்றலைமேலவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அலையார் புனற்கங்கை நங்கைகாண வம்பலத்தி லருநட்ட மாடிவேடந், தொலையாத வென்றியார் நின்றியூரு நெடுங்களமு மேவிவிடையை மேல்கொண், டிலையார் படைகையி லேந்தியெங்கு மிமையவரு முமையவளு மிறைஞ்சி யேத்த, மலையார் திரளருவிப் பொன்னிசூழ்ந்த வலஞ்சுழியே புக்கிடமா மன்னினாரே (க)

திருச்சிற்றம்பலம்.

திருவலஞ்சுழித்திருப்பதிகம் - ரு.

சுவாமி - கற்பகநாதர்.
தேவி - பெரியநாயகி.

ஆ திருப்பதிகம் - சக.

# உசா. திருக்குடமூக்கு*.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பஞ்சமம் (ங-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மரவிரிபோதுமௌவன்மணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே (க)

ஓத்தரவங்களோடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களோடும்புகைகொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாகுழகன்குடமூக்கிடமா
வேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (உ)

மயில்பெடைபுல்கியாலமணன்மேன்மடவன்னமலகும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வியலொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (ங)

மிக்கரைதாழவேங்கையுரியார்த்துமையாள்வெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வெக்கரையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே. (ச)

* திருக்குடமூக்கு என்பது கும்பகோணம்.

வடிவுடைவாட்டடங்கண்ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
விடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௫)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடயங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (௬)

மலைமலிமங்கைபாகம்மகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையும்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. (௭)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடர்கண்டயராப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடரங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (௮)

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
கூரெரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
வீரிருகோவணத்தோடிருந்தானவனெம்மிறையே. (௯)

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணர்
நாடியதேவரெல்லாநயந்தேத்தியநன்னலத்தான்
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
வேடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே. (௧௦)

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரான்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருக்குறுந்தொகை (௫-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பூவணத்தவன்புண்ணியனண்ணியங்
காவணத்துடையானடியார்கலைத்
தீவணத்திருநீறுமெய்பூசியோர்
கோவணத்துடையான்குடமூக்கிலே. (௧)

பூத்தாடிக்கழியாதேநீர்பூமியீர்
தீத்தாடிதிறஞ்சிந்தையுள்வைம்மினோ
வேர்த்தாடுங்காளிதன்விசைதீர்கென்று
கூத்தாடியுறையுங்குடமூக்கிலே. (௨)

நங்கையாளுமையாளுறைநாதனு
ரங்கையாளொடறுபதந்தாழ்சடைக்
கங்கையாளவள்கன்னியெனப்படுங்
கொங்கையாளுறையுங்குடமூக்கிலே. (௩)

ஓதாநாவன்றிறத்தையுரைத்திரே
லேதானுமினிதாகுமியமுனேச்
சேதாவேறுடையானமர்ந்தவிடங்
கோதாவிரியுறையுங்குடமூக்கிலே. (௪)

நக்கரையனைநாடொறுநன்னெஞ்சே
வக்கரையுறைவானைவணங்குநீ
யக்கரையோடரவரையார்த்தவன்
கொக்கரையுடையான்குடமூக்கிலே. (௫)

துறவிநெஞ்சினராகியதொண்டர்காள்
பிறவிநீங்கப்பிதற்றுமின்பித்தராய்
மறவனாய்ப்பார்த்தன்மேற்கணைதொட்டவெங்
குறவனாருறையுங்குடமூக்கிலே. (௬)

தொண்டராகித்தொழுதுபணிமினோ
பண்டைவலவினைபற்றறவேண்டுவீர்
விண்டவர்புரமூன்றெரிமாதிரைக்
கொண்டவன்னுறையுங்குடமூக்கிலே. (எ)

காமியஞ்செய்துகாலங்கழியாதே
யோமியஞ்செய்தங்குள்ளத்துணர்மினோ
சாமியோடுசரச்சுவதியவள்
கோமியுமுறையுங்குடமூக்கிலே (அ)

சிரமஞ்செய்துசிவனுக்குப்பத்தராய்ப்
பரமனைப்பலநாளும்பயிற்றுமின்
பிரமன்மாலொடுமற்றொழிந்தார்கெலாங்
குரவனாருறையுங்குடமூக்கிலே (௯)

அன்றுதானரக்கன்கயிலாயத்தைச்
சென்றுதானெடுக்கவுமையஞ்சலு
நன்றுதானசகுநல்விரலூன்றிப்பின்
கொன்றுகீதங்கேட்டான்குட மூக்கிலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குடமூக்குத் திருப்பதிகம் - உ.

---

சுவாமி - கும்பேசர்.
தேவி - மங்களநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ருக.

---

# உஎ. திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம்.

## திருநாவுக்கரசுநாயனர்.

### திருத்தாண்டகம். (சுு-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

சொன்மலிந்தமறைநான்காறங்கமாகிச்
சொற்றபொருளுங்கடந்தசுடர்ச்சோதிபோலுங்
கன்மலிந்தகயிலைமலைவாணர்போலுங்
கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போலு
மன்மலிந்தமணிவரைத்திண்டோளர்போலு
மலையரையன்மடப்பாவைமணாளர்போலுங்
கொன்மலிந்தமூவிலைவேற்குழகர்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (க)

கானலிளங்கலிமறவனாகிப்பார்த்தன்
கருத்தளவுசெருத்தொகுதிகண்டார்போலு
மானலிளங்கடுவிடையொன்றேறியண்டத்
தப்பாலும்பலிதிரியுமழகர்போலுந்
தேனலிளந்துவலைமலிதென்றன்முன்றிற்
செழுமபொழிற்பூம்பாளைவிரிதேறனாறுங்
கூனலிளமபிறைதடவுகொடிகொண்மாடக
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (உ)

நீறலைத்ததிருவுருவுநெற்றிக்கண்ணு
நிலாவலைத்தபாம்பினொடுநிறைநீர்க்கங்கை
யாறலைத்தசடைமுடியுமம்பொற்றாளு
மடியவர்க்குக்காட்டியருள்புரிவார்போலு
மேறலைத்தநிமிர்கொடியொன்றுடையார்போலு
மேழுலகுந்தொழுகழலெம்மீசர்போலுங்
கூறலைத்தமலைமடந்தைகொழுநர்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௩)

தக்கனதுபெருவேள்விதகர்த்தார்போலுஞ்
சந்திரனைக்கலைகவர்ந்துதரித்தார்போலுஞ்
செக்கரொளிபவளவொளிமின்னின்சோதி
செழுஞ்சுடர்த்தீஞாயிறெனச்செய்யர்போலு
மிக்கதிறன்மறையவராலவிளங்குவேள்வி
மிகுபுகைபோய்விண்பொழியக்கழனியெல்லாங்
கொக்கினியகனிசிதறித்தேறலபாயுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (ச)

காலன்வலிதொலைத்தகழற்காலர்போலுங்
காமனெழிலழலவிழுங்கக்கண்டார்போலு
மாலதனிலறநால்வர்க்களித்தார்போலு
மானொடுபெண்ணலியல்லரானார்போலு

நீலவுருவயிரநிரைபச்சைசெம்பொ
னெடும்பளிங்கென்றறிவரியநிறத்தார்போலுங்
கோலமணிகொழித்திழியும்பொன்னிநன்னீர்க்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௫)

முடிகொண்டவளர்மதியுமூன்றாய்த்தோன்று
மூளைஞாயிறன்னமலர்க்கண்கண்மூன்று
மடிகொண்டசிலம்பொலியுமருளார்சோதி
யணிமுறுவற்செவ்வாயுமழகாய்த்தோன்றத்
துடிகொண்டவிடைமடவாள்பாகங்கொண்டு
சுடர்ச்சோதிக்கடற்செம்பொன்மலைபோலிந்நாட்
குடிகொண்டென்மனத்தகத்தேபுகுந்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௬)

காரிலங்குதிருவுருவத்தவற்குமற்றைக்
கமலத்திற்காரணற்குங்காட்சியொண்ணாச்
சீரிலங்குதழற்பிழம்பிற்சிவந்தார்போலுஞ்
சிலைவளைவித்தவுணர்புரஞ்சிதைத்தார்போலும்
பாரிலங்குபுனலனலகால்பரமாகாசம்
பரிதிமதிசுருதியுமாய்ப்பரந்தார்போலுங்
கூரிலங்குவேற்குமரன்றாதைபோலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௭)

பூச்சூழ்ந்தபொழிறழுவுபுகலூருள்ளார்
புறம்பயத்தாரறம்புரிபூந்துருத்திபுக்கு
மாச்சூழ்ந்தபழனத்தார்நெய்த்தானத்தார்
மாதவத்துவளர்சோற்றுத்துறையார்நல்ல
தீச்சூழ்ந்ததிகிரிதிருமாலுக்கீந்து
திருவானைக்காவிலோர்சிலந்திக்கந்நாட்
கோச்சோழர்குலத்தரசுகொடுத்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே (௮)

பொங்கரவர்புலித்தோலர்புராணர்மார்பிற்
பொறிகிளர்வெண்பூணநூற்புனிதர்போலுஞ்
சங்கரவக்கடன்முகடுதட்டவிட்டுச்
சதுரநடமாட்டுகந்தசைவர்போலு
மங்கரவத்திருவடிக்காட்பிழைப்பத்தந்தை
யந்தணனையறவெறிந்தார்க்கருளப்போதே
கொங்கரவச்சடைக்கொன்றைகொடுத்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௯)

ஏவியிடர்க்கடலிடைப்பட்டிளைக்கின்றேனை
யிப்பிறவியறுத்தேறவாங்கியாங்கே
கூவியமருலகனைத்துமுருவிப்போகக்
குறியிலறுகுணத்தாண்டுகொண்டார்போலுந்
தாவிமுதற்காவிரிநல்யமுனைகங்கை
சரசுவதிபொற்றாமரைபுட்கரணிதெண்ணீர்க்

கோவியொடுகுமரிவருதீர்த்தஞ்சூழ்ந்த
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (கo)

செறிகொண்டசிந்தைதனுட்டெளிந்துதேறித்
தித்திக்குஞ்சிவபவனத்தமுதம்போலு
நெறிகொண்டகுழலியுமைபாகமாக
நிறைந்தமரர்கணம்வணங்கநின்றார்போலு
மறிகொண்டகரதலத்தெம்மைந்தர்போலு
மதிலிலங்கைக்கோன்மலங்கவரைக்கீழிட்டுக்
குறிகொண்டவின்னிசைகேட்டுகந்தார்போலுங்
குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - மடந்தைபாகர்.
தேவி - பெரியநாயகி.

ஆ திருப்பதிகம் - ருஉ.

# உஅ. திருக்குடந்தைக்காரோணம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி (ஆ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

வாரார்கொங்கைமாதோர்பாகமாகவார்சடை
நீரார்கங்கைதிங்கள்சூடிநெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன்றேந்தியந்தண்குழகன்குடமூக்கிற்
காரார்கண்டத்தெண்டோளெந்தைகாரோணத்தாரே. (க)

முடியார்மன்னர்மடமானவிழியார்மூவுலகுமேத்தும்
படியார்பவளவாயார்பலருமபரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார்மாடவீதிக்குடந்தைக்குழகாருங்
கடியார்சோலைக்கலவமயிலார்காரோணத்தாரே. (உ)

மலையார்மங்கைபங்கரங்கையனலர்மடலாருங்
குலையார்தெங்குகுளிர்கொள்வாழையழகார்குடமூக்கின்
முலையாரணிபொன்முளைவெண்ணகையார்மூவாமதியினார்
கலையார்மொழியார்காதல்செய்யுங்காரோணத்தாரே. (௩)

போதார்புனல்சேர்கந்தமுந்திப்பொலியவழகாருந்
தாதார்பொழில்சூழ்ந்தெழிலார்புறவிலந்தண்குடமூக்கின்
மாதார்மங்கைபாகமாகமனைகள்பலிதேர்வார்
காதார்குழையர்காளகண்டர்காரோணத்தாரே. (௪)

பூவார்பொய்கையலர்தாமரைசெங்கழுநீர்புறமெல்லாந்
தேவார்சிந்தையந்தணாளர்சீராலடிபோற்றக்
கூவார்குயில்களாலுமயில்களின்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந்தழகார்குடந்தைக்காரோணத்தாரே. (ரு)

மூப்பூர்நலியநெதியார் விதியாய்முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தனிலேகண்டருளுங்குழகர் குடமூக்கிற்
றீர்ப்பாருடலிலடுநோயவலம்வினைகணலியாமைக
காப்பார்காலநடையாவண்ணங்காரோணத்தாரே. (௬)

ஊனார்தலைகையேந்தியுலகம்பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார்புலியினுடையார் கரியினுரிபோர்வை
தேனார்மொழியார்திளைத்தங்காடித்திகழுங்குடமூக்கிற்
கானார்நட்டமுடையார்செல்வக்காரோணத்தாரே. (௭)

வரையார்திரடோண்மதவாளரக்கனெடுப்பமலைசேரும்
விரையார்பாதநுதியாலூன்றநெரிந்துசிரம்பத்து
முரையார்கீதம்பாடக்கேட்டங்கொளிவாள்கொடுத்தாரும்
கரையார்பொன்னிசூழ்தண்குடந்தைக்காரோணத்தாரே. (௮)

கரியமாலுஞ்செய்யபூமேலயனுங்கழறிப்போ
யரியவண்டந்தேடிப்புக்குமளக்கவொண்கிலார்
தெரியவரியதேவர்செல்வந்திகழுங்குடமூக்கிற்
கரியகண்டர்காலகாலர்காரோணத்தாரே. (௯)

நாணாரமணர்நல்லதறியார்நாளுங்குரத்திகள்
பேணார்தூமெய்மாசுகழியார்பேசேலவரோடுஞ்
சேணார்மதிதோய்மாடமல்குசெல்வநெடுவீதிக
கோணாகரமொன்றுடையார்குடந்தைக்காரோணத்தாரே. (௧௦)

கருவார்பொழில்சூழ்ந்தழகார்செல்வக்காரோணத்தாரைத்
திருவார்செல்வமலகுசண்பைத்திகழுஞ்சம்பந்த
னுருவார்செஞ்சொன்மாலையிவைபத்துரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப்பிறப்பதறுத்துக்கவலைகழிவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - சோமநாதர்.
தேவி - தேனார்மொழியாள்.

ஆ திருப்பதிகம் - ௫௩.

## ௨௯. திருநாகேச்சுரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பொன்னேர்தருமேனியனேபுரியு
மின்னேர்சடையாய்விரைக்காவிரியி
னன்னீர்வயனாகேச்சுரநகரின்
மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே. (௧)

சிறவார்புரமூன்றெரியச்சிலையில்
லுறவார்கணையுய்த்தவனேயுயருந்
நறவார்பொழினாகேச்சுரநகரு
ளறவாவெனவல்வினையாசறுமே. (௨)

கல்லானிழன்மேயவனேகரும்பின
வில்லானெழிலவேவவிழித்தவனே
நல்லார்தொழுநாகேச்சுரநகரிற்
செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே (௩)

நகுவான்மதியோடரவும்புனலுந்
தகுவார்சடையின்முடியாயதவளந்
நகுவார்பொழினாகேச்சுரநகருட்
பகவாவெனவல்வினைபற்றறுமே (௪)

கலைமான்மறியுங்கனலுமமழுவும்
நிலையாகியகையினனேநிகழுந்
நலமாகியநாகேச்சுரநகருட்
டலைவாவெனவல்வினைதானறுமே. (௫)

குரையார்கழலாடநடங்குலவி
வரையான்மகளகாணமகிழ்ந்தவனே
நரையார்விடையேறுநாகேச்சுரத்தெ
மரைசேயெனநீங்குமருந்துயரே. (௬)

முடையார்தருவெண்டலைகொண்டுலகிற
கடையார்பலிகொண்டுழலகாரணனே
நடையார்தருநாகேச்சுரநகருட்
சடையாவெனவல்வினைதானறுமே. (எ)

ஓயாதவரக்கனொடிந்தலற
நீயாரருள்செய்துநிகழ்ந்தவனே
வாயாரவழுத்துவர்நாகேச்சுரத
தாயேயெனவல்வினைதானறுமே. (அ)

நெடியானொடுநான்முகனேடலுறச
சுடுமாலெரியாய்நிமிர்சோதியனே
நடுமாவயனாகேச்சுரநகரே
யிடமாவுறைவாயெனவின்புறுமே. (௯)

மலம்பாவியகையொடுமண்டையதுண்
கலம்பாவியர்கட்டுரைவிட்டுலகி
னலம்பாவியநாகேச்சுரநகருட்
சிலம்பாவெனத்தீவினைதேய்ந்தறுமே. (௧௦)

கலமார்கடல்சூழ்தருகாழியர்கோன்
றலமார்தருசெந்தமிழின்விரக
னலமார்தருநாகேச்சுரத்தானைச்
சொலன்மாலைகள்சொல்லநிலாவினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## பண்-செவ்வழி. (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தழைகொள்சந்துமகிலும்மயிற்பீலியுஞ்சாதியின்
பழமுமுந்திப்புனல்பாய்பழங்காவிரித்தென்கரை
நழுவில்வானோர்தொழநல்குசீர்மல்குநாகேச்சரத்
தழகர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கழகாகுமே. (௧)

பெண்ணொர்பாகமடையச்சடையிற்புனல்பேணிய
வண்ணமானபெருமான்மருவுமிடமண்ணுளார்
நண்ணிநாளுந்தொழுதேத்திடநாகேச்சரங்
கண்ணினாற்காணவல்லாரவர்கண்ணுடையார்களே. (௨)

குறவர்கொல்லைப்புனங்கொள்ளைகொண்டும்மணிகுலவுநீர்
பறவையாலப்பரக்கும்பழங்காவிரித்தென்கரை
நறவநாறும்பொழில்சூழ்ந்தழகாயநாகேச்சரத்
திறைவர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கிடரில்லையே. (௩)

கூசநோக்காதுமுன்சொன்னபொய்கொடுவினைகுற்றமு
நாசமாக்கும்மனத்தார்கள்வந்தாடுநாகேச்சரந்
தேசமாக்குந்திருக்கோயிலாகக்கொண்டசெல்வன்கழ
னேசமாகக்குந்திறத்தாரறத்தார்நெறிப்பாலரே. (௪)

வம்புநாறும்மலரும்மலைப்பண்டமுங்கொண்டுநீர்
பைம்பொன்வாரிக்கொழிக்கும்பழங்காவிரித்தென்கரை
நம்பர்நாளுமமர்கின்றநாகேச்சுரநண்ணுவா
ரும்பர்வானோர்தொழச்சென்றுடனாவதுமுண்மையே. (௫)

காளமேகந்நிறக்காலனோடந்தகன்கருடனு
நீளமாய்நின்றெய்தகாமனும்பட்டனவினைவுறி
ஞாளுந்நாதனமர்கின்றநாகேச்சுரநண்ணுவார்
கோளுநாளுந்தீயவேனுநன்காங்குறிக்கொண்மினே. (௬)

வேயுதிர்முத்தொடுமத்தயானைமருப்புமிராய்ப்
பாய்புனல்வந்தலைக்கும்பழங்காவிரித்தென்கரை
ஞாயிறுந்திங்களுங்கூடிவந்தாடுநாகேச்சர
மேயவன்றன்னடிபோற்றியென்பார்வினைவீடுமே. (௭)

இலங்கைவேந்தன்சிரம்பத்திரட்டியெழிற்றோள்களும்
மலங்கிவீழ்ம்மலையாலடர்த்தானிடமலகிய
நலங்கொள்சிந்தையவர்நாடொறுநண்ணுநாகேச்சரம்
வலங்கொள்சிந்தையுடையாரிடராயினமாயுமே. (௮)

கரியமாலும்மயனும்மடியும்முடிகாண்பொணா
வெரியதாகிந்நிமிர்ந்தானமரும்மிடமீண்டுகா
விரியினீர்வந்தலைக்குங்கரைமேவுநாகேச்சரம்
பிரிவிலாதவ்வடியார்கள்வானிற்பிரியார்களே. (௯)

தட்டிடுக்கியுறிதூக்கியகையினர்சாக்கியர்
கட்டுரைக்கும்மொழிகொள்ளலும்வெள்ளிலங்காட்டிடை
நட்டிருட்கணணடமாடியநாதனாகேச்சுர
மட்டிருக்கும்மலரிட்டடிவீழ்வதுவாய்மையே. (௧௦)

கந்தநாறும்புனற்காவிரித்தென்கரைக்கண்ணுத
னந்திசேருந்திருநாகேச்சுரத்தின்மேன்ஞானசம்
பந்தனுவிறபனுவலிவைபத்தும்வல்லார்கள்போ
யெந்தையீசனிருக்குமுலகெய்தவல்லார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருநேரிசை (ச-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கச்சைசேரரவர்போலுங்கறையணிமிடற்றர்போலும்
பிச்சைகொண்டுண்பர்போலும்பேயருளாளர்போலு
மிச்சையானமலர்கடூவியிரவொடுபகலுந்தம்மை
நச்சுவார்க்கினியர்போலுநாகவீச்சுரவனாரே (க)

வேடுறுவேடராகிவிசயனோடெய்தார்போலுங்
காடுறுபதியர்போலுங்கடிபுனற்கங்கைநங்கை
சேடெறிசடையர்போலுந்தீவினைதீர்க்கவல்ல
நாடறிபுகழர்போலுநாகவீச்சுரவனாரே. (உ)

கற்றுணைவில்லதாகக்கடியரண்செற்றார்போலும்
பொற்றுணைப்பாதர்போலும்புலியதளுடையர்போலுஞ்
சொற்றுணைமாலைகொண்டுதொழுதெழுவார்கட்கெல்லா
நற்றுணையாவர்போலுநாகவீச்சுரவனாரே. (ங)

கொம்பனாள்பாகர்போலுங்கொடியுடைவிடையர்போலுஞ்
செம்பொனாருருவர்போலுந்திகழ்திருநீற்றர்போலு
மெம்பிரானெம்மையாளுமிறைவனேயென்றுதம்மை
நம்புவார்க்கன்பர்போலுநாகவீச்சுரவனாரே. (ச)

கடகரியுரியர்போலுங்கனமழுவாளர்போலும்
படவரவரையர்போலும்பாரிடம்பலவுங்கூடிக்
குடமுடைமுழவமார்ப்பக்கூளிகள்பாடநாளு
நடநவிலடிகள்போலுநாகவீச்சுரவனாரே. (ரு)

பிறையுறுசடையர்போலும்பெண்ணொருபாகர்போலு
மறையுறுமொழியர்போலுமான்மறையவன்றனோடு
முறைமுறையமரர்கூடிமுடிகளாலவணங்கநின்ற
நறவமர்கழலர்போலுநாகவீச்சுரவனாரே. (சு)

வஞ்சகர்க்கரியர்போலுமருவினோர்க்கெளியர்போலுங்
குஞ்சரத்துரியர்போலுங்கூற்றினைக்குமைப்பர்போலும்
விஞ்சையரிரியவன்றுவேலைவாய்வந்தெழுந்த
நஞ்சணிமிடற்றர்போலுநாகவீச்சுரவனாரே (எ)

போகமார்மோடிகொங்கைபுணர்தருபுனிதர்போலும்
வேகமார்விடையர்போலும்வெண்பொடியாடுமேனிப்
பாகமாலுடையர்போலும்பருப்பதவில்லர்போலு
நாகநாணுடையர்போலுநாகவீச்சுரவனாரே. (அ)

கொக்கரை தாளம்வீணைபாணிசெய்குழகர்போலு
மக்கரையணிவர்போலுமைந்தலையரவர்போலும்
வக்கரையமர்வர்போலுமாதரைமையல்செயயு
நக்கரையுருவர்போலுநாகவீச்சுரவனாரே. (௯)

வின்மையாற்புரங்கண்மூன்றும்வெந்தழலவிரித்தார்போலுந்
தன்மையாலமரர்தங்கடலைவர்க்குந்தலைவர்போலும்
வன்மையானமலையெடுத்தான்வலியினைத்தொலைவித்தாங்கே
நன்மையாலளிப்பார்போலுநாகவீச்சுரவனாரே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. (ரு-ம திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

நல்லர்நல்லதோர்நாகங்கொண்டாட்டுவா
வல்லர்வல்வினைதீர்க்குமருந்துகள்
பல்லிலோடுகையேந்திப்பலிதிரி
செல்வர்போற்றிருநாகேச்சுரவரே (௧)

நாவலம்பெருந்தீவினில்வாழ்பவர்
மேவிவந்துவணங்கிவினையொடும்
பாவமாயினபற்றறுவித்திடுந்
தேவர்போற்றிருநாகேச்சுரவரே. (௨)

ஓதமார்கடலின்விடமுண்டவ
ராதியாரயனோடமரர்க்கெலா
மாதொர்கூறர்மழுவலனேந்திய
நாதர்போற்றிருநாகேச்சுரவரே. (௩)

சந்திரனொடுசூரியர்தாமுடன்
வந்துசீர்வழிபாடுகள்செய்தபின்
னைந்தலையரவின்பணிகொண்டருண்
மைந்தர்போன்மணிநாகேச்சுரவரே. (௪)

பனைபொர்நாளிகழ்வான்பழித்தககனார்
கொண்டவேள்விக்குமன்னையதுகெடத்
தண்டமாவிதாதாவின்றலைகொண்ட
செண்டர்போற்றிருநாகேச்சுரவரே. (௫)

வம்புபூங்குழன்மாதுமறுகவோர்
கம்பயானையுரித்தகரத்தினர்
செம்பொனாரிதழிம்மலர்ச்செஞ்சடை
நம்பர்போற்றிருநாகேச்சுரவரே. (௬)

மானையேந்தியகையினர்மையறு
ஞானச்சோதியராதியர்நாமந்தா
னைவஞ்செழுத்தோதவந்தண்ணிக்குந
தேனர்போற்றிருநாகேச்சுரவரே. (௭)

கழல்கொள்காலினர்காலனைக்காய்ந்தவர்
தழல்கொண்மேனியர்சாந்தவெண்ணீறணி
யழகராணிழற்கீழறமோதிய
குழகர்போற்குளிர்நாகேச்சுரவரே. (அ)

வட்டமாமதின்மூன்றுடன்வல்லரண்
சுட்டசெய்கையராகிலுஞ்சூழ்ந்தவர்
குட்டவல்வினைதீர்த்துகக்குளிர்விக்குஞ்
சிட்டர்போறதிருநாகேச்சுரவரே (கூ)

தூர்த்தன்றோண்முடிதாளுந்தொலையவே
சேர்த்தினார்திருப்பாதத்தொருவிர
லார்த்துவந்துலகத்தவராடிடுந்
தீர்த்தர்போறதிருநாகேச்சுரவரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். (சு-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

தாயவனைவானோர்க்குமேனோருக்குந்
தலையவனைமலையவனையுலகமெல்லா
மாயவனைச்சேயவனையணியான்றன்னை
யழலவனைநிழலவனையறியவொண்ணா
மாயவனைமறையவனைமறையோர்தங்கண்
மந்திரனைத்தந்திரனைவளராநின்ற
தீயவனைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (க)

உரித்தானைமதவேழந்தன்னைமின்னொ
ரொளிமுடியெம்பெருமானையுமையோர்பாகந்
தரித்தானைத்தரியலர்தம்புரமெய்தானைத்
தன்னடைந்தார்தம்வினைநோய்பாவமெல்லா
மரித்தானையாலதன்கீழிருந்துநால்வர்க்
கறம்பொருள்வீடின்பமாறங்கம்வேதந்
தெரித்தானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (உ)

காரானையுரிபோர்த்தகடவுடன்னைக்
காதலித்துநினையாதகயவர்நெஞ்சில்
வாரானைமதிப்பவர்தம்மனத்துளானை
மற்றொருவர்தன்னொப்பாரொப்பிலாத
வேரானையிமையவர்தம்பெருமான்றன்னை
யியல்பாகியுலகெலாநிறைந்துமிக்க
சீரானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (ங)

தலையானையெவ்வுலகுந்தானானைத்
தன்னுருவம்யாவர்க்குமறியவொண்ணா

நிலையானைநேசர்க்குநேசன்றன்னை
நீள்வானமுகடதனைத்தாங்கிநின்ற
மலையானைவரியரவுநாணக்கோத்து
வல்லசுரர் புரமூன்றுமடியவெய்த
சிலையானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதாரநன்னெறிககட்சேராதாரே. (௪)

மெய்யானைத்தன்பக்கல்விரும்புவார்க்கு
விரும்பாதவரும்பாவியவர்கட்கென்றும்
பொய்யானைப்புயங்காட்டிலாடலானைப்
பொன்பொலிந்தசடையானைப்பொடிகொள்பூதிப்
பையானைப்பையரவமசைத்தான்றன்னைப்
பரந்தானைப்பவளமாலவரைபோன்மேனிச்
செய்யானைத்திருநாகேசசுரத்துளானைச்
சேராதார்நன்னெறிககடசேராதாரே. (௫)

துறந்தானையறம்புரியாத்துரிசர்தமமைத்
தோத்திரங்கள்பலசொல்லிவானோரேத்த
நிறைந்தானைநீர்நிலந்தீவெளிகாற்றாகி
நிற்பனவுநடப்பனவுமாயினானை
மறந்தானைத்தன்னினையாவஞ்சர்தம்மை
யஞ்செழுத்துமவாய்நவிலவல்லோர்கடகென்றுஞ்
சிறந்தானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிககட்சேராதாரே. (௬)

மறையானைமாலவிடையொன்றூர்தியானை
மாகடனஞ்சுண்டானைவானோர்தங்க
ளிறையானையென்பிறவித்துயர்தீர்பபானை
யின்னமுதைமன்னியசீரேகம்பததி
லுறைவானையொருவருமீஙகறியாவண்ண
மென்னுள்ளத்துள்ளேயொளித்துவைத்த
சிறையானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிககட்சேராதாரே. (௭)

எய்தானைப்புரமூன்றுமிமைக்கும்போதி
லிருவிசும்பிலவருபுனலைத்திருவார்சென்னிப்
பெய்தானைப்பிறப்பிலியையறத்தினிலலாப்
பிரமன்றன்சிரமொன்றைககரமொன்றினாற்
கொய்தானைக்கூத்தாடவல்லான்றன்னைக
குறியிலாக்கொடியேனையடியேனாகச்
செய்தானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (௮)

அளியானையண்ணிக்குமன்பன்றன்னை
வான்பயிரையப்பயிரின்வாட்டந்தீர்க்குந்
துளியானையயன்மாலுந்தேடிக்காணச்
சுடரானைத்துரிசறத்தொண்டுபட்டார்க்

தெளியானையாவர்க்குமரியான்றன்னை
யின்கரும்பின்றன்னுள்ளாலிருந்ததேறந்
றெளியானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (கூ)

சீர்த்தானையுலகேழுஞ்சிறந்துபோற்றச்
சிறந்தானைநிறைந்தோங்குசெல்வன்றன்னைப்
பார்த்தானைமதனவேள்பொடியாய்வீழப்
பனிமதியஞ்சடையானைப்புநிதன்றன்னை
யார்த்தோடிமலையெடுத்தவரக்கனஞ்ச
வருவிரலாலடர்த்தானையடைந்தோர்பாவந்
தீர்த்தானைத்திருநாகேச்சுரத்துளானைச்
சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - பஞ்சமம். (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பிறையணிவாணுதலாளுமையாளவள்பேழ்கணிக்க
நிறையணிநெஞ்சனுங்கநீலமால்விடமுண்டதென்னே
குறையணிகொல்லைமுல்லையளைந்துகுளிர்மாதவிமேற்
சிறையணிவண்டுகள்சேர்திருநாகேச்சுரத்தானே. (க)

அருந்தவமாமுனிவர்க்கருளாகியொராலதன்கீ
ழிருந்தறமேபுரிதற்கியல்பாகியதென்னைகொலாங்
குருந்தயலேகுரவம்மரவின்னெயிறேற்றருமபச்
செருந்திசெம்பொன்மலருந்திருநாகேச்சுரத்தானே. (உ)

பாலனதாருயிர்மேற்பரியாதுபகைத்தெழுந்த
காலனைவீடுவித்துக்கருத்தாகியதென்னைகொலாங்
கோலமலர்க்குவளைக்கழுநீர்வயல்சூழ்கிடங்கிற்
சேலொடுவாளைகள்பாய்திருநாகேச்சுரத்தானே. (ங)

குன்றமலைக்குமரிகொடியேரிடையாள்வெருவ
வென்றிமதகரியின்னுரிபோர்த்ததுமென்னைகொலா
முன்றிலிளங்கமுகின்முதுபாளைமதுவளைந்து
தென்றல்புகுந்துலவுந்திருநாகேச்சுரத்தானே. (ச)

அரைவிரிகோவணத்தோடரவார்த்தொருநான்மறைநா
லுரைபெருகவுரைத்தன்றுகந்தருள்செய்ததென்னே
வரைதருமாமணியும்வரைச்சந்தகிலோடுமுந்தித்
திரைபொருதண்பழனத்திருநாகேச்சுரத்தானே. (ரு)

தங்கியமாதவத்தின்றழல்வேள்வியினின்றெழுந்த
சிங்கமுநீள்புலியுஞ்செழுமால்கரியோடலறப்
பொங்கியபோர்புரிந்துபிளந்தீருரிபோர்த்ததென்னே
செங்கயல்பாய்கழனித்திருநாகேச்சுரத்தானே. (சு)

நின்றவிம்மாதவத்தையொழிப்பான்சென்றணைந்துமிகப
பொங்கியபூங்கணைவேள்பொடியாகவிழித்ததென்னே
பங்கயமாமலர்மேன்மதுவுண்டுவண்டேன்முரலச்
செங்கயல்பாய்வயல்சூழ்திருநாகேச்சுரத்தானே. (௭)

வரியரநாணதாகமாமேருவில்லதாக
வரியனமுப்புரங்கள்ளவையாரழலூட்டலென்னே
விரிதருமல்லிகையும்மலர்ச்சண்பகமுமளைந்து
திரிதருவண்டுபண்செய்திருநாகேச்சுரத்தானே. (௮)

அங்கியலயோகுதன்னையழிப்பான்சென்றணைந்துமிகப்
பொங்கியபூங்கணைவேள்பொடியாகவிழித்ததென்னே
பங்கயமாமலர்மேன்மதுவுண்டுபண்வண்டறையச
செங்கயனின்றுகளுந்திருநாகேச்சுரத்தானே (௯)

குண்டரைக்கூறையினறித்திரியுஞ்சமணசாக்கியப்பேய்
மிண்டரைக்கண்டதன்மைவிரவாகியதென்னைகொலோ
தொண்டிரைத்துவணங்கித்தொழில்பூண்டடியார்பரவுந்
தெண்டிரைத்தண்வயல்சூழ்திருநாகேச்சுரத்தானே. (௧௦)

கொங்கணைவண்டறற்றக்குயிலும்மயிலும்பயிலுந்
தெங்கணைபூம்பொழில்சூழ்திருநாகேச்சுரத்தானை
வங்கமலிகடல்சூழ்வயனாவலூரன்சொன்ன
பாங்கமில்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருநாகேச்சரத் திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - சம்பகாரணியர்.
தேவி - குன்றமுலைநாயகி.

---

ஆக திருப்பதிகம் - ௫.

---

## ௯0. திருவிடைமருதூர்.



### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - தக்கராகம். (௧ திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

ஓடேகலனுண்பதுமூரிடுபிச்சை
காடேயிடமாவதுகல்லானிழற்கீழ்
வாடாமுலைமங்கையுந்தானுமகிழ்ந்
தீடாவுறைகின்றவிடைமருதீதோ. (௧)

தடங்கொண்டதொர்தாமரைப்பொன்முடிதன்மேற்
குடங்கொண்டடியார்குளிர்நீர்சுமந்தாட்டப்
படங்கொண்டதொர்பாம்பரையார்த்தபரம
னிடங்கொண்டிருந்தான்றனிடைமருதீதோ. (௨)

வெண்கோவணங்கொண்டொருவெண்டலையேந்தி
யங்கோலவளையாளையொர்பாகமமர்ந்து
பொங்காவருகாவிரிக்கோலக்கரைமே
லெங்கோனுறைகின்றவிடைமருதீதோ (௩)

அந்தம்மறியாதவருங்கலமுந்திக்
கந்தங்கமழ்காவிரிக்கோலக்கரைமேல
வெந்தபொடிப்பூசியவேதமுதல்வ
னெந்தையுறைகின்றவிடைமருதீதோ (௪)

வாசங்கமழ்மாமலர்ச்சோலையில்வண்டே
தேசம்புகுந்தீண்டியொர்செம்மையுடைத்தாய்ப்
பூசம்புகுந்தாடிப்பொலிந்தழகாய
வீசனுறைகின்றவிடைமருதீதோ (௫)

வன்புற்றிளநாகமசைத்தழகாக
வென்பிற்பலமாலையும்பூண்டெருதேறி
யன்பிற்பிரியாதவளோடுமுடனா
யின்புற்றிருந்தான்றனிடைமருதீதோ. (௬)

தேக்குந்திமிலும்பலவுஞ்சுமந்துந்திப்
போக்கிப்புறம்பூசலடிப்பவருமா
லாக்குந்திரைக்காவிரிக்கோலக்கரைமே
லேற்கவிருந்தான்றனிடைமருதீதோ (௭)

பூவார்குழலாரகில்கொண்டுபுகைப்ப
வோவாதடியாரடியுள்குளிர்ந்தேத்த
வாவாவரக்கன்றனையாற்றலழித்த
வேவார்சிலையான்றனிடைமருதீதோ (௮)

முற்றாததொர்பான்மதிசூடுமுதல்வ
னற்றாமரையானொடுமாலயந்தேத்தப்
பொற்றோளியுந்தானும்பொலிந்தழகாக
வெற்றேயுறைகின்றவிடைமருதீதோ. (௯)

சிறுதேரருஞ்சிலசமணும்புறங்கூற
நெறியேபலபத்தர்கள்கைதொழுதேத்த
வெறியார்வருகாவிரிக்கோலக்கரைமே
லெறியார்மழுவாளனிடைமருதீதோ. (௧0)

கண்ணார்கமழ்காழியுண்ஞானசம்பந்த
னெண்ணார்புகழெந்தையிடைமருதின்மேற்
பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்கள்
விண்ணோருலகத்தினில்வீற்றிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருக்குக்குறள்.

பண் - குறிஞ்சி (ங திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தோடொர்காதினன்
பாடுமறையினன்
காடுபேணிநின்
றாடுமருதனே. (க)

கருதார்புரமெய்வ
ரொருதேயினிதூர்வர்
மருதேயிடமாகும
விருதாம்வினைதீர்ப்பே (உ)

எண்ணுமடியார்க
ளண்ணன்மருதரைப்
பண்ணின்மொழிசொல்ல
விண்ணுந்தமதாமே. (ங)

விடையார்சடைமேனி
யெரியாமருதரைத்
தரியாதேத்துவா
பெரியாருலகிலே. (ச)

பந்தவிடையேறு
மெந்தைமருதரைச்
சிந்தைசெயபவர்
புந்திநல்லோரே. (ரு)

கழலுஞ்சிலம்பார்க்கு
மெழிலார்மருதரைத்
தொழலேபேணுவார்க
குழலும்வினைபோமே. (சா)

பிறையார்சடையண்ணன்
மறையார்மருதரை
நிறையானினைபவர்
குறையாரினபமே. (எ)

எடுத்தான்புயந்தன்னை
யடுத்தார்மருதரைத்
தொடுத்தார்மலர்சூட்ட
விடுத்தார்வேட்கையே. (அ)

இருவர்கறிகரியாய
வுருவமருதரைப
பரவியேத்துவார்
மருவிவாழ்வரே. (கூ)

நின்றுண்சமண்டேர
ரொன்றுமருதரை
யன்றியுரைசொல்ல
நன்றுமொழியாரே. (கo)

கருதுசம்பந்தன்
மருதரடிபாடிப்
பெரிதுந்தமிழ்சொல்லப
பொருதவினைபோமே (கக)

திருச்சிற்றம்பலம்.

பண் - வியாழகுறிஞ்சி. (ங திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மருந்தவன்வானவர்தானவர்க்கும்
பெருந்தகைபிறவிநோய்தவுமாறு
னருந்தவமுனிவரொடாலிழற்கீ
ழிருந்தவன்வளநகரிடைமருதே. (க)

தோற்றவன்கேடவன்றுணைமுலையாள்
கூற்றவன்கொல்புலித்தோலசைத்த
நீற்றவனிறைபுனனீள்சடைமே
லேற்றவன்வளநகரிடைமருதே. (உ)

படையுடைமழுவினன்பால்வெண்ணீற்ற
னடைநவிலேற்றினன்ஞாலமெல்லா
முடைதலையிடுபலிகொண்டுழல்வா
னிடைமருதினிதுறையெம்மிறையே. (௩)

பணைமுலையுமையொருபங்கனொன்னார்
துணைமதின்மூன்றையுஞ்சுடரின்மூழ்கக
கணைதுரந்திடுதிறற்காலற்செற்ற
விணையிலிவளநகரிடைமருதே. (௪)

பொழிலவன்புயலவன்புயலியக்குந்
தொழிலவன்றுயரவன்றுயரகற்றுங்
கழலவன்கரியுரிபோர்த்துகந்த
வெழிலவன்வளநகரிடைமருதே. (௫)

நிறையவன்புனலொடுமதியம்வைத்த
பொறையவன்புகழவன்புகழநின்ற
மறையவன்மறிகடனஞ்சையுண்ட
விறையவன்வளநகரிடைமருதே. (௬)

நனிவளர்மதியொடுநாகம்வைத்த
பனிமலர்க்கொன்றையம்படர்சடையன்
முனிவரொடமரர்கண்முறைவணங்க
வினிதுறைவளநகரிடைமருதே. (௭)

தருக்கினவரக்கனதாளுந்தோளு
நெரித்தவனெடுங்கைமாமதகரியன்
றுரித்தவனொன்னலர்புரங்கண்மூன்று
மெரித்தவனவளநகரிடைமருதே. (௮)

பெரியவன்பெண்ணினொடாணுமானான்
வரியரவணைமறிகடற்றுயின்ற
கரியவனலரவன்காண்பரிய
வெரியவன்வளநகரிடைமருதே. (௯)

சிந்தையிலசமனொடுதேரர்சொன்ன
புந்தியிலுரையவைபொருள்கொளாதே
யந்தணரோத்தினொடரவமோவா
வெந்தைதன்வளநகரிடைமருதே. (௰)

இலைமலிபொழிலிடைமருதிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
பலமிகுதமிழிவைபத்தும்வல்லா
ருலகுறுபுகழினொடோங்குவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

பண் - வியாழக்குறிஞ்சி. (௨-ந் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நடைமருதிரிபுரமெரியுணநகைசெய்த
படைமருதழலெழமழுவலபகவன்
புடைமருதிளமுகில்வளமமர்பொதுளிய
விடைமருதடையநமிடர்கெடலெளிதே. (௧)

மழைநுழைமதியமொடழிதலைமடமஞ்ஞை
கழைநுழைபுனல்பெய்தகமழ்சடைமுடியன்
குழைநுழைதிகழ்செவியழகொடுமிளிர்வதோ
ரிழைநுழைபுரியணலிடமிடைமருதே (௨)

அருமையனெளிமையனழல்விடமிடறினன
கருமையினொளிபெறுகமழ்சடைமுடியன்
பெருமையன்சிறுமையன்பிணைபெணொடொருமைய
னிருமையுமுடையணலிடமிடைமருதே. (௩)

பொரிபடுமுதுகுறமுளிகளிபுடைபுல்கு
நரிவளர்சுடலையுணடமெனநவில்வோன்
வரிவளர்குளிர்மதியொளிபெறமிளிர்வதோ
ரெரிவளர்சடையணலிடமிடைமருதே. (௪)

வருநலமயிலனமடநடைமலைமகள்
பெருநலமுலையிணைபிணைசெய்தபெருமான்
செருநலமதிலெய்தசிவனுறைசெழுநக
ரிருநலபுகழ்மலகுமிடமிடைமருதே. (௫)

கலையுடைவிரிதுகில்கமழ்குழலகில்புகை
மலையுடைமடமகடுணையிடமுடையோன
விலையுடையணிகலனிலனெனமழுவினொ
டிலையுடைபடையவனிடமிடைமருதே. (௬)

வளமெனவளர்வனவரிமுரல்பறவைக
ளிளமணலணைகரையிசைசெயுமிடைமரு
துளமெனநினைபவரொலிகழலிணையடி
குளமணலுறமுழ்கிவழிபடலகுணமே. (௭)

மறையவனுலகவன்மதியவன்மதிபுல்கு
துறையவனெனவலவடியவர்துயரிலர்
கறையவன்மிடறதுகனல்செய்தகமழ்சடை
யிறையவனுறைதருமிடமிடைமருதே. (௮)

மருதிடைநடவியமணிவணர்பிரமரு
மிருதுடையகலமொடிகலினரினதெனக்
கருதிடலரியதொருருவொடுபெரியதோ
ரெருதுடையடிகடமிடமிடைமருதே. (௯)

துவருறுவிரிதுகிலுடையருமமணரு
மவருறுசிறுசொலைநயவன்மினிடுமணல்
கவருறுபுனலிடைமருதுகைதொழுதெழு
மவருறுவினைகெடலணுகுதல்குணமே. (க0)

தடமலிபுகலியர்தமிழ்கெழுவிரகின
னிடமலிபொழிலிடைமருதினையிசைசெய்த
படமலிதமிழிவைபரவவல்லவர்வினை
கெடமலிபுகழொடுகிளரொளியினரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

---

பண் - வியாழக்குறிஞ்சி. (௩-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

விரிதருபுலியுரிவிரவியவரையினர்
திரிதருமெயிலவைபுனைகணையினிலெய்த
வெரிதருசடையினரிடைமருதடைவுனல்
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (க)

மறிதிரைபடுகடலவிடமடைமிடறின
ரெறிதிரைகரைபொருமிடைமருதெனுமவர்
செறிதிரைநரையொடுசெலவிலருலகினிற்
பிறிதிரைபெறுமுடல்பெறுகுவதரிதே (உ)

சலசலசொரிபுனலசடையினர்மலைமக
ணிலவியவுடலினர்நிறைமறைமொழியின
ரிலரெனவிடுபலியவரிடைமருதினை
வலமிடவுடனலிவிலதுளவினையே. (ங)

விடையினர்வெளியதொர்தலைகலனெனநனி
கடைகடைதொறுபலியிடுகெனமுடுகுவ
ரிடைவிடலரியவரிடைமருதெனுநக
ருடையவரடியிணைதொழுவதெம்முயர்வே. (ச)

உரையருமுருவினருணர்வருவகையின
ரரைபொருபுலியதளுடையினரதன்மிசை
யிரைமருமரவினரிடைமருதெனவுள
முரைகளதுடையவர்புகழ்மிகவுளதே. (ரு)

ஒழுகியபுனன்மதியரவமொடுறைதரு
மழகியமுடியுடையடிகளதுறைகழ
லெழிலினருறையிடைமருதினைமலர்கொடு
தொழுதல்செய்தெழுமவர்துயருறவிலரே. (சா)

கலைமலிவிரலினர்கடியதொர்மழுவொடு
நிலையினர்சலமகளுலவியசடையினர்
மலைமகண்முலையிணைமருவியவடிவின
ரிலைமலிபடையவரிடமிடைமருதே. (௭)

செருவடையிலவலசெயலசெயத்திறலொடு
மருவரையினிலொருபதுமுடிநெரிதர
விருவகைவிரனிறியவரிடைமருதது
பரவுவருவினையொருவுதலபெரிதே. (௮)

அரியொடுமலரவனெனவிவரடிமுடி
தெரிவகையரியவர்திருவடிதொழுதெழ
வெரிதருமுருவர்தமிடைமருதடைவுறல
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (௯)

குடைமயிலினதழைமருவியவுருவின
ருடைமருதுவரினர்பலசொலவுறவிலை
யடைமருதிருவினர்தொழுதெழுகழலவ
ரிடைமருதெனமனநினைவதுமெழிலே (௧௦)

பொருகடலடைதருபுகலியர்தமிழொடு
விரகினன்விரிதருபொழிலிடைமருதினைப்
பரவியவொருபதுபயிலவல்லவரிடர்
விரவிலர்வினையொடுவியனுலகுறவே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரம். (௨-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பொங்குநூன்மார்பினீர்பூதப்படையினீர்பூங்கங்கை
தங்குசெஞ்சடையினீர்சாமவேதமோதினீ
ரெங்குமெழிலார்மறையோர்கண்முறையாலேத்தவிடைமருதின்
மங்குறோய்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நெற்றித்திருக்கணிகழ்வித்தீர்
போரார்ந்தவெண்மழுவொன்றுடையீர்பூதம்பாடலீ
ரேரார்ந்தமேகலையாள்பாகங்கொண்டீரிடைமருதிற்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே (௨)

அழன்மல்குமங்கையிலேந்திப்பூதமவைபாடச்
சுழன்மல்குமாடலீர்சுடுகாடல்லாற்கருதாதீ
ரெழின்மல்குநான்மறையோர்முறையாலேத்தவிடைமருதிற்
பொழின்மல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. (௩)

பொல்லாப்படுதலையொன்றேந்திப்புறங்காட்டாடலீர்
வில்லாற்புரமூன்றுமெரித்தீர்விடையார்கொடியினீ
ரெல்லாக்கணங்களுமுறையாலேத்தவிடைமருதிற்
செல்வாயகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௪)

வருந்தியமாதவத்தோர்வானோரேனோர்வந்தீண்டிப்
பொருந்தியதைப்பூசமாடியுலகம்பொலிவெய்தத்
திருந்தியநான்மறையோர்சீராலேத்தவிடைமருதிற்
பொருந்தியகோயிலேகோயிலாகப்புக்கீரே. (௫)

சலமல்குசெஞ்சடையீர்சாந்தநீறுபூசினீர்
வலமல்குவெண்மழுவொன்றேந்திமயானத்தாடலீ
ரிலமல்குநான்மறையோரினிதாவேத்தவிடைமருதிற்
புலமல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே (௬)

புனமல்குகொன்றையீர்புலியினதளீர்பொலிவார்ந்த
சினமல்குமால்விடையீர்செய்யீர்கரியகண்டத்தீ
ரினமல்குநான்மறையோரேத்துஞ்சீர்கொளிடைமருதிற்
கனமல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௭)

சிலையுய்த்தவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திறலரக்கன்
றலைபத்துந்திண்டோளுநெரித்தீர்தையல்பாகத்தீ
ரிலைமொய்த்ததண்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தவிடைமருதி
னலமொய்த்தகோயிலேகோயிலாகநயந்தீரே. (௮)

மறைமல்குநான்முகனுமாலுமறியாவண்ணத்தீர்
கறைமல்குகண்டத்தீர்கபாலமேந்துகையினீ
ரறைமல்குவண்டினங்களாலுஞ்சோலையிடைமருதி
னிறைமல்குகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே (௯)

சின்போர்வைச்சாக்கியருமாசுசேருஞ்சமணரும்
துன்பாயகட்டுரைகள்சொல்லியல்லலுற்றவே
யின்பாயவந்தணர்களேத்துமேர்கொளிடைமருதி
லன்பாயகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (௧௦)

நலமின்மணிமாடக்கழுமலத்தார்காவலவ
னலமல்வருமறையானற்றமிழ்ஞானசம்பந்த
னொப்பலியிடைமருதிலேத்துபாடலிவைபத்துஞ்
சொல்லுவார்க்குங்கேட்பார்க்குந்துயரமில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்

காடுடைச்சுடலைநீற்றர்கையில்வெண்டலையர்தையல
பாடுடைப்பூதஞ்சூழப்பரமனார்மருதவைப்பிற்
றோடுடைக்கைதையோடுசூழகிடங்கதனைச்சூழ்ந்த
வேடுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧)

முந்தையார்முந்தியுள்ளார்மூவர்க்குமுதல்வரானார்
சந்தியார்சந்தியுள்ளார்தவநெறிதரித்துநின்றார்
சிந்தையார்சிந்தையுள்ளார்சிவநெறியனைத்துமானா
ரெந்தையாரெம்பிரானாரிடைமருதிடங்கொண்டாரே. (௨)

காருடைக்கொன்றைமாலைக்கதிர்மதியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியாய
போருடைவிடையொன்றேறவல்லவர்பொன்னித்தென்பா
லேருடைக்கமலமோங்குமிடைமருதிடங்கொண்டாரே. (௩)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கணான்குமங்கம்
பண்ணினார்பண்ணின்மிக்கபாடலார்பாவந்தீர்க்குங்
கண்ணினார்கண்ணின்மிக்கநுதலினார்காமற்காய்ந்த
வெண்ணினாரெண்ணின்மிக்கவிடைமருதிடங்கொண்டாரே. (௪)

வேதங்கணான்குங்கொண்டுவிண்ணவர்பரவியேத்தப்
பூதங்கள்பாடியாடலுடையவன்புநிதனெந்தை
பாதங்கள்பரவிநின்றபத்தர்காடங்கண்மேலை
யேதங்கடீர்நின்றாரிடைமருதிடங்கொண்டாரே (௫)

பொறியரவரையிலார்த்துப்பூதங்கள்பலவுஞ்சூழ
முறிதருவன்னிகொன்றைமுதிர்சடைமூழ்கவைத்து
மறிதருகங்கைதங்கவைத்தவெரதிசையு
மெறிதருபுனல்கொள்வேலியிடைமருதிடங்கொண்டாரே (௬)

படரொளிசடையினுள்ளாற்பாயபுனலரவினோடு
சுடரொளிமதியம்வைத்துத்தூயவொளிதோன்றுமெந்தை
யடரொளிவிடையொன்றேறவல்லவரன்பர்தங்க
ளிடரவைகெடவுநின்றாரிடைமருதிடங்கொண்டாரே (௭)

கமழ்தருசடையினுள்ளாற்றங்கும்புனலரவினோடு
தவழ்தருமதியம்வைத்துத்தன்னடிபலருமேத்த
மழுவதுவலங்கையேந்திமாதொருபாகமாகி
யெழிறருபொழில்கள்சூழ்ந்தவிடைமருதிடங்கொண்டாரே (௮)

பொன்றிகழ்கொன்றைமாலைபுதுப்புனல்வன்னிமத்த
மின்றிகழ்சடையில்வைத்துமேதகத்தோன்றுகின்ற
வன்றவரளக்கலாகாவனலெரியாகிநீண்டா
ரின்றுடனுலகமேத்தவிடைமருதிடங்கொண்டாரே. (௯)

மலையுடன்விரவிநின்றுமதியிலாவரக்கனாகத்
தலையுடனடர்த்துமீண்டேதலைவனாவருள்கணல்கிச்
சிலையுடைமலையைவாங்கித்திரிபுரமூன்றுமெய்தா
ரிலையுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பாசமொன்றிலராய்ப்பலபத்தர்கள்
வாசநாண்மலர்கொண்டடிவைகலு
மீசனெம்பெருமானிடைமருதினிற்
பூசநாம்புகுதும்புனலாடவே. (௧)

மறையினான்மலர்கொண்டடிவானவர்
முறையினான்முனிகள்வழிபாடுசெ
யிறைவனெம்பெருமானிடைமருதினி
லுறையுமீசனையுள்குமெனுள்ளமே. (௨)

கொன்றைமாலையுங்கூவிளமத்தமுஞ்
சென்றுசேரத்திகழ்சடைவைத்தவ
னென்றுமெந்தைபிரானிடைமருதினை
நன்றுகைதொழுவார்வினைநாசமே. (௩)

இம்மைவானவர்செல்வம்விளைத்திடு
மம்மையேற்பிறவித்துயர்நீத்திடு
மெம்மையாளுமிடைமருதன்கழல்
செம்மையேதொழுவார்வினைசிந்துமே (௪)

வண்டணைந்தனவன்னியும்மத்தமுங்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனா
ரெண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே (௫)

ஏறதேறுமிடைமருதீசனார்
கூறுவார்வினைதீர்க்குங்குழகனா
ராறுசெஞ்சடைவைத்தவழகனார்
கூறியூறியுருகுமெனுள்ளமே (௬)

விண்ணுளார்மறவிரும்பப்படுபவர்
மண்ணுளார்மதிக்கப்படுபவ
ரெண்ணினார்பொழில்சூழிடை மருதினை
நண்ணினாரைநண்ணாவினைநாசமே. (௭)

வெந்தவெண்பொடிப்பூசுமகிழ்தலா
கந்தமாலைகள்சூடுங்கருத்தனா
ரெந்தையென்னிடைமருதினிலீசனைச்
சிந்தையானினைவார்வினைதேயுமே. (௮)

வேதமோதும்விரிசடை யண்ணலார்
பூதம்பாடநின்றாடும்புனிதனா
ரேதந்தீர்க்குமிடைமருதாவென்று
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௯)

கனியினுங்கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க்குழற்பாவைநல்லாரினுந்
தனிமுடிகவித்தாளுமரசினு
மினியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே. (௧௦)

முற்றிலாமதிசூடுமுதல்வனா
ரொற்றினார்மலையாலரக்கன்முடி
யெற்றினார்கொடியாரிடைமருதினைப
பற்றினாரைப்பற்றாவினைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பறையின்னோசையும்பாடலின்னோசையும்
மறையின்னோசையும்வைகுமயலெலா
மிறைவனெங்கள்பிரானிடைமருதினி
லுறையுமீசனையுள்குமெனனுள்ளமே (க)

மனத்துண்மாயனைமாசறுசோதியைப்
புனிற்றுப்பிள்ளைவெள்ளைமதிசூடியை
யெனக்குத்தாயையெம்மானிடைமருதினி
னினைத்திட்டூறிநிறைந்ததெனுள்ளமே. (உ)

வண்டணைந்தனவன்னியுமத்தமுங்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனை
யெண்டிசைக்குமிடைமருதாவெனா
விண்டுபோயறுமேலைவினைகளே (௩)

துணையிலாமையிற்றூங்கிருட்பேய்களோ
டணையலாவதெமக்கரிதேயெனு
மிணையிலாவிடைமாமருதில்லெழு
பணையிலாகமஞ்சொல்லுந்தன்பாங்கிக்கே. (௪)

மண்ணையுண்டமாலகானுமலரடி
விண்ணைவிண்டயன்காணன்வியன்முடி
மொண்ணைமாமருதாவென்றென்மொய்குழல்
பண்ணையாயமுந்தானும்பயிலுமே (ரு)

மங்கைகாணக்கொடார்மணமாலையைக்
கங்கைகாணக்கொடார்முடிக்கண்ணியை
நங்கைமீரிடைமருதர்நங்கைக்கே
யெங்குவாங்கிக்கொடுத்தாரிதழியே (சு,எ,அ,கூ,௰)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சூலப்படையுடையார்தாமேபோலுஞ்
சுடர்த்திங்கட்கண்ணியுடையார்போலு
மாலைமகிழ்ந்தொருபால்வைத்தார்போலு
மந்திரமுந்தந்திரமுமானார்போலும்
வேலைக்கடனஞ்சமுண்டார்போலு
மேல்வினைகடீர்க்கும்விகிர்தர்போலு.
மேலக்கமழ்குழலாள்பாகர்போலு
மிடைமருதுமேவியவீசனாரே. (க)

திருச்சிற்றம்பலம்.

காரார்கமழ்கொன்றைக்கண்ணிபோலுங்
காரானையீருரிவைபோர்த்தார்போலும்
பாரார்பரவபபடுவார்போலும்
பத்துப்பலவூழிபரந்தார்போலுஞ்
சீரால்வணங்கப்படுவார்போலுந்
திசையனைத்துமாய்மற்றுமானார்போலு
மேரார்கமழ்குழலாள்பாகர்போலு
மிடைமருதுமேவியவீசனாரே. (௨)

வேதங்கள்வேள்வியயந்தார்போலும்
விண்ணுலகுமண்ணுலகுமானார் போலும்
பூதங்களாயபுராணர் போலும்
புகழுவளரொளியாயநின்றார் போலும
பாதமபரவப்படுவார் போலும
பத்தர்களுககின்பமபயந்தார் போலு
மேதங்களானகடிவார் போலு
மிடைமருதுமேவியவீசனாரே (௩)

திண்குணததாாதேவர்கணங்களேதகித்
திசைவணங்கச்சேவடியைவைத்தார்போலும்
விண்குணத்தார் வேள்விசிதையநூறி
வியன்கொண்டன்மேற்செலவிகிர்தர் போலும
பண்குணத்தா பாடலோடாடலோவாப்
பரங்குன்றமேயபரமர் போலு
மெண்குணததாரெண்ணாயிருந்தார் போலு
மிடைமருதுமேவியவீசனாரே. (௪)

ஊகமுகிலுரிஞ்சுசோலைசூழ்ந்த
வுயாபொழிலணணாவிலுறைகின்றாரும்
பாகம்பணிமொழியாள்பங்கராகிப
படுவெண்டலையிறபலிகொளவாரு
மாகமுடைமுமமதிலுமெயதாா தாமு
மணிபொழில்சூழா ரூருறைகின்றாரு
மேகம்பமேயாருமெலலாமாவா
ரிடைமருதுமேவியவீசனாரே. (௫)

ஐயிரண்டுமாறொன்றுமானார் போலு
மறுமூன்றுநான்மூன்றுமானார்போலுஞ்
செய்வினைகணலவினைகளானார்போலுந்
திசையனைத்துமாய்நிறைந்தசெலவர்போலுங்
கொய்மலராங்கொன்றைச்சடையார்போலுங்
கூத்தாடவலலகுழகர்போலு
மெய்யவந்தகாமனையுங்காய்ந்தார்போலு
மிடைமருதுமேவியவீசனாரே. (௬)

பிரியாதகுணமுயிர்கட்கஞ்சோடஞ்சாய்ப்
பிரிவுடையகுணம்பேசிற்பத்தோடொன்றாய்

விரியாதகுணமொருகானுன்கேயென்பர்
விரிவிலாக்குணநாட்டத்தாரேயென்பர்
தெரிவரியகுணமஞ்சுஞ்சமிதையஞ்சும்
பதமஞ்சுங்கதியஞ்சுஞ்செப்பினரு
மெரியாயதாமரைமேலியங்கினரு
மிடைமருதுமேவியவீசனுரே. (எ)

தோலிற்பொலிந்தவுடையார்போலுஞ்
சுடர்வாயரவசைத்தசோதிபோலு
மாலமமுதாகவுண்டார்போலு
மடியார்கட்காரமுதமானார்போலுங்
காலனையுங்காய்ந்தகழலார்போலுங்
கயிலாயந்தம்மிடமாகக்கொண்டாரபோலு
மேலங்கமழ்குழலாள்பாகர்போலு
மிடைமருதுமேவியவீசனுரே. (அ)

பைந்தளிர்க்கொன்றையந்தாரார்போலும
படைக்கணாள்பாகமுடையார்போலு
மந்திவாய்வண்ணத்தழகர்போலு
மணிநீலகண்டமுடையார்போலும்
வந்தவரவுஞ்செலவுமாகி
மாறுதென்னுள்ளத்திருந்தார்போலு
மெந்தமிடர்தீர்க்கவல்லார்போலு
மிடைமருதுமேவியவீசனுரே. (கூ)

கொன்றையங்கூவிளமாலைதன்னைக
குளிர்சடைமேல்வைத்துகந்தகொள்கையாரு
நின்றவநங்கனைநீறுநோக்கி
நெருப்புருவாய்நின்றநிமலனரு
மன்றவரக்கனைவலறிவீழ
வருவரையைக்காலாலழுத்தினரு
மென்றுமிடுபிச்சையேற்றுண்பாரு
மிடைமருதுமேவியவீசனுரே. (௧௦)

திருச்சிற்றமபலம்.

---

திருத்தாண்டகம். (கூ-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

ஆறுசடைக்கணிவரங்கைத்திய
ரழகார்படையுடையரம்பொற்றேண்மே
னீறுதடவந்திடபமேறி
நித்தம்பலிகொள்வர்மொய்த்தபூதங்
கூறுங்குணமுடையர்கோவணத்தர்
கோடாலவேடத்தர்கொள்கைசொல்லி

னீறுநடுவுமுதலுமாவா
ரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (க)

மங்குன்மதிவைப்பர்வானநாடர்
மடமானிடமுடையர்மாதராளைப்
பங்கின்மிகவைப்பர்பாலபோனீற்றர்
பளிக்குவடம்புனைவர்பாவநாசர்
சங்குதிரையுகளுஞ்சாய்க்காட்டாள்வர்
சரிதைபலவுடையர்தன்மைசொல்லி
னெங்கும்பலிதிரிவரென்னுணீங்கா
ரிடைமருதுமேவியிடங்கொண்டாரே (உ)

ஆலநிழலிருப்பராகாயத்த
ரருவரையினுச்சியாரானூர்ப்பெண்ணர்
காலம்பலகழித்தார்கறைசேர்கண்டர்
கருத்துக்குஞ்சேயார்தாயகண்ணுதார்கருக்
கோலம்பலவுடையர்கொல்லையேற்றர்
கொழுமழுவர்கோழம்பமேயவீச
ரேலமணநாறுமீங்கோய்நீங்கா
ரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (ங)

தேசர்திறநினைவார்சிந்தைசேருஞ்
செல்வர்திருவாரூரென்றுமுள்ளார்
வாசமலரனையகண்யான்றோல்போர்ப்பர்
மருவுநகரியுரியார்வஞ்சக்கள்வர்
நேசரடைந்தார்க்கடையாதார்க்கு
நீடுருவர்காட்டங்கர்நினைவார்க்கென்று
மீசர்புனற்பொன்னித்தீர்த்தர்வாய்த்த
விடைமருதுமேவியிடங்கொண்டாரே. (ச)

கரப்பர்கரியமனக்கள்வர்க்குள்ளங்
கரவாதேதந்நினையகிற்பார்பாவந்
துரப்பார்தொடுகடலினஞ்சமுண்பர்
தூயமறைமொழியர்தீயாலொட்டி
நிரப்பர்புரமூன்றுநீறுசெய்வர்
நீள்சடையர்பாயவிடைகொண்டெங்குமைய
மிரப்பரெமையாள்வரென்னுணீங்கா
ரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (ரு)

கொடியாரிடபத்தர்கூத்துமாடிக்
குளிர்கொன்றைமேல்வைப்பர்கோலமார்ந்த
பொடியாருமேனியர்பூதிப்பையர்
புலித்தோலர்பொங்கரவர்பூணநூல
ரடியார்குடியாவரந்தணாள
ராகுதியின்மந்திரத்தாரமரர்போற்ற
விடியார்களிற்றுரியரெவரும்போற்ற
விடைமருதுமேவியிடங்கொண்டாரே. (சு)

பச்சைநிறமுடையர்பாலர்சாலப்
பழையர்பிழையெலாநீக்கியாள்வர்
கச்சைக்கதநாகம்பூண்டதோளர்
கலனென்றுகையேந்தியில்லந்தோறும்
பிச்சைகொளநுகர்வர்பெரியர்சாலப்
பிறங்குசடைமுடியார்பேணுந்தொண்ட
ரிச்சைமிகவறிவரென்றுமுள்ளா
ரிடைமருதுமேவியிடங்கொண்டாரே (எ)

காவார்சடைமுடியர்காரோணத்தர்
கயிலாயமன்னினார்பன்னும்இன்சொற்
பாவார்பொருளாளர்வாளார்கண்ணி
பயிலுந்திருவுருவம்பாகமேயார்
பூவார்புனலணவுபுன்கூர்வாழ்வர்
புரமூன்றுமொள்ளழலாக்காயத்தொட்ட
வேவார்சிலைமலையரெங்குந்தாமே
யிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (அ)

புரிந்தார்நடத்தின்கட்பூதநாதர்
பொழிலாரூர்புக்குறைவர்போந்துதம்மிற்
பிரிந்தாரகல்வாயபேயுந்தாமும்
பிரியாரொருநாளும்பேணுகாட்டி
லெரிந்தாரனலுகப்பரேழிலோசை
யெவ்விடத்துந்தாமேயென்றேத்துவார்பா
லிருந்தாரிமையவர்கள்போற்றவென்று
மிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (கூ)

விட்டிலங்குமாமழுவர்வேலைநஞ்சர்
விடங்கர்விரிபுனல்சூழ்வெண்காட்டுள்ளார்
மட்டிலங்குதார்மாலைமார்பினீற்றர்
மழபாடியுள்ளுறைவர்மாகாளத்தர்
சிட்டிலங்குவல்லரக்கர்கோனையன்று
செழுமுடியுந்தோளுநெரிந்தான்கடரக்காலா
லிட்டிராங்கிமற்றவனுக்கீந்தார்வென்றி
யிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (கய)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - தக்கேசி (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

---

கழுதைகுங்குமந்தான்சுமந்தெய்த்தாற்
கைப்பர்பாழ்புகமற்றதுபோலப்
பழுதுநானுழன்றுட்டமொறிப்
படுசுழித்தலைப்பட்டனனெந்தா

யழுதுநீயிருந்தென்செய்திமனனே
யங்கணாவரனேயெனமாட்டா
யிழுதையேனுக்கொருய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௧)

நரைப்புமூப்பொடுபிணிவரு*மின்னே
நன்றியில்வினையேதுணிந்தெய்த்தே
னரைத்தமஞ்சளதாவதையறிந்தே
னஞ்சினேனமனாரவர்தம்மை
யுரைப்பனுன்சேவடிசேர
வுணரும்வாழ்க்கையையொன்றறியாது
விரைப்பனேனுக்கொருய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௨)

புன்னுனைப்பனிவெங்கதிர்கண்டாற்
போலும்வாழ்க்கைபொருளிலைநாளு
மென்னெனக்கினியிற்றைக்குநாளை
யென்றிருந்திடருற்றனனெந்தாய்
முன்னமேயுன்சேவடிசேரா
மூர்க்கனாகிக்கழிந்தனகால
மின்னமென்றனக்குய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௩)

முந்திச்செய்வினையிம்மைக்கணலிய
மூர்க்கனாகிக்கழிந்தனகாலஞ்
சிந்தித்தென்மனம்வைக்கவுமாட்டேன்
சிறிச்சிறிதேயிரப்பார்கட்கொன்றீயே
னந்திவெண்பிறைசூடுமெம்மானே
யாரூர்மேவியமரர்கடலைவா
வெந்தைநீயெனக்குய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௪)

அழிப்பரைவர்புரவுடையார்க
ளைவரும்புரவாசறவாண்டு
கழித்துக்காற்பெய்துபோயினபின்னைக்
கடைமுறையுனக்கேபொறையானேன்
விழித்துக்கண்டனன்மெய்ப்பொருடன்னை
வேண்டேன்மானுடவாழ்க்கையிதாகி
இழித்தேனென்றனக்குய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௫)

குற்றந்தன்னொடுகுணம்பலபெருக்கிக்
கோலநுண்ணிடையாரொடுமயங்கிக்
கற்றிலேன்கலைகள்பலஞானங்
கடியவாயினகொடுமைகள்செய்தேன்
பற்றலாவதோர்பற்றுமற்றில்லேன்
பாவியேன்பலபாவங்கள்செய்தே

---

* "மென்னே" எனவும் பாடம்.

னொற்றுளேனெனக்குய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௬)

கொடுக்ககிற்றிலேனொண்பொருடன்னைக்
குற்றஞ்செற்றமிவைமுதலாக
விடுக்ககிற்றிலேன்வேட்கையுஞ்சினமும்
வேண்டிலைம்புலனென்வசமல்ல
நடுக்கமுற்றதோர்மூப்புவந்தெய்தி
நமன்றமர்நரகத்திடலஞ்சி
யிடுக்கணுற்றனனுய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௭)

ஐவகையரையரவராகி
யாட்சிகொண்டொருகாலவர்நீங்கா
ரவ்வகையவர்வேண்டுவதாகி
லவரவர்வழியொழுகிநான்வந்து
செய்வகையறியேன்சிவலோகா
தீவணாசிவனேயெரியாடீ
யெவ்வகையெனக்குய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௮)

ஏழைமானுடவின்பினைநோக்கி
யிளையவர்வலைப்பட்டிருந்தின்னம்
வாழைதான்பழுக்குநமக்கென்று
வஞ்சவல்வினையுள்வலைப்பட்டுக்
கூழைமாந்தர்தஞ்செல்கதிப்பக்கம்
போகமும்பொருளொன்றறியாத
வேழையேனுக்கோருய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே. (௯)

அரைக்குஞ்சந்தனத்தோடகிலுந்தி
யைவனஞ்சுமந்தார்த்திருபாலு
மிரைக்குங்காவிரித்தென்கரைதன்மே
லிடைமருதுறையெந்தைபிரானை
யுரைக்குமூரனொளிதிகழ்மாலை
யுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்க
ணரைப்புமூப்பொடுநடலையுமின்றி
நாதன்சேவடிநண்ணுவர்தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிடைமருதூர் திருப்பதிகம் - ௪௨.

---

சுவாமி - மருதப்பர்.
தேவி - நன்முலைநாயகி.

---

ஆ திருப்பதியம் - ௭௧.

---

# ௩௧. திருத்தென்குரங்காடுதுறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம் (௨-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பரவக்கெடும்வல்வினைபாரிடஞ்சூழ
விரவிற்புறங்காட்டிடைநின்றெரியாடி
யரவச்சடையந்தணன்மேயவழகார்
குரவப்பொழில்சூழ்குரங்காடுதுறையே (௧)

விண்டார்புரமூன்றுமெரித்தவிமல
னிண்டார்புறங்காட்டிடைநின்றெரியாடி
வண்டார்கருமென்குழன்மங்கையொர்பாகங்
கொண்டானகர்போல்குரங்காடுதுறையே (௨)

நிறைவில்புறங்காட்டிடைநேரிழையோடு
மிறைவில்லெரியான்மழுவேந்திநின்றாடி
மறையின்னொலிவானவர்தானவரேத்துங்
குறைவில்லவனூர்குரங்காடுதுறையே. (௩)

விழிக்குந்நுதன்மேலொருவெண்பிறைசூடித்
தெழிக்கும்புறங்காட்டிடைச்சேர்ந்தெரியாடிப்
பழிக்கும்பரிசேபலிதேர்ந்தவனூர்பொன்
கொழிக்கும்புனல்சூழ்குரங்காடுதுறையே. (௪)

நீறார்தருமேனியனெற்றியொர்கண்ண
னேறார்கொடியெம்மிறையீண்டெரியாடி
யாறார்சடையந்தணனாயிழையாளோர்
கூறானகர்போலகுரங்காடுதுறையே (௫)

நளிரும்மலர்க்கொன்றையுநாறுகரந்தைத்
துளிருஞ்சுலவிச்சுடுகாட்டெரியாடி
மிளிரும்மரவார்த்தவன்மேவியகோயில்
குளிரும்புனல்சூழ்குரங்காடுதுறையே. (௬)

பழகும்வினைதீர்ப்பவன்பார்ப்பதியோடும்
முழவங்குழன்மொந்தைமுழங்கெரியாடும்
மழகன்னயின்மூவிலைவேலவலனேந்துங்
குழகன்னகர்போலகுரங்காடுதுறையே. (௭)

வரையார்த்தெடுத்தவ்வரக்கன்வலியொல்க
நிரையார்விரலாலெரித்திட்டவனூராங்
கரையார்ந்திழிகாவிரிக்கோலக்கரைமேற்
குரையார்பொழில்சூழ்குரங்காடுதுறையே. (௮)

நெடியானொடுநான்முகனுங்கினைவொண்ணுப்
படியாகியபண்டங்கனின்றெரியாடி
செடியார்தலையேந்தியசெங்கண்வெள்ளேற்றினை
கொடியானகர்போல்குரங்காடுதுறையே. (௯)

துவராடையர்வேடமலாச்சமண்கையர்
கவர்வாய்மொழிகாதல்செய்யாதவனூரா
நவையார்மணிபொன்னகிலசந்தனமுந்திக
குவையார்கரைசேர்குரங்காடுதுறையே. (௧௦)

நல்லார்பயில்காழியுண்ஞானசம்பந்தன்
கொல்லேறுடையான்குரங்காடுதுறைமேற்
சொல்லார்தமிழ்மாலைபத்துந்தொழுதேத்த
வல்லாரவர்வானவரோடுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

இரங்காவன்மனத்தார்களியங்குமுப்
புரங்காவலழியப்பொடியாக்கினா
னரங்காடுந்தடநீர்ப்பொன்னித்தென்கரைக்
குரங்காடுதுறைக்கோலக்கபாலியே. (௧)

முத்தினைமணியைப்பவளத்தொளி
தொத்தினைச்சுடர்ச்சோதியைச்சோலைசூழ்
கொத்தலர்குரங்காடுதுறையுறை
யத்தனென்னவண்ணித்திடடிருந்ததே (௨)

குளிர்புனற்குரங்காடுதுறையனை
தளிர்நிறத்தையல்பங்கனைத்தண்மதி
யொளியனைநினைந்தேனுக்கெனுள்ளமும்
தெளிவினைத்தெளியத்தெளிந்திட்டதே. (௩)

மணவன்காண்மலையாணைமங்கலக
கணவன்காண்கலைஞானிகள்காதலென்
குணவன்காண்குரங்காடுதுறைதனி
லணவன்காணனபுசெய்யுமடியர்க்கே. (௪)

ஞாலத்தார்தொழுதேத்தியநன்மையன்
காலத்தானுயிர்போக்கியகாலினா
னீலத்தார்மிடற்றான்வெள்ளைநீறணி
கோலத்தான்குரங்காடுதுறையனே. (௫)

ஆட்டினான்முன்னமணரோடென்றனைப்
பாட்டினான்றனபொன்னடிக்கின்னிசை
வீட்டினான்வினைமெய்யடியாரொடுங்
கூட்டினான்குரங்காடுதுறையனே. (௬)

மாத்தன்றான்மறையார்முறையான்மறை
யோத்தன்றாரகன்றன்னுயிருண்டபெண்
போத்தன்றானவள்பொங்குசினந்தணி
கூத்தன்றான்குரங்காடுதுறையனே. (எ)

நாடிநந்தமராயினதொண்டர்கா
ளாடுமின்னழுமின்றொழுமின்னடி
பாடுமின்பரமன்பயிலும்மிடங்
கூடுமின்குரங்காடுதுறையையே. (அ)

தென்றனன்னெடுந்தேருடையானுடல்
பொன்றவெங்கனலபொங்கவிழித்தவ
னென்றவந்தகனையயிற்சூலத்தாற
கொன்றவன்குரங்காடுதுறையனே. (௯)

நற்றவஞ்செயதநாலவர்க்குநலலற
முற்றநன்மொழியாலருள்செய்தநற்
கொற்றவன்குரங்காடுதுறைதொழப்
பற்றுந்தீவினையாயினபாறுமே. (௧0)

கடுத்ததேராககன்கயிலைமமலை
யெடுததோடலையிற்றலறவயிர
லடுததலுமமவனிளனிசைகேட்டருள்
கொடுததவன்குரங்காடுதுறையனே (௧௧)

திருச்சிற்றமபலம.

தெனகுரங்காடுதுறைத திருபபதிகம் - உ.

சுவாமி - ஆபத்சகாயர்.
தேவி - பவளகொடியாள்.

ஆக திருபபதிகழ - எ௩.

# ௩உ. திருநீலக்குடி.



## திருநாவுக்கரசுநாயனர்.

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வைத்தமாடுமனைவியுமக்கணீர்
செத்தபோதுசெறியார்பிறிவதே
நித்தநீலக்குடியரனைநினை
சித்தமாகிற்சிவகதிசேர்திரே. (௧)

செய்யமேனியன்றேனொடுபாறயிர்
நெய்யதாடியநீலக்குடியரன்
மையலாய்மறவாமனத்தார்க்கெலாங்
கையிலாமலகககனியொக்குமே. (௨)

ஆற்றநீள்சடையாயிழையாளொரு
கூற்றன்மேனியிற்கோலமதாகிய
நீற்றனீலககுடியுடையானடி
போற்றினாரிடர்போக்கும்புநிதனே. (௩)

நாலுவேதியர்க்கின்னருணன்னிழ
லாலனாலநஞ்சுண்டுகண்டத்தமர்
நீலனீலக்குடியுறைநின்மலன
காலனாருயிர்போக்கியகாலனே. (௪)

நேசநீலககுடியரனேயெனா
நீசராய்நெடுமாலசெய்தமாயததா
லீசனோர்சரமெய்யவெரிந்துபோய்
நாசமானார்திரிபுரநாதரே. (௫)

கொன்றைசூடியைககுன்றமகளொடு
நின்றநீலககுடியரனேயெனீ
ரென்றும்வாழ்வுகநதேயிறுமாக்குநீர்
பொன்றுமபோதுநுமககறிவொணணுமே (௬)

கலலினோடெனைபபூட்டியமணகைய
ரொலலைநீர்புகநூககவென்வாககினு
னெல்லுநீள்வயனீலககுடியர
னலலநாமநவிற்றியுய்நதேனன்றே (௭)

அழகியோமிளையோமெனுமாசையா
லொழுகியாவியுடலவிடன்முன்னமே
நிழலதார்பொழினீலககுடியரன்
கழலகொள்சேவடிகைதொழுதுய்ம்மினே. (௮)

கற்றைச்செஞ்சடைக்காய்கதிர்வெண்டிங்கள்
பற்றிப்பாம்புடன்வைத்தபராபர
னெற்றிககணணுடைநீலககுடியரன்
சுற்றித்தேவர்தொழுங்கழற்சோதியே. (௯)

தருககிவெற்பதுதாங்கியவீங்குதோ
ளரககனுருடலாங்கோர்விரலினு
னெரித்துநீலககுடியரன்பின்னையு
மிரக்கமாயருள்செய்தனனென்பரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - நீலக்குடியீசர்.
தேவி - அழகம்மை.

ஆ திருப்பதிகம் - ௭௪.

# ௩௩. திருவைகன்மாடக்கோயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

துளமதியுடைமறிதோன்றுகையின
ரிளமதியணிசடையெந்தையாரிட
முளமதியுடையவர்வைகலோங்கிய
வளமதிதடவியமாடக்கோயிலே. (௧)

மெய்யகமிளிரும்வெண்ணூலர்வேதியர்
மையகண்மலைமகளோடும்வைகிடம்
வையகமகிழ்தரவைகன்மேற்றிசை
செய்யகண்வளவன்முன்செய்தகோயிலே. (௨)

கணியணிமலர்கொடுகாலைமாலையும்
பணியணிபவர்க்கருள்செய்தபான்மையர்
துணியணியுமையொடுதாமுந்தங்கிட
மணியணிகிளர்வைகன்மாடக்கோயிலே (௩)

கொம்பியல்கோதைமுன்னஞ்சக்குஞ்சரத்
தும்பியதுரிசெய்ததுங்கர்தங்கிடம்
வம்பியல்சோலைசூழ்வைகன்மேற்றிசைச்
செம்பியன்கோச்செங்கணான்செய்கோயிலே. (௪)

விடமடைமிடற்றினர்வேதநாவினர்
மடமொழிமலைமகளோடும்வைகிட
மடவனநடைபயில்வைகன்மாநகர்க்
குடதிசைநிலவியமாடக்கோயிலே (௫)

நிறைபுனல்பிறையொடுநிலவுநீள்சடை
யிறையவருறைவிடமிலங்குமூவெரி
மறையொடுவளர்வுசெய்வாணர்வைகலிற்
றிறையுடைநிறைசெல்வன்செய்தகோயிலே. (௬)

எரிசரம்வரிசிலைவளையவேவிமுன
றிரிபுரமெரிசெய்தசெல்வர்சேர்விடம்
வரிவளையவர்பயில்வைகன்மேற்றிசை
வருமுகிலணவியமாடக்கோயிலே. (௭)

மலையனவிருபதுதோளினான்வலி
தொலைவுசெய்தருள்செய்தசோதியாரிட
மலர்மலிபொழிலணிவைகல்வாழ்வர்கள்
வலம்வருமலையனமாடக்கோயிலே. (௮)

மாலவன்மலரவனேடிமால்கொள
மாலெரியாகியவரதர்வைகிட
மாலைகொடணிமறைவாணர்வைகலின்
மாலனமணியணிமாடகோயிலே. (௯)

கடுவுடைவாயினர்கஞ்சிவாயினர்
பிடருரைபேணிலார்பேணுகோயிலா
மடமுடையவர்பயில்வைகன்மாநகர்
வடமலையனையநன்மாடகோயிலே (௧0)

மைந்தனதிடமவைகன்மாடகோயிலைச்
சந்தமாபொழிலணிசணபைஞானசம்
பந்தனதமிழ்கெழுபாடலபததிவை
சிந்தைசெயபவர்சிவலோகஞ்சேர்வரே (௧௧)

திருச்சிறறமபலம.

சுவாமி - வைகனாதர்
தேவி - கொமபிளங்கோதை

ஆ திருபபதிகம் - எரு.

# ௩ச. திருநல்லம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - குறிஞ்சி (௩ திருமுறை )

திருச்சிறறமபலம.

கலலானிழன்மேயகறைசேர்கண்டாவென்
றெலலாமொழியாலுமிமையோர்தொழுதேத்த
வில்லாலரண்மூன்றுமவெந்துவிழவெய்த
நலலானமையாள்வானலலநகரானே (௧)

தக்கன்பெருவேள்விதன்னிலமரரைத்
துககம்பலசெயதுசுடர்பொறசடைதாழக்
கொக்கின்னிறகோடுகுளிர்வெணபிறைசூடு
நககன்னமையாள்வானலலநகரானே (௨)

அந்திமதியோடுமரவசசடைதாழ
முந்தியனலேந்திமுதுகாட்டெரிபாடிச்
சிந்தித்தெழவலலார்தீராவினைதீர்க்கு
நந்திநமையாள்வானலலநகரானே. (௩)

குளிரும்மதிசூடிகொன்றைச்சடைதாழ
மிளிரும்மரவோடுவெண்ணூறிகழ்மார்பிற்
றளிருந்திகழ்மேனித்தையலபாகமாய்
நளிரும்வயல்சூழ்ந்தநலலநகரானே. (௪)

மணியார்திகழ்கண்டமுடையான்மலர்மல்கு
பிணிவார்சடையெந்தைபெருமான்கழல்பேணித்
துணிவார்மலர்கொண்டுதொண்டர்தொழுதேத்த
நணியானமையாள்வானல்லநகரானே. (௫)

வாசம்மலர்மல்குமலையாண்மகளோடு
பூசும்பொடிநீறுபுனைந்தான்விரிகொன்றை
யீசனென்னவுள்கியெழுவார்வினைகட்கு
நாசன்னமையாள்வானல்லநகரானே (௬)

அங்கோல்வளைமங்கைகாணவனலேந்திக்
கொங்கார்நறுங்கொன்றைசூடிக்குழகாக
வெங்காடிடமாகவெந்தீவிளையாடு
நங்கோனமையாள்வானல்லநகரானே (௭)

பெண்ணார்திருமேனிப்பெருமான்பிறைமல்கு
கண்ணார்நுதலினான்கயிலைக்குன்றதனை
லெண்ணாதெடுத்தானையிறையேவிரலூன்றி
நண்ணார்புரமெய்தானல்லநகரானே. (௮)

நாகத்தணையானுநளிர்மாமலரானும்
போகத்தியல்பினொடுபொலியவழகாகு
மாகத்தவளோடுமாநந்தநகாரு
நாகம்மரையார்த்தானல்லநகரானே (௯)

குறியிற்சமணோடுகுண்டாடவண்டேரா
ரறிவிலுரைகேட்டவமேசழியாதே
பொறிகொள்ளரவார்த்தான்பொல்லாவினைதீர்க்கு
நறைகொள்பொழில்சூழநல்லநகரானே. (௧௦)

நலமாமறையோர்வாழ்நல்லநகர்மேய
கொலைசேர்மழுவானைக்கொச்சையர்மன்றோங்கு
நலமார்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
கலைநல்லிவைவல்லார்கவலைகழிவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்

---

### திருக்குறுந்தொகை (௫-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

கொல்லத்தானமனூர்தமரவந்தக்கா
லெல்லத்தாரசெயலாவதென்னோமழைக்கா
ணல்லத்தானமையாளுடையான்கழல்
சொல்லத்தான்வல்லீரேற்றுயர்தீருமே. (௧)

பொக்கம்பேசிப்பொழுதுகழியாதே
துக்கந்தீர்வகைசொல்லுவன்கேண்மினோ
தக்கன்வேள்விதகர்த்தவழல்வண்ண
னக்கன்சேர்நல்லநண்ணுதனன்மையே. (௨)

பிணிகொள்வார்குழற்பேதையர்காதலாற்
பணிகண்மேவிப்பயனில்லைபாவிகா
ளணுகவேண்டிலரனெறியாவது
நணுகுநாதனகர் திருநல்லமே. (௩)

தமக்குநல்லதுதம்முயிர்போயினா
லிமைக்கும்போதுமிராதிக்குரம்பைதா
னுமைக்குநல்லவன்றானுறையும்பதி
நமக்குநல்லதுநல்லமடைவதே (௪)

உரைதளர்ந்துடலார்நடுங்காமுன
நரைவிடையுடையானிடநல்லமே
பரவுமின்பணிமின்பணிவாரொடே
விரவுமின்விரவாரைவிடுமினே (௫)

அல்லலாகவைம்பூதங்களாட்டினும
வல்லவாறுசிவாயநமவென்று
நல்லமேவியநாதனடிதொழ
வெல்லவந்தவினைப்பகைவீடுமே. (௬)

மாதராரொடுமைந்தருஞ்சுற்றமும
பேதமாகிப்பிரிவதன்முன்னமே
நாதன்மேவியநல்லநகர்தொழப
போதுமின்னெழுமின்புகலாகுமே (௭)

வெம்மையானவினைகடீர்ந்தினிச்
செம்மையாயசிவகதிசேரலாந்
சும்மையார்மலர்தூவித்தொழுமினோ
நம்மையாளுடையானிடநல்லமே (௮)

காலமானகழிவதன்முன்னமே
யேலுமாறுவணங்கிநின்றேத்துமின்
மாலுமாமலரானொடுமாமறை
நாலும்வல்லவர்கோனிடநல்லமே. (௯)

மல்லைமல்கியதோளரக்கன்வலி
யொல்லையிலொழித்தானுறையும்பதி
நல்லநல்லமெனும்பெயர்நாவினாற்
சொல்லவல்லவர்தூநெறிசேர்வரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

திருநல்லத்திருப்பதிகம் - உ.

---

சுவாமி - உமாமகேசர்.
தேவி - மங்களநாயகி.

---

ஆடு திருப்பதிகம் - எஎ.

---

# ௩௫. திருக்கோழம்பம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம் (௨-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

நீற்றானைநீள்சடைமேனிறைவுள்ளதோ
ராற்றானையழகமர்மென்முலையாளையோர்
கூற்றானைக்குளிர்பொழிற்கோழம்பமேவிய
வேற்றானையேத்துமினும்மிடரேகவே (௧)

மையானகண்டனைமான்மறியேந்திய
கையானைக்கடிபொழிற்கோழம்பமேவிய
செய்யானைத்தேனெய்பாலுந்திகழ்ந்தாடிய
மெய்யானைமேவுவார்மேல்வினைமேவாவே (௨)

ஏதனையேதமிலாவிமையோர்தொழும்
வேதனைவெண்குழைதோடுவிளங்கிய
காதனைக்கடிபொழிற்கோழம்பமேவிய
நாதனையேத்துமினும்வினைமாயவே (௩)

சடையானைத்தலைமலரான்சிரமேந்திய
விடையானைவேதமும்வேள்வியுமாயநன்
றுடையானைக்குளிர்பொழில்சூழ்திருக்கோழம்ப
முடையானையுள்குமினுள்ளங்குளிரவே (௪)

காரானைக்கடிகமழ்கொன்றையம்போதணி
தாரானைத்தையலோர்பான்மகிழ்ந்தோங்கிய
சீரானைச்செறிபொழிற்கோழம்பமேவிய
ஊரானையேத்துமினும்மிடரொல்கவே. (௫)

பண்டாலின்னிழலானைப்பரஞ்சோதியை
விண்டார்கடம்புரமூன்றுடனேவேவக்
கண்டானைக்கடிகமழ்கோழம்பங்கோயிலாக்
கொண்டானைக்கூறுமினுள்ளங்குளிரவே. (௬)

சொல்லானைச்சுடுகணையாற்புரமூன்றெய்த
வில்லானைவேதமும்வேள்வியுமானானைக்
கொல்லானையுரியானைக்கோழம்பமேவிய
நல்லானையேத்துமினும்மிடர்நையவே. (௭)

**விற்றானைவல்லரக்கர்விறல்வேந்தனைக்**
**குற்றானைத்திருவிரலாற்கொடுங்காலனைச்**
**செற்றானைச்சீர்திகழுந்திருக்கோழம்பம்**
**பற்றானைப்பற்றுவார்மேல்வினைபற்றாவே.** (அ)

நெடியானோடயனறியாவகைநின்றதோர்
படியானைப்பண்டரங்கவேடம்பயின்றானைக்
கடியாருங்கோழம்பமேவியவெள்ளேற்றின்
கொடியானைக்கூறுமினுள்ளங்குளிரவே. (௯)

புத்தருந்தோகையம்பீலிகொள்பொய்ம்மொழிப்
பித்தரும்பேசுவபேச்சல்லபீடுடைக்
கொத்தலர்தண்பொழிற்கோழம்பமேவிய
வத்தனையேத்துமினல்லலறுக்கவே (௧௦)

தண்புனலோங்குதண்ணந்துராயமாநகர்
நண்புடைஞானசம்பந்தனம்பானுறை
விண்பொழிற்கோழம்பமேவியபத்திவை
பண்கொளப்பாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வேழம்பத்தைவர்வேண்டிற்றுவேண்டிப்போ
யாழம்பற்றிவீழ்வார்பலவாதகள்
கோழம்பத்துறைகூத்தனைக்குரைகழ்
ழுழம்பத்தர்கள்சாலச்சதுரரே (௧)

கயிலைநன்மலையாளுங்கபாலியை
மயிலியன்மலைமாதினையுள்ளனைக்
குயில்பயில்பொழிற்கோழம்பமேயவென்
னுயிரினைநினைந்துள்ளமுருகுமே (௨)

வாழும்பான்மையராகியவான்செல்வந்
தாழும்பான்மையராகித்தமவாயிறை
ழுழம்பூமணநாறியதாழ்பொழிற்
கோழம்பாவென்கக்கூடியசெல்வமே (௩)

பாடலாக்கிடும்பண்ணொடுபெண்ணிவள்
கூடலாக்கிடுங்குன்றின்மணற்கொடு
கோடல்பூத்தலர்கோழம்பத்துண்மகிழ்ந்
தாடுங்கூத்தனுக்கன்புபட்டாளன்றே. (௪)

தளிர்கொண்மேனியடான்மிகவஞ்சவோர்
பிளிறுவாரணத்தீருரிபோர்த்தவன்
குளிர்கொணீர்வயற்கோழம்பமேவினா
னளிர்கொணீர்சடைமேலுநயந்ததே. (௫)

நாதராவர்நமக்கும்பிறர்க்குந்தாம்
வேதநாவர்விடைக்கொடியார்வெற்பிற்
கோதைமாதொடுங்கோழம்பங்கோயில்கொண்
டாதிபாதமடையவல்லார்களே. (௬)

முன்னைநான்செய்தபாவமுதலறப்
பின்னைநான்பெரிதும்மருளபெற்றது
வன்னமார்வயற்கோழம்பத்துள்ளமர்
பின்னலவார்சடையானைப்பிதற்றியே. (எ)

ஏழைமாரிடநின்றிருகைகொடுண்
கோழைமாரொடுங்கூடியகுற்றமாய
கூழைபாயவயற்கோழம்பத்தானடி
யேழையேனமுன்மறந்துங்கிருந்ததே. (அ)

அரவணைப்பயினமாலயனவந்தடி
பரவனைப்பரமாபரஞ்சோதியைக்
குரவனைக்குரவார்பொழிற்கோழம்பத்
துரவனையொருவாகருணர்வொணனுமே (கூ)

சமரசூரபன்மாவைத்தடிந்தவேற்
குமரனதந்தகோழம்பமேவிய
வமரர்கோவினுக்கன்புடைத்தொண்டர்க
ளமரலோகமதாளுடையார்களே (கய)

துட்டனுமிமலையெடுத்தானுங்கீழ்ப
பட்டுவீழ்ந்துபட்டர்ந்துயப்போயினான்
கொட்டமாறியகோழம்பத்தீசனைத்
திட்டக்கிசைத்தவரர்க்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருக்கோழம்பத்திருப்பதிகம் - உ.

சுவாமி - கோகிலேசர்.
தேவி - சௌந்தரநாயகி.

ஆ திருப்பதிகம் - எகூ.

## ருடகூ. திருவாவடுதுறை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

நாலடிமேல்வைப்பு.

பண் - காந்தார பஞ்சமம். (கூ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

*இடரினுந்தளரினுமெனதுறுநோய்
தொடரினுமுனகழறொழுதெழுவேன்
கடறனிலமுதொடுகலந்தநஞ்சை
மிடறினிலடக்கியவேதியனே

யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (க)

வாழினுஞ்சாவினும்வருந்தினும்போய்
வீழினுமுனகழல்விடுவேனல்லேன்
றாழிளந்தடம்புனறயங்குசென்னிப்
போழிளமதிவைத்தபுண்ணியனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே (உ)

நனவினுங்கனவினுநம்பாவுன்னை
மனவினும்வழிபடன்மறவேனம்மான்
புனல்விரிநறுங்கொன்றைப்போதணிந்து
கனலெரியனல்புல்குகையவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (ஙு)

தும்மலோடருந்துயர்தோன்றிடினு
மம்மலரடியலாலரற்றாதென்னாக்
கைம்மல்குவரிசிலைக்கணையொன்றினான்
மும்மதிலெரியெழமுனிந்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (ச)

கையதுவீழினுங்கழிவுறினுஞ்
செய்கழலடியலாற்சிந்தைசெய்யேன்
கொய்யணிநறுமலர்குலாயசென்னி
மையணிமிடறுடைமறையவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (ரு)

வெந்துயர்தோன்றியோர்வெருவுறினு
மெந்தாயுன்னடியலாலேத்தாதென்னா
வைந்தலையரவுகொண்டரைக்கசைத்த
சந்தவெண்பொடியணிசங்கரனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (சா)

வெப்பொடுவிரவியோர்வினைவரினு
மப்பாவுன்னடியலாலரற்றாதென்னா
வொப்புடையொருவனையுருவழிய
வப்படியழலெழவிழித்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (எ)

பேரிடர்பெருகியோர்பிணிவரினுஞ்
சீருடைக்கழலலாற்சிந்தைசெய்யே
னேருடைமணிமுடியிராவணனை
யாரிடர்படவரையார்த்தவனே

யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (அ)

உண்ணினும்பசிப்பினுமுறங்கினுநின்
னொண்மலரடியலாலுரையாதென்னாக்
கண்ணனுங்கடிகமழ்தாமரைமே
லண்ணலுமளப்பரிதாயவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (கூ)

பித்தொடுமயங்கியோர்பிணிவரினு
மத்தாவுன்னடியலாலரற்றாதென்னாப்
புத்தருஞ்சமணரும்புறனுரைக்கப்
பத்தர்கட்கருள்செய்துபயின்றவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (க0)

அலைபுனலாவடுதுறையமர்ந்த
விலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலக
நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

*திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும்போது சிவபாதவிருதயர் பிள்ளையாரை நோக்கி, "நான் யாகஞ் செய்தற்குப் பொருள்தரல் வேண்டும்" என்றார். பிள்ளையார் அதைக் கேட்டு, திருக்கோயிலிற்சென்று வணங்கி, "இடரினுந் தளரினும்" என்னுந் திருப்பதிகம் பாடினார். அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளினாலே, ஒரு சிவபூதம் விரைந்துவந்து, பீடத்தின்மேலே ஆயிரம் பொன் பொருந்திய கிழி யொன்று வைத்தது. பிள்ளையார் திருவருளை நினைந்து, நமஸ்கரித்து எழுந்து அஞ்சலிசெய்து, பீடத்தின்மேலே வைக்கப்பட்ட பொற்கிழியைச் சிரமேற்கொண்டு, தந்தையார் கையிற் கொடுத்து, "சிவபெருமானையே தலைவராக நினைந்து வேத விதிப்படி செய்யப்படும் யாகத்தை நீரும் சீகாழியில் இருக்கின்ற மற்றப் பிராமணர்கள் சமஸ்தரும் செய்ய, இக்கிழி குறையாது மிகும்" என்று சொல்லி, சீகாழிக்குப்போம்படி அவருக்கு விடைகொடுத்து அனுப்பி, தாம் திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருந்தார்.

இப்படி இருக்கும் நாளிலே, ஒருநாள் பிள்ளையார் சுவாமிதரிசனஞ் செய்து, பத்திரலிங்கமாகிய பலிபீடத்துக்குச் சமீபித்தபோது "இங்கே தமிழ்மணம் கமழ்கின்றது" என்று திருவாய்மலர்ந்தனர். உடனே அங்குள்ளார் அப்பலிபீடத்தை வேறாக எழுந்தருளச் செய்தனர். பிள்ளையார் உற்றுநோக்கி, அதனடியிலே சேமித்திருந்த திருமந்திரத் திருமுறையைத் தம்முடைய அருமைத்திருக்கரங்களால் எடுத்து, "இது திருமூலநாயனார் இத்திருக்கோயிலின் மேலைத்திசையிலே உள்ள அரசின்கீழே, மூவாயிரம் வருஷமளவு சிவயோகத்தில் இருந்து, ஒவ்வொருவருஷத்திற்கு ஒவ்வொரு

கரு

திருப்பாட்டாக மூவாயிரம் திருப்பாட்டினாலே, சிவபெருமானுடைய திருவுளப்பாங் கின்படி, சிவாகமங்களிலே உணர்த்தப்பட்ட மெய்ப்பொருளை ஞானம், யோகம், கிரியை, சரியை என்னு நான்கு பாதங்களாகத் தமிழ்நாட்டாருக்கு உபயோகமாகும் பொருட்டுச் செய்தருளினார்" என்று அத்திருமந்திரத்தின் அருமை பெருமைகளை யெல்லாம் சொல்லி, அதனைத் தமிழ்நாடெங்கும் பரவச் செய்தனர்.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருநேரிசை. (௪-ம. திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

*மாயிருஞாலமெல்லாமலரடிவணங்கும்போலும
பாயிருங்கங்கையாளைப்படர்சடைவைப்பர்போலுங்
காயிரும்பொழில்கள்சூழ்ந்தகழுமலவூரர்க்கம்பொ
னாயிரங்கொடுப்பர்போலுமாவடுதுறையனாரே (௧)

மடந்தைபாகத்தர்போலுமான்மறிக்கையர்போலுங்
குடந்தையிற்குழகர்போலுங்கொல்புலித்தோலர்போலுங்
கடைந்தநஞ்சுண்பர்போலுங்காலனைக்காய்வர்போலு
மடைந்தவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே (௨)

உற்றநோய்தீர்ப்பர்போலுமுறுதுணையாவர்போலுஞ்
செற்றவர்புரங்கண்மூன்றுந்தீயெழச்செறுவர்போலுங்
கற்றவர்பரவியேத்தக்கலந்துலந்தலந்துபாடு
மற்றவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௩)

மழுவமர்கையர்போலுமாதவள்பாகர்போலு
மெழுநுனைவேலர்போலுமென்புகொண்டணிவர்போலுந்
தொழுதெழுந்தாடிப்பாடித்தோத்திரம்பலவுஞ்சொல்லி
யழுமவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே (௪)

பொடியணிமெய்யர்போலும்பொங்குவெண்ணூலர்போலுங்
கடியதோர்விடையர்போலுங்காமனைக்காய்வர்போலும
வெடிபடுதலையர்போலும்வேட்கையாற்பரவுந்தொண்ட
ரடிமையையாள்வர்போலுமாவடுதுறையனாரே (௫)

வக்கரனுயிரைவவ்வக்கண்மலர்கொண்டுபோற்றச்
சக்கரங்கொடுப்பர்போலுந்தானவர்தலைவர்போலுந்
துக்கமாமூடர்தம்மைத்துயரிலேவீழ்ப்பர்போலு
மக்கரையார்ப்பர்போலுமாவடுதுறையனாரே. (௬)

விடைதருகொடியர்போலும்வெண்புரிநூலர்போலும்
படைதருமழுவர்போலும்பாய்புலித்தோலர்போலு
முடைதருகீளர்போலுமுலகமுமாவர்போலு
மடைபவரிடர்கடீர்க்குமாவடுதுறையனாரே. (௭)

முந்திவானோர்கள்வந்துமுறைமையால்வணங்கியேத்த
நந்திமாகாளரென்பார்நடுவுடையார்நணிறபச்
சிந்தியாதேயொழிந்தார்திரிபுரமெரிப்பர்போலு
மந்திவான்மதியஞ்சூடுமாவடுதுறையனாரே. (௮)

பானமரேனமாகிப்பாரிடந்திட்டமாலும்
தேனமர்ந்தேறுமலர்த்திசைமுகமுடையகோவும்
தினைத்தனைத்தியக்கறுத்ததிருவுருவுடையார்போலு
மானரையேற்றார்போலுமாவடுதுறையனாரே (௯)

பார்த்தனுக்கருளவர்போலும்பட்டசடைமுடியார்போலு
மேத்துவாரிடர்கடீரவின்பங்கள்கொடுப்பர்போலுங்
கூத்தராய்ப்பாடியாடிக்கொடுவலியரக்கன்றன்னை
யார்த்தவாயலறுவிப்பாராவடுதுறையனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* திருநாவுக்கரசுநாயனார், திருவீழிமிழலையை அடைந்து, சிலநாள் அங்கிருந்து, பின் திருவாவடுதுறையிற் சென்று, சுவாமி தரிசனம்பண்ணி, திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு ஒரு திருப்பதிகத்தினால் பெருமான் ஆயிரஞ் செம்பொன் கொடுத்தருளிய திறத்தை "மாயிருஞாலமெல்லாம்" என்னும் திருப்பதிகத்திலே புகழ்ந்துபாடியருளினார்.

---

திருநேரிசை (௪-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

மஞ்சனேமணியுமானாய்மரகதத்திரளுமானாய்
நெஞ்சுளேபுகுந்துநின்றுநினைதருநிகழ்வினானே
துஞ்சும்போதாகவந்துதுணையெனக்காகிநின்று
வஞ்சலென்றருளவேண்டுமாவடுதுறையுளானே. (௧)

நானுகந்துன்னைநாளுநணுகுமாகருதியேயு
மூனுகந்தோம்புநாயேனுள்ளுறைவைவர்நின்றார்
தானுகந்தேயுகந்ததகவிலாதொண்டனேனு
ஞானுகந்தேறுவானேயாவடுதுறையுளானே. (௨)

கட்டமேவினைகளானகாத்திவைநோக்கியாளா
யொட்டவேயொட்டிநாளுமுன்னையுள்வைக்கமாட்டேன்
பட்டவான்றலைகையேந்திப்பலிதிரிந்தூர்கடோறு
மட்டமாவுருவினானேயாவடுதுறையுளானே (௩)

பெருமைநன்றுடையதில்லையென்றுநான்பேசமாட்டே
னொருமையாலுன்னையுள்கியுகந்துவானேறமாட்டேன்
கருமையிட்டாயவூனைக்கட்டமேகழிக்கின்றேனு
னருமையானஞ்சமுண்டவாவடுதுறையுளானே. (௪)

துட்டனாய்வினையதென்னுஞ்சுழித்தலையகப்பட்டேனைக்
கட்டனையைவர்வந்துகலக்காமைக்காத்துக்கொள்வாய்
மட்டவிழ்கோதைதன்னைமகிழ்ந்தொருபாகம்வைத்து
வட்டமாநாகமாட்டுமாவடுதுறையுளானே. (௫)

காரழல்கண்டமேயாய் கடிமதிற்புரங்கண்மூன்று
மோரழலம்பினாலேயுகைத்துத்தீயெரியமூட்டி
நீரழற்சடையுளானேநினைப்பவர்வினைகடீர்ப்பா
யாரழலேந்தியாடுமாவடுதுறையுளானே. (௬)

செறிவிலேன்சிந்தையுள்ளேசிவனடிதெரியமாட்டேன்
குறியிலேன்குணமொன்றில்லேன்கூறுமாகூறமாட்டே
னெறிபடுமதியொன்றில்லேனினையுமாநினையமாட்டே
னறிவிலேனயர்த்துப்போனேனாவடுதுறையுளானே. (௭)

கோலமாமங்கைதன்னைக்கொண்டொருகோலமாய
சீலமேயறியமாட்டேன்செய்வினைமூடிநின்று
ஞாலமாமிதனுளென்னைநைவியாவண்ணநல்கா
யாலமாநஞ்சமுண்டவாவடுதுறையுளானே. (௮)

நெடியவன்மலரினானுநேர்ந்திருபாலுநேடக்
கடியதோருருவமாகக்கனலெரியாகிநின்ற
வடிவினைவண்ணமென்றேயென்றுதாம்பேசலாகா
ரடியனேனெஞ்சினுள்ளாராவடுதுறையுளாரே (௯)

மலைக்குநேராயரக்கன்சென்றுறமங்கையஞ்சத்
தலைகளுமேற்கைகளாலேதாங்கினான்வலியைமாள
வுலப்பிலாவிரலாலூன்றியொறுத்தவற்கருள்கள்செய்து
வலைத்தவான்கங்கைசூடுமாவடுதுறையுளானே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

நிறைக்கவாலியளல்லளிந்நேரிழை
மறைக்கவாலியளல்லளிம்மாதராள்
பிறைக்கவாலப்பெரும்புனலாவடு
துறைக்கவாலியோடாடியசுண்ணமே. (௧)

தவளமாமதிச்சாயலோர்சந்திரன்
பிளவுசூடியபிஞ்ஞகனெம்மிறை
யளவுகண்டிலளாவடுதண்டுறைக்
களவுகண்டனளொத்தனள்கன்னியே. (௨)

பாதிபெண்ணொருபாகத்தன்பன்மறை
யோதியென்னுளங்கொண்டவனொண்பொரு
ளாதியாவடுதண்டுறைமேவிய
சோதியேசுடரேயென்றுசொல்லுமே. (௩)

கார்கொண்மாமுகில்போல்வதோர்கண்டத்தன்
வார்க்கொண்மென்முலைசேர்ந்திருமாந்திவ
ளார்க்கொள்கொன்றையனாவடுதண்டுறைத்
தார்க்குநின்றிவடாழுமாகாண்மினே. (௪)

கருகுகண்டத்தன்காயகதிர்ச்சோதியன்
பருகுபாலமுதேயெனும்பண்பினன்
னருகுசென்றிலளாவடுதண்டுறை
யொருவனென்னையுடையகோவென்னுமே. (௫)

குழலுங்கொன்றையுங்கூவிளமத்தமுந்
தழலுந்தையலோர்பாகமாத்தாங்கின
னழகனாவடுதண்டுறையானெனக்
கழலுங்கைவளைகாரிகையாளுக்கே. (௬)

பஞ்சின்மெல்லடிப்பாவையோர்பங்கனைத்
துஞ்சமென்றிருமாந்திவளாரையு
மஞ்சுவாளல்லளாவடுதண்டுறை
மஞ்சனோடிவளாடியமையலே. (௭)

பிறையுஞ்சூடுநற்பெண்ணொடாணாகிய
நிறையுநெஞ்சமுநீர்மையுங்கொண்டவ
னுறையும்பூம்பொழிலாவடுதண்டுறை
யிறைவனென்னையுடையவனென்னுமே. (௮)

வையந்தானளந்தானுமயனுமாய்
மெய்யைக்காணலுற்றார்க்கழலாயினா
னையனாவடுதண்டுறையானெனக்
கையில்வெள்வளையுங்கழல்கின்றதே (௯)

பக்கம்பூதங்கள்பாடப்பலிகொள்வான்
மிக்கவாளரக்கன்வலிவீட்டினா
னக்கணிந்தவனாவடுதண்டுறை
நக்கனென்னுமிந்நாணிலிகாண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங்கரைகண்டானை
ஞானப்பெருங்கடலைநன்மைதன்னைக்
கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்
கற்பகமாயடியார்கட்கருள்செய்வானைச்
செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்
திங்களைஞாயிற்றைத்தீயைநீரை
யம்பொன்னையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௧)

மின்னானைமின்னிடைச்சேருருமினானை
வெண்முகிலாயெழுந்துமழைபொழிவான்றன்னைத்
தன்னானைத்தன்னொப்பாரில்லாதானைத்
தாயாகிப்பல்லுயிர்க்கோர்தந்தையாகி
யென்னானையெந்தைபெருமான்றன்னை
யிருநிலமுமண்ணுமாய்ச்செக்கர்வானே
யன்னானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௨)

பத்தர்கள்சித்தத்தேபாவித்தானைப்
பவளக்கொழுந்தினைமாணிக்கத்தின்
றொத்தினைத்தூநெறியாய்நின்றான்றன்னைச்
சொல்லுவார்சொற்பொருளின்றோற்றமாகி
வித்தினைமுளைக்கிளையைவேரைச்சீரை
வினைவயத்தினற்சார்பைவெய்யதீர்க்கு
மத்தனையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௩)

பேணியநற்பிறைதவழ்செஞ்சடையினானைப்
பித்தராமடியார்க்குமுத்திகாட்டு
மேணியையிடர்க்கடலுட்சுழிக்கப்பட்டிங்
கிளைக்கின்றேற்கக்கரைக்கேயேறவாங்குந்
தோணியைத்தொண்டனேன்றூயசோதிச்
சுலாவெண்குழையானைச்சுடர்பொற்காசி
னாணியையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே (௪)

ஒருமணியையுலகுக்கோருறுதிதன்னை
யுதயத்தினுச்சியையுருமானானைப்
பருமணியைப்பாலோடஞ்சாடினானைப்
பவித்திரனைப்பசுபதியைப்பவளக்குன்றைத்
திருமணியைத்தித்திப்பைத்தேனதாகித்
தீங்கரும்பினின்சுவையைத்திகழுஞ்சோதி
யருமணியையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௫)

ஏற்றானையெண்டோளுடையான்றன்னை
யெல்லிநடமாடவல்லான்றன்னைக்
கூற்றானைக்கூற்றமுதைத்தான்றன்னைக்
குரைகடல்வாய்நஞ்சுண்டகண்டன்றன்னை
நீற்றானைநீளரவொன்றார்த்தான்றன்னை
நீண்டசடைமுடிமேனீரார்கங்கை
யாற்றானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௬)

கைம்மானமதகளிற்றையுரித்தான்றன்னைக்
கடல்வரைவானாகாசமானான்றன்னைச்

செம்மானப்பவளத்தைத்திகழுமுத்தைத்
திங்களைஞாயிற்றைத்தீயானானை
யெம்மானையென்மனமேகோயிலாக
விருந்தானையென்புருகுமடியார்தங்க
ளம்மானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (எ)

மெய்யானைப்பொய்யரொடுவிரவாதானை
வெள்ளடையைத்தண்ணிழலைவெந்தீயேந்துங்
கையானைக்காமனுடல்வேவக்காய்ந்த
கண்ணானைக்கண்மூன்றுடையான்றன்னைப்
பையாடரவமதியுடனேவைத்த
சடையானைப்பாய்புலித்தோலுடையான்றன்னை
யையானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (அ)

வேண்டாமைவேண்டுவதுமில்லான்றன்னை
விசயனைமுன்னசைவித்தவேடன்றன்னைத்
தூண்டாமைச்சுடர்விடுநற்சோதியானைச்
சூலப்படையானைக்காலன்வாழ்நாண்
மாண்டோடவுதைசெய்தமைந்தன்றன்னை
மண்ணவரும்விண்ணவரும்வணங்கியேத்து
மாண்டானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (கூ)

பந்தணவுமெல்விரலாள்பாகன்றன்னைப்
பாடலோடாடல்பயின்றான்றன்னைக்
கொந்தணவுநறுங்கொன்றைமாலையானைக்
கோலமாநீலமிடற்றான்றன்னைச்
செந்தமிழோடாரியனைச்சீரியானைத்
திருமார்பிற்புரிவெண்ணூறிகழப்பூண்ட
வந்தணனையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (க0)

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத்
தக்கன்றன்பெருவேள்விதகர்த்தான்றன்னைப்
பிரித்தானைப்பிறைதவழ்செஞ்சடையினானைப்
பெருவலியான்மலையெடுத்தவரக்கன்றன்னை
நெரித்தானைநேரிழையாள்பாகத்தானை
நீசனேனுடலுறுநோயானதீர
வரித்தானையாவடுதண்டுறையுண்மேய
வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

திருவேயென்செல்வமேதேனேவானோர்
செழுஞ்சுடரேசெழுஞ்சுடர்நற்சோதிமிக்க
வுருவேயென்னுறவேயென்னூனேயூனி
னுள்ளமேயுள்ளத்தினுள்ளேநின்ற
கருவேயென்கற்பகமேகண்ணேகண்ணிற்
கருமணியேமணியாடுபாவாய்காவா
யருவாயவல்வினைநோயடையாவண்ண
மாவடுதண்டுறையுறையுமமரரேறே. (க)

மாற்றேனெழுத்தஞ்சுமென்றனாவின்
மறவேன்றிருவருள்கள்வஞ்சநெஞ்சி
னேற்றேன்பிறதெய்வமெண்ணாநாயே
னெம்பெருமான்றிருவடியேயெண்ணினல்லான்
மேற்றானீசெய்வனகள்செய்யக்கண்டு
வேதனைக்கேயிடங்கொடுத்துநாளுநாளு
மாற்றேனடியேனையஞ்சேலென்னா
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (உ)

வரையார்மடமங்கைபங்காகங்கை
மணவாளாவார்சடையாய்நின்றனாம
முரையாவுயிர்போகப்பெறுவேனாகி
லுறுநோய்வந்தெத்தனையுமுற்றாலென்னே
கரையாநினைந்துருகிக்கண்ணீர்மல்கிக்
காதலித்துநின்கழலேயேத்துமன்பர்க்
கரையாவடியேனையஞ்சேலென்னா
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (ங)

சிலைத்தார்திரிபுரங்கடீயில்வேவச்
சிலைவளைவித்துமையவளையஞ்சநோக்கிக்
கலித்தாங்கிரும்பிடிமேற்கைவைத்தோடுங்
களிறுரித்தகங்காளாவெங்கள்கோவே
நிலத்தாரவர்தமக்கேபொறையாய்நாளு
நில்லாவுயிரோம்புநீதனேனா
னலுத்தேனடியேனையஞ்சேலென்னா
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (ச)

நறுமாமலர்கொய்துநீரின்மூழ்கி
நாடோறுநின்கழலேயேத்திவாழ்த்தித்
துறவாததுன்பந்துறந்தேன்றன்னைச்
சூழுலகிலூழ்வினைவந்துற்றாலென்னே
யுறவாகிவானவர்கண்முற்றும்வேண்ட
வொலிதிரைநீர்க்கடனஞ்சுண்டுய்யக்கொண்ட
வறவாவடியேனையஞ்சேலென்னா
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (ரு)

கோணாரணனங்கந்தோண்மேற்கொண்டு
கொழுமலரான்றன்சிரத்தைக்கையிலேந்திக்
காணார்களிற்றுரிவைப்போர்வைமூடிக்
கங்காளவேடராயெங்குஞ்செல்வீர்
நாணாளுமக்கோர்வினைகேட்டேனோ
னல்வினையுந்தீவினையுமெல்லாமுன்னே
யானாயடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (சா)

உழையுரித்தமானுரிதோலாடையானே
யுமையவடம்பெருமானேயிமையோரேறே
கழையிறுத்தகருங்கடனஞ்சுண்டகண்டா
கயிலாயமலையானேயுன்பாலன்பர்
பிழைபொறுத்தியென்பதுவும்பெரியோர்தங்கடன
கடனன்றேபேரருளுன்பாலதன்றே
யழையுறுத்துமாமயில்களாலுஞ்சோலை
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (எ)

உலந்தார்தலைகலனொன்றேந்திவானோ
ருலகம்பலிதிரிவாயுன்பாலன்பு
கலந்தார்மனங்கவருங்காதலானே
கனலாடுங்கையவனேயையாமெய்யே
மலந்தாங்குயிர்ப்பிறவிமாயக்காய
மயக்குளேவிழுந்தழுந்திநாளுநாளு
மலந்தேனடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (அ)

பல்லார்ந்தவெண்டலைகையிலேந்திப்
பசுவேறியூரூரன்பலிகொள்வானே
கல்லார்ந்தமலைமகளுநீருமெல்லாங்
கரிகாட்டிலாட்டுகந்தீர்கருதீராகி
லெல்லாருமென்றனையிகழ்வர்போலு
மேழையமண்குண்டர்சாக்கியர்களொன்றுக்
கல்லாதார்திறத்தொழிந்தேனஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (கூ)

துறந்தார்தந்தூநெறிக்கட்சென்றேனல்லேன்
றுணைமாலைசூட்டநான்றூயேனல்லேன்
பிறந்தேனின்றிருவருளேபேசினல்லாம்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே
செறிந்தார்மதிலிலங்கைக்கோமான்றன்னைச்
செறுவரைக்கீழடர்த்தருளிச்செய்கையெல்லா
மறிந்தேனடியேனையஞ்சேலென்று
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (கய)

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்திநாயனார்.

## பண் - தக்கேசி (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மறையவனொருமாணிவந்தடைய
வாரமாயவனாருயிர்நிறுத்தக்
கறைகொள்வேலுடைக்காலனைக்காலாற்
கடிந்தகாரணங்கண்டுசென்றடியே
னிறைவனெம்பெருமானென்றெப்போது
மேத்தியேத்திநின்றஞ்சலிசெய்து
னறைகொள்சேவடிக்கன்பொடுமடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௧)

தெருண்டவாயிடைநூல்கொண்டுசிலந்தி
சித்திரப்பந்தர்சிக்கெனவியற்றச்
சுருண்டசெஞ்சடையாயதுதன்னைச்
சோழனாக்கியதொடர்ச்சிகண்டடியேன்
புரண்டுவீழ்ந்துநின்பொன்மலர்ப்பாதம்
போற்றிபோற்றியென்றன்பொடுபுலம்பி
யருண்டென்மேலவினைக்கஞ்சிவந்தடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே (௨)

திகழுமாலவனாயிரமலரா
லேத்துவானொருநீண்மலர்குறையப்
புகழினாலவன்கண்ணிடந்திடலும்
புரிந்துசக்கரங்கொடுத்தல்கண்டடியேன
றிகழுநின்றிருப்பாதங்கள்பரவித்
தேவதேவநின்றிறம்பலபிதற்றி
யகழும்வலவினைக்கஞ்சிவந்தடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௩)

வீரத்தாலொருவேடுவனாகி
விசைத்தொர்கேழலைத்துரந்துசென்றணைந்து
போரத்தான்விசயன்றனைக்கணைபாய்ப்
புரிந்துவான்படைகொடுத்தல்கண்டடியேன்
வாரத்தாலுனநாமங்கள்பரவி
வழிபட்டுன்றிறமேநினைந்துருகி
யார்வத்தோடுவந்தடியிணையடைந்தே
னாவடுதுறையாதியெம்மானே. (௪)

ஒக்கமுப்புரமோங்கெரிதூவ
வுன்னைமுன்னியமூவர்நின்சரணம்
புக்குமற்றவர்பொன்னுலகாளப்
புகழினாலருளீந்தமையறிந்து

மிக்கநின்கழலேதொழுதரற்றி
வேதியாவாதிமூர்த்திநின்னரையி
லக்கணிந்தவெம்மானுனையனைந்தே
னாவடுதுறையாதியெம்மானே (ரு,சு,எ,அ,கூ,க0)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - தக்கேசி (எ-ம திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

*கங்கைவார்சடையாய்கணநாதா
காலகாலனேகாமனுக்கனலே
பொங்குமாகடல்விடமிடற்றானே
பூதநாதனேபுண்ணியாபுனிதா
செங்கண்மால்விடையாய்தெளிதேனே
தீர்த்தனேதிருவாவடுதுறையு
ளெங்கணுவெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (க)

மண்ணின்மேன்மயங்கிப் பபேனை
வலியவந்தென்னையாண்டுகொண்டானே
கண்ணிலேனுடம்பில்லடுநோயாற்
கருத்தழிந்துனக்கேபொறையானேன்
றெண்ணிலாவெறிக்குஞ்சடையானே
தேவனேதிருவாவடுதுறையு
ளண்ணலேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (உ)

ஒப்பிலாமுலையாளொருபாகா
வுத்தமாமத்தமாருஞ்சடையாய்
முப்புரங்களைத்தீவளைத்தங்கே
மூவருக்கருள்செய்யவல்லானே
செப்பவாணிழற்கீழிருந்தருளுஞ்
செல்வனேதிருவாவடுதுறையு
ளப்பனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (ங)

கொதியினாலவருகாளிதன்கோபங்
குறையவாடியகூத்துடையானே
மதியிலேனுடம்பில்லடுநோயான்
மயங்கினேன்மணியேமணவாளா
விதியினாலிமையோர்தொழுதேத்தும்
விகிர்தனேதிருவாவடுதுறையு
ளதிபனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (ச)

வந்தவாளரக்கன்வலிதொலைந்து
வாழுநாள்கொடுத்தாயவழிமுதலே
வெந்தவெண்பொடிப்பூசவல்லானே
வேடனாய்விசயற்கருள்புரிந்த
விந்துசேகரனேயிமையோர்சீ
ரீசனேதிருவாவடுதுறையு
ளெந்தையேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே. (ரு)

குறைவிலாநிறைவேகுணக்குன்றே
கூத்தனேகுழைக்காதுடையானே
யுறவிலேனுனையன்றிமற்றடியே
னொருபிழைபொறுத்தாலிழிவுண்டோ
சிறைவண்டார்பொழில்சூழ்திருவாரூர்ச்
செம்பொனேதிருவாவடுதுறையு
ளறவனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே (சா)

வெய்யமாகரியீருரியானே
வேங்கையாடையிஞாயிறுமுதலே
மெய்யனேயனலாழியையரிக்கு
வேண்டிநீகொடுத்தருளரிவித்த
செய்யமேனியனேதிகழொளியே
செங்கணாதிருவாவடுதுறையு
ளையனேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே (எ)

கோதிலாவமுதேயருள்பெருகு
கோலமேயிமையோர்தொழுகோவே
பாதிமாதொருகூறுடையானே
பசுபதீபரமாபரமேட்டீ
தீதிலாமலையேதிருவருள்சே
சேவகாதிருவாவடுதுறையு
ளாதியேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே (அ)

வானநாடனேவழித்துணைமருந்தே
மாசிலாமணியேமறைப்பொருளே
யேனமாவெயிறாமையுமெலும்பு
மீடுதாங்கியமார்புடையானே
தேனெய்பாறயிராட்டுகந்தானே
தேவனேதிருவாவடுதுறையு
ளானேயேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே (கூ)

வெண்டலைப்பிறைகொன்றையுமரவும்
வேரிமத்தமும்விரவிமுன்முடித்த

விண்டைமாமலர்ச்செஞ்சடையானை
யீசனைத்திருவாவடுதுறையு
ளண்டவாணனைச்சிங்கடியப்ப
னணுக்கவன்றொண்டனாரூரன்சொன்ன
தண்டமிழ்மலர்பத்தும்வல்லார்கள்
சாதலும்பிறப்பும்மறுப்பாரே (கO)

திருச்சிற்றம்பலம்.

* சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருவாவடுதுறையடைந்து சுவாமியை வணங்கி, ஒரு கண்ணில்லாமையைக் குறித்து மனங்கவன்று "கங்கைவார்சடையாய்" என்னுந் திருப்பதிகம் எடுத்து, ஐந்து திருப்பாட்டும்பாடி, "குறைவிலாநிறைவே" என்னும் ஆறாந்திருப்பாட்டுத் தொடங்கிய வளவில், சிவபிரான் அவ்வாலயத்தில், திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத் தரிசனந் தெரிவித்தருளினர். அதனைத்தரிசித்துக் குறிப்பு விளங்கும்படி அத்திருப்பாட்டில் "சிறைவண்டறைபொழில் சூழ்திருவாரூர்ச் செம்பொனே" என்று அருளிச்செய்தார்.

திருவாவடுதுறைத் திருப்பதிகம் - அ.

சுவாமி - மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர்.
தேவி - ஒப்பிலாமுலையம்மை

ஆக திருப்பதிகம் - அஎ.

## ருஎ. திருத்துருத்தி.*



திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

திருவிராகம்.

பண் - நட்டராகம். (உ-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினை
யுரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே. (க)

அடுத்தடுத்தகத்தியோடுவன்னிகொன்றைகூவிளந்
தொடுத்துடன்சடைப்பெய்தாய்துருத்தியாயோர்காலனைக்
கடுத்தடிப்புறத்தினாலிறத்துதைத்தகாரண
மெடுத்தெடுத்துரைக்குமாறுவல்லமாகினல்லமே. (உ)

* திருத்துருத்தி என்பது குற்றாலம்.

கங்குல்கொண்டதிங்களோடுகங்கைதங்குசெஞ்சடைச்
சங்கிலங்குவெண்குழைசரிந்திலங்குகாதினாய
பொங்கிலங்குபூணநூலுருத்திராதுருத்திபுக
கெங்குநின்னிடங்களாவடங்கிவாழ்வதென்கொலோ (௩)

கருத்தினாலொர்காணியில்விருத்தியில்லைதொண்டர்த
மருத்தியாற்றமல்லல்சொல்லியையமேற்பதன்றியு
மொருத்திபாற்பொருத்திவைத்துடம்புவிட்டியோகியா
யிருத்திநீதுருத்திபுக்கதென்னமாயமென்பதே (௪)

துறக்குமாசொலப்படாய்துருத்தியாய்திருந்தடி
மறக்குமாறிலாதவென்னைமையல்செய்திம்மண்ணின்மேல்
பிறக்குமாறுகாட்டினாய்பிணிப்படுமுடம்புவிட்
டிறக்குமாறுகாட்டினாய்க்கிழுக்குகின்றதென்னையே (௫)

வெயிற்கெதிர்ந்திடங்கொடாதகங்குளிர்ந்தபைம்பொழிற்
றுயிற்கெதிர்ந்தபுள்ளினங்கண்மல்குதண்டுருத்தியாய
மயிற்கெதிர்ந்தணங்குசாயன்மாதொர்பாகமாகமூ
வெயிற்கெதிர்ந்தொரம்பினான்மெரித்தவில்லியல்லையே (௬)

கணிச்சியம்படைச்செல்வாகழிந்தவர்க்கொழிந்தசீர்
துணிச்சிரக்கிரந்தையாயகரந்தையாய்துருத்தியா
யணிப்படுந்தனிப்பிறைப்பனிக்கதிர்க்கவாவுநன்
மணிப்படும்பைநாகநீமகிழ்ந்தவண்ணமல்லையே (௭)

சுடப்பொடிந்துடம்பிழந்தநங்கனாயமன்மத
னிடர்ப்படக்கடந்திடந்துருத்தியாகவெண்ணினாய்
கடற்படையுடையவக்கடலிலங்கைமன்னனை
யடற்படவடுக்கவல்லபாதவண்ணமல்லையே (௮)

களங்குளிர்ந்திலங்குபோதனாதலானுமாலுமாய்
வளங்கிளம்பொனங்கழல்வணங்கிவந்துகாணிலார்
துளங்கிளம்பிறைச்செனித்துருத்தியாய்திருந்தடி
யுளங்குளிர்ந்தபோதெலாமுகந்துகந்துரைப்பனே. (௯)

புத்தர்தத்துவமிலாச்சமணுரைத்தபொய்தனை
யுத்தமமெனக்கொளாதுகந்தெழுந்துவண்டினந்
துத்தநின்றுபண்செயுஞ்சூழ்பொழிற்றுருத்தியெம
பித்தர்பித்தனைத்தொழப்பிறப்பறுதல்பெற்றியே. (௧௦)

கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாயினானவன்பகர்ந்தசொற்களாற்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பிண்டத்தைக்கழிக்கவேண்டிற்பிரானையேபிதற்றுமின்க
ளண்டத்தைக்கழியநீண்டவடலரக்கன்றனுண்மை
கண்டொத்துக்கால்விரலாலூன்றிமீண்டருளிச்செய்த
துண்டத்துத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்துருத்தியுந் திருவேள்விக்குடியும்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - காந்தாரம் (எ-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

மின்னுமாமேகங்கள்பொழிந்திழிந்தருவி
வெடிபடக்கரையொடுந்திரைகொணர்ந்தெற்று
மன்னுமாங்காவிரியின்கரையுறைவா
ரடியிணைதொழுதெழுமன்பராமடியார்
சொன்னவாறறிவார்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னென்னைநான்மறக்குமாறெம்பெருமானை
யென்னுடம்படும்பிணியிடர்கெடுத்தானை. (௧)

கூடுமாறுள்ளனகூடியுங்கோத்துங்
கொய்புனலேனலோடைவனஞ்சிதறி
மாடுமாகோங்கமேமருதமேபொருது
மலையெனக்குலைகளைமறிக்குமாறுந்தி
யோடுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயேன்
பாடுமாறறிகிலேனெம்பெருமானைப்
பழவினையுள்ளனபற்றறுத்தானை (௨)

கொல்லுமாலியானையின்கொம்பொடுவெம்பார்
கொழுங்கனிச்செழும்பயன்கொண்டுகூட்டெய்திப்
புல்கியுந்தாழ்ந்தும்போந்துலவுஞ்செயும்
போகரும்யோகரும்புலரிவாய்மூழ்கச்
செல்லுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயேன்
சொல்லுமாறறிகிலேனெம்பெருமானைத்
தொடர்ந்தடுங்கடும்பிணித்தொடர்வொழித்தானை. (௩)

பொறியுமாசந்தனத்துண்டமொடகிலும்
பொழிந்திழிந்தருவிகள்புன்புலன்கவரக்
கறியுமாமிளகொடுகதலியுமுந்திக்
கடலுறவிளைப்பதேகருதித்தன்கைபோ

யெறியுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னறியுமாறறிகிலேனெம்பெருமானை
யருவினையுள்ளனவாசறுத்தானை. (௪)

பொழிந்திழிமும்மதக்களிற்றினமருப்பும்
பொன்மலர்வேங்கையினமலருந்தி
யிழிந்திழிந்தருவிகள்கடும்புனலீண்டி
யெண்டிசையோர்களுமாடவந்திங்கே
சுழிந்திழிகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னொழிந்திலேன்பிதற்றுமாறெம்பெருமானை
யுற்றநோயிற்றையேயுறவொழித்தானை. (௫)

புகழுமாசந்தனத்துண்டமொடகிலும்
பொன்மணிவரன்றியுநுரைபொருந்தி
பகழுமாவருங்கரைவளம்படப்பெருகி
யாடுவார்பாவந்தீர்த்தருச்சனமலம்பித்
திகழுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னிகழுமாறறிகிலேனெம்பெருமானை
யிழித்தநோயிம்மையேயொழிக்கவல்லானை. (௬)

வரையின்மாங்கனியொடுவாழையின்கனியும்
வருடியும்வணங்கியுமாமரம்பொருது
கரையுமாகருங்கடல்காண்பதேகருத்தாய்க்
காமபீலிசுமந்தொளிர்நித்திலங்கைபோய்
விரையுமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னுரையுமாறறிகிலேனெம்பெருமானை
யுலகறிபழவினையறவொழித்தானை (௭)

ஊருமாதேசமேமனமுகந்துள்ளிப்
புள்ளினம்பலபடிந்தொலைசெய்யுங்களக்
காருமாகருங்கடல்காண்பதேகருத்தாய்க்
கவரிமாமயிர்சுமந்தொண்பளிங்கிடறித்
தேருமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயே
னேருமாறறிகிலேனெம்பெருமானை
யம்மைநோயிம்மையேயாசறுத்தானை. (௮)

புலங்களைவளம்படப்போக்கறப்பெருக்கிப்
பொன்களேசுமந்தெங்கும்பூசல்செய்தார்ப்ப
விலங்குமாமுதத்திரேடினமணியிடறி
யிருகரைப்பெருமரம்பீழ்ந்துகொண்டெற்றிக்
கலங்குமாகாவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்செடியனேனாயேன்

விலங்குமாறறிகிலேனெம்பெருமானை
மேலைநோயிம்மையேவீடுவித்தானை. (௯)

மங்கையோர்கூறுகந்தேறுகந்தேறி
மாறலார்திரிபுரநீறெழச்செற்ற
வங்கையான்கழலடியன்றிமற்றறியா
னடியவனாககடியவன்றொழுவனூரன்
கங்கையார்காவிரித்துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச்சேர்த்தியபாட
றங்கையாற்றொழுதுதந்நாவினைமேற்கொள்வார்
தவநெறிசென்றமருலகமாள்வாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

* சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாவடுதுறையை அகன்று, திருத்துருத்திக்குப் போய்ச் சுவாமியை வணங்கி, "அடியேனுடைய சரீரத்தின்மேலே பொருந்திய நோயைநீக்கியருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்கச் சிவபெருமான் "நீ இக்கோயிலுக்கு வடபுறத்தில் இருக்கின்ற தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணுவாயாகில் இந்நோய் நீங்கிவிடும்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதைக்கேட்டுச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சுவாமியை வணங்கிக்கொண்டு அவருடைய திருவடிகளிலே அன்போடு பதிந்த இருதயத்துடனே அத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினார். உடனே அவருடைய திருமேனி நோய் நீங்கிக் கண்டவர்கள் அதிசயிக்கும்படி கரையேறித் திருக்கோயிலிலே போய்ச் சுவாமியை வணங்கி "மின்னுமாமேகங்கள்" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார்.

திருத்துருத்தித்திருப்பதிகம் - ௩.

சுவாமி - உத்தரவேதீசுவரர்.
தேவி - மிருதுமுகிழாம்பிகை.

ஆ திருப்பதிகம் - ௬௦.

## ௩௮. திருவழுந்தூர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

தொழுமாறுவல்லார்துயர்தீரநினைந்
தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
யழுமாறுவல்லாரழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௧)

கடலேறியநஞ்சமுதுண்டவனே
யுடலேயுயிரேயுணர்வேயெழிலே
யடலேறுடையாயழுந்தைமறையோர்
விடலேதொழுமாமடமேவினையே. (௨)

கழிகாடலனேகனலாடலினாய
பழிபாடிலனேயவையேபயிலும
மொழிபாடலராயழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௩)

வானேமலையேயெனமன்னுயிரே
தானேதொழுவார்தொழுதாண்மணியே
யானேசிவனேயழுந்தையவரெம்
மானேயெனமாமடமன்னினையே. (௪)

அலையார்புனல்சூழழுந்தைப்பெருமா
னிலையார்மறியுநிறைவெண்மழுவு
மிலையார்படையுமிவையேந்துசெல்வந்
நிலையாவதுகொள்ளெனநீநினையே (௫)

நறவார்தலையினயவாவுலகிற்
பிறவாதவனேபிணியில்லவனே
யறையார்கழலாயழுந்தைமறையோர்
மறவாதொழுமாமடமன்னினையே. (௬)

நடமாடுவல்லாய்தலைவாமதியஞ்
சுடுமாடுவல்லாய்சுடர்ச்சடையில
லடுமாடுவல்லாயழுந்தைமறையோர்
நெடுமாநகர்கைதொழநின்றனையே. (௭)

பெரியாயசிறியாய்பிறையாயமிடறு
கரியாய்கரிகாடுயர்வீடுடையா
யரியாயெளியாயழுந்தைமறையோர்
வெரியார்தொழுமாமடமேவினையே. (௮)

மணிநீண்முடியான்மலையையரக்கன்
றணியாதெடுத்தானுடலம்நெரித்த
வணியார்விரலாயழுந்தைமறையோர்
மணிமாமடமன்னியிருந்தனையே. (௯)

முடியார்சடையாய்முனநாளிருவர்
நெடியான்மலரானிகழ்வாலிவர்க
ளடிமேலறியாரழுந்தைமறையோர்
படியாற்றொழுமாமடம்பற்றினையே. (௧௦)

அருஞானம்வல்லாரழுந்தைமறையோர்
பெருஞானமுடைப்பெருமானவனைத்
திருஞானசம்பந்தனசெந்தமிழ்க
ளொருஞானமுண்டாமுணர்ந்தார்தமக்கே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - வேதபுரிநாதர்
தேவி - சௌந்தரநாயகி

ஆக திருப்பதிகம் - ௩௮.

## ௩௯. திருமயிலாடுதுறை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம் (௧ திருமுறை)

திருச்சிற்றம்பலம்

கரவின்றிநன்மாமலர்கொண்டே
யிரவும்பகலுந்தொழுவார்கள்
சிரமொன்றியசெஞ்சடையான்வாழ்
வரமாமயிலாடுதுறையே (௧)

உரவெங்கரியின்னுரிபோர்த்த
பரமன்னுறையும்பதியென்பர்
குரவஞ்சுரபுன்னையும்வன்னி
மருவும்மயிலாடுதுறையே (௨)

ஊனத்திருணீங்கிடவேண்டின்
ஞானப்பொருள்கொண்டடிபேணுந்
தேனொத்தினியானமருஞ்சேர்
வானம்மயிலாடுதுறையே (௩)

அஞ்சப்புலனும்மவைசெற்ற
மஞ்சன்மயிலாடுதுறையை
நெஞ்சொன்றிநினைந்தெழுவார்மேற்
றுஞ்சும்பிணியாயினதானே (௪)

தணியார்மதிசெஞ்சடையான்ற
னணியார்ந்தவருக்கருளென்றும்
பிணியாயினதீர்த்தருள்செய்யு
மணியான்மயிலாடுதுறையே. (௫)

தொண்டரிசைபாடியுங்கூடிக்
கண்டுதுதிசெய்தவனூராம்
பண்டும்பலவேதியரோத
வண்டார்மயிலாடுதுறையே. (௬)

* திருமயிலாடுதுறை என்பது மாயூரம்.

அணங்கோடொருபாகமமர்ந்து
விணங்கியருள்செய்தவனூரா
நுணங்கும்புரிநூலர்கள்கூடி
வணங்கும்மயிலாடுதுறையே. (எ)

சிரங்கையினிலேந்தியிரந்த
பரங்கொள்பரமேட்டிவரையா
லரங்கவ்வரக்கன்வலிசெற்ற
வரங்கொண்மயிலாடுதுறையே (அ)

ஞாலத்தைநுகர்ந்தவன்றானுங்
கோலத்தயனுமறியாத
சீலத்தவனூர்சிலர்கூடி
மாலைத்தீர்மயிலாடுதுறையே (கூ)

நின்றுண்சமணுநெடுந்தேர
ரொன்றும்மறியாமையுயர்ந்த
வென்றியருளானவனூரா
மன்றன்மயிலாடுதுறையே (க0)

நயர்காழியுண்ஞானசம்பந்தன
மயர்தீர்மயிலாடுதுறைமேற்
செயலாலுரைசெய்தனபத்து
முயர்வாமிவையுற்றுணர்வார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

பண் - சாதாரி (ங-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

ஏனவெயிறாடரவொடென்புவரியாமையிவைபூண்டிளையராயக்
கானவரிநீடுழுவையதளுடையபடர்சடையர்காணிபெனலா
மானபுகழ்வேதியர்களாகுதியின்மீதுபுகைபோகியழகார்
வானமுறுசோலைமிசைமாசுபடமூசுமயிலாடுதுறையே. (க)

அந்தண்மதிசெஞ்சடையரங்கணெழில்கொன்றையொடணிந்தழகரா
மெந்தமடிகட்கினியதானமதுவேண்டிலெழிலார்பதியதாங்
கந்தமலிசந்தினொடுகாரகிலும்வாரிவருகாவிரியுளால
வந்ததிரையுந்தியெதிர்மந்திமலர்சிந்துமயிலாடுதுறையே. (உ)

தோளின்மிசைவரியரவநஞ்சமழலவீக்கிமிகநோக்கரியராய்
மூளைபடுவெண்டலையிலுண்டுமுதுகாடுறையுமுதல்வரிடமாம்
பாளைபடுபைங்கமுகுசெங்கனியுதிர்த்திடநிரந்துகமழ்பூ
வாளைகுதிகொள்ளமடலவிரியமணநாறுமயிலாடுதுறையே. (ங)

ஏதமிலரரியமறைமலையர்மகளாகியவிலங்குநுதலொண்
பேதைதடமார்பதிடமாகவுறைகின்றபெருமானதிடமாங்
காதன்மிகுகவ்வையொடுமவ்வலவைகூடிவருகாவிரியுளான்
மாதர்மறிதிரைகள்புகவெறியவெறிகமழுமயிலாடுதுறையே (ச)

பூவிரிகதுப்பின்மடமங்கையரகந்தொறுநடந்துபலிதேர்
பாவிரியிசைக்குரியபாடல்பயிலும்பரமர்பழமையெனலாங்
காவிரிநுரைத்திருகரைக்குமணிசிந்தவரிவண்டுகவர
மாவிரிமதுக்கிழியமந்திகுதிகொள்ளுமயிலாடுதுறையே. (௫)

கடந்திகழ்கருங்களிறுரித்துமையுமஞ்சமிகநோக்கரியராய்
விடந்திகழுமூவிலைநல்வேலுடையவேதியர்விரும்புமிடமாந் [துவர்வாய்
தொடர்ந்தொளிகிடந்ததொருசோதிமிகுதொண்டையெழில்கொண்ட
மடந்தையர்குடைந்தபுனல்வாசமிகநாறுமயிலாடுதுறையே. (௬)

அவ்வதிசையாருமடியாருமுளராகவருள்செய்துவர்கண்மே
லெவ்வமறவைகலுமிரங்கியெரியாடுமெமதீசனிடமாங்
கவ்வையொடுகாவிரிகலந்துவருதெண்டிரைநிரந்துகமழ்பூ
மவ்வலொடுமாதவிமயங்குமணநாறுமயிலாடுதுறையே. (௭)

இலங்கைநகர்மன்னன்முடியொருபதினொடிருபதுந்தொலைநெரியவிரலால்
விலங்கலிலடர்த்தருள்புரிந்தவரிருந்தவிடம்வினவுதிர்களேற்
கலங்கனுரையுந்தியெதிர்வந்தகயமூழ்கிமலர்கொண்டுமகிழா
மலங்கிவருகாவிரிநிரந்துபொழிகின்றமயிலாடுதுறையே (௮)

ஒண்டிறலினான்முகனுமாலுமிகநேடியுணராதவகையா
லண்டமுறவங்கியுருவாகிமிகநீண்டவரனாரிடமதாங்
கெண்டையிரைகொண்டுகெளிறாருளிருந்துகிளவாயமுறுதல்சேர்
வண்டன்மணல்கெண்டிமடநாரைவிளையாடுமயிலாடுதுறையே (௯)

மிண்டுதிறலமணரொடுசாக்கியருமலர்தூற்றுபிதற்றுமேலா
னின்னடைகுடிகொண்டசடையோகனலைபெருமானதிறமெய்ப்பெரியோர்
தெண்டிரைபரந்தொழுகுகாவிரியதென்கரைநிரந்துகமழ்பூ
வண்டடைகிளைக்கமதுவந்தொழுகுசோலைமயிலாடுதுறையே (௧௦)

நிணந்தருமயானநிலவானமதியாததொருசூலமொடுபேய்க்
கணந்தொழுகபாலிகழலேத்திமிகவாய்த்ததொருதன்மையினன்
மணந்தண்மலிகாழிமறைஞானசம்பந்தன்மயிலாடுதுறையைப்
புணர்ந்ததமிழ்பத்துமிசையாலுரைசெய்வார்பெறுவர்பொன்னுலகமே

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுநாயனார்

### திருக்குறுந்தொகை (௫-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

கொள்ளுங்காதன்மைபெய்துறுங்கோலவளை
யுள்ளமுள்கியுரைக்குந்திருப்பெயர்
வள்ளன்மாமயிலாடுதுறையுறை
வெள்ளந்தாங்குசடையனைவேண்டியே. (௧)

சித்தந்தேறுஞ்செறிவளைசிக்கெனும்
பச்சைதீருமென்பைங்கொடிபான்மதி
வைத்தமாமயிலாடுதுறையரன்
கொத்தினிற்பொலிகொன்றைகொடுக்கிலே. (௨)

# ச௦. திருவிளநகர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரம். (உ-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஒளிரிளம்பிறைசென்னிமேலுடையார்கோவணவாடையர்
குளிரிளம்மழைதவழ்பொழிற்கோலநீர்மல்குகாவிரி
நளிரிளம்புனல்வார்துறைநங்கைகங்கையைநண்ணினார்
மிளிரிளம்பொறியரவினார்மேயதுவிளநகரதே (க)

அக்கரவ்வணிகலனெனவதனொடார்த்ததோராமைபூண்
டுக்கவர்சுடுநீறணிந்தொளிமல்குபுனற்காவிரிப்
புக்கவர்துயர்கெடுகெனப்பூசுவெண்பொடிமேவிய
மிக்கவர்வழிபாடுசெய்விளநகரவர்மேயதே (உ)

வாளிசேரடங்கார்மதிற்றொலையநூறியவம்பின்வேய்த்
தோளிபாகமமர்ந்தவருயர்ந்ததொல்கடனஞ்சுடன்
காளமல்கியகண்டத்தர்கதிர்விரிசுடர்முடியினர்
மீளியேறுகந்தேறினார்மேயதுவிளநகரதே (ங)

காலவிளங்கெரிகழலினார்கையிலங்கியவேலினார்
நூலவிளங்கியமார்பினார்நோயிலார்பிறப்புமிலார்
மாலவிளங்கொளிமல்கியமாசிலாமணிமிடறினார்
மேலவிளங்குவெண்பிறையினார்மேயதுவிளநகரதே. (ச)

பன்னினார்மறைபாடினார்பாயசீர்ப்பழங்காவிரித்
துன்னுதண்டுறைமுன்னினார்தூநெறிபெறுவாரெனச்
சென்னிதிங்களைப்பொங்கராக்கங்கையோடுடனேசேர்த்தினார்
மின்னுபொன்புரிநூலினார்மேயதுவிளநகரதே (ரு)

தேவருமமரர்களுந்திசைகண்மேலுளதெய்வமும்
யாவருமறியாததோரமதியாற்றழலுருவினார்
மூவருமவரென்னவுமுதல்வருமவரென்னவு
மேவரும்பொருளாயினார்மேயதுவிளநகரதே (சு)

சொற்றருமறைபாடினார்சுடர்விடுஞ்சடைமுடியினார்
கற்றருவடங்கையினார்காவிரித்துறைகாட்டினார்
மற்றருதிரடோளினார்மாசில்வெண்பொடிப்பூசினார்
விற்றருமணிமிடறினார்மேயதுவிளநகரதே. (எ)

படர்தருஞ்சடைமுடியினார்பைங்கழலடிபரவுவா
ரடர்தரும்பிணிகெடுகெனவருளுவாரரவரையினார்
விடர்தரும்மணிமிடறினார்மின்னுபொன்புரிநூலினார்
மிடறரும்படைமழுவினார்மேயதுவிளநகரதே. (அ)

கையிலங்கியவேலினர்தோலினர்கரிகாலினர்
பையிலங்கரவல்குலாள்பாகமாகியபரமனர்
மையிலங்கொளிமலிகியமாசிலாமணிமிடறினர்
மெய்யிலங்குவெண்ணீற்றினர்மேயதுவிளநகரதே. (௯)

உள்ளதன்றனைக்காண்பன்கீழென்றமாமணிவண்ணனு
முள்ளதன்றனைக்காணபன்மேலென்றமாமலரண்ணலு
முள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்கருஞ்சடைமுடியின்மே
லுள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்விளநகர்மேயதே. (௧௦)

மென்சிறைவண்டியாழ்முரல்விளநகர்த்துறைமேவிய
நன்பிறைநுதலண்ணலைச்சண்பைஞானசம்பந்தன்சீ
ரின்புறுதமிழாற்சொன்னவேத்துவார்வினைநீங்கிப்போய்த்
துன்புறுதுயரமிலர்தூநெறிபெறுவார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - துறைகாட்டும்வள்ளல்.
தேவி - தோழிநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௬௫.

---

# ௪௧. திருப்பறியலூர்வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - மேகராககுறிஞ்சி. (௧. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கருத்தன்கடவுள்கனலேந்தியாடு
நிருத்தன்சடைமேனிரம்பாமதியன்
றிருத்தமுடையார்திருப்பறியலூரில்
விருத்தனெனத்தகும்வீரட்டத்தானே. (௧)

மருந்தனமுதன்மயானத்துண்மைந்தன்
பெருந்தண்புனற்சென்னிவைத்தபெருமான்
றிருந்துமறையோர்திருப்பறியலூரில்
விரிந்தமலர்ச்சோலைவீரட்டத்தானே. (௨)

குளிர்ந்தார்சடையன்கொடுஞ்சிலைவிற்காமன்
விளிந்தானடங்கவியந்தெய்தச்செற்றான்
றெளிந்தார்மறையோர்திருப்பறியலூரின்
மிளிர்ந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௩)

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
செறப்பாதியந்தஞ்செலச்செயுந்தேசன்
சிறப்பாடுடையார்திருப்பறியலூரில
விறற்பாரிடஞ்சூழ்ந்தவீரட்டத்தானே. (ச)

கரிந்தாரிடுகாட்டிலாடுங்கபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடும்
தெரிந்தார்மறையோர்திருப்பறியலூரில
விரிந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே (ரு)

அரவுற்றநாணாவனலம்பதாகச்
செருவுற்றவர்புரந்தீயெழச்செற்றான்
றெருவிற்கொடிசூழ்திருப்பறியலூரில
வெருவுற்றவர்தொழுமவீரட்டத்தானே (சு)

நரையார்விடையானலங்கொளபெருமா
னரையாரரவம்மழகாவசைத்தான்
றிரையார்புனலசூழ்திருப்பறியலூரில
விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே (எ)

வளைக்குமெயிற்றினரக்கனவரைக்கீ
ழிளைக்கும்படிதானிருந்தேழையனனங்
திளைக்கும்படுகற்திருப்பறியலூரில
விளைக்கும்வயலசூழ்ந்தவீரட்டத்தானே (அ)

வளங்கொண்மலர்மேலயனோதவண்ணன்
றுளங்குமனத்தார்தொழத்தழலாயநின்று
னிளங்கொம்பனாளோடிணைந்துமபிணைந்தும்
விளங்குந்திருப்பறியலவீரட்டத்தானே (கூ)

சடையன்பிறையன்சமண்சாக்கியரோ
டடையன்பிலாதானடியார்பெருமா
னுடையன்புலியினுரிதோலரைமேல
விடையன்றிருப்பறியலவீரட்டத்தானே. (க0)

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீர்த்திருப்பறியல்வீரட்டத்தானைப்
பொறிநீடரவன்புனைபாடல்வல்லாாக
கறுநீடவலமறும்பிறப்புததானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - வீரட்டநாதர்.
தேவி - இளங்கொம்பனையாள்.

---

ஆ திருப்பதிகம் - கசு.

---

# ௪௨. திருச்செம்பொன்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம். (௲ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மருவார்குழலிமாதோர்பாகமாய்த்
திருவார்செம்பொன்பள்ளிமேவிய
கருவார்கண்டத்தீசன்கழல்களை
மருவாதவர்மேன்மன்னும்பாவமே. (௧)

வாரார்கொங்கைமாதோர்பாகமாய்ச்
சீரார்செம்பொன்பள்ளிமேவிய
வேரார்புரிபுன்சடையெம்மீசனைச்
சேராதவர்மேற்சேரும்வினைகளே. (௨)

வரையார்சந்தோடகிலும்வருபொன்னித்
திரையார்செம்பொன்பள்ளிமேவிய
நரையார்விடையொன்றூரும்நம்பனை
யுரையாதவர்மேலொழியாவூனமே. (௩)

மழுவாளேந்திமாதோர்பாகமாய்ச்
செழுவார்செம்பொன்பள்ளிமேவிய
வெழிலார்புரிபுன்சடையெம்மிறைவனைத்
தொழுவார்தம்மேற்றுயரமில்லையே. (௪)

மலையான்மகளோடுடனாய்மதிலெய்த
சிலையார்செம்பொன்பள்ளியானையே
யிலையார்மலர்கொண்டெல்லிநண்பக
னிலையாவணங்கநில்லாவினைகளே. (௫)

அறையார்புனலோடகிலும்வருபொன்னிச்
சிறையார்செம்பொன்பள்ளிமேவிய
கறையார்கண்டத்தீசன்கழல்களை
நிறையால்வணங்கநில்லாவினைகளே. (௬)

பையாரரவேரல்குலாளொடுஞ்
செய்யார்செம்பொன்பள்ளிமேவிய
கையார்சூலமேந்துகடவுளை
மெய்யால்வணங்கமேவாவினைகளே. (௭)

வானார்திங்கள்வளர்புன்சடைவைத்துத்
தேனார்செம்பொன்பள்ளிமேவிய
வூனார்தலையிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
யானான்கழலேயடைந்துவாழ்மினே. (௮)

காரார்வண்ணன்கனகமனையானுந்
தேரார்செம்பொன்பள்ளிமேவிய
நீரார்நிமிர்புன்சடையெந்நிமலனை
யோராதவர்மேலொழியாவூனமே (௯)

மாசாருடம்பர்மண்டைத்தேரரும்
பேசாவண்ணம்பேசித்திரியவே
தேசார்செம்பொன்பள்ளிமேவிய
வீசாவென்னநில்லாவிடர்களே (௧௦)

நறவார்புகலிஞானசம்பந்தன்
செறுவார்செம்பொன்பள்ளிமேயானைப்
பெறுமாறிசையாற்பாடலிவைபத்து
முறுமாசொல்லவோங்கிவாழ்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்

திருநேரிசை. (௪-ம. திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

ஊனினுள்ளுயிரைவாட்டியுணர்வினார்க்கெளியராகி
வானினுள்வானவர்க்குமறியலாகாதவஞ்சர்
நானெனிற்றானேயென்னுஞானத்தார்பத்தர்நெஞ்சுட்
டேனுமின்னமுதுமானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௧)

நொய்யவர்விழுமியாருநூலினுண்ணெறியைக்காட்டு
மெய்யவர்பொய்யுமில்லாருடலெனுமிடிஞ்சிறன்னி
னெய்யமர்திரியுமாகிநெஞ்சத்துளொளியுமாகிச்
செய்யவர்கரியகண்டர்திருச்செம்பொன்பள்ளியாரே. (௨)

வெள்ளியாகரியர்செய்யர்விண்ணவரவர்கணெஞ்சு
ளொள்ளியரூழியூழியுலகமதேத்தநின்ற
பள்ளியர்நெஞ்சத்துள்ளார்பஞ்சமம்பாடியாடுந்
தெள்ளியர்கள்ளந்தீர்ப்பார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௩)

தந்தையுந்தாயுமாகித்தானவன்ஞானமூர்த்தி
முந்தியதேவர்கூடிமுறைமுறையிருக்குச்சொல்லி
யெந்தைநீசரணமென்றங்கிமையவர்பரவியேத்தச்
சிந்தையுட்சிவமதானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௪)

ஆறுடைச்சடையர்போலுமன்பருக்கன்பர்போலுங்
கூறுடைமெய்யர்போலுங்கோளரவரையர்போலு
நீறுடையழகர்போலுநெய்தலேகமழுநீர்மைச்
சேறுடைக்கமலவேலித்திருச்செம்பொன்பள்ளியாரே. (௫)

ஞாலமுமறியவேண்டினன்றெனவாழலுற்றீர்
காலமுங்கழியவானகள்ளத்தையொழியகில்லீர்
கோலமும்வேண்டாவார்வச்செற்றங்கள்குரோதநீக்கிற்
சீலமுநோன்புமாவார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௬)

புரிகாலேநேசஞ்செய்யவிருந்தபுண்டரீகத்தாரு
மெரிகாலேமூன்றுமாகியிமையவர்தொழநின்றாருந்
தெரிகாலேமூன்றுசந்திதியானித்துவணங்கநின்று
திரிகாலங்கண்டவெந்தைதிருச்செம்பொன்பள்ளியாரே. (எ)

காருடைக்கொன்றைமாலைகதிர்மதியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியுள்ளார்
பாரொடுவிண்ணுமண்ணும்பதினெட்டுக்கணங்களேத்தச்
சீரொடுபாடலானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (அ)

ஓவாதமறைவலாருமோதநீர்வண்ணன்காணா
மூவாதபிறப்பிலாருமுனிகளானார்களேத்தும
பூவானமூன்றுமுந்நூற்றறுபதுமாகுமெந்தை
தேவாதிதேவரென்றுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (கூ)

அங்கங்களாறுநான்குமந்தணர்க்கருளிச்செய்து
சங்கங்கள்பாடவாடுஞ்சங்கரன்மலையெடுத்தா
னங்கங்களுதிர்ந்துசோரவலறிடவடர்த்துநின்றுஞ்
செங்கணவெள்ளேறதேறுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை (ரு-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

கானறாதகடிபொழில்வண்டினந்
தேனறாததிருச்செம்பொன்பள்ளியா
னூனறாததோர்வெண்டலையிற்பலி
தானறாததோர்கொள்கையன்காண்மினே. (க)

என்புமாமையும்பூண்டங்குழிதர்வாக்
கன்புமாயிடுமாயிழையீரினிச்
செம்பொன்பள்ளியுளான்சிவலோகனை
நம்பொன்பள்ளியுள்கவினைநாசமே. (உ)

வேறுகோலத்தராணலர்பெண்ணலர்
நீறுகோவணமைந்துகிலாடையர்
தேறலாவதொன்றன்றுசெம்பொன்பள்ளி
யாறுசூடியவண்ணலவனையே. (ங)

அருவராததோர்வெண்டலையேந்திவந்
திருவராயிடுவார்கடைதேடுவார்
தெருவெலாமுழல்வார்செம்பொன்பள்ளியா
ரொருவர்தாம்பலபேருளர்காண்மினே. (ச)

பூவுலாஞ்சடைமேற்புனல்சூடினு
னேவலாலெயின்மூன்றுமெரித்தவன்
றேவர்சென்றிறைஞ்சுஞ்செம்பொன்பள்ளியான்
மூவராய்முதலாய்நின்றமூர்த்தியே. (ரு)

சலவராயொருபாம்பொடுதெண்மதி
கலவராவதின்காரணமென்கொலோ
திலகநீண்முடியார்செம்பொன்பள்ளியா
குலவிலாலெயின்மூன்றெய்தகூத்தரே. (சு)

கைகொள்சூலத்தர்கட்டுவாங்கத்தினர்
மைகொள்கண்டத்தராகியிருசுடர்
செய்யமேனிவெண்ணீற்றர்செம்பொன்பள்ளி
யையாகையதோரைந்தலைநாகமே (எ)

வெங்கணாகமவெருவுறவார்த்தவர்
பைங்கணானையின்றுரிபோர்த்தவர்
செங்கண்மாலவிடையார்செம்பொன்பள்ளியா
ரங்கணயடைந்தார்வினைதீர்ப்பரே (அ)

நன்றிநாரணனான்முகனென்றிவர்
நின்றநீணமுடியோடடிகாணப்புற்றவ
சென்றுகாண்பரியான்செம்பொன்பள்ளியா
னின்றசூழலினீளெரியாகியே (கூ)

திரியுமும்மதில்செங்கணையாற்றிரு
லெரியவெய்தனமேலோட்டியிலங்கைக்கோ
னெரியவூன்றியிட்டார்செம்பொன்பள்ளியா
ரரியவானமவரருள்செய்வரே (ய)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் - ங.

---

சுவாமி - சுவர்ணபுரிநாதர்
தேவி - சுகந்தவனநாயகி

---

ஆக திருப்பதிகம் - ருகூ.

---

# சந. திருநனிபள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைககாந்தாரம. (உ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம.

*காரைகள்கூகைமுல்லைகளவாகைபீகைபடர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்மேவுசோலைநகர்தான்
தேரைகளாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள். (க)

சடையிடைப்புக்கொடுங்கியுளதங்குவெள்ளம்வளர்திங்கள்கண்ணியயலே
யிடையிடைவைத்ததொக்குமலர்தொத்துமாலையிறைவன்னிடங்கொள
மடையிடைவாளைபாயமுகிழ்வாய்நெரிந்துமணநாறுநீலமலரு[பதிதான்
நடையுடையன்னம்வைகுபுனலம்படப்பைநனிபள்ளிபோலுநமர்காள.

பெறுமலர்கொண்டுதொண்டர்வழிபாடுசெய்யலொழிபாடிலாதபெருமா
கறுமலர்கண்டமாகவிடமுண்டகாளையிடமாயகாதனகர்தான் [ன்
வெறுமலர்தொடடுவிட்டவிசைபோனகொம்பின்விடுபோதலர்ந்தவிரை
நறுமலரல்லிபுல்லியொலிவண்டுறங்குநனிபள்ளிபோலுநமர்காள். [சூழ்

குளிர்தருகங்கைதங்குசடைமாடிலங்குதலைமாலையோடுகுலவி
யொளிதருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்தநகர்தான்
குளிர்தருகொம்பிலேறிகுயில்பாடல்கேட்டபெடைவண்டுதானுமுரல
நளிர்தருசோலைமாலைநரைகுருகுவைகுநனிபள்ளிபோலுநமர்காள். (௪)

தோடொருகாதனாகியொருகாதிலங்குசுரிசங்கநின்றுபுரளக
காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிரலா
னாடுடனாடுசெம்மையொலிவெள்ளமாருநனிபள்ளிபோலுநமர்காள். (௫)

மேகமொடோடுதிங்கண்மலராவணிந்துமலையானமடந்தைமணிபொன்
னாகமொர்பாகமாகவனலாடுமெந்தைபெருமானமர்ந்தநகர்தா
னூகமொடாடுமந்திகளுஞ்சிலம்பவகிலுந்தியொண்பொனிடறி
நாகமொடாரமவாருபுனல்வந்தலைக்குநனிபள்ளிபோலுநமர்காள். (௬)

தகைமலிதண்டுசூலமனலுமிழுநாகங்கொடுகொட்டிவீணைமுரல
வகைமலிவன்னிகொன்றைமதமத்தமவைத்தபெருமானுகந்தநகர்தான்
புகைமலிகந்தமாலைபுனைவார்கள்பூசல்பணிவார்கள்பாடல்பெருகி
நகைமலிமுத்திலங்குமணல்சூழ்கிடக்கைநனிபள்ளிபோலுநமர்காள். ()

வலமிகுவாளன்வேலன்வளைவாளெயிற்றுமதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்கணொல்கவிரலாலடர்த்தபெருமானுகந்தநகர்தா
னிலமிகுகீழுமேலுநிகராதுமில்லையெனநின்றநீதியதனை
நலமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். ()

நிறவுருவொன்றுதோன்றியெரியொன்றிநின்றதொருநீர்மைசீர்மைநினை
ரறவுருவேதநாவனயனோடுமாலுமறியாதவண்ணனகர்தான் [யா
புறவிரிமுல்லைமௌவல்குளிர்பிண்டிபுன்னை புனைகொன்றைதுன்றுபொ
நறவிரிபோதுதாதுபுதுவாசநாறுநனிபள்ளிபோலுநமர்காள். [துளி

அனமிகுசெல்குசோறுகொணர்கென்றுகையிலிடவுண்டுபட்டவமணும்
மனமிகுகஞ்சிமண்டையதிலுண்டுதொண்டர்குணமின்றிநின்றவடிவும்
வினைமிகுவேதநான்கும்விரிவித்தநாவின்விடையானுகந்தநகர்தா
னனைமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள்.()

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுமறையொன்றவத்தர்பியன்மேலிருந்தினிசையாலுரைத்தபனுவ
னடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தப்பிள்ளையார் பல தலங்களையும் பணிந்துகொண்டு, திருநனிபள்ளியைச் சமீபிக்கும்போது, அது பாலைநிலமாக விருந்தபடியால், அங்குள்ள அடியார்கள் வேண்டுகோளின்படி, நெய்தனிலமாகும் வண்ணம் "காரைகள் கூகைமுல்லை" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார். அவ்வாறேபாலை நெய்தலாயிற்று.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

முற்றுணையாயினானைமூவர்க்குமுதல்வன்றன்னைச்
சொற்றுணையாயினானைச்சோதியையாதரித்து
வுற்றுணர்ந்துருகியூறியுள்கசிவுடையவர்க்கு
நற்றுணையாவர்போலுநனிபள்ளியடிகளாரே. (௧)

புலர்ந்தகாலைப்பூவுநீருங்கொண்டடிபோற்றமாட்டா
வலஞ்செய்துவாயினூலால்வட்டணைப்பந்தர்செய்த
சிலந்தியையரசனாக்கிச்சீர்மைகளருளவல்லார்
நலந்திகழ்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே. (௨)

எண்பதும்பத்துமாறுமென்னுளேயிருந்துமன்னிக்
கண்பழக்கொன்றுமின்றிக்கலக்கநானலைக்கழிந்தேன்
செண்பகந்திகழும்புன்னைசெழுந்திரட்குரவம்வேங்கை
நண்புசெய்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே. (௩)

பண்ணினார்பாடலாகிப்பழத்தினிலிரதமாகிக்
கண்ணினார்பார்வையாகிக்கருத்தொடுகற்பமாகி
யெண்ணினாரெண்ணமாகியேழுலகனைத்துமாகி
நண்ணினார்வினைகடீர்ப்பார்நனிபள்ளியடிகளாரே. (௪)

துஞ்சிருள்காலைமாலைதொடர்ச்சியைமறந்திராதே
யஞ்செழுத்தோதிநாளுமரனடிக்கன்பதாகும்
வஞ்சனைப்பாற்சோறாக்கிவழக்கிலாவமணர்தந்த
நஞ்சமுதாக்குவித்தார்நனிபள்ளியடிகளாரே (௫)

செம்மலர்க்கமலத்தோனுந்திருமுடிகாணமாட்டா
னம்மலர்ப்பாதங்காண்பானாழியானகழ்ந்துங்காணா
னின்மலனென்றங்கேத்துநினைப்பினையருளிநாளு
நம்மலமறுப்பர்போலுநனிபள்ளியடிகளாரே (௬)

அரவத்தாலவரையைச்சுற்றியமரரோடசுரர்கூடி
யரவித்துக்கடையத்தோன்றுமாலநஞ்சமுதாவுண்டார்
விரவித்தமடியராகிவீடிலாததொண்டர்தம்மை
நரகத்தில்வீழவொட்டார்நனிபள்ளியடிகளாரே. (௭)

மண்ணுளேதிரியும்போதுவருவனபலவுங்குற்றம்
புண்ணுளேபுரைபுரையன்புழுப்பொதிபொள்ளலாக்கை. (௮,௯)

பத்துமோரிரட்டிதோளான்பாரித்துமலையெடுக்கப்
பத்துமோரிரட்டிதோள்கள்படருடம்படரவூன்றிப்
பத்துவாய்கீதம்பாடப்பரிந்தவற்கருள்கொடுத்தார்
பத்தர்தாம்பரவியேத்துநனிபள்ளிப்பரமனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - பஞ்சமம். (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஆதியன்னாதிரையன்னயன்மாலறிதற்கரிய
சோதியன்சொற்பொருளாய்ச்சுருங்காமறைநான்கினைய
மோதியனும்பர்தங்கோனுலகத்தினுளெவ்வுயிர்க்கு
நாதியனம்பெருமானண்ணுமூர்நணிபள்ளியதே. (க)

உறவிலியூனமிலியுணரார்புரமூன்றெரியச்
செறுவிலிதன்னினைவார்வினையாயினதேய்ந்தழிய
வறவிலகுமமருளான்மருளார்மொழிவண்டறையு
நறவிரிகொன்றையினானணுமூர்நணிபள்ளியதே. (உ)

வானுடையான்பெரியான்மனத்தாலுநினைப்பரியா
னானிடையைந்தமர்ந்தானனுவாகியொர்தீயுருகொண்
டேனுடையிவ்வுடலமொடுங்கிப்புகுந்தான்பரந்தா
னானுடைமாடெம்பிரானணுமூர்நணிபள்ளியதே. (ங)

ஓடுடையன்கலனாவுடைகோவணவன்னுமையோர்
பாடுடையன்பலிதேர்ந்துணுமபண்புடையன்பயிலக்
காடுடையன்னிடமாமலையேழுங்கருங்கடல்சூழ்
நாடுடைநம்பெருமானண்ணுமூர்நணிபள்ளியதே. (ச)

பண்ணறகரியதொருபடையாழிதனைப்படைத்து
கண்ணற்கருள்புரிந்தான்கருதாதவர்வேள்வியவி
யுணணற்கிமையவரையுருண்டோடவுதைத்துகந்து
நண்ணறகரியபிரானண்ணுமூர்நணிபள்ளியதே. (ரு)

மலகியசெஞ்சடைமேன்மதியும்மரவுமுடனே
புல்கியவாரணனெம்புனிதன்புரிநூலவிகிர்தன்
மெல்கியவிறலுழிலான்விருப்பன்பெரும்பார்த்தனுக்கு
நலகியநம்பெருமானண்ணுமூர்நணிபள்ளியதே. (சு)

அங்கமொராறவையும்மருமாமறைவேள்விகளு
மெங்குமிருந்தந்தணரெரிமூன்றவையோம்புமிடம்
பங்கயமாமுகத்தாளுமைபங்கனுறைகோயில
செங்கயலபாயும்வயற்றிருவூர்நணிபள்ளியதே. (எ)

திங்கட்குறுந்தெரியற்றிகழ்கண்ணியனுண்ணியனாய்
நங்கட்பிணிகளைவானருமாமருந்தேழ்பிறப்பு
மங்கத்திருவிரலாலடர்த்தான்வல்லரக்கனையு
நங்கட்கருளும்பிரானண்ணுமூர்நணிபள்ளியதே. (அ)

ஏனமருப்பினொடுமெழிலாமையும்பூண்டுகந்து
வானமதிலரணமலையேசிலையாவளைத்தா
ஞானமில்காழிதன்னுளுயர்ஞானசம்பந்தர்க்கன்று
ஞானமருள்புரிந்தானண்ணுமூர்நணிபள்ளியதே. (கூ)

காலமுநாழிகையுந்நனிபள்ளிமனத்தினுள்கிக்
கோலமதாயவனைக்குளிர்நாவலவூரன்சொன்ன
மாலைமதித்துரைப்பார்மண்மறந்துவானோருலகிற்
சாலநல்லின்பமெய்தித்தவலோகத்திருப்பவரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருநனிபள்ளித்திருப்பதிகம் - ௩.

சுவாமி - நற்றுணையப்பர்.
தேவி - பருவதராஜபுத்திரி.

ஆக திருப்பதிகம் - ௧௦௨.

## ௪௬. திருவலம்புரம்.



### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம் (௩-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைதாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையொர்பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே. (௧)

கோத்தகல்லாடையுங்கோவணமுங்கொடுகொட்டிகொண்டொருகைத்
தேய்த்தன்றநங்கனைத்தேசழித்துத்திசையார்தொழுதேத்தக்
காய்த்தகல்லாலதன்கீழிருந்தகடவுளிடம்போலும்
வாய்த்தமுத்தீத்தொழினான்மறையோர்வலம்புரநன்னகரே. (௨)

நொய்யதொர்மான்மறிகைவிரலினுனைமேனிலையாக்கி
மெய்யெரிமேனிவெண்ணீறுபூசிவிரிபுன்சடைதாழ
மையிருஞ்சோலைமணங்கமழவிருந்தாரிடம்போலும்
வைகலுமாமுழவம்மதிரும்வலம்புரநன்னகரே (௩)

ஊனமராக்கையுடம்புதன்னையுணரிற்பொருளன்று
தேனமர்கொன்றையினானடிக்கேசிறுகாலையேத்துமினோ
வானமரைந்துங்கொண்டாட்டுகந்தவடிகளிடம்போலும்
வானவர்நாடொறும்வந்திறைஞ்சும்வலம்புரநன்னகரே. (௪)

செற்றெறிபுந்திரையார்கலுழிச்செழுநீர்கள்செஞ்சடைமே
லற்றறியாதனலாடுநட்டமணியார்தடங்கண்ணி
பெற்றறிவாரெருதேறவல்லபெருமானிடம்போலும்
வற்றறியாப்புனல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. (௫)

உண்ணவண்ணத்தொளிநஞ்சமுண்டுமையோடுடனாகிச்
சுண்ணவண்ணப்பொடிமேனிபூசிச்சுடர்ச்சோதிநின்றிலங்கப்
பண்ணவண்ணத்தனபாணிசெய்யப்பயின்றாரிடம்போலும்
வண்ணவண்ணப்பறைபாணியறாவலம்புரநன்னகரே. (௬)

புரிதருபுன்சடைபொன்றயங்கப்புரிநூல்புரண்டிலங்க
ிரைதருவேழத்தினீருரிதோன்மேன்மூடிவேய்புரைதோ
ரைதருபூந்துகிலாரணங்கையமர்ந்தாரிடம்போலும்
ரைதருதொல்புகழ்வாழ்க்கையறாவலம்புரநன்னகரே. (எ)

ண்டணைதோளிருபத்தினொடுந்தலைபத்துடையானை
யாணடனமாதுமைதானடுங்கவொருகால்விரலூன்றி
ண்டதுதீர்த்தருள்செய்யவல்லவிகிர்தர்க்கிடம்போலும்
ண்டனைதன்னொடுவைகுபொழில்வலம்புரநன்னகரே. (அ)

ருறுதாமரைமேலயனுந்தரணியளந்தானும்
தர்வறியாவகையாலிகலித்திகைத்துத்திரிந்தேத்தப்
பார்வறியாவகையானிமிர்ந்தபெருமானிடம்போலும்
ருறுசோலைமணங்கமழும்வலம்புரநன்னகரே. (௯)

ரவியநற்றுவராடையினார்கடுநோன்புமேற்கொள்ளும்
ரவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந்தொண்டருள்ளுருக
ரவியுணின்றருளசெய்யவல்லவழகரிடம்போலும்
ரவியினீர்வயல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. (க௦)

ல்லியனுன்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
ல்லியந்தோலுடையாடையினன்வலம்புரநன்னகரைச்
சால்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லவர்தொல்வினைபோயச்
செலவனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

திருநேரிசை (ச-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தண்டிரைதேங்கியோதஞ்சென்றடிவீழுங்காலைத்
தொண்டிரைத்தண்டர்கோனைத்தொழுதடிவணங்கியெங்கும்
வண்டுகண்மதுக்கண்மாந்தும்வலம்புரத்தடிகடம்மைக்
கொண்டுநற்கீதம்பாடக்குழகர்தாமிருந்தவாறே. (க)

டுக்களிலவாளைபாயவண்டினமிரிந்தபொய்கைப்
டிக்களிறென்னத்தம்மிற்பிணைபயின்றணைவரால்க
டாடுத்தநன்மாலையேந்தித்தொண்டர்கள்பரவியேத்த
டித்தடங்கண்ணிபாகர்வலம்புரத்திருந்தவாறே. (௨)

தேனுடைமலர்கள்கொண்டுதிருந்தடிபொருந்தச்சேர்த்தி
ானிடையஞ்சுங்கொண்டேயன்பினாலமரவாட்டி
ானிடைமதியஞ்சூடும்வலம்புரத்தடிகடம்மை
னடைந்தேத்தப்பெற்றுநல்வினைபயனுற்றேனே. (௩)

முளையெயிற்றிளநல்லேனம்பூண்டுமொய்சடைகடாழ
வளையெயிற்றிளையநாகம்வலித்தரையிசையவீக்கிப்
புனைகயப்போர்வைபோர்த்துப்புனலொடுமதியஞ்சூடி
வளைபயிலிளையரேத்தும்வலம்புரத்தடிகடாமே. (௪)

சுருளுறுவரையின்மேலாற்றுளங்கிளம்பளிங்குசிந்த
விருளுறுகதிர்நுழைந்தவிளங்கதிர்ப்பசலைத்திங்க
ளருளுறுமடியரெல்லாமங்கையின்மலர்களேந்த
மருளுறுகீதங்கேட்டார்வலம்புரத்தடிகளாரே (ரு)

நினைக்கின்றேனெஞ்சுதன்னுணீண்டபுன்சடையினனே
யனைத்துடன்கொண்டுவந்தகன்பிறைமையவாட்டிப்
புனைகின்றேன்பொய்ம்மைதன்னைமெய்ம்மையைப்புணரமாட்டே
னினைக்குநான்செய்வதென்னேயினிவலம்புரவனீரே. (சு)

செங்கயலசேலகள்பாய்ந்துதேம்பழமினியநாடித்
தங்கயந்துறந்துபோந்துதடமபொய்கையடைந்துநின்று
கொங்கையர்குடையுங்காலைக்கொழுங்கனியழுங்கிஞரம்
மங்கலமனையின்மிககார்வலம்புரததடிகளாரே. (எ)

அருகெலாங்குவளைசெங்நெலகவிலையாம்பனெய்த
றெருவெலாந்தெங்குமாவும்பழம்விழுமபடப்பையெலலாங
குருகினங்கூடியாங்கேகும்மலித்திறகுலர்த்தி
மருவலாமிடங்கள்காட்டும்வலம்புரததடிகளாரே. (அ)

கருவரையனையமேனிக்கடலவண்ணனவனுங்காணான்
றிருவரையனையபூமேற்றிசைமுகனவனுங்காணு
னொருவரையுசசியேறியோங்கினேரோங்கிவந்து
வருமையிலெளிமையாஞரவர்வலமபுரவனுரே (கூ)

வாளெயிறிலங்ககுவளர்கயிலாயந்தன்னை
யாள்வலிகருதிச்செனறவரககனைவரைககீழன்று
தோளொடுபத்துவாயுந்தொலைததுடனழுந்தவூனறி
யாண்மையும்வலியுந்தீர்ப்பாரவர்வலமபுரவனுரே. (கo)

திருச்சிறறம்பலம்.

---

## திருத்தாண்டகம. (சு-ம். திருமுறை.)

---

திருச்சிறறமபலம்.

மண்ணளந்தமணிவண்ணர்தாமுமற்றை
மறையவருமவானவருஞ்சூழநின்று
கண்மலிந்ததிருநெறறியுடையாமராற்மைக
கதநாகங்கையுடையார்காணீரன்றே
பண்மலிந்தமொழியவருமியானுமெல்லாம்
பணிந்திறைஞ்சித்தம்முடையபின்பின்செல்ல
மண்மலிந்தவயல்புடைசூழ்மாடவீதி
வலம்புரமேபுக்கங்கேமன்னினரே. (க)

சிலைநவின்றதொருகணையாற்புரமூன்றெய்த
தீவண்ணர்சிறந்திமையோரிறைஞ்சியேத்தக்
கொலைநவின்றகளியானையுரிவைபோர்த்துக்
கூத்தாடித்திரிதருமக்கூத்தர்நல்ல

கலைநவின்றமறையவர்கள்காணக்காணக்
கடுவிடைமேற்பாரிடங்கள்சூழக்காதன்
மலைமகளுங்கங்கையுந்தாமுமெல்லாம்
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (உ)

தீக்கூருந்திருமேனியொருபான்மற்றை
யொருபாலுமரியுருவந்திகழ்ந்தசெல்வ
ராக்கூரிற்றான்றோன்றிபுகுவார்போல
வருவினையேன்செல்வதுமேயப்பாலெங்கு
நோக்காரொருவிடத்துநூலுந்தோலுந்
துதைந்திலங்குந்திருமேனிவெண்ணீறாடி
வாக்கான்மறைவிரித்துமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே (ங)

மூவாதமூக்கப்பாம்பரையிற்சாத்தி
மூவருருவாயமுதல்வரிந்நாட்
கோவாதவெரிகணையைச்சிலைமேற்கோத்த
குழகனார்குளிர்கொன்றைசூடியிங்கே
போவாரைக்கண்டடியேன்பின்பின்செல்லப்
புறக்கணித்துத்தம்முடையபூதஞ்சூழ
வாவாவெனவுரைத்துமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (ச)

அனலொருகையதுவேந்தியதளினோடே
யைந்தலையமாநாகமரையிற்சாத்திப்
புனல்பொதிந்தசடைக்கற்றைப்பொன்போன்மேனிப்
புனிதனார்புரிந்தமரரிறைஞ்சியேத்தச்
சினவிடையைமேற்கொண்டுதிருவாரூருஞ்
சிரபுரமுமிடைமருதுஞ்சேர்வார்போல
மனமுருகவளைகழலமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (ரு)

கறுத்ததொருகண்டத்தர்காலன்வீழக்
காலினாற்காய்ந்துகந்தகாபாலியார்
முறித்ததொருதோலுடுத்துமுண்டஞ்சாத்தி
முனிகணங்கள்புடைசூழமுற்றந்தோறுந்
தெறித்ததொருவீணையராய்ச்செல்வார்தம்வாய்ச்
சிறுமுறுவல்வந்தெனதுசிந்தைவௌவ
மறித்தொருகானோக்காதேமாயம்பேசி
வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (சு)

பட்டுடுத்துப்பவளம்போன்மேனியெல்லாம்
பசுஞ்சாந்தங்கொண்டணிந்துபாதநோவ
விட்டெடுத்துநடமாடியிங்கேவந்தார்க்
கெவ்வூரீரெம்பெருமானென்றேனாவி
விட்டிடுமாறதுசெய்துவிரைந்துநோக்கி
வேறோர்பதிபுகப்போவார்போல

வட்டணைகள்படநடந்துமாயமபேசி
வலம்புரமேபுககங்கேமன்னிஞரே. (எ)

பல்லார்பயிலபழனப்பாசூரென்றும்
பழனம்பதிபழமைசொலலிநின்ருர்
நல்லார்நனிபள்ளியின்றுவைகி
நாளைப்போய்நள்ளாறுசேர்துமெனருர்
சொலலாரொருவிடமாத்தோள்கைவீசிச்
சுந்தரராயவெந்நீருடியெயகு
மலலார்வயல்புடைசூழ்மாடவீதி
வலம்புரமேபுககங்கேமன்னிஞரே (அ)

பொஙகாடரவொன்றுகையிற்கொண்டு
போர்வெண்மழுவேந்திப்போகாநிற்பா
தங்காரொருவிடத்துந்தமமேலார்வந்
தவிர்ததருளார்தத்துவத்தேநின்றேனெப
ரெங்கேயிவாசெயகையொன்ருன்ருவ்வா
வெண்கண்ணினின்றநலாவேடஙகாட்டி
மங்குன்மதிதவழுமாடவீதி
வலம்புரமேபுகசங்கேமன்னிஞரே. (கூ)

செஙநண்மாலசிலைபிடித்துச்சேனேயோடுஞ்
சேதுபந்தனஞ்செயதுசென்றுடஙகுப்
பொஙகுபோர்பலசெய்துபுசலாலவென்ற
போரரககனெடுமுடிகளபொடியாயவீழ
வஙகொருதன்றிருவிரலாலிறையேயூன்றி
யடர்த்தவற்கேயருளபுரிந்தவடிகளிங்ஙன்
வஙகமலிகடல்புடைசூழ்மாடவீதி
வலமபுரமேபுககங்கேமன்னிஞரே (க0)

திருசசிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயஞர்

---

பண் - காந்தாரம. (எ-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

எனககினித்தினைத்தனைப்புகலிடமறிந்தேன்
பனைக்கனிப்பழம்படுபரவையின்கரைமே
லெனககினியவன்றமர்க்கினியவனெழுமையு
மனககினியவன்றனதிடம்வலம்புரமே. (க)

புரமவையெரிதரவளைந்தவில்லினனவன்
மரவுரிபுலியதளரைமிசைமருவின
னரவுரியிரந்துணவிரும்பிநின்
றிரவெரியாடிதனிடம்வலம்புரமே. (உ)

நீறணிமேனியனெருப்புமிழரவினன்
கூறணிகொடுமழுவேந்தியொர்கையின
னாறணியவிர்சடையழல்வளர்மழலைவெள்
ளேறணியடிகடமிடம்வலம்புரமே. (ந)

கொங்கணைசுரும்புணநெருங்கியகுளிரிளந்
தெங்கொடுபனைபழம்படுமிடந்தேவர்க
டங்கிடுமிடந்தடங்கடற்றிரைபுடைதர
வெங்களதடிகணல்லிடம்வலம்புரமே. (ச)

கொடுமழுவிரகினன்கொலைமலிசிலையின
னெடுமதில்சிறுமையினிரவவல்லவனிடம
படுமணிமுத்தமும்பவளமுமிகச்சுமந்
திடுமணலடைகரையிடமவலம்புரமே (ரு)

கருங்கடக்களிற்றுரிக்கடவுளதிடங்கய
னெருங்கியநெடும்பெணையடும்பொடுவிரவிய
மருங்கொடுவலம்புரிசலஞ்சலமணம்புணர்ந்
திருங்கடலடைகரையிடமவலம்புரமே (சா)

நரிபுரிகாடரங்காநடமாடுவர்
வரிபுரிபாடநின்றாடுமெம்மானிடம்
புரிசுரிவரிகுழலரிவையொர்பான்மகிழ்ந்
தெரியெரியாடிதனிடம்வலம்புரமே. (எ)

பாறணிமுடைதலைகலனெனமருவிய
நீறணிநிமிர்சடைமுடியினனிலவிய
மாறணிவருதிரைவயலணிபொழிலது
வேறுடையடிகடமிடம்வலம்புரமே. (அ)

சடசடவிடுபெணைபழம்படுமிடவகை
படவடகதொடுபலிகலந்துலவிய
கடைகடைபலிதிரிகபாலிதனிடமது
விடிகரைமணலடையிடமவலம்புரமே. (கூ)

குண்டிகைப்படப்பினில்விடக்கினையொழித்தவர்
கண்டவர்கண்டடிவீழ்ந்தவர்கனைகழ
றண்டுடைத்தண்டிதனினமுடையரவுட
னென்டிசைக்கொருசுடரிடம்வலம்புரமே. (க0)

வருங்கலமும்பலபேணுதல்கருங்கட
லிருங்குலப்பிறப்பர்தமிடம்வலம்புரத்தினை
யருங்குலத்தருந்தமிழூரன்வன்றொண்டன்சொற்
பெருங்குலத்தவர்கொடுபிதற்றுதல்பெருமையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவலம்புரத்திருப்பதிகம் - ச.

---

சுவாமி - வலம்புரநாதர்.
தேவி - வடுவகிர்க்கண்ணியம்மை.

---

ஆக திருப்பதிகம் - க0சா.

# சரு. திருத்தலைச்சங்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரம். (உ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நலச்சங்கவெண்குழையுந்தோடும்பெய்தோர்நால்வேதஞ்
சொலச்சங்கையில்லாதீர்சுடுகாடல்லாற்கருதாதீர்
குலைச்செங்காய்ப்பைங்கமுகின்குளிர்கொள்சோலைக்குயிலாலுந்
தலைச்சங்கைக்கோயிலேகோயிலாகத்தாழ்ந்தீரே (க)

துணிமல்குகோவணமுந்தோலுங்காட்டித்தொண்டாண்டீர்
மணிமல்குகண்டத்தீரண்டர்க்கெல்லாமாண்பானீர்
பிணிமல்குநூன்மார்பர்பெரியோர்வாழுந்தலைச்சங்கை
யணிமல்குகோயிலேகோயிலாகவமர்ந்தீரே (உ)

சீர்கொண்டபாடலீர்செங்கண்வெள்ளேறூர்தியீர்
நீர்கொண்டும்பூக்கொண்டுநீங்காத்தொண்டர்நின்றேத்தத்
தார்கொண்டநூன்மார்பர்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
யேர்கொண்டகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௩)

வேடஞ்சூழ்கொள்கையீர்வேண்டிநீண்டவெண்டிங்க
ளோடஞ்சூழ்கங்கையுமுச்சிவைத்தீர்தலைச்சங்கைக்
கூடஞ்சூழ்மண்டபமுங்குலாயவாசற்கொடித்தோன்று
மாடஞ்சூழ்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (ச)

சூலஞ்சேர்கையினீர்சுண்ணவெண்ணீறாடலீர்
நீலஞ்சேர்கண்டத்தீர்நீண்டசடைமேனீரேற்றீ
ராலஞ்சேர்தண்கானலன்னமன்னுந்தலைச்சங்கைக்
கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. (ரு)

நிலநீரொடாகாசமனல்காலாகிநின்றைந்து
புலனீர்மைபுறங்கண்டார்பொக்கஞ்செய்யார்போற்றுவார்
சலநீதரல்லாதார்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
நலநீரகோயிலேகோயிலாகநயந்தீரே. (சா)

அடிபுல்குபைங்கழல்களார்ப்பப்பெயர்ந்தோரனலேந்திக்
கொடிபுல்குமென்சாயலுமையோர்பாகங்கூடினீர்
பொடிபுல்குநூன்மார்பர்புரிநூலாளர்தலைச்சங்கைக்
கடிபுல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (எ)

திரையார்ந்தமாகடல்சூழ்தெண்ணீரிலங்கைக்கோமானை
வரையார்ந்ததோளடரவிரலாலூன்றுமாண்பினீ
ரரையார்ந்தமேகலையீரந்தணாளர்தலைச்சங்கை
நிரையார்ந்தகோயிலேகோயிலாகநினைந்தீரே. (அ)

பாயோங்குபாம்பணைமேலானும்பைந்தாமரையானும்
போயோங்கிக்காண்கிலார்புறநின்றோரார்போற்றோவார்
தீயோங்குமறையாளர்திகழுஞ்செல்வத்தலைச்சங்கைச்
சேயோங்குகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௯)

அலையாரும்புன்றுறந்தவமணர்குண்டர்சாக்கியர்
தொலையாதங்கலர்தூற்றத்தோற்றங்காட்டியாட்கொண்டீர்
தலையானநால்வேதந்தரித்தார்வாழுந்தலைச்சங்கை
நிலையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே (௧0)

நளிரும்புனற்காழிநல்லஞானசம்பந்தன்
குளிருந்தலைச்சங்கையோங்குகோயின்மேயானை
யொளிரும்பிறையானையுரைத்தபாடலிவைவல்லார்
மிளிருந்திரைசூழ்ந்தவையத்தாகுமேலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - சங்கருணாதர்.
தேவி - சௌந்தரநாயகியம்மை.

ஆ திருப்பதிகம் - ௧0எ.

# சரு. திருவாக்கூர்த்தான்றோன்றிமாடம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். (உ-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அக்கிருந்தவாரமுமாடரவுமாமையுந்
தொக்கிருந்தமார்பினன்றோலுடையான்வெண்ணீற்றான்
புக்கிருந்ததொல்கோயில்பொய்யிலாமெய்ந்நெறிக்கே
தக்கிருந்தாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௧)

நீரரவார்சடையானீறுடையானேறுடையான்
கார்நார்பூங்கொன்றையினான்காதலித்ததொல்கோயில்
கூரரலவாய்நிறையக்கொண்டயலேகோட்டகத்திற்
றூர்மல்காக்கூரிற்றான்றோன்றிமாடமே. (உ)

வாளார்கண்செந்துவர்வாயமாமலையான்றன்மடந்தை
தோளாகம்பாகமாப்புல்கினான்றொல்கோயில்
வேளாளரென்றவர்கள்வள்ளன்மையான்மிக்கிருக்குந்
தாளாளராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௩)

கொங்குசேர்தண்கொன்றைமாலையினான்கூற்றடரப்
பொங்கினான்பொங்கொளிசேர்வெண்ணீற்றான்பூங்கோயி
லங்கமாறோடுமருமறைகளோர்வேள்வி
தங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௪)

வீக்கினானாடரவம்வீந்தழித்தார்வெண்டலையென்
பாக்கினான்பலகலன்களாதரித்துப்பாகம்பெ
ணாக்கினான்றொல்கோயிலாம்பலம்பூம்பொய்கைபுடை
தாக்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௫)

பண்ணொளிசேர்நான்மறையான்பாடலினோடாடலினான்
கண்ணொளிசேர்நெற்றியினான்காதலித்துத்தொல்கோயில
விண்ணொளிசேர்மாமதியந்தீண்டியக்காலவெண்மாடந்
தண்ணொளிசேராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௬)

வீங்கினார்மும்மதிலும்வில்வரையால்வெந்தவிய
வாங்கினார்வானவர்கள்வந்திறைஞ்சுந்தொல்கோயில
பாங்கினார்நான்மறையோடாறங்கம்பலகலைக
டாங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௭)

கன்னெடியகுன்றெடுத்தான்றோள்டரக்காலூன்றி
யின்னருளாலாட்கொண்டவெம்பெருமான்றொல்கோயில்
பொன்னடிக்கேநாடோறும்பூவோடுநீர்சுமக்குந்
தன்னடியாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௮)

நன்மையாலாரணனுநான்முகனுங்காண்பரிய
தொன்மையான்றோற்றங்கேடில்லாதான்றொல்கோயி
லின்மையாற்சென்றிரந்தார்க்கில்லையென்னாதீந்துவக்குந்
தன்மையாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௯)

நாமருவுபுன்மைநவிற்றசமண்டேரர்
பூமருவுகொன்றையினான்புக்கமருந்தொல்கோயில
சேன்மருவுபங்கயத்துச்செங்கழுநீர்பைங்குவளை
தாமருவுமாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௧0)

ஆடலமர்ந்தானையாக்கூரிற்றான்றோன்றி
மாடமமர்ந்தானைமாடஞ்சேர்தண்காழி
நாடற்கரியசீர்ஞானசம்பந்தனசொற்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

முடித்தாமரையணிந்தமூர்த்திபோலு
மூவுலகுந்தாமாகிநின்றார்போலுங்
கடித்தாமரையேய்ந்தகண்ணார்போலுங்
கல்லலகுபாணிபயின்றார்போலுங்
கொடித்தாமரைக்காடேநாடுந்தொண்டர்
குற்றேவல்தாமகிழ்ந்தகுழகர்போலு
மடித்தாமரைமலர்மேல்வைத்தார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௧)

ஓதிற்றொருநூலுமில்லைபோலு
முணரப்படாததொன்றில்லைபோலுங்
காதிற்குழையிலங்கப்பெய்தார்போலுங்
கவலைபிறப்பிடுமைகாப்பார்போலும்
வேதத்தோடாறங்கஞ்சொன்னார்போலும்
விடஞ்சூழ்ந்திருண்டமிடற்றார்போலு
மாதிகைகளவாகிநின்றார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே (உ)

மையார்மலர்க்கண்ணாள்பாகர்போலு
மணிநீலகண்டமுடையார்போலு
நெய்யார்திரிசூலங்கையார்போலு
நீறேறுதோளெட்டுடையார்போலும்
வையார்மழுவாட்படையார்போலும்
வளர்ஞாயிறன்னவொளியார்போலு
மையவாயரவமொன்றார்த்தார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே (ங)

வடிவிளங்குவெண்மழுவாள்வல்லார்போலும்
வஞ்சகக்கருங்கடனஞ்சுண்டார்போலும்
பொடிவிளங்குமுந்நூல்சேர்மார்பர்போலும்
பூங்கங்கைதோயந்தசடையார்போலுங்
கடிவிளங்குகொன்றையந்தாரார்போலுங்
கட்டங்கமேந்தியகையார்போலு
மடிவிளங்குசெம்பொற்கழலார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (ச)

ஏகாசமாம்புலித்தோல்பாம்புதாழ
விடுவெண்டலைகலனாவேந்திநாளு
மேகாசங்கட்டழித்தவெள்ளிமாலை
புனலார்சடைமுடிமேற்புனைந்தார்போலு
மாகாசமாயவெண்ணீருந்தீயு
மதியுமதிபிறந்தவிண்ணுமண்ணு
மாகாசமென்றிவையுமானார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே (ரு)

மாதூரும்வாணெடுங்கண்செவ்வாய்மென்றோள்
மலைமகளைமார்பத்தணைத்தார்போலு
மூதூர்முதுதிரைகளானார்போலு
முதலுமிறுதியுமில்லார்போலுந்
தீதூரநல்வினையாய்நின்றார்போலுந்
திசையெட்டுந்தாமேயாஞ்செல்வர்போலு
மாதிரைநாளாயமர்ந்தார்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (சா)

மாலயானைமத்தகத்தைக்கீண்டார்போலு
மான்றோலுடையாமகிழ்ந்தார்போலுங்

கோலானைக்கோளழலாற்காய்ந்தார்போலுங்
குழவிப்பிறைசடைமேல்வைத்தார்போலுங்
காலனைக்காலாற்கடிந்தார்போலுங்
கயிலாயந்தம்மிடமாககொண்டார்போலு
மாலானைந்தாடலுகப்பார்போலு
மாககூரிற்றான்றோன்றியப்பனாரே. (எ)

கண்ணார்ந்தநெற்றியுடையார்போலுங்
காமனையுங்கணணழலாற்காய்ந்தார்போலு
முண்ணாவருநஞ்சமுண்டார்போலு
மூழித்தீயன்னவொளியார்போலு
மெண்ணாயிரங்கோடிபேரார்போலு
மேறேறிச்செலலுமிறைவர்போலு
மண்ணாவுமாரூருமேயார்போலு
மாககூரிற்றான்றோன்றியப்பனாரே (அ)

கடியார்தளிர்கலந்தகொன்றைமாலை
கதிர்போதுதாதணிந்தகண்ணிபோலு
நெடியானுஞ்சதுமுகனுந்தேட நின்ற
நீலநற்கண்டத்திறையார்போலும்
படியேலழலவண்ணஞ்செம்பொன்மேனி
மணிவண்ணந்தம்வண்ணமாவார்போலு
மடியார்புகலிடமதானார்போலு
மாககூரிற்றான்றோன்றியப்பனாரே. (௯)

திரையானுஞ்செந்தாமரைமேலானுந்
தேர்ந்தவர்களாகத்தேடிக்காணார்நாளும்
புரையானெனப்படுவார்தாமேபோலும்
போரேறுதாமேறிச்செல்வார்போலுங்
கரையாவரைவில்லேநாகநாணாக
காலத்தீயன்னகனலார்போலும்
வரையார்மதிலெய்தவண்ணர்போலு
மாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாக்கூர்த்திருப்பதிகம் - உ.

---

சுவாமி - சுயம்புநாதர்.
தேவி - கட்கநேத்திரியம்மை.

---

ஆ௳ திருப்பதிகம் - ௧0௯.

---

# ச௭. திருக்கடவூர்வீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
வுடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனுள்
விடையுடையண்ணலும்வீரட்டானத்தரனல்லனே. (க)

எரிதருவார்சடையானும்வெள்ளையெருதேறியும்
புரிதருமாமலர்க்கொன்றைமாலைபுனைந்தேத்தவே
கரிதருகாலனைச்சாடினானுங்கடவூர்தனுள்
விரிதருதொல்புகழ்வீரட்டானத்தரனல்லனே (உ)

நாதனுநள்ளிருளாடினானுநளிர்போதின்கட்
பாதனும்பாய்புலித்தோலினானுமபசுவேறியும்
காதலர்தண்கடவூரினானுங்கலந்தேத்தவே
வேதமதோதியும்வீரட்டானத்தரனல்லனே. (௩)

மழுவமர்செல்வனுமாசிலாதபலபூதமுன்
முழவொலியாழ்குழன்மொந்தைகொட்டமுதுகாட்டிடைக்
கழல்வளர்காலகுஞ்சித்தாடினுங்கடவூர்தனுள்
விழவொலிமல்கியவீரட்டானத்தரனல்லனே (ச)

சுடர்மணிச்சுண்ணவெண்ணீற்றினானுஞ்சுழல்வாயதோர்
படமணிநாகமரைக்கசைத்தபரமேட்டியுங்
கடமணிமாவுரித்தோலினானுங்கடவூர்தனுள்
விடமணிகண்டனும்வீரட்டானத்தரனல்லனே (ரு)

பண்பொலிநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யுண்பலிகொண்டுழல்வானும்வானினுளொளிமல்கிய
கண்பொலிநெற்றிவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வெண்பொடிப்பூசியும்வீரட்டானத்தரனல்லனே. (சா)

செவ்வழலாய்நிலனாகிநின்றசிவமூர்த்தியு
முவ்வழலுநன்மறையைந்துமாயமுனிகேள்வனுங்
கவ்வழல்வாய்க்கதநாகமார்த்தான்கடவூர்தனுள்
வெவ்வழலேந்துகைவீரட்டானத்தரனல்லனே. (௭)

அடியிரண்டோருடம்பைஞ்ஞான்கிருபதுதோடச
முடியுடைவேந்தனைமூர்க்கழித்தமுதன்மூர்த்தியுங்
கடிகமழும்பொழில்சூழுமந்தண்கடவூர்தனுள்
வெடிதலையேந்தியும்வீரட்டானத்தரனல்லனே. (அ)

வரைகுடையாமழைதாங்கினனும்வளர்போதின்கட்
புரைகடிந்தோங்கியநான்முகத்தான்புரிந்தேத்தவே
கரைகடலசூழ்வையங்காக்கின்றானுங்கடவூர்தனுள்
விரைகமழ்பூம்பொழிலவீரட்டானத்தரனல்லனே (௯)

தேரருமாசுகொண்மேனியாருந்தெளியாததோ
ராரருஞ்சொற்பொருளாகிநின்றவெமதாதியான்
காரிளங்கொன்றைவெண்டிங்களானுங்கடவூர்தனுள
வீரமுஞ்சேர்கழல்வீரட்டானத்தரனல்லனே. (௧௦)

வெந்தவெண்ணீறணிவீரட்டானத்துறைவேந்தனை
யந்தணர்தங்கடவூருளானையணிகாழியான்
சந்தமெல்லாமடிசாத்தவல்லமறைஞானசம்
பந்தனசெந்தமிழ்பாடியாடக்கெடுமபாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருநேரிசை (௪-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பொள்ளத்தகாயமாயம்பொருளினைப்போகமாதர
வெள்ளத்தைக்கழிக்கவேண்டில்விரும்புமின்விளக்குத்தூப
முள்ளொத்திரியொன்றேற்றியுணருமாறுணரவல்லார்
கள்ளத்தைக்கழிப்பர்போலுங்கடவூர்வீரட்டனாரே (௧)

மண்ணிடைக்குரம்பைதன்னைமதித்துநீர்மையலெய்தில
விண்ணிடைத்தருமராசன்வேண்டினாலிலக்குவாரார்
பண்ணிடைச்சுவைகள்பாடியாடும்பத்தர்க்கென்றுங்
கண்ணிடைமணியர்போலுங்கடவூர்வீரட்டனாரே. (௨)

பொருத்தியகுரம்பைதன்னுட்பொய்ந்நடைசெலுத்துகின்றீ
ரொருத்தனையுணரமாட்டீருள்ளத்திறகொடுமைநீக்கீர்
வருத்தினகளிறுதன்னைவருத்துமாவருத்தவல்லார்
கருத்தினிலிருப்பர்போலுங்கடவூர்வீரட்டனாரே. (௩)

பெரும்புலர்காலைமூழ்கிப்பித்தர்க்குப்பத்தராகி
யரும்பொடுமலர்கள்கொண்டங்கார்வத்தையுள்ளேவைத்து
விரும்பிநல்விளக்குத்தூபம்விதியினாலிடவல்லார்க்குக்
கரும்பினிற்கட்டிபோலவார்கடவூர்வீரட்டனாரே. (௪)

தலக்கமேசெய்துவாழ்ந்துதக்கவாறொன்றுமின்றி
விலக்குவாரிலாமையாலேவிளக்கிற்கோழிபோன்றேன்
மலக்குவார்மனத்தினுள்ளேகாலனார்தமர்கள்வந்து
கலக்கநான்கலங்குகின்றேன்கடவூர்வீரட்டனாரே. (௫)

பழியுடையாக்கைதன்னிற்பாழுக்கேநீரிறைத்து
வழியிடைவாழமாட்டேன்மாயமுந்தெளியகில்லே
னழிவுடைத்தாயவாழ்க்கையைவராலலைக்கப்பட்டுக்
கழியிடைத்தோணிபோன்றேன்கடவூர்வீரட்டனாரே. (௬)

மாயத்தையறியமாட்டேனமையல்கொண்மனத்தனாகிப்
பேயொத்துக்கூகையானேன்பிஞ்ஞகாபிறப்பொன்றில்லீ
நேயத்தானினையமாட்டேனீதனேநீசனேனுன்
காயத்தைக்கழிக்கமாட்டேன்கடவூர்வீரட்டனாரே (௭)

பற்றிலாவாழ்க்கைவாழ்ந்துபாழுக்கேநீரிறைத்தே
னுற்றலாற்கயவர்தேறாரென்னுங்கட்டுரையோடொத்தே
னெற்றுளேனென்செய்கேனானிடும்பையானஞானமேதுங்
கற்றிலேன்களைகண்காணேன்கடவூர்வீரட்டனாரே (௮)

சேலினேரனையகண்ணார்திறம்விட்டுச்சிவனுக்கன்பாய்ப்
பாலுநற்றயிர்நெய்யோடுபலபலவாட்டியென்று
மாலினைத்தவிரநின்றமார்க்கண்டற்காகவன்று
காலனையுதைப்பர்போலுங்கடவூர்வீரட்டனாரே (௯)

முந்துருவிருவரோடுமூவருமாயினாரு
மிந்திரனோடுதேவரிருடிகளின்பஞ்செய்ய
வந்திருபதுகடோளாலெடுத்தவன்வலியைவாட்டிக்
கந்தருவங்கள்கேட்டார்கடவூர்வீரட்டனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். (௪-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மருட்டுயர்தீரவன்றர்ச்சித்தமாணிமார்க்கண்டேயர்க்கா
யிருட்டியமேனிவளைவாளெயிற்றெரிபோலுங்குஞ்சிச்
சுருட்டியநாவில்வெங்கூற்றம்பதைப்பவுதைத்துங்ஙனே
யுருட்டியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௧)

பதத்தெழுமந்திரமஞ்செழுத்தோதிப்பரிவினொடு
மிதத்தெழுமாணிதனதுயிருணவெகுண்டடர்த்த
கதத்தெழுகாலனைக்கண்குருதிப்புனலாறொழுக
வுதைத்தெழுசேவடியான்கடவூருறையுத்தமனே. (௨)

கரப்புறுசிந்தையர்காண்டற்கரியவன்காமனையு
நெருப்புமிழ்கண்ணினனீள்புனற்கங்கையும்பொங்கரவும்
பரப்பியசெஞ்சடைப்பாலவண்ணன்காலனைப்பண்டொருகா
லுரப்பியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௩

மறித்திகழ்கையினன்வானவர்கோனைமனமகிழ்ந்து
குறித்தெழுமாணிதனதுயிர்கொள்வான்கொதித்தசிந்தைக்
கறுத்தெழுமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
வுருக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௪)

குழைத்திகழ்காதினன்வானவர்கோனைக்குளிர்ந்தெழுந்து
பழக்கமொடர்ச்சித்தமாணிதனுருயிர்கொள்ளவந்த
தழற்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
வுழக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (ரு)

பாலனுக்காவன்றுபாற்கடலீந்துபணைத்தெழுந்த
வாலினிற்கீழிருந்தாரணமோதியருமுனிக்காச்
சூலமும்பாசமுங்கொண்டுதொடர்ந்தடர்ந்தோடிவந்த
காலனைக்காய்ந்தபிரான்கடவூருறையுத்தமனே. (சு)

படர்சடைகொன்றையும்பன்னகமாலைபணிகயிறு
வுடைதலைகோத்துழன்மேனியனுண்பலிக்கென்றுழல்வோன்
சுடர்பொதிமூவிலைவேலுடைக்காலனைதுண்டமதா
வுடறியசேவடியான்கடவூருறையுத்தமனே. (எ)

வெண்டலைமாலையுங்கங்கைக்கரோடிவிரிசடைமேற்
பெண்டணிநாயகன்பேயுகந்தாடும்பெருந்தகையான்
கண்டணிநெற்றியன்காலனைக்காய்ந்துகடலின்விட
முண்டருள்செய்தபிரான்கடவூருறையுத்தமனே. (அ)

கேழலதாகிக்கிளறியகேசவன்காண்பரிதாய்
வாழிநன்மாமலர்க்கண்ணிடந்திட்டவம்மாலவற்கன்
ருழியுமீந்துவடுதிறற்காலனையன்றடர்த்த
வூழியுமாயபிரான்கடவூருறையுத்தமனே. (கூ)

தேன்றிகழ்கொன்றையுங்கூவிளமாலைதிருமுடிமே
லான்றிகழைந்துகந்தாடும்பிரான்மலையார்த்தெடுத்த
கூன்றிகழ்வாளரக்கன்முடிபத்துங்குலைந்துவிழ
வூன்றியசேவடியான்கடவூருறையுத்தமனே (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மலைக்கொள்ளானைமயக்கியவல்வினை
நிலைக்கொள்ளானைநினைப்புறுநெஞ்சமே
கொலைக்கையானையுங்கொன்றிடுமாதலாற்
கலைக்கையானைக்கண்டீர்கடவூரரே. (க)

வெள்ளிமால்வரைபோல்வதொரானையா
ருள்ளவாறெனையுள்புகுமானையார்
கொள்ளமாகியகோயிலுளானையார்
கள்ளவானைகண்டீர்கடவூரரே. (உ)

ஞானமாகியநன்குணரானையா
ருனைவேவவுருக்கியவானையார்
வேனலானையுரித்துமையஞ்சவே
கானலானைகண்டீர்கடவூரரே (ங)

ஆலமுண்டழகாயதொரானையார்
நீலமேனிநெடும்பளிங்கானையார்
கோலமாயகொழுஞ்சுடரானையார்
காலவானைகண்டீர்கடவூரரே (௪)

அளித்தவானஞ்சுமாடியவானையார்
வெளுத்தநீள்கொடியேறுடையானையா
ரெளித்தவேழத்தையெளகுவித்தானையார்
களித்தவானைகண்டீர்கடவூரரே. (௫)

விடுத்தமாலவரைவிண்ணுறவானையார்
தொடுத்தமாலவரைதூயதொரானையார்
கடுத்தகாலனைக்காய்ந்ததொரானையார்
கடுத்தவானைகண்டீர்கடவூரரே. (௬)

மண்ணுளாரைமயக்குறுமானையா
ரெண்ணுளார்பலரேத்திடுமானையார்
விண்ணுளார்பலருமறியானையார்
கண்ணுளானைகண்டீர்கடவூரரே (௭)

சினக்குருசெம்பவளத்திரளானையார்
மனக்கும்வலவினைதீர்த்திடுமானையா
ரனைக்குமன்புடையார்மனத்தானையார்
கனைக்குமானைகண்டீர்கடவூரரே (௮)

வேதமாகியவெஞ்சுடரானையார்
நீதியானிலனுகியவானையா
ரோதியூழிதெரிந்துணரானையார்
காதலானைகண்டீர்கடவூரரே. (௯)

நீண்டமாலொடுநான்முகன்றானுமாய்க்
காண்டுமென்றுபுக்கார்களிருவரு
மாண்டவாரழலாகியவானையார்
காண்டலானைகண்டீர்கடவூரரே. (௧௦)

அடுத்துவந்திலங்கையர்மன்னனை
யெடுத்ததோள்களிறநெரித்தானையார்
கடுத்தகாலனைக்காய்ந்ததொரானையார்
கடுக்கையானைகண்டீர்கடவூரரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - நட்டராகம். (எ-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பொடியார்மேனியனேபுரிநூலொருபாற்பொருந்த
வடியார்மூவிலைவேல்வளரங்கையின்மங்கையொடுங்
கடியார்கொன்றையனேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
மடிகேளென்னமுதேயெனக்கார்துணைநீயலதே. (௧)

பிறையாருஞ்சடையாய்பிரமன்றலையிற்பலிகொண்
மறையார்வானவனேமறையின்பொருளானவனே
கறையாரும்மிடற்றாய்கடவூர்தனுள்வீரட்டத்தெம்
மிறைவாவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே. (உ)

அன்றாலின்னிழற்கீழறநால்வர்க்கருள்புரிந்து
கொன்றாய்காலனுயிர்கொடுத்தாயமறையோனுக்குமான்
கன்றாருங்கரவாகடவூர்த்திருவீரட்டத்து
ளென்றாதைபெருமானெனக்கார்துணைநீயலதே (ந)

போராருங்கரியின்னுரிபோர்த்துப்பொன்மேனியின்மேல
வாராரும்முலையாளொருபாகமகிழ்ந்தவனே
காராரும்மிடற்றாய்கடவூர்தனுள்வீரட்டானத்
தாராவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே. (ச)

மையார்கண்டத்தினாயமதமாவுரிபோர்த்தவனே
பொய்யாதென்னுயிருட்புகுந்தாயினமபோகந்தறியாய
கையாரா டரவாகடவூர்தனுள்வீரட்டத்தெம
மையாவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே (ரு)

மண்ணீர்தீவெளிகாலவரும்பூதங்களாகிமற்றும
பெண்ணோடாணலியாயபிறவாவுருவானவனே
கண்ணாருண்மணியேகடவூர்தனுள்வீரட்டத்தெம
மணாளவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே (சு)

எரியார்புன்சடைமேலிளநாகமணிந்தவனே
நரியாருஞ்சுடலைநகுவெண்டலைகொண்டவனே
கரியாரீருரியாய்கடவூர்தனுள்வீரட்டத்தெம்
மரியாயென்னமுதேயெனக்கார்துணைநீயலதே. (எ)

வேறாவுன்னடியேன்விளங்குங்குழைக்காதுடையாய
தேறேனுன்னையல்லாற்சிவனேயென்செழுஞ்சுடரே
காறார்வெண்மருப்பாகடவூர்த்திருவீரட்டத்து
ளாறார்செஞ்சடையாயெனக்கார்துணைநீயலதே (அ)

அயனோடன்றரியும்மடியும்முடிகாணபரிய
பயனேயெம்பரனேபரமாயபரஞ்சுடரே
கயமாருஞ்சடையாய்கடவூர்த்திருவீரட்டத்து
ளயனேயென்னமுதேயெனக்கார்துணைநீயலதே. (கூ)

காராரும்பொழில்சூழ்கடவூர்த்திருவீரட்டத்து
ளேராரும்மிறையைத்துணையாவெழிலாவலர்கோ
னாரூரன்னடியானடித்தொண்டனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கடவூர்த்திருப்பதிகம் - ரு.

சுவாமி - அமிர்தகடேசர்.
தேவி - அபிராமியம்மை.

---

ஆடூ திருப்பதிகம் - ககச.

# ௪௮. திருக்கடவூர்மயானம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம் (௨-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வரியமறையார்பிறையார்மலையோர்சிலையாவணங்கி
யெரியமதில்களெய்தாரெறியுமுசலமுடையார்
கரியமிடறுமுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பெரியவிடைமேல்வருவாரவரெம்பெருமானடிகளே. (௧)

மங்கைமணந்தமார்பர்மழுவாள்வலனொன்றேந்திக்
கங்கைசடையிற்கரந்தார்கடவூர்மயானமமர்ந்தார்
செங்கண்வெள்ளேறேறிச்செல்வஞ்செய்யாவருவா
ரங்கையேறியமறியாரவரெம்பெருமானடிகளே. (௨)

ஈடலிடபமிசையவேறிமழுவொன்றேந்திக்
காடதிடமாவுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பாடலிசைகொள்கருவிபடுதம்பலவும்பயில்வா
ராடலரவமுடையாரவரெம்பெருமானடிகளே. (௩)

இறைநின்றிலங்குவளையாளிளையாளொருபாலுடையார்
மறைநின்றிலங்குமொழியார்மலையார்மனத்தின்மிசையார்
கறைநின்றிலங்குபொழில்சூழ்கடவூர்மயானமமர்ந்தார்
பிறைநின்றிலங்குசடையாரவரெம்பெருமானடிகளே. (௪)

வெள்ளையெருத்தின்மிசையார்விரிதோடொருகாதிலங்கத்
துள்ளுமிளமான்மறியார்சுடர்பொற்சடைகடுலங்கக்
கள்ளங்குவெண்டலையார்கடவூர்மயானமமர்ந்தார்
பிள்ளைமதியமுடையாரவரெம்பெருமானடிகளே. (௫)

பொன்றாதுதிருமணங்கொள்புனைபூங்கொன்றைபுனைந்தா
ரொன்றாவெள்ளேறுயர்த்ததுடையாரதுவேயூர்வார்
கன்றாவிளஞ்சூழ்புறவிற்கடவூர்மயானமமர்ந்தார்
பின்றாழ்சடையாரொருவரவரெம்பெருமானடிகளே. (௬)

பாசமானகளைவார்பரிவார்க்கமுதமனையா
ராசைதீரகொடுப்பாரலங்கல்விடைமேல்வருவார்
காசைமலர்போன்மிடற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
பேசவருவாரொருவரவரெம்பெருமானடிகளே. (௭)

செற்றவரக்கனலறத்திகழ்சேவடிமெல்விரலாற்
கற்குன்றடர்த்தபெருமான்கடவூர்மயானமமர்ந்தார்
மற்றொன்றிணையில்வலியமாசில்வெள்ளிமலைபோற்
பெற்றொன்றேறிவருவாரவரெம்பெருமானடிகளே. (௮)

வருமாகரியினுரியார்வளாபுன்சடையார்விடையார்
கருமானுரிதோலுடையார்கடவூர்மயானமமாந்தார்
திருமாலொடுநான்முகனுந்தேர்ந்துங்காணமுன்னொண்ணுப்
பெருமானெனவும்வருவாரவரெம்பெருமானடிகளே. (௯)

தூயவிடைமேல்வருவார்துன்னாருடையமதிலகள்
காயவேவசெற்றூகடவூாமயானமமாந்தார்
தீயகருமஞ்சொலலுஞ்சிறுபுன்றேரரமணர்
பேயபேயென்னவருவாரவரெம்பெருமானடிகளே. (௰)

மரவம்பொழிலசூழ்கடவூா மன்னுமயானமமர்ந்த
வரவமசைத்தபெருமானைகலமறியலாகப
பரவுமுறைமேயபயிலுமபந்தன்செஞசொன்மாலை
யிரவுமபகலும்பரவிநினைவாாவினைகளிலரோ (௧௧)

திருசசிறறமபலம.

## திருநாவுக்காசுநாயனா

### திருககுறுந்தொகை. (ரு-ம் திருமுறை)

திருசசிறறம்பலம்.

குழைகொள்காதினாகோவணவாடைய
ருழையர்தாஙகடவூரினமயானததாா
பழையதமமடியாாசெயமபாவமும
பிழையுந்தீாப்பாபெருமானடிகளே (௧)

உன்னிவானவரோதியசிந்தையிற
கன்னறேன்கடவூரின்மயானததார்
தன்னைநோககிததொழுதெழுவாாகடகெலாம
பின்னையெனனாபெருமானடிகளே. (௨)

சூலமேந்துவர்தோலுடையாரை ய
ராலமுண்டமுதேமிகததேககுவா
காலகாலர்கடவூரினமயானததாா
மாலைமார்பாபெருமானடிகளே. (௩)

இறைவனாரிமையோாதொழுபைஙகழலா
மறவனார்கடவூரின்மயானத்தா
ரறவனாரடியாரடியார்தங்கள
பிறவிதீர்ப்பர்பெருமானடிகளே. (௪)

கத்துகாளிகதந்தணிவித்தவர்
மத்தர்தாங்கடவூரின்மயானத்தா
ரொத்தொவ்வாதனசெய்துழலவாரொரு
பித்தர்காணும்பெருமானடிகளே. (௫)

எரிகொண்மேனியிளம்பிறைவைத்தவர்
கரியர்தாங்கடவூரின்மயானத்தா
ரரியரண்டத்துளோரயன்மாலுக்கும்
பெரியர்காணும்பெருமானடிகளே. (௬)

அணங்குபாகத்தராரணநான்மறை
கணங்கள்சேர்கடவூரின்மயானத்தார்
வணங்குவாரிடர்தீர்ப்பாமயக்குறும்
பிணங்கொள்காடர்பெருமானடிகளே. (எ)

அரவுகையினராதிபுராணனார்
மரவுசேர்கடவூரின்மயானத்தார்
பரவுவாரிடர்தீர்ப்பர்பணிகொள்வார்
பிரமன்மாற்கும்பெருமானடிகளே (அ, க, க0.)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்

பண் - பழம்பஞ்சுரம் (எ. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல
வருவார்விடைமேன்மாதோடுமகிழ்ந்துபூதப்படைசூழத்
திருமால்பிரமனிந்திரற்குந்தேவர்நாகர்தானவர்க்கும்
பெருமான்கடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (க)

விண்ணோர்தலைவர்வெண்புரிநூன்மார்பர்வேதகீதத்தர்
கண்ணார்நுதலர்நகுதலையர்காலகாலர்கடவூர
ரெண்ணார்புரமூன்றெரிசெய்தவிறைவரிமையோரொருபாகம்
பெண்ணாணவர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (உ)

காயும்புலியினதளுடையர்கண்டரெண்டோள் கடவூரர்
தாயுந்தந்தைபல்லுயிர்க்குந்தாமேயாயதலைவனார்
பாயும்விடையொன்றதுவேறிப்பலிதேர்ந்துணணும்பரமேட்டி
பேயகள்வாழுமயானத்துப்பெரியபெருமானடிகளே. (ங)

நறைசேர்மலரைங்கணையானைநயனத்தீயாற்பொடிசெய்த
விறையாராவரெல்லார்க்குமில்லையென்னாதருள்செய்வார்
பறையார்முழவம்பாட்டோடுபயிலுந்தொண்டர்பயில்கடவூர்ப்
பிறையார்சடையார்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (ச)

கொத்தார்கொன்றைமதிசூடிக்கோணாகங்கள்பூணாக
மத்தயானையுரிபோர்த்துமருப்புமாமைத்தாலியார்
பத்திசெய்துபாரிடங்கள்பாடியாடிப்பலிகொள்ளும்
பித்தர்கடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (ரு)

துணிவார்கீளுங்கோவணமுந்துதைந்துசுடலைப்பொடியணிந்து
பணிமேலிட்டபாசுபதர்பஞ்சவடிமார்பினர்கடவூர்த்
திணிவார்குழையார்புரமூன்றுந்தீவாய்ப்படுத்தசேவகனார்
பிணிவார்சடையார்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (சு)

காரார்கடலினஞ்சுண்டகண்டர்கடவூருறைவாணர்
தேராரரக்கன்போய்வீழ்ந்துசிதையவிரலாலூன்றினு
ரூர்தானாவதுலகேழுமுடையார்க்கொற்றியூராரூர்
பேராயிரவர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (எ)

வாடாமுலையாடன்னோடுமகிழ்ந்துகானிலவேடுவனுயக
கோடார்கேழற்பின்சென்றுகுறுகிவிசயன்றவமழித்து
நாடாவண்ணஞ்செருச்செய்துவாவநாழிநிலையருள்செய்
பீடார்சடையார்மயானததுப்பெரியபெருமானடிகளே. (அ)

வேழமுரிப்பர்மழுவாளர்வேளவியழிப்பர்சிரமறுப்ப
ராழியளிப்பரரிதனககுவானஞ்சுகப்பரறமுரைப்ப
ரேழைதலைவாகடவூரிலிறைவாசிறுமானமறிகையா
பேழைச்சடையர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (கூ)

மாடமலருகடவூரின்மறையோரேததுமயானத்துப்
பீடைதீரவடியாருககருளும்பெருமானடிகள்சீர்
நாடிநாவலாரூரனமபிசொன்னநறறமிழ்கள
பாடுமடியார்கேட்பார்மேற்பாவமானபறையுமே (கo)

திருசசிறறமபலம.

---

திருககடவூரமயானததிருபபதிகம - ங

---

சுவாமி - பிரமபுரியீசா
தேவி - மலாகருழலமின்னமமை

---

ஆ திருபபதிகம் - ககள.

---

## சகூ. திருவேட்டக்குடி.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனா.

பண்-பஞசமம. (ங-ம். திருமுறை.)

---

திருசசிறறமபலம.

வண்டிரைககுமலா கொன்றைவிரிசடைமேலவரியரவங
கண்டிரைககும்பிறைச செனனிககாபாலிகளகழலக
கொண்டிரைத்துததொழுதிறைஞசததுளங்கொளிநீா சசுடாபபவளங
தெண்டிரைக்கணகொணாநதெரியுந்திருவேடடகருடியாரே. (க)

பாய்திமிலர்வலையோடுமீன்வாரிப்பயின்றெங்குங
காசினியிற்கொணாந்தட்டுங்கைதலசூழ்கழிக்கானற்
போயிரவிற்பேயோடுமபுறஙகாட்டிறபுரிந்தழகார்
தீயெரிகைமகிழ்ந்தாருந்திருவேட்டக்குடியாரே (உ)

தோத்திரமாமணலிலிங்கந்தொடஙகியவானிரையிற்பால
பாத்திரமாவாட்டுதலும்பரஞ்சோதிபரிநதருளி
யாத்தமெனமறைநால்வர்ககறம்புரிநூலன்றுரைத்த
தீர்த்தமல்குசடையாருந்திருவேட்டக்குடியாரே. (ங)

கலவஞ்சேர்கழிக்கானல்கதிர்முத்தங்கலந்தெங்கு
மலவன்சேரணைவாரிகொணாந்தெறியுமகன்றுறைவாய்
நிலவஞ்சேர்நுண்ணிடையநேரிழையாளவளோடுந்
திலகஞ்சேர்நெற்றியினார்திருவேட்டக்குடியாரே. (ச)

பங்கமார்கடலலறப்பருவரையோடரவுழலச்
செங்கண்மால்கடையவெழுநஞ்சருந்துசிவமூர்த்தி
யங்கநான்மறைநாலவர்ககறமபொருளின்பயனளித்த
திங்கள்சேர்சடையாருந்திருவேட்டககுடியாரே. (ரு)

நாவாயபிறைச்சென்னிநலந்திகழுமிலங்கிப்பி
கோவாதநித்திலங்கள்கொணர்நமதெறியுங்குளிர்கான
லேவாரும்வெஞ்சிலையாலெயின்மூனறுமெரிசெய்த
தேவாதிதேவனூர்திருவேட்டககுடியாரே. (சு)

பானிலவுமபங்கயத்துப்பைங்கானலவெண்குருகு
கானிலவுமலர்ப்பொய்கைகைதல்சூழ்கழிநகானல்
மானின்விழிமலைமகளோடொருபாகம்பிரிவரியார்
தேனிலவுமலர்ச்சோலைத்திருவேட்டககுடியாரே (எ)

துறையுலவுகடலோதஞ்சுரிசங்கமிடறிப்போய
நறையுலவுமபொழிற்புன்னைநன்னீழறகீழமரு
மிறைபயிலுமிராவணனைமலைப்படுமிருபதுதோ
டிறலழியவடர்த்தாருந்திருவேட்டககுடியாரே. (அ)

அருமறைநான்முகத்தானுமகலிடநீரேற்றானு
மிருவருமாயளப்பரியவெரியுருவாய்நீணடபிரான்
வருபுனலின்மணியுந்திமறிதிரையார்சுடர்பவளத்
திருவுருவிலவெணணீற்றார்திருவேட்டககுடியாரே. (கூ)

இகழ்ந்துரைகருஞ்சமணர்கருந்துவர்போர்வைச்சாக்கியரும்
புகழ்ந்துரையாபாவிகளசொறகொள்ளேன்மின்பொருளென்ன
நிகழ்ந்திலங்குவெண்மணலினிறைந்துண்டபபிறைக்கற்றை
திகழ்ந்திலங்குசெஞ்சடையார்திருவேட்டககுடியாரே (கo)

தெணடிரைசேர்வயலுடுத்ததிருவேட்டககுடியாரைத்
தணடலைசூழ்கலிக்காழித்தமிழ்ஞானசம்பந்த
ஞெணடமிழநூலிவைபத்துமுணர்ந்தேத்தவலலார்போ
யுணடுடிப்பிலவானவரோடுயரவானத்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - திருமேனியழகர்
தேவி - சாந்தநாயகி.

---

ஆ திருப்பதிகம் - கககஅ.

---

# ருo. திருத்தெளிச்சேரி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (உ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பூவலர்ந்தனகொண்டுமுப்போதுமும்பொற்கழ
றேவர்வந்துவணங்குமிகுதெளிச்சேரியீர்
மேவருந்தொழிலாளொடுகேழற்பின்வேடனும்
பாவகங்கொடுநின்றதுபோலுநும்பான்மையே. (க)

விளக்கும்பத்திக்குவிண்ணவர்மண்ணவரேத்தவே
திளைக்குந்தீர்த்தமறாததிகழ்தெளிச்சேரியீர்
வளைக்குந்திண்சிலைமேலைந்துபாணமுந்தானெய்து
களிக்குங்காமனையெங்ஙனநீர்கணணிற்காய்ந்ததே. (உ)

வம்படுத்தமலர்ப்பொழில்சூழமதிதவழ்
செம்படுத்தசெழும்புரிசைத்தெளிச்சேரியீர்
கொம்படுத்ததொர்கோலவிடைமிசைக்கூர்மையோ
டம்படுத்தகண்ணாளொடுமேவலழகிதே. (௩)

காருலாங்கடலிப்பிகண்முத்தங்கரைப்பெயுந்
தேருலாநெடுவீதியதார்தெளிச்சேரியீ
ரேருலாம்பலிக்கேகிடைவைப்பிடமின்றியே
வாருலாமுலையாளையொர்பாகத்துவைத்ததே. (௪)

பக்கநுந்தமைப்பார்பபதியேத்திமுன்பாவிக்குஞ்
செக்கர்மாமதிசேர்மதில்சூழ்தெளிச்சேரியீர்
மைக்கொள்கண்ணியர்கைவளைமாலசெய்துவெளவவே
நக்கராயுலகெங்கும்பலிக்குநடப்பதே. (ரு)

தவளவெண்பிறைதோய்தருதாழ்பொழில்சூழநற்
றிவளமாமணிமாடந்திகழுதெளிச்சேரியீர்
குவளைபோற்கண்ணிதுண்ணெனவந்துகுறுகிய
கவளமாலகரியெங்ஙனநீர்கையிற்காய்ந்ததே. (௬)

கோடடுத்தபொழிலின்மிசைக்குயில்கூவிடுஞ்
சேடடுத்ததொழிலின்மிகுதெளிச்சேரியீர்
மாடடுத்தமலர்க்கண்ணினாள்கங்கைநங்கையைத்
தோடடுத்தமலர்ச்சடையென்கொனீர்சூடிற்றே. (௭)

கொத்திரைத்தமலர்க்குழலாள்குயில்கோலஞ்சேர்
சித்திரக்கொடிமாளிகைசூழ்தெளிச்சேரியீர்
வித்தகப்படைவல்லவரக்கன்விறற்றலை
பத்திரட்டிகரநெரித்திட்டதும்பாதமே. (அ)

காலெடுத்ததிரைக்கைகரைக்கெறிகானல்சூழ்
சேலெடுத்தவயற்பழனத்தெளிச்சேரியீர்
மாலடித்தலமாமலரான்முடிதேடியே
யோலமிட்டிடவெங்ஙனமோருருக்கொண்டதே. (௯)

மந்திரந்தருமாமறையோர்கடவுத்துவர்
செந்திலங்குமொழியவர்சேர்தெளிச்சேரியீர்
வெந்தலாகியசாக்கியரோடுசமணர்க
டந்திறத்தனநீக்குவித்தீரோர்சதிரரே (௧௦)

திக்குலாம்பொழில்சூழ்தெளிச்சேரியெஞ்செல்வனை
மிக்ககாழியுண்ஞானசம்பந்தன்விளம்பிய
தக்கபாடல்கள்பத்தும்வல்லார்தடமுடித்
தொக்கவானவர்சூழவிருப்பவர்சொல்லிலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - பார்வதியீசர்
தேவி - சத்தியம்மை

---

ஆ திருப்பதிகம் - ௪௧௯.

---

# ௫௧. திருத்தருமபுரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண்-யாழ்மூரி மேகராககுறிஞ்சி. (௩. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மாதர்ம டப்பிடியு மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையெ னமகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடை நெடு முடியதோர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொருது விம்மி நின்றயலே
தாதவிழ் புன்னைதயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில பொழில குயில பயி றருமபு ரம்பதியே. (௧)

பொங்குந டைப்புகலில் விடை யாமவ ரூர்திவெண்
பொடி யணி தடங்கொண் மார்பு பூண நூல்புரள
மங்குலி டைத்தவழு மதி சூடுவ ராடுவர்
வளங் கிளர் புன லரவம் வைகி யசடையர்
சங்குக டற்றிரையா லுதை யுண்டுசே ரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந்து சேரும் வெண்ம ணற்குவைமேற்
றங்குக திர்மணிநித் தில மெல்லிரு ளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழிற் றருமபு ரம்பதியே. (௨)

விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
டுவர் விரி சுரி யொளிகொ டோடு நின்றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்ம திக்கண்ணியர்
கழிந் தவ ரழிந் திடு முடைத லைகலனாப்
பெண்ணுற நின்றவர்தம் முரு வம்மயன் மாறொழ
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்த தும்பிரியார்
தண்ணிதழ் முல்லையொடெண் ணிதழ் மவ்வன் மருங்கலர்
கருங் கழிந் நெருங்கு குறுந் தருமபு ரம்பதியே. (௩)

வாருறு மென்முலைநன் னுத லேழையோ டாடுவர்
வளங் கிளர் விளங் குதிங்கள் வைகி யசடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றை யஞ்சகண்ணியர்
கடு விடை கொடி வெடி கொள் காடு றைபதியர்
பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்
படு தலைப் பலி கொளல் பரிப வந்நிலையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
தழை பொழின் மழைந ழுழை தருமபு ரம்பதியே (௪)

நேருமவர்க் குணரப் புகில் இல்லைநெ டுஞ்சடைக்
கடும் புனல் படர்ந் திடப் படுவ தோர்நிலையர்
பேருமவர்க் கெனையா யிர முனைபயி றப்பிறப்
பிலா தவ ருடற் றடர்த்த பெற்றி யாரறிவார்
ஆரமவர்க் கழல்வா யதோர் நாகம் முஞ்சுற
வெழுஞ் கொழு மலர் கொளபொன னிதழி நல்லலங்கல்
தூரமவர்க் கிமவான் மக ளூர்வது போர்விடை
கடி படு செடி பொழிற் றருமபு ரம்பதியே (௫)

கூழையங் கோதைகுலா யவ டம்பிணை புல்கமல்
குமென் முலைப் பொறி கொளபொற கொடியி டைத்துவர்
வாழையொன கணமடவா ளையோர் பாகம கிழ்ந்தவர் [வாய
வலம லி படை விடை சொடிகொ டுமழுவாள்
யாழையு மெள்கிட வேழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமன் சிறைகறை யுறந்நறவ விரியுநற
றாழையு ஞாழலு நீடிய கானலி னள்ளிசைப்
புள் ளினந் துயில் பயி றருமபு ரம்பதியே (௬)

தேமரு வார்குழ லன்ன நடைப்பெடை மான்விழித
திருந் திழை பொருந்து மேனி செங்க திர்விரியத்
தூமரு செஞ்சடையிற் றுதை வெண்மதி துன்றுகொன்றை
தொல் புனல் சிரங் கரந் துரித்த தோலுடையர்
காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல்லடை கழி யிழிய முண்ட கத்தயலே
தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்
வெறி கமழ் செறி வயற் றருமபு ரம்பதியே. (௭)

தூவண நீறகலம் பொலி யவ்விரை புல்கமல
குமென் மலர் வரை புரை திரள்பு யம்மணிவர்

கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையர்
கொலை மலி படையொர் சூல மேந்தி யகுழகர்
பாவண மாவலறத் தலை பத்துடை யவ்வரக்க
னவ் வலியோர் கவ்வை செய் தருள்புரி தலைவர்
தாவண வேறுடையெம மடி கடகிடம வன்றடங்
கடலை விடும் தடங் கரைத தருமபு ரம்பதியே. (௮)

வார்மலி மென்முலைமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யரவம வைகி யசடையர்
கூர்மலி சூலமுமவெண் மழு வுமமவர் வெலபடை
குனி சிலை தனி மலைய தேநதி யகுழக
ரார்மலி யாழிகொள்செல வனு மலிகொடாமரைய
மிசை யவ னடிம முடி யளவு தாமறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கி டங்
தடங கடல விடும் நிரைத தருமபு ரமபதியே (௯)

புத்தர கடத்துவர்மொயத் துறி புலகிய கையர்பொய
மொழிந் தழிவில பெறறி யுறற நற்ற வர்புலவோர்
பததாக ளததுவமமெயப பய னுணர்வு கநதவர்
நிகழ்ந் தவர் சவந துவா கடலைப பொடியணிவர்
முததுன வெணணகையொன மலை மாதுமைப பொன்னணி
புணா முலை யிணை துணை யணைய துமபிரியா
ததரு வித்திராளுந் திய மாலகா மேயதயவந
தா ங்கிடுங் தடம பொழில தருமபு ரமபதியே (௧௦)

பொனனெடு நனமணிமா ளிகை சூழவிழ வமமலி
பொரு புனல திரு வமர் புகலி யென்றுலகில
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசமபந்தனம்
துசெந் தமிழ்த தடங கடல தருமபு ரம்பதியைப
பின்னெடு வார்சடையிற் பிறை யுமமர வுமமுடை-
பவனை பிணை துணை கழலகள பேணு தலுரியா
ரின்னொடு நன்னுலகெய துவ ரெயதிய போகமு
முறு வரக ளிடா பிணி துயர மணவிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தபிள்ளையார பல ஸதலங்களைத தரிசிததுககொணடு, தருமபுரததை அடைநதார. அங்கு திருநீலகணடப பெரும்பாணருடைய சுறறததாாகள் எதிர்கொண்டுவணங்கித துதிககப பெரும்பாணா பிளளையாா அருளிச்செய்த திருப பதிகங்களின இசையைத தாம யாழில இட்டு வாசிக்கப்பெற்ற பெரும்பேறறை அவாகளுககு அருளிச்செய்தாா. அவாகள அதைக கேட்டு, "நீா திருப்பதிகவிசையை அளவுபெற யாழிலே அமைதது வாசிததலினலே உலகமுழுதிலும இசை விளங்குக" என்றாாகள். உடனே பெரும்பாணா மன நடுங்கி, பிளளையாருடைய திருவடிகளை வணங்கி "சுவாமீ, திருப்பதிகவிசை அளவுபடாத தனமையை உலகததில் யாவரும அறிந்து உண்மையை உணாந்து உயயும்பொருட்டுத தேவரீா ஒரு திருப்பதிகம் பாடியருளல்வேண்டும்" எனறாா. பிளளையாா சிவபிரானை வணங்கி அவவாறே "மாதாமடப்பிடி" என்னும் திருப்பதிகததைப பாடியருளினாா. திருநீலகண்டப்பெரும

பாணர் அத்திருப்பதிகவிசை முன்போல யாழிலடங்காமையைக்கண்டு அச்சங்கொண்டு பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, "சுவாமி அருளிச்செய்த திருப்பதிகத்தினிசையை யாழிலே ஏற்றபோல என்று சொல்லப் பண்ணியது இந்த யாழன்றோ" என்று அதனை உடைக்குமபடி ஓங்க உடனே பிள்ளையார் அதனைத் தடுத்தருளினார்.

---

சுவாமி - யாழ்மூரிநாதர்
தேவி - மதுரமின்னம்மையார்

---

ஆ. திருப்பதிகம் - ௧௨௦.

# ௫௨. திருநள்ளாறுந் திருவாலவாயும்.

## விருவுரை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை (ஆ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப்பாவையோடும்படுபிணக்காடிடம்பற்றிநின்று
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடந்தைமார்கடுணைவரொடுந்தொழுதேத்திவாழ்த்த
வாடகமாடநெருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே (௧)

திங்களம்போதுஞ்செழும்புனலுஞ்செஞ்சடைமாட்டயல்வைத்துகந்து
நங்கண்மகிழுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
பொங்கிளமென்முலையார்களோடும்புனமயிலாடநிலாமுளைக்கு
மங்கழகச்சுதைமாடக்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௨)

தண்ணறுமத்தமுங்கூவிளமும்வெண்டலைமாலையுந்தாங்கியார்க்கு
நண்ணலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
புண்ணியவாணருமாதவருமபுகுந்துடனேத்தப்புனையிழையா
ரண்ணலின்பாடலெடுக்குங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௩)

பூவினில்வாசமபுனலிற்பொற்புப்புதுவிரைச்சாந்தினினாற்றத்தோடு
நாவினிற்பாடனள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
தேவர்கடானவர்சித்தர்விச்சாதரர்கணத்தோடுஞ்சிறந்துபொங்கி
யாவினிலைந்துகந்தாட்டுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௪)

செம்பொன்செய்மாலையும்வாசிகையுந்திருந்துபுகையுமவியும்பாட்டு
நம்பும்பெருமைநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லா
யும்பருநாகருலகந்தானுமொலிகடல்சூழ்ந்தவுலகத்தோரு
மம்புதநாலகளானீடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௫)

பாகமுந்தேவியைவைத்துக்கொண்டுபைவிரித்துத்திப்பரியபேழ்வாய
நாகமும்பூண்டநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
போகமுநின்னைமனத்துவைத்துப்புண்ணியர்நண்ணும்புணர்வுபூண்ட
வாகமுடையவர்சேருங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௬)

கோவணவாடையுநீற்றுப்பூச்சுங்கொடுமழுவேந்தலுஞ்செஞ்சடையு
நாவணப்பாட்டுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
பூவணமேனியிளையமாதர்பொன்னுமணியுங்கொழித்தெடுத்து
வாவணவீதியிலாடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (எ)

இலங்கையிராவணன்வெற்பெடுக்கவெழில்விரலூன்றியிசைவிரும்பி
நலங்கொளச்சேர்ந்தநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்
புனலகளைச்செற்றுப்பொறியைநீக்கிப்புந்தியிலுந்நினைச்சந்திசெய்யு[லாய்
மனல்கனலலார்களமருங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே (அ)

பணியுடைமாலுமலரினுனும்பனறியும்வெறிப்பறவையாயு
நணுகலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய
மணியொலிசங்கொலியோடுமற்றைமாமுரசின்னெலியென்றுமோவா
தணிகிளர்வேந்தர்புகுதுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (கூ)

தடுக்குடை கையருஞ்சாக்கியருஞ்சாதியினீங்கியவத்தவத்தர்
நடுக்குறநின்றநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லா
யெடுக்கும்விழவுநன்னாள்விழவுமிரும்பலியீபியிலேனெ த்திசையு
மடுக்கும்பெருமைசேர்மாடக்கூடலாலவாயினமணமர்ந்தவாறே. (கo)

அன்புடை யானையரனைக்கூடலாலவாயமேவியதென்கொலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானைநயம்பெறப்போற்றிநலங்குலாவும்
பொன்புடைசூழ்தருமாடக்காழிப்பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
வின்புடைப்பாடல்கள்பத்துமவல்லாரிமையவரேத்தவிருப்பர்தாமே. ()

திருச்சிற்றம்பலம்

---

## திருநள்ளாறு.

பண் - பழந்தக்கராகம். (ஆ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்தபூண்முலையாள் ன்னொடும்பொன்னகலம
பாகமார்த்தபைங்கண்வெள்ளேறறண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மே
னாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே (க)

தோடுடையகாதுடையன்றோலுடை யன்றொலையாப்
பீடுடையபோர்விடையன்பெண்ணுமோர்பாலுடைய
னேடுடையமேலுலகோடேழ்கடலுஞ்சூழ்ந்த
நாடுடையநம்பெருமான்மேயதுநள்ளாறே (உ)

ஆன்முறையாலாற்றவெண்ணீறாடியணியிழையோர்
பான்முறையால்வைத்தபாதமபத்தர்பணிந்தேத்த
மான்மறியம்வெண்மழுவுஞ்சூலமும்பற்றியகை
நான்மறையானம்பெருமான்மேயதுநள்ளாறே. (ங)

புல்கவல்லவார்சடைமேற்பூம்புனல்பெய்தயலே
மல்கவல்லகொன்றைமாலைமதியோடுடன்சூடிப்
பல்கவல்லதொண்டர்தம்பொற்பாதநிழற்சேர
நல்கவல்லநம்பெருமான்மேயதுநள்ளாறே. (ச)

ஏறுதாங்கியூர்திபேணியேர்கொளிளமதிய
மாறுதாங்குஞ்சென்னிமேலோராடரவஞ்சூடி
நீறுதாங்கிநூலகிடந்தமார்பினிரைகொன்றை
நாறுதாங்குநம்பெருமான்மேயதுநள்ளாறே (ரு)

திங்களுச்சிமேலவிளங்குந்தேவனிமையோர்க
ளெங்களுச்சியெம்மிறைவனென்றடியேயிறைஞ்சத்
தங்களுச்சியாலவணங்குந்தன்னடியார்கட்கெல்லா
நங்களுச்சிநம்பெருமானமேயதுநள்ளாறே (சு)

வெஞ்சுடர்த்தீயங்கையேந்திவிண்கொண்முழவதிர
வஞ்சிடத்தோராடல்பாடல்பேணுவதன்றியும்போய்ச்
செஞ்சடைக்கோர்திங்கள்சூடித்திகழ்தருகண்டத்துள்ளே
நஞ்சடைத்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (எ)

சிட்டமார்ந்தமும்மதிலுஞ்சிலைவரைத்தீயம்பினாற்
சுட்டுமாட்டிச்சுண்ணவெண்ணீறாடுவதன்றியும்போய்ப்
பட்டமார்ந்தசென்னிமேலோர்பான்மதியஞ்சூடி
நட்டமாடுநம்பெருமான்மேயதுநள்ளாறே (அ)

உண்ணலாகாநஞ்சுகண்டத்துண்டுடனேயொடுக்கி
யண்ணலாகாவண்ணனீழலாரழல்போலுருவ
மெண்ணலாகாவுள்வினையென்றெள்கவலித்திருவர்
நண்ணலாகாநம்பெருமான்மேயதுநள்ளாறே (கூ)

மாசுமெய்யர்மண்டைத்தேரர்குண்டர்குணமிலிகள்
பேசும்பேச்சைமெய்யென்றெண்ணியந்நெறிசெல்லன்மின்
மூசுவண்டார்கொன்றைசூடிமும்மதிலுமுடனே
நாசஞ்செய்தநம்பெருமானமேயதுநள்ளாறே (கo)

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லார்
நுண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநள்ளாற்றை அடைந்து, சுவாமியை வணங்கி, "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகத்தை யாழ்நரம்பிலே இசை கூடும்படிப் பாடியருளினார்.

பிள்ளையார் மதுரைத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும்போது, க்ஷமணர்கள் பிள்ளையாரைத் தருக்கம்பேசி வெல்லுதல் கூடாது, அக்கினியினாலும் ஜலத்தினாலும் வெல்லவேண்டும் எனக்கருதி அரசன்முன்னர் "இருபக்ஷத்தோரும் எங்கள் சமயக்கருத்தை ஏட்டிலே தீட்டி அக்கினியில் இடக்கடவோம், வேவப்பெறாமையே வெற்றி" என்ன, பிள்ளையார் அப்படியே செய்வோம் என்று பிள்ளையாருடைய ஆஞ்ஞையினாலே பாண்டியன் சபைமுன்னே அமைக்கப்பட்ட அக்கினியின் சமீபத்திலே எழுந்தருளி சிவபெருமானே மெய்ப்பொருள் என்று தாம் பாடியருளிய தமிழ்வேதத் திருமுறையை ஸ்தோத்திரஞ்செய்து, திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ

த்து, அத்திருமுறையைத் திறக்க திருநள்ளாற்றின் மேலதாகிய "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகம் நோக்கது. பிள்ளையார் திருநள்ளாற்றரை வணங்கி, அந்தத் திருப்பதிகம் எழுதப்பட்ட திருவேட்டைக் கழற்றி, திருக்கரத்திலே கொண்டு, சிவபெருமானே மெய்ப்பொருள் என்பதைச் சமஸ்தருக்கும் உணர்த்தும் பொருட்டு, இதை அக்கினியில் இடப்படுமாயிற் பழுதில்லை இது சத்தியம், என்னுங் கருத்தையுடைய "தளிரிளவளரொளி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, அங்குள்ளாரெல்லாருங் காண, சமணர்களுடைய சிந்தை வேவ, அவ்வக்கினியிலே அவ்வேட்டை இட்டருளினார். அவ்வேடு மிகச் சுவாலிக்கின்ற அக்கினியிலே பச்சையாய் விளங்கிற்று. சமணர்கள் தங்கள் நூற்பொருளை எழுதியிட்ட ஏடு தகிக்கப்பட்டொழிந்தது. பிள்ளையார் தாம் அக்கினியில் இட்ட ஏட்டை ஏறிந்த நாழிகையிலே ஈனமின்மை கண்டு, யாவரும் வியக்கும்படி எடுத்தருள, அது முன்னையிலும் பசுமையும் புதுமையும் உடைத்தாய் விளங்கிற்று. பிள்ளையார் அவ்வேட்டைத் திருமுறையிலே முன்போலக் கோத்தருளினார்.

---

## திருவிராகம்.

பண் - இந்தளம். (உ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

ஏடுமலிகொன்றையரவிந்துவிளவன்னி
மாடவலசெஞ்சடையெம்மைந்தனிடமென்பர்
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே (க)

விண்ணியல்பிறைப்பிளவறைப்புனன்முடித்த
புண்ணியனிருக்குமிடமென்பர்புவிதன்மேற்
பண்ணியனடந்தொடிசைபாடுமடியார்க
ணண்ணியமனத்தொடுவழிபாடுசெய்நள்ளாறே. (உ)

விளங்கிழைமடந்தைமலைமங்கையொருபாகத்
துளங்கொளவிருத்தியெம்பொருத்தனிடமென்பர்
வளங்கெழுவுதீபமொடுதூபமலர்தூவி
நளன்கெழுவிநாளும்வழிபாடுசெய்நள்ளாறே. (௩)

கொக்கரவர்கூன்மதியர்கோபர்திருமேனிச்
செக்கரவர்சேருமிடமென்பர்தடமூழ்கிப்
புக்கரவர்விஞ்சையரும்விண்ணவருநண்ணி
நக்கரவர்நாமநினைவெய்தியநள்ளாறே (௪)

நெஞ்சமிதுகண்டுகொளுனக்கெனநினைந்தார்
வஞ்சமதறுத்தருளுமற்றவனைவானோ
ரஞ்சமுதுகாகியவர்கைதொழவெழுந்த
நஞ்சமுதுசெய்தவனிருப்பிடநள்ளாறே. (ரு)

பாலனடிபேணவவனாருயிர்குறைக்குங்
காலனுடன்மாளமுனுதைத்தவரனூராங்
கோலமலர்நீர்க்குடமெடுத்துமறையாளர்
நாவின்வழிநின்றுதொழில்பேணியநள்ளாறே. (சா)

நீதியர்நெடுந்தகையர்நீண்மலையர்பாவை
பாதியர்பராபரர்பரம்பரரிருக்கை
வேதியர்கள்வேள்வியொழியாதுமறைநாளு
மோதியரனாமமுமுணர்த்திடுநள்ளாறே. (௭)

கடுத்துவலரக்கன்முனெருக்கிவரைதன்னை
யெடுத்தவன்முடித்தலைகள்பத்துமிகுதோளு
மடர்த்தவர்தமக்கிடமதென்பரளிபாட
நடத்தகலவைத்திரள்கள்வைகியநள்ளாறே. (௮)

உயர்ந்தவனுருக்கொடுதிரிந்துலகமெல்லாம்
பயந்தவனினைப்பரியபண்பனிடமென்பர்
வியந்தமரர்மெச்சமலர்மல்குபொழிலெங்கு
நயந்தருமவேதவொலியார்திருநள்ளாறே. (௯)

சிந்தைதிருகற்சமணர்தேரர்தவமென்னும்
பந்தனையறுத்தருளநின்றபரமனூர்
மந்தமுழவந்தருவிழாவொலியும்வேதச்
சந்தம்விரவிப்பொழின்முழங்கியநள்ளாறே. (௧௦)

ஆடலரவார்சடையனாயிழைதனோடு
நாடுமலிவெய்திடவிருந்தவனள்ளாற்றை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொற்
பாடலுடையாரையடையாபழிகளேயே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிராகம்.

---

பண் - சாதாரி. (௩-ம. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

தளிரிளவளரொளிதனதெழிறருதிகழ்மலைமகள்
குளிரிளவளரொளிவனமுலையிணையவைகுலவலி
னளிரிளவளரொளிமருவுநள்ளாறர்தநாமமே
மிளிரிளவளரெரியிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௧)

போதமர்தருபுரிகுழலெழின்மலைமகள்பூணணி
சீதமதணிதருமுகிழிளவனமுலைசெறிதலி
னாதமதெழிலுருவனையநள்ளாறர்தநாமமே
மீதமதெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௨)

இட்டுறுமணியணியிணர்புணர்வளரொளியெழில்வடங்
கட்டுறுகதிரிளவனமுலையிணையொடுகலவலி
னட்டுறுசெறிவயன்மருவுநள்ளாறர்தநாமமே
யிட்டுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௩)

மைச்சணிவரியரிநயனிதொன்மலைமகள்பயனுறு
கச்சணிகதிரிளவனமுலையவையொடுகலவலி
னச்சணிமிடறுடையடிகணள்ளாறர்தநாமமே
மெச்சணியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௪)

பண்ணியன்மலைமகள்கதிர்விடுபருமணியணிநிறக
கணணியலகலசமதனமுலையிணையொடுகலவலி
னண்ணியகுளிர்புனல்புகுதுநள்ளாறர்தநாமமே
விண்ணியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௫)

போதுறுபுரிகுழனமலைமகளிளவளர்பொன்னணி
சூதுறுதளிர்நிறவனமுலையவையொடுதுதைதலிற
றாதுறுநிறமுடையடிகணள்ளாறர்தநாமமே
மீதுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௬)

கார்மலிநெறிபுரிசுரிகுழலமலைமகள்கவினுறு
சீர்மலிதருமணியணிமுலைதிகழ்வொடுசெறிதலிற்
றார்மலிநகுதலையுடையநள்ளாறர்தநாமமே
யேர்மலியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௭)

மன்னியவளரொளிமலைமகடளிர்நிறமதமிகு
பொன்னியனமணியணிகலசமதனமுலைபுணர்தலிற்
றன்னியறசமுகனெரியநள்ளாறர்தநாமமே
மின்னியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (அ)

கானமுகமயிலியனமலைமகளதிர்விடுகனமிகு
பான்முகமியலபணையிணைமுலைதுணையொடுபயிறலி
னான்முகனரியறிவரியநள்ளாறர்தநாமமே
மேன்முகவெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௯)

அத்திரநயனிதொன்மலைமகள்பயனுறுமதிசயச்
சித்திரமணியணிதிகழ்முலைதுணையொடுசெறிதலிற்
புத்தரொடமணர்பொய்பெயருநள்ளாறர்தநாமமே
மெய்த்திரளெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௧௦)

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதரு
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடவிவைகூறிய
சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுரைத் திருப்புதியில் "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகம் எழுதப்பட்ட திருவேடு "அக்கினியில் இடப்படினும் பழுதில்லை இது சத்தியம்" என்னுங் கருத்தையுடைய "தளிரிள வளரொளி" என்னுந் திருப்பதிகம்பாடியருளினார்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

உள்ளாறாததோர்புண்டரிகத்திர
டெள்ளாறாச்சிவச்சோதிதிரளினைக்
கள்ளாறாதபொற்கொன்றைகமழ்சடை
நள்ளாறாவெனநம்வினைநாசமே. (க)

ஆரணப்பொருளாமருளாளனார்
வாரணத்துரிபோர்த்தமணாளனார்
நாரணனண்ணியேத்துநள்ளாறனார்
காரணக்கலைஞானக்கடவுளே (உ)

மேகம்பூண்டதோர்மேருவிற்பொன்னெடயில
சோகம்பூண்டழலசோரத்தொட்டவனவனை
பாகம்பூண்டமால்பங்கயத்தானொடு
நாகம்பூண்டுகூத்தாடுநள்ளாறனே. (ங)

மலியுஞ்செஞ்சடைவாயரவம்மொடு
பொலியும்பூம்புனலவைத்தபுனிதனார்
நலியுங்கூற்றைநலிந்தநள்ளாறர்தம்
வலியுங்கண்டிறுமாந்துமகிழ்வனே (ச)

உறவனாயநிறைந்துள்ளங்குளிர்ப்பவ
னிறைவனாகிநின்றெண்ணிறைந்தானவ
னறவநாறும்பொழிற்றிருநள்ளாறன்
மறவனாய்ப்பன்றிப்பின்சென்றமாயமே. (ரு)

செக்கரங்கழிசெஞ்சுடர்ச்சோதியா
நக்கரங்கரவார்த்தநள்ளாறனா
வக்கரன்னுயிர்வவ்வியமாயற்குச
சக்கரம்மருள்செய்தசதுரரே. (சு)

வஞ்சநஞ்சிற்பொலிகின்றகண்டத்தர்
விஞ்சையிற்செல்வப்பாவைக்குவேந்தனார்
வஞ்சநெஞ்சத்தவர்க்குவழிகொடா
நஞ்சநெஞ்சர்க்கருளுநள்ளாறரே. (எ)

அல்லனென்றமலர்க்கருளாயின
சொல்லனென்றுசொலலாமறைச்சோதியான்
வல்லனென்றும்வல்லார்வளமிக்கவர்
நல்லனென்றுநல்லார்க்குநள்ளாறனே. (அ)

பாம்பணைப்பள்ளிகொண்டபரமனும்
பூம்பணைப்பொலிகின்றபுராணனுந்
தாம்பணிந்தளப்பொண்ணாத்தனித்தழ
னாம்பணிந்தடிபோற்றுநள்ளாறனே. (கூ)

இலங்கைமன்னனிருபதுதோளிற
மலங்கமால்வரைமேல்விரல்வைத்தவ
னலங்கொணீற்றர்நள்ளாறரைநாடொறும
வலங்கொள்வார்வினையாயினமாயுமே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம் (௬-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

ஆதிக்கண்ணான்முகத்திலொன்றுசென்று
வல்லாதுசொல்லுமைக்கத்தன்கைவாளாற்
சேதித்ததிருவடியைச்செல்லநல்ல
சிவலோகநெறிவகுத்துக்காட்டுவானை
மாதிமையமாதோர்கூறாயினானை
மாமலர்மேலானொடுமாலுங்காணா
நாதியைநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௧)

படையானைப்பாசுபதவேடத்தானைப்
பண்டனங்கற்பாய்த்தானைப்பாவமெல்லா
மடையாமைக்காப்பானையடியார்தங்கள்
கருமருந்தையாவாவென்றருள்செய்வானைச்
சடையானைச்சந்திரனைத்தரித்தான்றன்னைச்
சங்கத்தமுதனையவெள்ளேறேறி
னடையானைநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௨)

படவரவமொன்றுகொண்டரையிலார்த்த
பராபரனைப்பைஞ்ஞீலிமேவினானை
யடலரவம்பற்றிக்கடைந்தநஞ்சை
யமுதாகவுண்டானையாதியானை
மடலரவமன்னுபூங்கொன்றையானை
மாமணியைமாணிக்காய்க்காலனைறன்னை
நடலரவஞ்செய்தானைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௩)

கட்டங்கமொன்றுதங்கையிலேந்திக்
கங்கணமுங்காதில்விடுதோடிட்டுச்
சுட்டங்கங்கொண்டுதுதையப்பூசிச்
சுந்தரனைச்சூலங்கையேந்தினானைப்
பட்டங்கமாலைநிறையச்சூடிப்
பலகணமுந்தாமும்பரந்தகாட்டி
னட்டங்கமாடியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௪)

உலந்தார்தம்மங்கங்கொண்டுலகமெல்லா
மொருநொடியிலுழலவானையுலப்பிலசெல்வஞ்

சிலந்திதனக்கருள்செய்ததேவதேவைத்
திருச்சிராப்பள்ளியெஞ்சிவலோகனைக்
கலந்தார்தம்மனத்தென்றுங்காதலானைக்
கச்சியேகம்பனைக்கமழ்பூங்கொன்றை
நலந்தாங்குநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே (௫)

குலங்கொடுத்துக்கோணைக்கவல்லான்றன்னைக்
குலவரையின்மடப்பாவையிடப்பாலானை
மலங்கெடுத்துமாதீர்த்தமாட்டிக்கொண்ட
மறையவனைப்பிறைதவழுஞ்செஞ்சடையினானைச்
சலங்கெடுத்துத்தயாமூலதன்மமென்னுந்
தத்துவத்தின்வழிநின்றுதாழ்ந்தோர்க்கெல்லா
நலங்கொடுக்குநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௬)

பூவிரியுமலர்க்கொன்றைச்சடையினானைப்
புறம்பயத்தெம்பெருமானைப்புகலூரானை
மாவிரியக்களிறுரித்தமைந்தன்றன்னை
மறைக்காடுமேவலிவலமுமன்னினானைத்
தேவிரியத்திகழ்தக்கன்வேள்வியெல்லாஞ்
சிதைத்தானையுறைத்தவன்றன்சிரங்கொண்டானை
நாவிரியமறைநவின்றநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௭)

சொல்லானைச்சுடப்பவளச்சோதியானைத்
தொல்லவுணர்புரமூன்றுமெரியச்செற்ற
வில்லானையெல்லார்க்குமேலானானை
மெல்லியலாள்பாகனைவேதநான்கும்
கல்லாலினீழற்கீழறங்கண்டானைக்
காளத்தியானைக்கயிலைமேய
நல்லானைநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௮)

குன்றாதமாமுனிவன்சாபநீக்கக்
குறைகழலாற்கூற்றுவனைக்குமைத்தகோனை
யன்றாகவவுணர்புரமூன்றுமவேவ
வாரழலவாயோட்டியடர்வித்தானைச்
சென்றாதுவேண்டிற்றொன்றீவான்றன்னைச்
சிவனேயெம்பெருமானென்றிருப்பார்க்கென்று
நன்றாகுநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௯)

இறவாமேவரம்பெற்றேனென்றுமிக்க
விராவணனையிருபதுதோணெரியவூன்றி
யுறவாகியின்னிசைகேட்டிரங்கிமீண்டே
யுற்றபிணிதவிர்த்தருளவல்லான்றன்னை

மறவாதார்மனத்தென்றுமன்னினானை
மாமதியமலர்க்கொன்றைவன்னிமத்த
நறவார்செஞ்சடையானைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - தக்கேசி. (எ-ம்.திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

செம்பொன்மேனிவெண்ணீறணிவானைக்
கரியகண்டனைமாலயன்காணாச்
சம்புவைத்தழலங்கையினானைச்
சாமவேதனைத்தன்னொப்பிலானைக்
கும்பமாகரியின்னுரியானைக்
கோவின்மேல்வருங்கோவினையெங்க
ணம்பனைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௧)

விரைசெய்மாமலர்க்கொன்றையினானை
வேதகீதனைமிகச்சிறந்துருகிப்
பரசுவார்வினைப்பற்றறுப்பானைப்
பாலொடானஞ்சுமாடவல்லானைக்
குரைகடல்வரையேழுலகுடைய
கோனைஞானக்கொழுந்தினைக்கொல்லை
நரைவிடையுடைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௨)

பூவில்வாசத்தைப்பொன்னினைமணியைப்
புவியைக்காற்றினைப்புனலனல்வெளியைச்
சேவின்மேல்வருஞ்செல்வனைச்சிவனைத்
தேவதேவனைத்தித்திக்குந்தேனைக்
காவியங்கண்ணிபங்கனைக்கங்கைச்
சடையனைக்காமரத்திசைபாட
நாவினூறுநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௩)

தஞ்சமென்றுதன்றாளதுவடைந்த
பாலன்மேல்வந்தகாலனையுருள
நெஞ்சிலோருதைகொண்டபிரானை
நினைப்பவர்மனநீங்ககில்லானை
விஞ்சைவானவர்தானவர்கூடிக்
கடைந்தவேலையுண்மிக்கெழுந்தெரியு
நஞ்சமுண்டநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே (௪)

மங்கைபங்கனைமாசிலாமணியை
வானநாடனையேனமோடன்ன
மெங்குநாடியுங்காண்பரியானை
யேழையேறெளிவந்தபிரானை
யங்கணானமறையானிறைகின்ற
வந்தணாளரடியதுபோற்று
நங்கள்கோனைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே (௫)

கற்பகத்தினைக்கனகமால்வரையைக்
காமகோபனைக்கண்ணுதலானைச்
சொற்பதப்பொருளிருளறுத்தருளுந்
தூயசோதியைவெண்ணெய்நல்லூரி
லற்புதப்பழவாவணங்காட்டி
யடியனாவென்னையாளதுகொண்ட
நற்பதத்தைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௬)

மறவனையன்றுபன்றிப்பின்சென்ற
மாயனைநால்வர்க்காலின்கீழுரைத்த
வறவனையமரர்க்கரியானை
யமரர்சேனைக்குநாயகனான
குறவர்மங்கைதன்கேள்வனைப்பெற்ற
கோனைநான்செய்தகுற்றங்கள்பொறுக்கு
நறைவிரியுநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௭)

மாதினுக்குடம்பிடங்கொடுத்தானை
மணியினைப்பணிவார்வினைகெடுக்கும்
வேதனைவேதவேள்வியர்வணங்கும்
விமலனையடியேற்கெளிவந்த
தூதனைத்தன்னைத்தோழமையருளித்
தொண்டனேன்செய்ததுரிசுகள்பொறுக்கு
நாதனைநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௮)

இலங்கைவேந்தனெழிறிகழ்கயிலை
யெடுப்பவாங்கிமவான்மகளஞ்சத்
துலங்குநீண்முடியொருபதுந்தோள்க
ளிருபதுந்நெரித்தின்னிசைகேட்டு
வலங்கைவாளொடுநாமமுங்கொடுத்த
வள்ளலைப்பிள்ளைமாமதிச்சடைமே
னலங்கொள்சோதிநள்ளாறனையமுதை
நாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௯)

செறிந்தசோலைகள்சூழ்ந்தநள்ளாற்றெஞ்
சிவனைநாவலூர்ச்சிங்கடிதந்தை

மறந்துநான்மற்றுநினைப்பதேதென்று
வனப்பகையப்பனூரன்வன்றொண்டன்
சிறந்தமாலைகளஞ்சினோடஞ்சுஞ்
சிந்தையுள்ளுருகிச்செப்பவல்லார்க்
கிறந்துபோக்கில்லைவரவில்லையாகி
யின்பவெள்ளத்துளிருப்பர்களினிதே. (க0)

திருச்சிற்றம்பலம்.

திருநள்ளாற்றுத் திருப்பதிகம் - எ.

சுவாமி - தர்ப்பாரணியநாதர்
தேவி - போகமார்த்தபூண்முலையாள்

ஆக திருப்பதிகம் - கஉஎ.

# ருங. திருக்கோட்டாறு.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - சீகாமரம் (உ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்

கருந்தடங்கண்ணின்மாதரா ரிசைசெய்யக்காரதிர்கின்றபூம்பொழிற்
குருந்தமாதவியின்விரைமல்குகோட்டாற்றில்
லிருந்தவெம்பெருமானையுள்கியிணையடிதொழுதேத்துமாந்தர்கள்
வருந்துமாறறியார்நெறிசேர்வர்வானூடே. (க)

நின்றுமேயந்துநினைந்துமாகரிநீரொடும்மலர்வேண்டிவான்மழை
குன்றினேர்ந்துகுத்திப்பணிசெய்யுங்கோட்டாற்றுள்
ளென்றுமன்னியவெம்பிரான்கழலேத்திவானரசாளவல்லவர்
பொன்றுமாறறியார்புகழார்ந்தபுண்ணியரே (உ)

விரவிநாளும்விழாவிடைப்பொலிதொண்டர்வந்துவியந்துபணிசெயக்
குரவமாருநீழற்பொழின்மல்குகோட்டாற்றி
லரவநீள்சடையானையுள்கிநின்றாதரித்துமுன்னன்புசெய்தடி
பரவுமாறுவல்லார்பழிபற்றறுப்பாரே. (ங)

அம்பினேர்விழிமங்கைமார்பலராடகம்பெறுமாடமாளிகைக்
கொம்பினேர்துகிலின்கொடியாடுகோட்டாற்றி
னம்பனேநடனேநலந்திகழ்நாதனேயென்றுகாதல்செய்தவர்
தம்பினேர்ந்தறியார்தடுமாற்றவல்வினையே. (ச)

பழையதம்மடியார்துதிசெய்யப்பாருளோர்களும்விண்ணுளோர்தொழக்
குழலுமொந்தைவிழாவொலிசெய்யுங்கோட்டாற்றிற்
கழலும்வண்சிலம்பும்மொலிசெய்யக்கானிடைக்கணமேத்தவாடிய
வழகனென்றெழுவாரணியாவர்வானவர்க்கே. (ரு)

பஞ்சின்மெல்லடிமாதராடவர்பத்தர்சித்தர்கள்பண்புவைகலுங்
கொஞ்சியின்மொழியாற்றொழின்மல்குகோட்டாற்றின்
மஞ்சனேமணியேமணிமிடற்றண்ணலேயெனவுண்ணெகிழ்ந்தவர்
துஞ்சுமாறறியார்பிறவாரித்தொன்னிலத்தே. (௬)

கலவமாமயிலாளொர்பங்கனைக்கண்டுகண்மிசைநீர்நெகிழ்த்திசை
குலவுமாறுவல்லார்குடிகொண்டகோட்டாற்றி
னிலவுமாமதிசேர்சடையுடைநின்மலாவெனவுன்னுவாரவ
ருலவுவானவரினுயர்வாகுவதுண்மையதே (௭)

வண்டலார்வயற்சாலியாலைவளம்பொலிந்திடவார்புனற்றிரை
கொண்டலார்கொணர்ந்தங்குலவுந்திகழ்கோட்டாற்றிற்
றெண்டெலாந்துதிசெய்யநின்றதொழிலனைகழலாலரக்கனை
மிண்டெலாந்தவிர்த்தென்னுகந்திட்டவெறறிமையே. (௮)

கருதிவந்தடியார்தொழுதெழநண்ணனோடயன்றேடவானையின்
குருதிமெய்கலப்பவுரிகொண்டுகோட்டாற்றில்
விருதினன்மடமாதுநீயுமவியப்பொடுமுயர்கோயின்மேவிவெள்
ளெருதுகந்தவனேயிரங்காயுனதின்னருளே. (௯)

உடையிலாதுழல்கின்றகுண்டருமூணருந்தவத்தாயசாக்கியர்
கொடையிலார்மனத்தார்குறையாருங்கோட்டாற்றிற்
படையிலார்மழுவேந்தியாடியபண்பனேயிவரென்கொலோநுனை
யடைகிலாதவண்ணமருளாயுன்னடியவர்க்கே. (௧௦)

காலனைக்கழலாலுதைத்தொருகாமனைக்கனலாகச்சீறிமெய்
கோலவார்குழலாள்குடிகொண்டகோட்டாற்றின்
மூலனைமுடிவொன்றிலாதவெம்முத்தனைப்பயில்பந்தன்சொல்லிய
மாலைபத்தும்வல்லார்க்கெளிதாகும்வானகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வேதியன்விண்ணவரேத்தநின்றான்விளங்கும்மறை
யோதியவொண்பொருளாகிநின்றானொளியார்கிளி
கோதியதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளாதியையேநினைந்தேத்தவல்லார்க்கல்லலில்லையே. (௧)

ஏலமலர்க்குழன்மங்கைநல்லாளிமவான்மகள்
பாலமருந்திருமேனியெங்கள்பரமேட்டியுங்
கோலமலர்ப்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்று
ளாலநீழற்கீழிருந்தறஞ்சொன்னவழகனே. (௨)

இலைமல்குசூலமொன்றேந்தினனுமிமையோர்தொழ
மலைமல்குமங்கையோர்பங்கனுமம்மணிகண்டனுங்
குலைமல்குதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளலைமல்குவார்சடையேற்றுகந்தவழகனன்றே. (௩)

ஊனமரும்முடலுள்ளிருந்தவுமைபங்கனும்
வானமருமதிசென்னிவைத்தமறையோதியுந்
தேனமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுட்
டானமரும்விடையானுமெங்கடலைவனன்றே. (ச)

வம்பமருமலர்க்கோதைபாகமகிழ்மைந்தனுஞ்
செம்பவளத்திருமேனிவெண்ணீறணிசெல்வனும்
கொம்பமருமலர்வண்டுகெண்டுந்திருக்கோட்டாற்று
ணம்பனெனப்பணிவார்க்கருள்செய்யுங்கணுதனே (ரு)

பந்தமரும்விரன்மங்கைநல்லாளொருபாகமா
வெந்தமரும்பொடிப்பூசவல்லவிகிர்தன்மிகும்
கொந்தமருமலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்று
ளெந்தனைநினைந்தேத்தவல்லார்க்கில்லையல்லலே (சு)

துண்டமரும்பிறைசூடிநீடுசுடர்வண்ணனும்
வண்டமருங்குழன்மங்கைநல்லாளொருபங்கனும்
தெண்டிரைநீர்வயல்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்று
ளெண்டருமெண்டிசையாகிநின்றவழகனன்றே (எ)

இரவமரும்நிறம்பெற்றுடையவிலங்கைக்கிறை
கரவமரக்கயிலையெடுத்தானைவலிசெற்றவன்
குரவமருமலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்று
ளரவமருஞ்சடையானடியார்க்கருள்செய்யுமே (அ)

ஓங்கியநாரணனான்முகனுமுணராவகை
நீங்கியதீயுருவாகிநின்றநிமலன்னிழல்
கோங்கமரும்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்று
ளாங்கமரும்பெருமானமரர்க்கமரனன்றே (கூ)

கடுக்கொடுத்ததுவராடையர்காட்சியில்லாததோர்
தடுக்கிடுக்கிச்சமணேதிரிவார்கட்குத்தன்னருள்
கொடுக்ககிலாக்குழகன்னமருந்திருக்கோட்டாற்று
ளிடுக்கணின்றித்தொழுவாரமரர்க்கிறையாவரே. (கo)

கொடியுடைமால்விடையூர்தியினானைத்திருக்கோட்டாற்று
ளடிகழலார்க்கநின்றாடவல்லவருளாளனைக்
கடிகமழும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்சொற்
படியிவைபாடிநின்றாடவல்லார்க்கில்லைபாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

கோட்டாற்றுத் திருப்பதிகம் - உ.

---

சுவாமி - ஐராவதநாதர்.
தேவி - வண்டமர்பூங்குழலி.

---

ஆக திருப்பதிகம் - கஉகூ.

---

# ௫௪. திருவம்பர்ப்பெருந்திருக்கோயில்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

எரிதரவனலகையிலேந்தியெல்லியி
னரிதிரிகானிடைநட்டமாடுவ
ரரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
குரிசில்செங்கண்ணவன்கோயில்சேர்வரே (௧)

மையகண்மலைமகள்பாகமாயிருள்
கையதோர்கனலெரிகனலவாடுவ
ரையநன்பொருபுனலம்பர்ச்செம்பியர்
செய்யகண்ணிறைசெய்தகோயில்சேர்வரே (௨)

மறைபுனைபாடலர்சுடர்கைமல்கவோர்
பிறைபுனைசடைமுடிபெயரவாடுவ
ரறைபுனனிறைவயலம்பர்மாநக
ரிறைபுனையெழிலவளிடமதென்பரே. (௩)

இரவுமல்கிளமதிசூடியீடுயர்
பரவமல்கருமறைபாடியாடுவ
ரரவமோடுயர்செம்மலம்பர்க்கொம்பலர்
மரவமல்கெழினகர்மருவிவாழ்வரே (௪)

சங்கணிகுழையினர்சாமம்பாடுவர்
வெங்கனல்கனன்றரவீசியாடுவ
ரங்கணிவிழவமரம்பர்மாநகர்ச்
செங்கணல்லிறைசெய்தகோயில்சேர்வரே (௫)

கழல்வளர்காலினர்சுடர்கைமல்கவோர்
சுழல்வளர்குளிர்புனல்சூடியாடுவ
ரழல்வளர்மறையவரம்பர்ப்பைம்பொழி
னிழல்வளர்நெடுநகரிடமதென்பரே. (௬)

இகலுறுசுடரெரியிலங்கவீசியே
பகலிடம்பலிகொளப்பாடியாடுவ
ரகலிடமலிபுகழம்பர்வம்பவிழ்
புகலிடநெடுநகர்புகுவர்போலுமே (௭)

எரியனமணிமுடியிலங்கைக்கோன்றன
கரியனதடக்கைகளடர்த்தகாலின
ரரியவர்வளநகரம்பரின்பொடு
புரியவர்பிரிவிலாப்பூதஞ்சூழவே. (௮)

வெறிகிளர்மலர்மிசையவனும்வெந்தொழிற்
பொறிகிளரரவணைப்புல்குசெல்வனு
மறிகிலவரியவரம்பர்ச்செம்பியர்
செறிகழலிறைசெய்தகோயிலசேரவமே. (௯)

வழிதலைபறிதலையவர்கள்கட்டிய
மொழிதலைபயனெனமொழியலவமயிலே
வழிதலைபொருபுனலம்பர்மாநக
ருழிதலையொழிந்துளருமையுந்தாமுமே (௧0)

அழகரையடிகளையம்பர்மேவிய
நிழறிகழ்சடைமுடிநீலகண்டரை
யுமிழ்திரையுலகினிலோதுவீர்கொண்மினோ
தமிழ்கெழுவிரகினன்றமிழ்செயமாலையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவம்பருக்குச்சென்று அங்கே கோச்செங்கட்சோழநாயனார்செய்த பெருந்திருக்கோயிலை அடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, அந்நாயனாரைச் சிறப்பித்து "எரிதரவனல்கையிலேந்தி" என்னுந் திருப்பதிகம்பாடினார்.

சுவாமி - பிரமபுரிநாதர்.
தேவி - பூங்குழலநாயகி

---

ஆ திருப்பதிகம் - கூ௨0.

---

# ருரு. திருவம்பர்மாகாளம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி. (ஆ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அடையார்புரமூன்றுமனலாயவிழவெய்து
மடையார்புனலம்பர்மாகாளமமேய
விடையார்கொடியெந்தைவெள்ளைப்பிறைசூடுஞ்
சடையான்கழலேத்தச்சாராவினைதானே. (௧)

தேனார்மதமத்தந்திங்கள்புனல்சூடி
வானார்பொழிலம்பர்மாகாளமமேய
வூனார்தலைதன்னிற்பலிகொண்டுழலவாழ்க்கை
யானன்கழலேத்தவல்லலடையாவே. (௨)

திரையார்புனலோடுசெல்வமதிசூடி
விரையார்பொழிலம்பர்மாகாளம்மேய
நரையார்விடையூருநம்பான்கழனாளு
முரையாதவர்கண்மேலொழியாவூனம்மே. (௩)

கொந்தண்பொழிற்சோலைக்கோலவரிவண்டு
மந்தம்மலியம்பர்மாகாளம்மேய
கந்தங்கமழ்கொன்றைகமழ்புன்சடைவைத்த
வெந்தைகழலேத்தவிடர்வந்தடையாவே. (௪)

அணியார்மலைமங்கையாகம்பாகமாய
மணியார்புனலம்பர்மாகாளம்மேய
துணியாருடையினான்றுதைபொற்கழனாளும்
பணியாதவர்தம்மேற்பறையாபாவம்மே (௫)

பண்டாழ்கடனஞ்சையுண்டுகளிமாந்தி
வண்டார்பொழிலம்பர்மாகாளம்மேய
விண்டார்புரம்வேவமேருச்சிலையாகக்
கொண்டான்கழலேத்தக்குறுகாகுற்றமே (௬)

மிளிருமரவோடுவெள்ளைப்பிறைசூடி
வளரும்பொழிலம்பர்மாகாளம்மேய
கிளருஞ்சடையண்ணல்கேடில்கழலேத்தத்
தளரும்முறுநோய்கள்சாருந்தவந்தானே (௭)

கொலையார்மழுவோடுகோலச்சிலையேந்தி
யலையார்புனலம்பர்மாகாளம்மேய
விலையார்திரிசூலப்படையான்கழனாளும்
நிலையாநினைவார்மேனில்லாவினைதானே (௮)

சிறையார்வரிவண்டுதேனுண்டிசைபாட
மறையார்நிறையம்பர்மாகாளம்மேய
நறையார்மலரானுமாலுங்காணொணா
விறையான்கழலேத்தவெய்துமின்பமே (௯)

மாசூர்வடிவினர்மண்டையுணல்கொள்வார்
கூசாதுரைக்குஞ்சொற்கொள்ளைக்குணமல்ல
வாசார்பொழிலம்பர்மாகாளம்மேய
வீசாவென்பார்கட்கில்லையிடர்தானே. (௰)

வெருநீர்கொள்வோங்குவேணுபுரந்தன்னுட்
டிருமாமறைஞானசம்பந்தன்சேணார்
பெருமான்மலியம்பர்மாகாளம்பேணி
யுருகாவுரைசெய்வாருயர்வானடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - நட்டராகம். (உ-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

புலகுபொன்னிறம்புரிசடைநெடுமுடிப்போழிளமதிசூடிப்
பிலகுதேனுடைநறுமலர்க்கொன்றையும்பிணையல்செய்தவர்மேய
மலகுதண்டுறையரிசிலின்வடகரைவருபுனன்மாகாள
மல்லுநண்பகலுந்தொழுமடியவர்க்கருவினையடையாவே. (௧)

அரவமாட்டுவரந்துகிலபுலியதளங்கையிலனலேந்தி
யிரவுமாடுவரிவையிவர்சரிதைகளிசைவனபலபூத
மரவந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம
பரவியும்பணிந்தேத்தவல்லாரவர்பயன்றலைப்படுவாரே. (உ)

குணங்களகூறியுங்குற்றங்களபரவியுங்குரைகழலடிசேரக்
கணங்களபாடவுங்கண்டவர்பரவவுங்கருத்தறிந்தவர்மேய
மணங்கொள்பூமபொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம
வணங்குமுள்ளமோடணையவல்லார்களைவல்வினையடையாவே. (௩)

எங்குமேதுமோர்பிணியிலர்கேடிலரிழைவளர்நறுங்கொன்றை
தங்குதொங்கலுந்தாமமுங்கண்ணியுந்தாமகிழ்ந்தவர்மேய
மங்குறோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளங்
கங்குலும்பகலுந்தொழுமடியவர்காதன்மையுடையாரே (௪)

நெதியமென்னுளபோகமற்றென்னுளநிலமிசைநலமாய
கதியமென்னுளவானவரென்னுளர்கருதியபொருள்கூடின
மதியந்தோயபொழிலரிசிலினவடகரைவருபுனனமாகாளம
புதியபூவொடுசாந்தமும்புகையுங்கொண்டேத்துதல்புரிந்தோர்க்கே. (௫)

கண்ணுலாவியகதிரொளிமுடிமிசைக்கனல்விடுசுடர்நாகந்
தெண்ணிலாவொடுதிலகமுநகுதலைதிகழவைத்தவர்மேய
மண்ணுலாமபொழிலரிசிலின்வடகரைவருபுனனமாகாளம்
உண்ணிலாநினைப்புடையவரியாவரிவ்வுலகினிலுயர்வாரே (௬)

தூசுதானரைத்தோலுடைக்கண்ணியஞ்சுடர்விடுநறுங்கொன்றை
பூசுவெணபொடிபூசுவதன்றியும்புகழ்புரிந்தவர்மேய
மாசுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனனமாகாளம
பேசுநீர்மையரியாவரிவ்வுலகினிற்பெருமையைப்பெறுவாரே. (௭)

பௌவமார்கடலிலங்கையர்கோன்றனைப்பருவரைக்கீழூன்றி
யெவ்வந்தீரவன்றிமையவர்க்கருள்செய்தவிறையவனுறைகோயில்
மவ்வந்தோயபொழிலரிசிலினவடகரைவருபுனனமாகாளங்
கவ்வையாற்றொழுமடியவர்மேலவினைகளவிடைச்செதிளன்றே. (௮)

உய்யுங்காரணமுண்டென்றுகருதுமினொளிகிளர்மலரோனும்
பைகொளபாமபணைப்பள்ளிகொள்ளண்ணலும்பரவநின்றவர்மேய
மையுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனனமாகாளங்
கையினாற்றொழுதவலமும்பிணியுந்தங்கவலையுங்களைவாரே. (௯)

பிண்டிபாலருமண்டைகொடேருமபீலிகொண்டுழல்வாருங்
கண்டநூலருங்கடுந்தொழிலாளருங்கழறநின்றவர்மேய
வண்டுலாம்பொழிலரிசிலினவடகரைவருபுனன்மாகாளம
பண்டுநாஞ்செய்தபாவங்களபற்றறப்பரவுதல்செய்வோமே. (க0)

மாறுதன்னொடுமண்மிசையில்லதுவருபுனன்மாகாளத்
தீறுமாதியுமாகியசோதியையேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனதமிழ்மாலை
கூறுவாரையுங்கேட்கவல்லாரையுங்குற்றங்கள்குறுகாவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## பண் - சாதாரி. (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

படியுளார்விடையினர்பாயபுலித்தோலினர்பாவநாசர்
பொடிகொண்மாமேனியர்பூதமார்படையினர்பூணநூலர்
கடிகொண்மாமலரிடுமடியினர்பிடிநடைமங்கையோடு
மடிகளாரருள்புரிந்திருப்பிடமம்பர்மாகாளந்தானே. (௧)

கையினமாமழுவினர்கடுவிடமுண்டவெங்காளகண்டர்
செய்யமாமேனியரூனமாருடைதலைப்பலிதிரிவார்
வையமார்பொதுவினின்மறையவர்தொழுதெழநட்டமாடு
மையன்மாதேவியோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே (௨)

பரவினவடியவர்படுதுயர்கெடுப்பவர்பரிவிலார்பாற்
கரவினர்கனலனவுருவினர்படுதலைப்பலிகொடேகு
மிரவினர்பகலெரிகானிடையாடியவேடர்பூணு
மரவினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே (௩)

நீற்றினர்நீண்டவார்சடையினர்படையினர்நிமலர்வெள்ளை
யேற்றினரெரிபுரிகரத்தினர்புரத்துளாருயிரைவவ்வுங்
கூற்றினர்கொடியிடைமுனிவுறநனிவருகுலவுகங்கை
யாற்றினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே (௪)

புறத்தினரகத்துளார்போற்றிநின்றழுதெழுமன்பர்சிந்தைத்
திறத்தினரறிவிலாச்செதுமதித்தக்கன்றன்வேள்விசெற்ற
மறத்தினர்மாதவர்நால்வருக்காலின்கீழருள்புரிந்த
வறத்தினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே (௫)

பழகமாமலர்பறித்திண்டைகொண்டிறைஞ்சுவார்பாற்செறிந்த
குழகனார்குணம்புகழ்ந்தேத்துவாரவர்பலர்கூடநின்ற
கழகனார்கரியுரித்தாடுகங்காளர்நங்காளியேத்து
மழகனாரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே (௬)

சங்கவார்குழையினர்தழலனவுருவினர்தமதருளே
யெங்குமாயிருந்தவரருந்தவமுனிவருக்களித்துகந்தார்
பொங்குமாபுனல்பரந்தரிசிலின்வடகரைதிருத்தம்பேணி
யங்கமாறோதுவாரிருப்பிடமம்பர்மாகாளந்தானே. (௭)

பொருசிலைமதனனைப்பொடிபடவிழித்தவர்பொழிலிலங்கைக்
குரிசிலைக்குலவரைக்கீழுறவடர்த்தவர்கோயில்கூறிற்
பெருசிலைநலமணிபீலியோடேலமும்பெருகநுந்து
மரிசிலின்வடகரையழகமரம்பர்மாகாளந்தானே. (௮)

வரியராவதன்மிசைத்துயின்றவன்றானுமாமலருளானு
மெரியராவணிகழலேத்தவொண்ணாவகையுயர்ந்துபின்னும்
பிரியராமடியவர்க்கணியராய்ப்பணிவிலாதவருக்கென்று
மரியராயரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. (௯)

சாக்கியக்கயவர்வன்றலைபறிக்கையரும்பொய்யினூ
லாக்கியமொழியவைபிழையவையாதலிலவழிபடுவீர்
வீக்கியவரவுடைக்கச்சையானிச்சையானவர்கட்கெலலா
மாக்கியவரனுறையம்பர்மாகாளமேயடைமினீரே. (கo)

செம்பொன்மாமணிகொழித்தெழுதிரைவருபுனலரிசிலசூழ்ந்த
வம்பர்மாகாளமேகோயிலா வணங்கினேடிருந்தகோனை
கம்பினுர்நெடுமதிற்காழியுணுஞானசமபந்தனசொன்ன
நமபநாண்மொழிபவர்க்கிலலையாமவினைநலமபெறுவாதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருவம்பர்மாகாளத் திருப்பதிகம் - ௩.

சுவாமி - காளகண்டேசர்.
தேவி - பக்ஷநாயகி

ஆ திருப்பதிகம் - கஙங.

# ருகூ. திருமீயச்சூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்.

பண் - காந்தாரம் (உ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

காயச்செவ்விக்காமற்காய்ந்துகங்கையைப்
பாயப்படர்புன்சடையிற்பதித்தபரமேட்டி
மாயச்சூரன்றறுத்தமைந்தன்றாதைதன
மீயச்சூரைத்தொழுதுவினையைவீட்டுமே. (க)

பூவார்சடையின்முடிமேற்புனலரனல்கொள்வர்
நாவார்மறையர்பிறையர்*நறவெண்டலையேந்தி
யேவார்மலையேசிலையாகக்கழியம்பெரிவாங்கி
மேவார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே (உ)

பொன்னேர்கொன்றைமாலைபுரளுமகலத்தான்
மின்னேர்சடைகளுடையான்மீயச்சூரானைத்
தன்னேர்பிறரில்லானைத்தலையால்வணங்குவார்க்
கந்நேரிமையோருலகமெய்தற்கரிதன்றே (௩)

வேகமதநல்லியானைவெருவவுரிபோர்த்துப்
பாகமுமையோடாகப்படிதம்பலபாட
நாகமரைமேலசைத்துநடமாடியநம்பன்
மேகமுரிஞ்சுபொழில்சூழ்மீயச்சூரானே. (௪)

விடையார்கொடியார்சடைமேலவிளங்கும்பிறைவேடம்
படையார்பூதஞ்சூழப்பாடலாடலார்
பெடையார்வரிவண்டணையும்பிணைசேர்கொன்றையார்
விடையார்நடையொன்றுடையார்மீயச்சூராரே. (ரு)

* "நகுவெண்டலை" யும் பாடம்.

குளிருஞ்சடைகொண்முடிமேற்கோலமார்கொன்றை
யொளிரும்பிறையொன்றுடையானொருவன்கைகோடி
நளிரும்மணிசூழ்மாலைநட்டநவினம்பன்
மிளிரும்மரவமுடையான்மீயச்சூரானே. (சு)

நீலவடிவர்மிடறுநெடியர்நிகரில்லார்
கோலவடிவுதமதாங்கொள்கையறிவொண்ணார்
காலர்கழலர்கரியினுரியர்மழுவாளர்
மேலர்மதியர்விதியர்மீயச்சூராரே (எ)

புலியினுரிதோலாடைபூசும்பொடிநீற்ற
ரொலிகொள்புனலோர்சடைமேற்கரந்தாருமையஞ்ச
வலியதிரடோளவன்றணரக்கர்கோன்றன்னை
மெலியவரைக்கீழடர்த்தார்மீயச்சூராரே. (அ)

காதின்மிளிருங்குழையர்கரியகண்டத்தார்
போதிலவனுமாலுந்தொழப்பொங்கெரியானார்
கோதிவரிவண்டறைபூம்பொய்கைப்புனல்மூழ்கி
மேதிபடியும்வயல்சூழ்மீயச்சூராரே (கூ)

கண்டார்நாணும்படியார்கலிங்கமுடைபட்டைக்
கொண்டார்சொல்லைக்குறுகாருயர்ந்தகொள்கையார்
பெண்டான்பாகமுடையார்பெரியவரைவில்லா
விண்டார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே (க0)

வேடமுடையபெருமானுறையுமீயச்சூர்
நாடும்புகழார்புகலிஞானசம்பந்தன்
பாடலாயதமிழீரைந்துமொழிந்துள்கி
யாடுமடியாரகல்வானுலகமடைவாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - முயற்சிநாதர்.
தேவி - சுந்தரநாயகி.

---

ஆஉ திருப்பதிகம் - கஉச.

---

# ருஎ. திருமீயச்சூரிளங்கோயில்.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தோற்றுங்கோயிலுந்தோன்றியகோயிலும்
வேற்றுக்கோயில்பலவுளமீயச்சூர்க்
கூற்றம்பாய்ந்தகுளிர்புன்சடையரற்
கேற்றகோயில்கண்டீரிளங்கோயிலே. (க)

# ரு அ. திருத்திலதைப்பதி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - செவ்வழி. (உ-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பொடிகள்பூசிப்பலதொண்டர்கூடிப்புலர்காலையே
யடிகளாரத்தொழுதேத்தநின்றவழகன்னிடங்
கொடிகளோங்கிக்குலவும்விழவார்திலதைப்பதி
வடிகொள்சோலைமலர்மணங்கமழும்மதிமுத்தமே (க)

தொண்டர்மிண்டிப்புகைவிம்மச்சாந்துங்கமழ்துணையலுங்
கொண்டுகண்டார்குறிப்புணரநின்றகுழகன்னிடந்
தெண்டிரைப்பூம்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
வண்டுகெண்டிற்றிசைபயிலுஞ்சோலைமதிமுத்தமே (உ)

அடலுளேறுய்த்துகந்தானடியாரமரர்தொழக்
கடலுணஞ்சமுதாகவுண்டகடவுள்ளிடந்
திடலடங்கச்செழுங்கழனிசூழ்ந்ததிலதைப்பதி
மடலுள்வாழைக்கனிதேன்பிலிற்றும்மதிமுத்தமே (௩)

கங்கைதிங்கள்வன்னிதுன்னெருக்கினொடுகூவிளம்
வெங்கணாகம்விரிசடையில்வைத்தவிகிர்தன்னிடஞ்
செங்கயல்பாய்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
மங்குறோயும்பொழில்சூழ்ந்தழகார்மதிமுத்தமே (ச)

புரவியேழும்மணிபூண்டியங்குங்கொடித்தேரினான்
பரவிநின்றுவழிபாடுசெய்யும்பரமேட்டியூர்
விரவிஞாழல்விரிகோங்குவேங்கைசுரபுன்னைகள்
மரவமவ்வன்மலருந்திலதைப்பதிமுத்தமே (ரு)

விண்ணர்வேதம்விரித்தோதவல்லாரொருபாகமும்
பெண்ணரெண்ணாரெயில்செற்றுகந்தபெருமானிடம்
தெண்ணிலாவின்னொளிதீண்டுசோலைத்திலதைப்பதி
மண்ணுளார்வந்தருள்பேணிநின்றமதிமுத்தமே. (௬)

ஆறுசூடியடையார்புரஞ்செற்றவர்பொற்றொடி
கூறுசேருமுருவர்க்கிடமாவதுகூறுங்காற்
றேறலாரும்பொழில்சூழ்ந்தழகார்திலதைப்பதி
மாறிலாவண்புனலரிசில்சூழ்ந்தமதிமுத்தமே. (எ)

கடுத்துவந்தகனன்மேனியினான்கருவரைதனை
யெடுத்தவன்றன்முடிதோளடர்த்தார்க்கிடமாவது
புடைகொள்பூகத்திளம்பாளைபுல்கும்மதுப்பாயவாய்
மடுத்துமந்தியுகளுந்திலதைமதிமுத்தமே. (அ)

படங்கொணாகத்தணையானும்பைந்தாமரையின்மிசை
யிடங்கொணால்வேதனுமேத்தநின்றவிறைவன்னிடம்
திடங்கொணாவினிசைதொண்டர்பாடுந்திலதைப்பதி
மடங்கலவந்துவழிபாடுசெய்யுமதிமுத்தமே. (௯)

புத்தர்தேரர்பொறியில்சமணர்களும்வீறிலாப
பித்தர்சொன்னமொழிகேட்கிலாதபெருமானிடம்
பத்தர்சித்தர்பணியுற்றிறைஞ்சுந்திலதைப்பதி
மத்தயானைவழிபாடுசெய்யுமதிமுத்தமே (௧௦)

மந்தமாரும்பொழில்சூழ்திலதைமதிமுத்தன்மேற்
கந்தமாருங்கடற்காழியுளான்றமிழ்ஞானசம்
பந்தன்மாலைபழிதீரநின்றேத்தவல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார்சிவன்சேவடிசேர்வதுதிண்ணமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - முத்தீசர்
தேவி - பொற்கொடிநாயகி

---

ஆக திருப்பதிகம் - ௧௱௨௯.

---

# ௫௯. திருப்பாம்புரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - தக்கராகம் (௧ திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்தசெல்வர்
வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறியேந்தியமைந்தர்
காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண்ணுதல்விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தருநான்மறையாளர்பாம்புரநன்னகராரே. (௧)

கொக்கிறகோடுகூவிளமத்தங்கொன்றையொடெருக்கணிசடைய
ரக்கினொடாமைபூண்டழகாகவனலதுவாடுமெம்மடிகள்
மிக்கநல்வேதவேள்வியுளெங்கும்விண்ணவர்விரைமலர்தூவப்
பக்கம்பல்பூதம்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௨)

துன்னலினாடையுடுத்ததன்மேலோர்சூறைநல்லரவதுசுற்றிப்
பின்னுவார்சடைகடாழவிட்டாடிப்பித்தராய்த்திரியுமெம்பெருமான்
மன்னுமாமலர்கடேவிடநாளுமாமலையாட்டியுந்தாமும்
பன்னுநான்மறைகள்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௩)

துஞ்சுநாளறந்துதோற்றமுமில்லாச்சுடர்விடுசோதியெம்பெருமா
னஞ்சுசேர்கண்டமுடையவென்னாதர்நள்ளிருணடஞ்செயுநம்பர்
மஞ்சுதோய்சோலைமாமயிலாடமாடமாளிகைதன்மேலேறிப்
பஞ்சுசேர்மெல்லடிப்பாவையர்பயிலும்பாம்புரநன்னகராரே. (௪)

நதியதனயலேநகுதலைமாலைநாண்மதிசடைமிசையணிந்து
கதியதுவாகக்காளிமுன்காணக்கானிடைநடஞ்செய்தகருத்தர்
விதியதுவழுவாவேதியர்வேள்விசெய்தவரோத்தொலியோவாப்
பதியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே. (௫)

ஓதிநன்குணர்வார்க்குணர்வுடையொருவரொளிதிகழுருவஞ்சேரொரு
மாதினையிடமாவைத்தவெம்வள்ளன்மான்மறியேந்தியமைந்த [வர்
ராதிநீயருளென்றமரர்கள்பணியவலைகடல்கடையவன்றெழுந்த
பாதிவெண்பிறைசடைவைத்தவெம்பரமர்பாம்புரநன்னகராரே. (௬)

மாலினுக்கன்றுசக்கரமீந்துமலரவற்கொருமுகமொழித்து
வாலின்கீழறமோர்நால்வருக்கருளியனலதுவாடுமெம்மடிகள்
காலனைக்காய்ந்துதங்கழலடியாற்காமனைப்பொடிபடநோக்கிப்
பாலனுக்கருள்கள்செய்தவெம்மடிகள்பாம்புரநன்னகராரே (௭)

விடைத்தவல்லரக்கன்வெற்பினையெடுக்கமெல்லியதிருவிரலூன்றி
யடர்த்தவன்றனக்கன்றருள்செய்தவடிகளனலதுவாடுமெம்மண்ணன்
மடக்கொடியவர்கள்வருபுனலாடவந்திழியரிசிலின்கரைமேற்
படப்பையிற்கொணர்ந்துபருமணிசிதறும்பாம்புரநன்னகராரே. (௮)

கடிபடுகமலத்தயனொடுமாலுங்காதலோடடிமுடிதேடச்
செடிபடுவினைகடீர்த்தருள்செய்யுந்தீவணரெம்முடைச்செல்வர்
முடியுடையமரர்முனிகணத்தவர்கண்முறைமுறையடிபணிந்தேத்தப்
படியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே (௯)

குண்டர்சாக்கியருங்குணமிலாதாருங்குற்றுவிட்டுடுக்கையர்தாமுங்
கண்டவாறுரைத்துக்காணிமிர்த்துண்ணுங்கையர்தாமுள்ளவாறறியார்
வண்டுசேர்குழலிமலைமகணங்கைவாரணமுரிசெய்துபோர்த்தார்
பண்டுநான்செய்தபாவங்கடீர்ப்பார்பாம்புரநன்னகராரே. (௧௦)

பார்மலிந்தோங்கிப்பருமதில்சூழ்ந்தபாம்புரநன்னகராரைக்
காமலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக்கவுணி
நாமலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தன்செந்தமிழ்வல்லார்
சீர்மலிந்தழகார்செல்வமதோங்கிச்சிவனடிநண்ணுவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - பாம்புரநாதர்.
தேவி - வண்டார்பூங்குழலி.

---

ஆ௨ திருப்பதிகம் - ௧௩௭.

---

# ௯௦. திருச்சிறுகுடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருமுக்கால்.

பண் - சாதாரி (௩-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

திடமலிமதிலணிசிறுகுடிமேவிய
படமலியரவுடையீரே
படமலியரவுடையீருமைப்பணிபவ
ரடைவதுமமருலகதுவே (௧)

சிற்றிடையுடன்மகிழ்சிறுகுடிமேவிய
சுற்றியசடைமுடியீரே
சுற்றியசடைமுடியீருமதொழுகழு
லுற்றவருறுபிணியிலரே. (௨)

தெள்ளியபுனலணிசிறுகுடிமேவிய
துள்ளியமானுடையீரே
துள்ளியமானுடையீருமதொழுகழு
லுள்ளுதல்செயநலமுறுமே (௩)

செந்நெலவயலணிசிறுகுடிமேவிய
வொன்னலர்புரமெரித்தீரே
யொன்னலர்புரமெரித்தீருமையுள்குவார்
சொன்னலமுடையவர்தொண்டே (௪)

செற்றினமலிபுனற்சிறுகுடிமேவிய
பெற்றிகொள்பிறைமுடியீரே
பெற்றிகொள்பிறைமுடியீருமைப்பேணிநஞ்
சற்றவரருவினையிலரே (௫)

செங்கயல்புனலணிசிறுகுடிமேவிய
மங்கையையிடமுடையீரே
மங்கையையிடமுடையீருமைவாழ்த்துவா
சங்கையதிலர்நலர்தவமே. (௬)

செறிபொழில்தழுவியசிறுகுடிமேவிய
வெறிகமழ்சடைமுடியீரே
வெறிகமழ்சடைமுடியீருமைவிரும்பிமெய்ந்
நெறியுணர்வோருயர்ந்தோரே (௭)

திசையவர்தொழுதெழுசிறுகுடிமேவிய
தசமுகனுரநெரிததீரே
தசமுகனுரநெரித்தீருமைச்சார்பவர்
வசையறுமதுவழிபாடே. (௮)

செருவரைவயலமர்சிறுகுடிமேவிய
விருவரையசைவுசெய்தீரே
யிருவரையசைவுசெய்தீருமையேத்துவா
ரருவினையொடுதுயரிலரே. (௯)

செய்த்தலைபுனலணிசிறுகுடிமேவிய
புத்தரொடமண்புறத்தீரே
புத்தரொடமண்புறத்தீருமைப்போற்றுதல்
பத்தர்கடமுடைப்பரிசே (௰)

தேனமர்பொழிலணிசிறுகுடிமேவிய
மானமர்கரமுடையீரே
மானமர்கரமுடையீருமைவாழ்த்திய
ஞானசம்பந்தனதமிழே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - மங்களநாதர்
தேவி - மங்களநாயகி.

௮௨ திருப்பதிகம் - கய௨அ

## ருக. திருவீழிமிழலை.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - நட்டபாடை (௧ஆ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

சடையார்புனலுடையானொருசரிகோவணமுடையான்
படையார்மழுவுடையான்பலபூதப்படையுடையான்
மடமான்விழியுமைமாதிடமுடையானெனையுடையான்
விடையார்கொடியுடையானிடம்வீழிம்மிழலையே. (க)

ஈறாய்முதலொன்றாயிருபெண்ணாண்குணமூன்றாய
மாறாமறைநான்காயவரும்பூதம்மவையைந்தா
யாறார்சுவையேழோசையொடெட்டுத்திசைதானாய்
வேறாயுடனானானிடம்வீழிம்மிழலையே. (உ)

வம்மின்னடியீர்நாண்மலரிட்டுத்தொழுதுய்ய
வும்மன்பினொடெம்மன்புசெய்தீசன்னுறைகோயில்
மும்மென்றிசைமுரல்வண்டுகள்கெண்டித்திசையெங்கும்
விம்மும்பொழில்சூழ்தண்வயல்வீழிம்மிழலையே. (ங)

பண்ணும்பதமேழும்பலவோசைத்தமிழவையு
முண்ணின்றதொர்சுவையும்முறுதாளத்தொலிபலவு
மண்ணும்புனலுயிரும்வருகாற்றுஞ்சுடர்மூன்றும்
விண்ணும்முழுதானானிடம்வீழிம்மிழலையே. (ச)

ஆயாதனசமயம்பலவறியாதவனெறியின்
றாயானவனுயிர்கட்குமுன்றலையானவன்மறைமுத்
தீயானவன்சிவனெம்மிறைசெல்வத்திருவாரூர்
மேயானவனுறையும்மிடம்வீழிம்மிழலையே. (௫)

கல்லானிழற்கீழாயிடர்காவாயெனவானோ
ரெல்லாமொருதேராயயன்மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்லாயெரிகாற்றீர்க்கரிகோல்வாசுகிநாண்கல்
வில்லாலெயிலெய்தானிடம்வீழிம்மிழலையே (௬)

கரத்தான்மலிசிரத்தான்கரியுரித்தாயதொர்படத்தான்
புரத்தார்பொடிபடத்தன்னடிபணிமூவர்கட்கோவா
வரத்தான்மிகவளித்தானிடமவளப்புன்னைமுத்தரும்பி
விரைத்தாதுபொன்மணியீன்றணிவீழிம்மிழலையே (௭)

முன்னிற்பவரில்லாமுரணரக்கன்வடகயிலை
தன்னைப்பிடித்தெடுத்தான்முடிதடந்தோளிறவூன்றிப்
பின்னைப்பணிந்தேத்தப்பெருவாள்பேரொடுங்கொடுத்த
மின்னிற்பொலிசடையானிடம்வீழிம்மிழலையே (௮)

பண்டேழுலகுண்டானவைகண்டானுமுன்னறியா
வொண்டீயுருவானானுறைகோயின்னிறைபொய்கை
வண்டாமரைமலர்மேன்மடவன்னந்நடைபயில
வெண்டாமரைசெந்தாதுதிர்வீழிம்மிழலையே (௯)

மசங்கற்சமண்மண்டைக்கையர்குண்டக்குணமிலிக
ளிசங்கும்பிறப்பறுத்தானிடமிருந்தேன்களித்திரைத்துப்
பசும்பொற்கிளிகளிமஞ்ஞைகளொளிகொண்டெழுபகலோன்
விசும்பைப்பொலிவிக்கும்பொழில்வீழிம்மிழலையே (௰)

வீழிம்மிழலைமேவியவிகிர்தன்றனைவிரைசேர்
காழிந்நகர்க்கலைஞானசம்பந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசைவல்லார்சொலக்கேட்டாரவரெல்லா
மூழின்மலிவினைபோயிடவுயர்வானடைவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

---

பண் - நட்டபாடை. (௩ திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

தடநிலவியமலைநிறுவியொர்தழலுமிழ்தருபடவரவுகொ
டடலசுரரொடமரர்களலைகடல்கடைவுழியெழுமிகுசின
விடமடைதருமிடறுடையவன்விடைமிசைவருமவனுறைபதி
திடமலிதருமறைமுறையுணர்மறையவர்நிறைதிருமிழலையே. (௧)

தரையொடுதிவிதலநலிதருதகுதிறலுறுசலதரனது
வரையனதலைவிசையொடுவருதிகிரியையரிபெறவருளின
னுரைமலிதருசுரநதிமதிபொதிசடையவனுறைபதிமிகு
திரைமலிகடன்மணலணிதருபெறுதிடர்வளர்திருமிழலையே. (௨)

மலைமகடனையிகழ்வதுசெயதமதியறுசிறுமனவனதுயர்
தலையினொடழலுருவனகரமறமுனிவுசெய்தவனுறைபதி
கலைநிலவியபுலவர்களிடர்களைதருகொடைபயிலபவர்மிகு
சிலைமலிமதில்புடைதழுவியதிகழ்பொழில்வளர்திருமிழலையே. (௩)

மருவலர்புரமெரியினின்மடிதரவொருகணைசெலநிறுவிய
பெருவலியினனலமலிதருகரனுரமிகுபிணமமர்வன
விருளிடையடையுறவொடுநடவிசையுறுபரனினிதுறைபதி
தெருவினில்வருபெருவிழவொலிமலிதரவளர்திருமிழலையே (௪)

அணிபெறுவடமரநிழலினிலமர்வொடுமடியிணையிருவர்கள்
பணிதரவறநெறிமறையொடுமருளியபரனுறைவிடமொளி
மணிபொருவருமரகதநிலமலிபுனலணைதருவயலணி
திணிபொழிறருமணமதுநுகரறுபதமுரறிருமிழலையே (௫)

வசையறுவலிவனசரவுருவதுகொடுநினைவருதவமுயல்
விசையனதிறனமலைமகளறிவுறுதிறலமர்மிடல்கொடுசெயது
வசைவிலபடையருள்புரிதருமவனுறைபதியதுமிகுதரு
திசையினின்மலர்குலவியசெறிபொழின்மலிதருதிருமிழலையே (௬)

நலமலிதருமறைமொழியொடுநியமுறுபுனல்புகையொளிமுதன்
மலரவைகொடுவழிபடுதிறன்மறையவனுயிரதுகொளவரு
சலமலிதருமறலிதனுயிர்கெடவுதைசெயதவரனுறைபதி
திலகமிதெனவுலகுகள்புகழ்தருபொழிலணிதிருமிழலையே. (௭)

அரனுறைதருகயிலையைநிலைகுலைவதுசெயததசமுகனது
கரமிருபதுநெரிதரவிரனிறுவியகழலடியுடையவன்
வரன்முறையுலகவைதருமலர்வளர்மறையவன்வழிவழுவிய
சிரமதுகொடுபலிதிரிதருசிவனுறைபதிதிருமிழலையே (௮)

அயனொடுமெழிலமர்மலர்மகண்மகிழ்கணனளவிடலொழியவொர்
பயமுறுவகைதழனிகழ்வதொர்படியுருவதுவரவரன்முறை
சயசயவெனமிகுதுதிசெயவெளியுருவியவவனுறைபதி
செயநிலவியமதின்மதியதுதவழ்தரவுயர்திருமிழலையே. (௯)

இகழுருவொடுபறிதலைகொடுமிழிதொழின்மலிசமண்விரகினர்
திகழ்துவருடையுடல்பொதிபவர்கெடவடியவர்மிகவருளிய
புகழுடையிறையுறைபதிபுனலணிகடல்புடைதழுவியபுவி
திகழ்சுரர்தருநிகழ்கொடையினர்செறிவொடுதிகழ்திருமிழலையே. (௧௦)

சினமலிகரியுரிசெய்தசிவனுறைதருதிருமிழலையைமிகு
தனமனர்சிரபுரநகரிறைதமிழ்விரகனதுரையொருபது
மனமகிழ்வொடுபயில்பவரெழின்மலர்மகள்கலைமகள்சயமக
ளினமலிபுகழ்மகளிசைதரவிருநிலனிடையினிதமர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பண் - தக்கராகம். (௲ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அரையார்விரிகோவணவாடை
நரையார்விடையூர்திநயந்தான்
விரையார்பொழில்வீழிம்மிழலை
யுரையாலுணர்வாருயர்வாரே (௧)

புனைதல்புரிபுன்சடைதன்மேற்
கனைதல்லொருகங்கைகரந்தான்
வினையில்லவர்வீழிம்மிழலை
நினைவில்லவர்நெஞ்சமுநெஞ்சே. (௨)

அழவல்லவராடியும்பாடி
யெழவல்லவரெந்தையடிமேல்
விழவல்லவர்வீழிம்மிழலை
தொழவல்லவர்நல்லவர்தொண்டே. (௩)

உரவம்புரிபுன்சடைதன்மே
லரவம்மரையார்த்தவழகன்
விரவும்பொழில்வீழிம்மிழலை
பரவும்மடியாரடியாரே (௪)

கரிதாகியநஞ்சணிகண்டன்
வரிதாகியவண்டறைகொன்றை
விரிதார்பொழில்வீழிம்மிழலை
யுரிதாநினைவாருயர்வாரே (௫)

சடையார்பிறையான்சரிபூதப
படையான்கொடிமேலதோர்பைங்கண்
விடையானுறைவீழிம்மிழலை
யடைவாரடியாரவர்தாமே. (௬)

செறியார்கழலுஞ்சிலம்பார்க்க
நெறியார்குழலாளொடுநின்றான்
வெறியார்பொழில்வீழிம்மிழலை
யறிவாரவலம்மறியாரே. (௭)

உளையாவலியொல்கவரக்கன்
வளையாவிரலூன்றியமைந்தன்
விளையார்வயல்வீழிம்மிழலை
யளையாவருவாரடியாரே. (௮)

மருள்செய்திருவர்மயலாக
வருள்செய்தவனாரழலாகி
வெருள்செய்தவன்வீழிம்மிழலை
தெருள்செய்தவர்தீவினைதேய்வே. (௯)

துளங்குநெறியாரவர்தொன்மை
வளங்கொள்ளன்மின்புல்லமண்டேரை
விளங்கும்பொழில்வீழிம்மிழலை
யுளங்கொள்பவர்தம்வினையோய்வே. (௧0)

நளிர்காழியுண்ஞானசம்பந்தன்
குளிரார்சடையானடிகூற
மிளிரார்பொழில்வீழிம்மிழலை
கிளர்பாடல்வல்லார்க்கிலைகேடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - குறிஞ்சி (௧ திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

இரும்பொன்மலைவில்லாவெரியம்பாநாணிற்
றிரிந்தபுரமூன்றுஞ்செற்றானுறைகோயி
றெரிந்தவடியார்கள்சென்றுதிசைதோறும்
விரும்பியெதிர்கொள்வார்வீழிமிழலையே (௧)

வாதைப்படுகின்றவானோர்துயர்தீர
வோதக்கடனஞ்சையுண்டானுறைகோயில்
கீதத்திசையோடுங்கேள்விக்கிடையோடும்
வேதத்தொலியோவாவீழிமிழலையே (௨)

பயிலும்மறையாளன்றலையிற்பலிகொண்டு
துயிலும்பொழுதாடுஞ்சோதியுறைகோயின்
மயிலும்மடமானும்மதியுமிளவேயும்
வெயிலும்போன்மாதர்வீழிம்மிழலையே. (௩)

இரவன்பகலோனுமெச்சத்திமையோரை
நிரவிட்டருள்செய்தநிமலனுறைகோயில்
குரவஞ்சுரபுன்னைகுளிர்கோங்கிளவேங்கை
விரவும்பொழிலந்தண்வீழிமிழலையே (௪)

கண்ணிற்கனலாலேகாமன்பொடியாகப்
பெண்ணுக்கருள்செய்தபெருமானுறைகோயில்
மண்ணிற்பெருவேள்விவளர்தீப்புகைநாளும்
விண்ணிற்புயல்காட்டும்வீழிம்மிழலையே. (௫)

மாலாயிரங்கொண்டுமலர்க்கண்ணிடவாழி
யேலார்வலயத்தோடீந்தானுறைகோயில்
சேலாகியபொய்கைச்செழுநீர்க்கமலங்கண்
மேலாலெரிகாட்டும்வீழிம்மிழலையே (௬)

மதியால்வழிபட்டான்வாணாள்கொடுபோவான்
கொதியாவருகூற்றைக்குமைத்தானுறைகோயி
னெதியான்மிகுசெல்வர்நித்தநியமங்கள்
விதியானிற்கின்றார்வீழிம்மிழலையே. (௭)

எடுத்தான்றருக்கினையிழித்தான்விரலூன்றிக்
கொடுத்தான்வாளாளாகக்கொண்டானுறைகோயில்
பகுத்தார்மறைவேள்விபயில்வார்பாவத்தை
விடுத்தார்மிகவாழும்வீழிம்மிழலையே. (௮)

கிடந்தானிருந்தானுங்கீழ்மேல்காணாது
தொடர்ந்தாங்கவரேத்தச்சுடரானவன்கோயில்
படந்தாங்கரவல்குற்பவளத்துவர்வாய்மேல்
விடந்தாங்கியகண்ணார்வீழிம்மிழலையே. (௯)

சிக்கார்துவராடைச்சிறுதட்டுடையாரு
நக்காங்கலர்தூற்றுநம்பானுறைகோயி
றக்கார்மறைவேள்வித்தலையாயுலகுக்கு
மிக்காரவர்வாழும்வீழிம்மிழலையே (௧0)

மேனின்றிழிகோயில்வீழிம்மிழலையு
ளானைத்தெயிற்றனையெழிலார்பொழிற்காழி
ஞானத்துயர்கின்றநலங்கொள்சம்பந்தன
வாய்மைத்திவைசொல்லவல்லோர்நல்லோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருக்குக்குறள்.

பண் - குறிஞ்சி (௯௨ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே
காசுநல்குவீர்
மாசின்மிழலையீ
ரேசலில்லையே (௧)

இறைவராயினீர்
மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை
முறைமைநல்குமே (௨)

செய்யமேனியீர்
மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீ
ருய்யநல்குமே. (௩)

நீறுபூசினீ
ரேறதேறினீர்
கூறுமிழலையீர்
பேறுமருளுமே. (௪)

காமன்வேவவோர்
தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர்
சேமநல்குமே. (௫)

பிணிகொள்சடையினீர்
மணிகொண்மிடறினீ
ரணிகொண்மிழலையீர்
பணிகொண்டருளுமே. (௬)

மங்கைபங்கினீர்
துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர்
சங்கைதவிர்மினே. (௭)

அரக்கனெரிதர
விரக்கமெய்தினீர்
பரக்குமிழலையீர்
கரக்கைதவிர்மினே. (௮)

அயனுமாலுமாய்
முயலுமுடியினீ
ரியலுமிழலையீர்
பயனுமருளுமே. (௯)

பறிகொடலையினா
ரறிவதறிகிலார்
வெறிகொண்மிழலையீர்
பிறிவதரியதே. (௧0)

காழிமாநகர்
வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேற்
றாழுமொழிகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

ஆளுடைய பிள்ளையார் அப்பமூர்த்தியோடு திருவீழிமிழலையில் இருக்குநாளிலே, மழையின்மையால் பஞ்சம் உண்டாக உயிர்களெல்லாம் வருந்தலுற்றன. அது கண்டு, பிள்ளையாரும் அப்பமூர்த்தியும் அடியார்களுக்கும் கவலை வருமோ என்று திருவுளமிரங்கி, சிவபிரானுடைய திருவடிகளைச் சிந்திக்க, அன்றிரவு சிவபிரான் அவ்விருவருக்கும் சொப்பனத்திலே தோன்றி, இப்பஞ்சம் நீங்குமளவுக்கும் தினந்தோறும் திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் ஒவ்வொரு காசு தருவோமாகச் சொல்லி மறைந்தருளினார். அவ்வாறு நடந்து வரும்போது அப்பமூர்த்தி காசிக்கு வாசியின்மையால் அவர் மடத்தில் அடியார்கள் காலம் பெற்றுத் திருவமுது செய்தலைக் கண்டு, பிள்ளையார் அப்பமூர்த்தி கைத்தொண்டு செய்தலால் அவர் பெறுங்காசு வட்டமின்றி ஏற்கப்படுகின்றது என்று சிந்தித்து, "வாசி தீரவே" என்னுந் திருப்பதிகம் பாடி நற்காசு பெற்றார்.

---

## திருவிராகம்.

பண் - வியாழக்குறிஞ்சி (௧-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

அலர்மகண்மலிதரவவனியினிகழ்பவர்
மலர்மலிகுழலுமைதனையிடமகிழ்பவர்
நலமலியுருவுடையவர்நகர்மிகுபுகழ்
நிலமலிமிழலையைநினையவல்லவரே (௧)

இருநிலமிதன்மிசையெழில்பெறுமுருவினர்
கருமலிதருமிகுபுவிமுதலுலகினி
லிருளறுமதியினரிமையவர்தொழுதெழு
நிருபமன்மிழலையைநினையவல்லவரே. (௨)

*கலைமகடலைமகனிவனெனவருபவ
ரலைமலிதருபுனலரவொடுநகுதலை
யிலைமலியிதழியுமிசைதருசடையின
நிலைமலிமிழலையைநினையவல்லவரே (௩)

மாடமர்சனமகிழ்தருமனமுடையவர்
காடமர்கழுதுகளவைமுழவொடுமிசை
பாடலினவில்பவர்மிகுதருமுலகினி
னீடமர்மிழலையைநினையவல்லவரே. (௪)

புகழ்மகடுணையினர்புரிகுழலுமைதனை
யிகழ்வுசெய்தவனுடையெழின்மறைவழிவளர்
முகமதுசிதைதரமுனிவுசெய்தவன்மிகு
நிகழ்தருமிழலையைநினையவல்லவரே. (௫)

---

* "தலைமகடலை" எனவும்பாடம்.

அன்றினரரியென வருபவரரிதினி
லொன்றிய திரிபுர மொருநொடியினிலெரி
சென்றுகொள்வகை சிறுமுறுவல்கொ டொளிபெற
நின்றவர் மிழலையை நினையவல்லவரே (௬)

கரம்பயில் கொடையினர் கடிமலரயனதோர்
சிரம்பயில்வற வெறிசிவனுறை செழுநகர்
வரம்பயில் கலைபல மறைமுறையறநெறி
நிரம்பினர் மிழலையை நினையவல்லவரே (௭)

ஒருக்கிய வுணர்வினொ டொளிநெறிசெலுமவ
ரரக்கனதணிமுடி யொருபது மிருபது
கரக்கனை நெரிதரமலரடி விரல்கொடு
நெருக்கினன் மிழலையை நினையவல்லவரே. (௮)

அடியவர் குழுமிட அவனியி னிகழ்பவர்
கடிமலரயனரி கருதருவகைதழல்
வடிவுருவியல்பினொ டுலகுகணிறைதரு
நெடியவன் மிழலையை நினையவல்லவரே (௯)

மனமதுனனவொளி பெறுமவர்மருதமர்
வனமலர் துவருடையவர்களு மதியிலர்
துன்மதியமணர்கள் தொடர்வருமிறையுறை
நின்மலன் மிழலையை நினையவல்லவரே (௧௦)

நிறைநிலன் மிழலையை நிகரிலிபுகழ்வுள
விறைதக மறைமலி தமிழ்விரகனமொழி
பதியிலவருவன பதிகமைபயில்வொடு
கற்றுவல்லவருலகினி லடியவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - மேகராகக்குறிஞ்சி (௩ திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

ஏரிசையும்வடவாலின்கீழிருந்தங் கீரிருவர்க்கிரங்கிநின்று [கோயில்
நேரியநான்மறைப்பொருளையுரைத்தொளிசேர்நெறியளித்தோனின்ற
பாரிசையும்பண்டிதர்கள்பன்னாளும்பயின்றோதுமோசைகேட்டு
வேரிமலிபொழிற்கிள்ளைவேதங்கள்பொருள்சொல்லுமிழலையாமே. (௧)

பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமத் தாகப்புத் தேளிர்கூடி, மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட கண்டத்தோன் மன்னுங்கோயில், செறியிதழ்த்தா மரைத்தவிசிற் றிகழ்ந்தோங்கு மிலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல், வெறிகதிர்ச்சா மரையிரட்ட விளவன்னம் வீற் றிருக்குமிழலையாமே. (௨)

எழுந்துலகை நலிந்துழலு மவுணர்கடம் புரமூன்று மெழிற்கணுடி, யுழுந்துருளு மளவையினொள் ளெரிகொளவெஞ் சிலைவளைத்தோ னுறையுங்கோயில், கொழுந்தரள நகைகாட்டக் கோகநத முகங்காட்டக் குதித்துநீர்மேல், விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம் வாய்காட்டு மிழலையாமே. (௩)

உரைசேருமெண்பத்துநான்குநூறாயிரமாம்யோனிபேத
நிரைசேரப்படைத்தவற்றினுயிர்க்குயிராயங்கங்கேநின்றான்கோயில்
வரைசேருமுகின்முழவமயில்கள்பலநடமாடவண்டுபாட
விரைசேர்பொன்னிதழிதரமென்காந்தள்கையேற்குமிழலையாமே (௪)

காணுமாறரியபெருமானாகிக்காலமாயகுணங்கண்மூன்றாய்ப்
பேணுமூன்றுருவாகிப்பேருலகம்படைத்தளிக்கும்பெருமான்கோயி
லூணுவாய்நின்றபரத்தத்துவனையுத்தமனையிறைஞ்சீரென்று
வேணுவார்கொடிவிண்ணோர்தமைவிளிப்பபோலோங்குமிழலையாமே.

அகனமர்ந்தவன்பினராயறுபகைசெற்றைம்புலனுமடக்கிஞானப்
புகலுடையோர்தம்முள்ளப்புண்டரிகத்துள்ளிருக்கும்புராணர்கோயி
றகவுடைநீர்மணித்தலத்துச்சங்குளவாக்கந்திகழச்சலசத்தீயுள்
மிகவுடையபுன்குமலர்ப்பொரியட்டமணஞ்செய்யுமிழலையாமே. (௬)

ஆறுடுசடைமுடியனனலாடுமலர்க்கையனிமயப்பாவை
கூறுடுதிருவுருவன்கூத்தாடுங்குணமுடையோன்குளிருங்கோயில்
சேறுடுசெங்கழுநீர்த்தாதாடிமதுவுண்டுசிவந்தவண்டு
வேறாயவுருவாகிச்செவ்வழிநற்பண்பாடுமிழலையாமே (௭)

கருப்பமிகுமுடலடர்த்துக்காலூன்றிக்கைமறித்துக்கயிலையென்னும்
பொருப்பெடுக்கலுறுமரக்கன்பொன்முடிதோ ணெரித்தவிரற்புனிதர்
றருப்பமிகுசலந்தரனுடறடிந்தசக்கரத்தைவேண்டியீண்டு [கோயி
விருப்பொடுமாலவழிபாடுசெய்யவிழிவிமானஞ்சேர்மிழலையாமே. (௮)

செந்தளிர்மாமலரோனுந்திருமாலுமேனமோடன்னமாகி
யந்தமடிகாணாதேயவரோத்தவெளிப்பட்டோனமருங்கோயில்
புந்தியினான்மறைவழியேபுற்பரப்பிநெய்சமிதைகையிற்கொண்டு
வெந்தழலின்வேட்டுலகின்மிகவளிப்போர்சேருமூர்மிழலையாமே. (௯)

எண்ணிறந்தவமணர்களுமிழிதொழில்சேர்சாக்கியருமென்றுந்தன்னை
நண்ணரியவகைமயக்கித்தன்னடியார்க்கருள்புரியுநாதன்கோயில்
பண்ணமருமென்மொழியார்பாலகரைப்பாராட்டுமோசைகேட்டு
விண்ணவர்கள்வியப்பெய்திவிமானத்தோடும்மிழியுமிழலையாமே. (௧௦)

மின்னியலுமணிமாடமிடைவீழிமிழலையான்விரையார்பாதஞ்
சென்னிமிசைக்கொண்டொழுகுஞ்சிரபுரக்கோன்செழுமறைகள்பயிலு
பன்னியசீர்மிகுஞானசம்பந்தன்பரிந்துரைத்தபத்துமேத்தி [நாவன்
யின்னிசையாற்பாடவல்லாரிருநிலத்திலீசனெனுமியல்பினோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - காந்தாரபஞ்சமம். (௩ - ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்

கேள்வியர்நாடொறுமோதுநல்வேதத்தர்கேடிலா
வேள்விசெயந்தணர்வேதியர்வீழிமிழலையார்
வாழியர்தோற்றமுங்கேடும்வைப்பாருயிர்கட்கெலா
மாழியர்தம்மடிபோற்றியென்பார்கட்கணியரே. (௧)

கல்லினம்பாவையொர்பாகத்தர்காதலித்தேத்திய
மெல்லினத்தார்பக்கன்மேவினர்வீழிமிழலையார்
நல்லினத்தார்செய்தவேள்விசெகுத்தெழுஞாயிற்றின்
பல்லினைத்துந்தகர்த்தாரடியார்பாவநாசரே. (௨)

நஞ்சினையுண்டிருள்கண்டர்பண்டந்தகனைச்செற்ற
வெஞ்சினமூவிலைச்சூலத்தர்வீழிமிழலையா
ரஞ்சனக்கண்ணுமைபங்கினர்கங்கையங்காடிய
மஞ்சனச்செஞ்சடையாரெனவல்வினைமாயுமே (௩)

கலையிலங்குமழுக்கட்டங்கங்கண்டிகைகுண்டலம்
விலையிலங்குமணிமாடத்தர்வீழிமிழலையார்
தலையிலங்கும்பிறைதாழ்வடஞ்சூலந்தமருக
மலையிலங்கும்புனலேற்றவர்க்குமடியார்க்குமே (௪)

பிறையுறுசெஞ்சடையார்விடையார்பிச்சைநச்சியே
வெறியுறநாட்பலிதேர்ந்துழல்வீழிமிழலையார்
முறைமுறையாலிசைபாடுவாராடிமுன்றொண்டர்க
ளிறையுறைவாஞ்சியமல்லதெப்போதுமென்னுள்ளமே (௫)

வசையறுமாதவங்கண்டுவரிசிலைவேடனாய்
விசையனுக்கன்றருள்செய்தவர்வீழிமிழலையா
ரிசைவரவிட்டியல்கேட்பித்துக்கல்லவடமிட்டுத்
திசைதொழுதாடியும்பாடுவார்சிந்தையுட்சேர்வரே. (௬)

சேடர்விண்ணோர்கட்குந்தேவர்நன்மூவிருதொன்னூலர்
வீடர்முத்தீயர்நால்வேதத்தர்வீழிமிழலையார்
காடரங்காவுமைகாணவண்டத்திமையோர்தொழ
நாடகமாடியையேத்தவல்லார்வினைநாசமே (௭)

எடுத்தவன்மாமலைக்கீழ்விராவணன்வீழ்தர
விடுத்தருள்செய்திசைகேட்டவர்வீழிமிழலையார்
படுத்துவெங்காலனைப்பால்வழிபாடுசெய்பாலற்குக்
கொடுத்தனரின்பங்கொடுப்பார்தொழக்குறைவில்லையே (௮)

திக்கமர்நான்முகன்மாலண்டமண்டலந்தேடிட
மிக்கமர்தீத்திரளாயவர்வீழிமிழலையார்
சொக்கமதாடியும்பாடியும்பாரிடஞ்சூழ்தரு
நக்கர்தநாமநமச்சிவாயவென்பார்நல்லரே (௯)

துற்றரையர்துவராடையர்துப்புரவொன்றிலா
வெற்றரையரறியாநெறிவீழிமிழலையார்
சொற்றெரியாப்பொருள்சோதிக்கப்பாணின்றசோதிதான்
மற்றறியாவடியார்கடஞ்சிந்தையுண்மன்னுமே. (௧0)

**வேதியர்கைதொழுவீழிமிழலைவிரும்பிய**
**வாதியைவாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனுய்ந்**
**தோதியவொண்டமிழ்பத்திவையுற்றுரைசெய்பவர்**
**மாதியல்பங்கன்மலரடிசேரவும்வல்லரே.** (௧௧)

**திருச்சிற்றம்பலம்.**

## திருவிராகம்.

பண் - சாதாரி. (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சீர்மருவுதேசினொடுதேசமலிசெல்வமறையோர்கள்பணியத்
தார்மருவுகொன்றையணிதாழ்சடையினானமர்சயங்கொள்பதிதான்
பார்மருவுபங்கயமுயர்ந்தவயல்சூழ்பழனநீடவருகே
கார்மருவுவெண்கனகமாளிகைகவின்பெருகுவீழிநகரே (க)

பட்டமுழவிட்டபணிலத்தினொடுபன்மறைகளோதுபணிநற்
சிட்டர்களசயத்துதிகள்செய்யவருள்செய்தழல்கொண்மேனியவனூர்
மட்டுலவுசெங்கமலவேலிவயல்செந்நெல்வளர்மன்னுபொழில்வாய்
விட்டுலவுதென்றல்விரைநாறுபதிவேதியர்கள்வீழிநகரே. (உ)

மண்ணிழிசுரர்கள்வளமிக்கபதிமற்றுமுளமன்னுயிர்களுக்
கெண்ணிழிவிலின்பநிகழ்வெய்துமெழிலார்பொழிலிலங்குபதம்
பண்ணிழிவிலாதவகைபாடமடமஞ்ஞைநடமாடவழகார்
விண்ணிழிவிமானமுடைவிண்ணவர்பிரான்மருவுவீழிநகரே. (ங)

செந்தமிழர்தெய்வமறைநாவர்செழுநற்கலைதெரிந்தவவரோ
டந்தமில்குணத்தவர்களர்ச்சனைகள்செய்யவமர்கின்றவரனூர்
கொந்தலர்பொழிற்பழனவேலிகுளிர்தண்புனல்வளம்பெருகவே
வெந்திறல்விளங்கிவளர்வேதியர்விரும்புபதிவீழிநகரே (ச)

பூதபதியாகியபுராணமுனிபுண்ணியநன்மாதைமருவிப்
பேதமதிலாதவகைபாகமிகவைத்தபெருமானதிடமா
மாதவர்களன்னமறையாளர்கள்வளர்த்தெரிமலிவேள்வியதனா
லேதமதிலாதவகையின்பமமர்கின்றவெழில்வீழிநகரே (ரு)

மண்ணின்மறையோர்மருவுவைதிகமுமாதவமுமற்றுமுலகத்
தெண்ணில்பொருளாயவைபடைத்தவிமையோர்கள்பெருமானதிடமா
நண்ணிவருநாவலர்களோடுமுடனாகிநிகழ்கின்றபுகழ்சேர்
விண்ணுலவுமாளிகைநெருங்கிவளர்நீள்புரிசைவீழிநகரே. (சு)

மந்திரநன்மாமறையினோடுவளர்வேள்விமிசைமிக்கபுகைபோ
யந்தரவிசும்பணவியற்புதமெனப்படருமாழியிருள்வாய்
மந்தரநன்மாளிகைநிலாவுமணிநீடுகதிர்விட்டவொளிபோய்
வெந்தழல்விளக்கெனவிரும்பினர்திருந்துபதிவீழிநகரே. (எ)

ஆனவலியிற்றசமுகன்றலையரங்கவணியாழிவிரலா
லூனமருயாந்தகுருதிப்புனலில்வீழ்தரவுணர்ந்தபரனூர்
தேனமர்திருந்துபொழில்செங்கனகமாளிகைதிகழ்ந்தமதிலோ
டானதிருவுற்றுவளரந்தணர்நிறைந்தவணிவீழிநகரே. (அ)

ஏனவுருவாகிமணிடந்தவிமையோனுமெழிலன்னவுருவ
மானவனுமாதியினொடந்தமறியாதவழன்மேனியவனூர்
வானணவுமாமதின்மருங்கலர்நெருங்கியவளங்கொள்பொழில்வாய்
வேனலமர்வெய்திடவிளங்கொளியின்மிக்கபுகழ்வீழிநகரே. (கூ)

குண்டமணராகியொருகோலமிகுபீலியொடுகுண்டிகைபிடித்
தெண்டிசையுமில்லதொருதெய்வமுளதென்பரதுவென்னபொருளாம்
பண்டையயனன்னவர்கள்பாவனைவிரும்புபரன்மேவுபதிசீர்
வெண்டரளவாணகைநன்மாதர்கள்விளங்குமெழில்வீழிநகரே. (கo)

மத்தமலிகொன்றைவளர்வார்சடையில்வைத்தபரன்வீழிநகர்சேர்
வித்தகனைவெங்குருவில்வேதியன்விரும்புதமிழ்மாலைகள்வலார்
சித்திரவிமானமமர்செல்வமலிகின்றசிவலோகமருவி
யத்தகுகுணத்தவர்களாகியனுபோகமொடியோகவரரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்

பண்-சாதாரி (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மட்டொளிவிரிதருமலர்நிறைசுரிகுழன்மடவரல
பட்டொளிமணியல்குலுமையமையுருவொருபாகமாக
கட்டொளிபுனலொடுகடியரவுடனுறைமுடியினிசை
விட்டொளியுதிர்பிறைமதியவர்பதிவீழிமிழலையே (க)

ஒண்ணிறவரிவளைநெறிகுழலெழின்மொழியிளமுலைப
பெண்ணுறுமுடலினர்பெருகியகடல்விடமிடறினர்
கண்ணுறுநுதலினர்நடியதொர்விடையினர்கனலினர்
விண்ணுறுபிறையணிசடையினர்பதிவீழிமிழலையே. (உ)

மைத்தகுமதர்விழிமலைமகளுருவொருபாகமா
வைத்தவர்மதகரியுரிவைசெய்தவர்தமைமருவினர்
தெத்தெனவிசைமுரல்சரிதையர்திகழ்தருமரவினர்
வித்தகநகுதலையுடையவரிடம்வீழிமிழலையே. (௩)

செவ்வழலெனநனிபெருகியவுருவினர்செறிதரு
கவ்வழலரவினர்கதிர்முதிர்மழுவினர்தொழுவிலா
முவ்வழனிசரர்விறலவையழிதரமுதுமதில
வெவ்வழல்கொளநனிமுனிபவர்பதிவீழிமிழலையே (௪)

பைங்கணதொருபெருமழலைவெள்ளேறினர்பலியெனா
வெங்கணுமுழிதர்வரிமையவர்தொழுதெழுமியல்பின
ரங்கணரமரர்களடியிணைதொழுதெழவாரமா
வெங்கணரவினருறைதருபதிவீழிமிழலையே. (௫)

பொன்னனபுரிதருசடையினர்பொடியணிவடிவின
ருன்னினர்வினையவைகளைதலைமருவியவொருவனார்
தென்னெனவிசைமுதலசரிதையர்திகழ்தருமார்பினின்
மின்னெனமிளிர்வதொரரவினர்பதிவீழிமிழலையே. (௬)

அக்கினொடரவரையணிதிகழொளியதொராமைபூண்
டிக்குகமலிதலைகலனெனவிடுபலியேகுவர்
கொக்கரைகுழன்முழவிழவொடுமிசைவதொர்சரிதையர்
மிக்கவருறைவதுவிரைகமழ்பொழில்வீழிமிழலையே (எ)

பாதமொர்விரலுறமலையடர்பலதலைநெரிதரப்
பூதமொடடியவர்புனைகழறொழுதெழுபுகழின
ரோதமொடொலிதிரைபடுகடல்விடமுடைமிடறினர்
வேதமொடுறுதொழின்மதியவர்பதிவிழிமிழலையே. (அ)

நீரணிமலர்மிசையுறைபவனிறைகடலுறுதுயி
லோரணனெனவிவரிருவருநறுமலரடிமுடி
யோருணர்வினர்செலலுறலருமுருவினொடொளிதிகழ்
வீரணருறைவதுவிரைகமழ்பொழில்விழிமிழலையே. (௯)

இச்சையரினிதெனவிடுபலிபடுதலைமகிழ்வதோர்
பிச்சையர்பெருமையையிறைபொழுதறிவெனவுணர்விலர்
மொச்சையவமணருமுடைபடுதுகிலருமழிவதோர்
விச்சையருறைவதுவிரைகமழ்பொழில்விழிமிழலையே (௧௦)

உன்னியவருமறையொலியினைமுறைமிகுபாடலசெ
யின்னிசையவருறையெழிறிகழ்பொழில்விழிமிழலையை
மன்னியபுகலியுண்ஞானசம்பந்தனவண்டமிழ்
சொன்னவர்துயரிலர்வியனுலகுறுகதிபெறுவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருமுக்கால்.

பண் - சாதாரி. (௩-ம திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வெண்மதிதவழ்மதின்மிழலையுளீர்சடை
யொண்மதியணியுடையீரே
யொண்மதியணியுடையீருடையுணர்பவர்
கண்மதிமிகுவதுகடனே. (௧)

விதிவழிமறையவர்மிழலையுளீர்நடஞ்
சதிவழிவருவதொர்சதிரே
சதிவழிவருவதொர்சதிருடையீருமை
யதிகுணர்புகழ்வதுமழகே. (௨)

விரைமலிபொழிலணிமிழலையுளீரொரு
வரைமிசையுறைவதும்வலதே
வரைமிசையுறைவதொர்வலதுடையீருமை
யுரைசெயுமவைமறையொலியே. (௩)

விட்டெழில்பெறுபுகழ்மிழலையுளீர்கையி
லிட்டெழில்பெறுகிறதெரியே
யிட்டெழில்பெறுகிறதெரியுடையீர்புர
மட்டதுவரைசிலையாலே. (௪)

வேணிகர்கண்ணியர்மிழலையுளீர்நல
பாணிகருருவுடையீரே
பாணிகருருவுடையீருமதுடனுமை
தாண்மிகவுறைவதுதவமே. (௫)

விரைமலிபொழிலணிமிழலையுளீர்சென்னி
நிரையுறவணிவதுநெறியே
நிரையுறவணிவதொர்நெறியுடையீரும
தரையுறவணிவனவரவே. (௬)

விசையுறுபுனலவயன்மிழலையுளீரர
வசைவுறவணிவுடையீரே
யசைவுறவணிவுடையீருமையறிபவர்
நசையுறுநாவினர்தாமே. (௭)

விலங்கலொண்மதிலணிமிழலையுளீரன்ற
விலங்கைமன்னிடர்கெடுத்தீரே
யிலங்கைமன்னிடர்கெடுத்தீருமையேத்துவார்
புலன்களைமுனிவதுபொருளே. (௮)

வெறபமர்பொழிலணிமிழலையுளீருமை
யற்புதனயனறியானே
யறபுதனயனறியாவகைநின்றவ
னற்பதமறிவதுநயமே. (௯)

வித்தகமறையவர்மிழலையுளீரன்று
புத்தரொடமணழித்தீரே
புத்தரொடமணழிதீருமைபபோற்றுவார்
பத்திசெய்மனமுடையவரே. (௧௦)

விணபயிலபொழிலணிமிழலையுளீசனைச்
சண்பையுண்ஞானசம்பந்தன்
சண்பையுண்ஞானசம்பந்தனதமிழிவை
யொண்பொருளுணர்வதுமுணர்வே. (௧௧)

திருச்சிறறம்பலம.

---

ஈரடி மேலவைப்பு (௩-ம. திருமுறை.)

---

திருச்சிறறமபலம்.

வேலினேர்தருகண்ணினுளுமைபங்கனங்கணன்மிழலைமாநக
ராலநீழலின்மேவினனடிக்கன்பர்துன்பிலரே. (௧)

விளங்குநான்மறைவல்லவேதியர்மலகுசீர்வளர்மிழலையானடி
யுளங்கொள்வார்தமையுளங்கொள்வார்வினையொலலையாசறுமே. (௨)

விசையினேடெழுபசையுநஞ்சினையசைவுசெய்தவன்மிழலைமாநக
ரிசையுமீசனைநசையின்மேவினன்மிசைசெயாவினையே. (௩)

வென்றிசேர்கொடிமூடுமாமதின்மிழலைமாநகர்மேவிநாடொறு
நின்றவாதிதன்னடிநினைப்பவர்துன்பமொன்றிலரே. (௪)

போதகந்தனையுரிசெய்தோன்புயனேர்வரும்பொழின்மிழலைமாநக
ராதரஞ்செய்தவடிகள்பாதமலாலொர்பற்றிலமே. (௫)

தக்கன்வேள்வியைச்சாடினார்மணிதொக்கமாளிகைமிழலைமேவிய
நக்கனாரடிதொழுவர்மேல்வினைநாடொறுங்கெடுமே. (௬)

போரணுவுமுப்புரமெரித்தவன்பொழில்கள்சூழ்தருமிழலைமாநகர்ச
சேருமீசனைச்சிந்தைசெய்பவர்தீவினைகெடுமே. (எ)

இரக்கமிஃறொழிலரக்கனுருடனெருக்கினான்மிகுமிழலையானடி
சிரக்கொளப்பூவெனவொருக்கினார்புகழ்பரக்குநீள்புவியே (அ)

துன்றுபூமகன்பன்றியானவனொன்றுமோர்கிலாமிழலையானடி
சென்றுபூம்புனனின்றுதூவினார்நன்றுசேர்பவரே (௯)

புத்தர்கைச்சமண்பித்தர்பொய்க்குலைவைத்தவித்தகன்மிழலைமாநகர்
சித்தம்வைத்தவரித்தலத்தினுண்மெய்த்தவத்தவரே (௧௦)

சந்தமார்பொழின்மிழலையீசனைச்சண்பைஞானசம்பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ்பத்தும்வல்லவர்பத்தராகுவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருவியமகம். (௩-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடக்கையதே
யென்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
நின்றதும்மிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுள்ளுமே (௧)

ஓதிவாயதுமறைகளேயுரைப்பதும்பலமறைகளே
பாதிகொண்டதுமாதையேபணிகிறேனமிகுமாதையே
காதுசேர்கனங்குழையரேகாதலார்கனங்குழையரே
வீதிவாய்மிகுமேதியாமிழலைமேவியவேதியா. (௨)

பாடுகின்றபண்டாரமேபத்தரன்னபண்டாரமே
சூடுகின்றதும்மத்தமேதொழுதவென்னையுன்மத்தமே
நீடுசெய்வதுந்தக்கதேநின்னரைத்திகழ்ந்தக்கதே
நாடுசேர்மிழலையூருமேநாகநஞ்சழலையூருமே. (௩)

கட்டுகின்றகழனாகமேகாய்ந்ததும்மதனாகமே
யிட்டமாவதிசைபாடலேயிசைந்தநூலினமர்பாடலே
கொட்டுவான்முழவம்வாணனேகுலாயசீர்மிழலைவாணனே
நட்டமாடுவதுசந்தியேநானுய்தற்கிரவுசந்தியே. (௪)

ஓவிலாதிடுங்கரணமேவுன்னுமென்னுடைக்கரணமே
யேவுசேர்வுநின்னாணையேயருளினின்னபொற்றாணையே
பாவியாதுரைமெய்யிலேபயின்றநின்னடிமெய்யிலே
மேவினான்விறற்கண்ணனேமிழலைமேயமுக்கண்ணனே. (௫)

வாய்ந்தமேனியெரிவண்ணமேமகிழ்ந்துபாடுவதுவண்ணமே
காய்ந்துவீழ்ந்தவன்காலனேகடுநடஞ்செயுங்காலனே
போந்ததெம்மிடையிரவிலேயும்மிடைக்கள்ளமிரவிலே
மேய்ந்ததும்மிழலையென்பதேவிரும்பியேயணிவதென்பதே. ()

அப்பியன்றகண்ணயனுமேயமரர்கோமகனுமயனுமே
யொப்பிலின்றமரர்தருவதேயொண்கையாலமரர்தருவதே
மெய்ப்பயின்றவிருக்கையேமிழலையூருமதிருக்கையே
செப்புமின்னெருதுமேயுமேசேரவுமகனெருதுமேயுமே (எ)

தானவக்குலம்விளக்கியேதாரகைச்செலவிளக்கியே
வானடர்த்தகயிலாயமேவந்துமேவுகயிலாயமே
தானெடுத்தவலரக்கனேதடமுடித்திரளரக்கனே
மேனடைச்செலவிருப்பனேமிழலைநற்பதிவிருப்பனே. (அ)

காயமிக்கதொருபன்றியேகலந்தநின்னவுருபன்றியே
யேயவிப்புவிமயங்கவேயிருவர்தாமனமயங்கவே
தூயமெய்த்திரளகண்டனேதோற்றநின்றமணிகண்டனே
மேயவித்துயிலவிலக்கணாமிழலைமேவியவிலக்கணா (௯)

கஞ்சியைக்குலவுகையரேகலக்கமாரமணர்கையரே
யஞ்சவாதிலருள்செய்யநீயணைந்திடும்பரிசுசெய்யநீ
வஞ்சனேவரவும்வல்லையேமதித்தெனைச்சிறிதும்வல்லையே
வெஞ்சலின்றிவருவித்தகாமிழலைசேருமவிறல்வித்தகா (௰)

மேயசெஞ்சடையினப்பனேமிழலைமேவியவென்னப்பனே
யேயுமாசெயவிருப்பனேயிசைந்தவாசெயவிருப்பனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசம்பந்தனே
வாயுரைத்ததமிழ்பத்துமேவல்லவர்க்குமிவைபத்துமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - புறநீர்மை. (௩-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்

புள்ளித்தோலாடைபூண்பதுநாகம்பூசுசாந்தம்பொடிநீறு
கொள்ளித்தீவிளக்குக்கூளிகள்கூட்டங்காளியைக்குணஞ்செய்கூத்து
னள்ளற்காராமையக்கடுவான்மதியமேயக்கமுடந்தாழைகளானே [டையோ
வெள்ளைக்கொம்பீனும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே.

இசைந்தவாறடியாரிடுதுவலவானோரிழுக்குசந்தனத்திளங்கமலப்
பசும்பொன்வாசிகைமேற்பரப்புவாய்கரப்பாயபத்திசெய்யாதவர்பங்க
லசும்புபாய்கழனியலர்கயன்முதலோடடுத்தரிந்தெடுத்தவான்சும்மை
விசும்புதூர்ப்பனபோல்விம்மியவீழிமிழலையானெனவினைகெடுமே. (௨)

நிருத்தனாறங்கனீற்றனான்மறையனீலமார்மிடற்றனெற்றிக்க
ணொருத்தன்மற்றெல்லாவுயிர்கட்குமுயிராயுளனிலனகேடிலியுமைகோ
றிருத்தமாய்நாளுமாடுநீர்ப்பொய்கைசிறியவரறிவினின்மிக்க [ன்
விருத்தரையடிவீழ்ந்திடம்புகும்வீழிமிழலையானெனவினைகெடுமே. ()

தாங்கருங்காலந்தவிரவந்திருவர்தம்மொடுங்கூடினாரங்கம்
பாங்கினாற்றரித்துப்பண்டுபோலெல்லாம்பண்ணியகண்ணுதற்பரமர்
தேங்கொள்பூங்கமுகுதெங்கிளங்கொடிமாச்செண்பகம்வண்பலாவிலுப்
வேங்கைபூமகிழால்வெயிற்புகாவீழிமிழலையானெனவினைகெடுமே.[பை

கூசுமாமயானங்கோயில்வாயிற்கட்குடவயிற்றனசிலபூதம்
பூசுமாசாந்தம்பூதிமெல்லோதிபாதிநற்பொங்கரவரையோன்
வாசமாம்புன்னைமௌவல்செங்கழுநீர்மலரணைந்தெழுந்தவான்றென்றல
வீசுமாம்பொழிற்றேன்றுவலைசேர்வீழிமிழலையானெனவினைகெடுமே. ()

பாதியோர்மாதர்மாலுமோர்பாகர்பங்கயத்தயனுமோர்பால
ராதியாய்நடுவாயந்தமாய்நின்றவடிகளாரமரர்கட்கமரர்
போதுசேர்சென்னிப்புரிநவாப்பணிசெய்பூசுரர்பூமகனனைய
வேதியர்வேதத்தொலியறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௬)

தன்றவம்பெரியசலந்தரனுடலந்தடிந்தசக்கரமெனக்கருளென
றன்றரிவழிபட்டிழிச்சியவிமானத்திறையவன்பிறையணிசடைய
னின்றநாள்காலையிருந்தநாண்மாலைகிடந்தமண்மேலவருகலியை
வென்றவேதியர்கள்விழாவறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௭)

கடுத்தவாளரக்கன்கயிலையன்றெடுத்தகரமுரஞ்சிரநெரிந்தலற
வடர்த்ததோர்விரலாலஞ்செழுத்துரைக்கவருளினன்றடமிகுநெடுவாள்
படித்தநான்மறைகேட்டிருந்தபைங்கிளிகள்பதங்களையோதப்பாடிருந்த
விடைக்குலம்பயிற்றும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே.

அளவிடலுற்றவயனொடுமாலுமண்டமண்கெண்டியுங்காணு
முளையெரியாயமூர்த்தியைத்தீர்த்தமுக்கணெம்முதல்வனைமுத்தைத்த
தளையவிழ்கமலத்தவிசின்மேலன்னந்தனிளம்பெடையொடும்புல்கி
விளைகதிர்கவரிவீசவீற்றிருக்குமிழலையானெனவினைகெடுமே. (௯)

கஞ்சிப்போதுடையார்கையிற்கோசாரக்கலதிகள்கட்டுரைவிட்டு
வஞ்சித்தேவிரியவெழுந்தநஞ்சதனையுண்டமரர்க்கமுதருளி
யிஞ்சிக்கேகதலிக்கனிவிழக்கமுகின்குலையொடும்பழம்விழத்தெங்கின்
மிஞ்சுக்கேமஞ்சுசேர்பொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௧௦)

வேந்தர்வந்திறைஞ்சவேதியர்வீழிமிழலையுள்விண்ணிழிவிமானத்
தேய்ந்ததன்றேவியோடுறைகின்றவீசனையெம்பெருமானைத்
தோய்ந்தநீர்த்தோணிபுரத்துறைமறையோன்றூமொழிஞானசம்பந்தன
வாய்ந்தபாமாலைவாய்நவில்வாரைவானவர்வழிபடுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு நாயனார்.

திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பூதத்தின்படையர்பாம்பின்பூணினர்பூணநூலர்
சீதத்திற்பொலிந்ததிங்கட்கொழுந்தர்நஞ்சழுந்துகண்டர்
கீதத்திற்பொலிந்தவோசைக்கேள்வியர்வேள்வியாளர்
வேதத்தின்பொருளர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௧)

காலையிற்கதிர்செய்மேனிகங்குலிற்கறுத்தகண்டர்
மாலையின்மதியஞ்சேர்ந்தமகுடத்தர்மதுவும்பாலு
மாலையிற்பாகும்போலவண்ணித்திட்டடியார்க்கென்றும்
வேலையினமுதர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௨)

வருந்தினநெருநலின்றாய்வழங்கினநாளராற்கீ
ழிருந்துநன்பொருள்கணால்வர்க்கியம்பினரிருவரோடும்
பொருந்தினர்பிரிந்துதம்பாற்பொய்யராமவர்கட்கென்றும்
விருந்தினர்திருந்துவீழிமிழலையுள்விகிர்தனாரே (௩)

நிலையிலாவூர்மூன்றொன்றநெருப்பரிகாற்றம்பாகச்
சிலையுநாணதுவுநாகங்கொண்டவர்தேவர்தங்க
டலையினாற்றரித்தவென்புந்தலைமயிர்வடமும்பூண்ட
விலையிலாவேடர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௪)

மறையிடைப்பொருளர்மொட்டின்மலர்வழிவாசத்தேனர்
கறவிடைப்பாலினெய்யர்கரும்பினிற்கட்டியாளர்
பிறையிடைப்பாம்புகொன்றைப்பிணையல்சேர்சடையுணீரர்
விறகிடைத்தீயர்வீழிமிழலையுள்விகிர்தனாரே (௫)

எண்ணகத்திலலையலலருளாலலரிமவான்பெற்ற
பெண்ணகத்தரையர்காறறிற்பெருவலியிருவராகி
மண்ணகத்தைவர்நீரினால்வர்தீயதனின்மூவர்
விண்ணகத்தொருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௬)

சந்தணிகொஙகையாளோர்பங்கினர்சாமவேத
ரெந்தையுமெந்தைதந்தைதந்தையுமாயவீச
ரந்தியோடுதயமந்நணாளரானெய்பாலவேட்கும்
வெந்தழலுருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௭)

நீற்றினைநிறையப்பூசிநித்தலாயிரம்பூககொண்டு
வேற்றுழியொருநாளொன்றுகுறையக்கண்ணிறையவிட்ட
வாற்றலுக்காழிநலகியவன்கொணர்ந்திழிச்சுங்கோயில்
வீற்றிருந்தளிபபர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௮)

சித்திசெய்பவர்கட்கெலலாஞ்சேர்விடஞ்சென்றுகூடப்
பத்திசெய்பவர்கள்பாவம்பறிப்பவரிறப்பிலாளர்
முத்திசெய்பவளமேனிமுதிரொளிநீலகண்டர்
வித்தினின்முளையர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௯)

தருக்கினவரககன்றேரூர்சாரதிதடைநிலாது
பொருப்பினையெடுத்ததோளும்பொன்முடிபத்தும்புண்ணாய்
நெரிப்புண்டங்கலறிமீண்டுநினைந்தடிபரவத்தம்வாள்
விருப்பொடுங்கொடுப்பர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வான்சொட்டச்சொட்டநின்றட்டும்வளர்மதியோடயலே
தேன்சொட்டச்சொட்டநின்றட்டுந்திருக்கொன்றைசென்னிவைத்தீர்
மான்பெட்டைநோக்கிமணாளீர்மணிநீர்மிழலையுள்ளீர்
நான்சட்டநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௧)

அந்தமுமாதியுமாகிநின்றீரண்டமெண்டிசையும்
பந்தமும்வீடும்பரப்புகின்றீர்பசுவேற்றுகந்தீர்
வெந்தழலோம்புமிழலையுள்ளீரென்னைத்தென்றிசைக்கே
யுந்திடும்போதுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௨)

அலைக்கின்றநீர்நிலங்காற்றனலம்பரமாகிநின்றீர்
கலைக்கன்றுசேருங்கரத்தீர்கலைப்பொருளாகிநின்றீர்
விலக்கின்றிநல்குமிழலையுள்ளீர்மெய்யிற்கையொடுகால்
குலைக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௩)

தீத்தொழிலான்றலைதீயிலிட்டுச்செய்தவேள்விசெற்றீர்
பேய்த்தொழிலாட்டியைப்பெற்றுடையீர்பிடித்துத்திரியும்
வேய்த்தொழிலாளர்மிழலையுள்ளீர்விக்கியஞ்செழுத்து
மோத்தொழிந்தும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௪)

தோட்பட்டநாகமுஞ்சூலமுஞ்சுற்றியும்பத்திமையான்
மேற்பட்டவந்தணர்வீழியுமென்னையும்வேறுடையீர்
நாட்பட்டுவந்துபிறந்தேனிறக்கநமன்றமர்தங்
கோட்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௫)

கண்டியிற்பட்டகழுத்துடையீர்கரிகாட்டிலிட்ட
பண்டியிற்பட்டபரிகலத்தீர்பதிவீழிகொண்டீ
ருண்டியிற்பட்டினிநோயிலுறக்கத்திலும்மையைவர்
கொண்டியிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௬)

தோற்றங்கண்டான்சிரமொன்றுகொண்டீர்தூயவெள்ளெருத்தொன்
றேற்றங்கொண்டீரெழில்வீழிமிழலையிருக்கைகொண்டீர்
சீற்றங்கொண்டென்மேற்சிவந்ததொர்பாசத்தால்வீசியவெங்
கூற்றங்கண்டும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௭)

சுழிப்பட்டகங்கையுந்திங்களுஞ்சூடிச்சொக்கம்பயின்றீர்
பழிப்பட்டபாம்பரைப்பற்றுடையீர்படர்தீப்பருக
விழிப்பட்டகாமனைவீட்டீர்மிழலையுள்ளீர்பிறவிச்
சுழிப்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௮)

பிள்ளையிற்பட்டபிறைமுடியீர்மறையோதவல்லீர்
வெள்ளையிற்பட்டதொர்நீற்றீர்விரிநீர்மிழலையுள்ளீர்
நள்ளையிற்பட்டைவர்நக்கரைப்பிக்கநமன்றமர்தங்
கொள்ளையிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௯)

கறுக்கொண்டரக்கன்கயிலையைப்பற்றியகையுமெய்யு
நெறுக்கென்றிறச்செற்றசேவடியாற்கூற்றைநீறுசெய்தீர்
வெறிக்கொன்றைமாலைமுடியீர்விரிநீர்மிழலையுள்ளீ
ரிறக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கரைந்துகைதொழுவாரையுங்காதலன்
வரைந்துவைதெழுவாரையும்வாட்டலன்
நிரந்தபாரிடத்தோரவர்நித்தலும்
விரைந்துபோவதுவீழிமிழலைக்கே (க)

ஏற்றுவெல்கொடியீசன்றனாதிரை
நாற்றஞ்சூடுவர்நன்னறுந்திங்களார்
நீற்றுச்சந்தனவெள்ளைவிரவலார்
வேற்றுக்கோலமயொளவீழிமிழலையே (உ)

புனைபொற்சூலத்தன்போர்விடையூர்தியான்
வினைவெருகத்தன்வெண்மழுவாளினு
னினையநின்றவனீசனையேயெனு
வினையிலார்தொழும்வீழிமிழலையே. (௩)

மாடத்தாடுமனத்துடன்வைத்தவர்
நோட்டத்தார்குருநேத்திரத்தாபலர்
பாடத்தார்பரிப்பார்பழிப்பல்லதோர்
வேடத்தார்தொழும்வீழிமிழலையே. (௪)

எடுத்தவெல்கொடியேறுடையானுடை
ருடுப்பர்கோவணமுண்பதுபிச்சையே
கெடுப்பதாவதுகீழ்நின்றவல்வினை
விடுத்துப்போவதுவீழிமிழலைக்கே. (ரு)

குழலையாழ்மொழியாரிசைவேட்டையா
லுழலையாக்கையையூணுமுணாவிலீர்
தழலைநீமடிகொள்ளன்மின்சாற்றினே
மிழலையானடிசாரவினைஞுள்வரே (௬)

தீரன்றீத்திரளன்சடைத்தங்கிய
நீரனாடியநீற்றனவண்டார்கொன்றைத்
தாரன்மாலையன்றண்ணறுங்கண்ணியன்
வீரன்வீழிமிழலைவிகிர்தனே. (எ)

எரியினாரிறையாரிடுகாட்டிடை
நரியினார்பிரியாமகிழ்கின்றதோர்
பெரியனார்தம்பிறப்பொடுசாதலை
விரியினார்தொழும்வீழிமிழலையே. (அ)

நீண்டசூழ்சடைமேலோர்நிலாமதி
காண்டுசேவடிமேலொர்கனைகழல்
வேண்டுவாரவர்வீதிபுகுந்திலர்
மீண்டும்போவதுவீழிமிழலைக்கே. (௯)

பாலையாழொடுசெவ்வழிபண்கொள
மாலைவானவர்வந்துவழிபடு
மாலையாரழலந்தணராகுதி
வேலையார்தொழுமவீழிமிழலையே (கo)

மழலையேற்றுமணாளன்றிருமலை
சுழலவார்த்தெடுத்தான்முடிதோளிற
கழல்கொள்காலிற்றிருவிரலூன்றலு
மிழலையானடிவாழ்கெனவிட்டதே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை (ரு-ம திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

என்பொனேயிமையோர்தொழுபைங்கழல்
நன்பொனேநலந்தீங்கறிவொன்றிலேன்
செம்பொனேதிருவீழிமிழலையு
ளன்பனேயடியேனைக்குறிக்கொளே (க)

கண்ணினற்களிகூரக்கையாற்றொழு
தெண்ணுமாறறியாதிளைப்பேன்றனை
விண்ணுளார்தொழுமவீழிமிழலையு
ளண்ணலேயடியேனைக்குறிக்கொளே (உ)

ஞாலமேவிசும்பேநலந்தீமையே
காலமேகருத்தேகருத்தாற்றொழுஞ்
சீலமேதிருவீழிமிழலையுட்
கோலமேயடியேனைக்குறிக்கொளே (௩)

முத்தனேமுதல்வாமுகிழுமுளை
யொத்தனேயொருவாவுருவாகிய
சித்தனேதிருவீழிமிழலையு
ளத்தனேயடியேனைக்குறிக்கொளே (௪)

கருவனேகருவாய்த்தெளிவார்க்கெலா
மொருவனேயுயிர்ப்பாயுணர்வாய்நின்ற
திருவனேதிருவீழிமிழலையுட்
குருவனேயடியேனைக்குறிக்கொளே. (ரு)

காத்தனேபொழிலேழையுங்காதலா
லாத்தனேயமரர்க்கயன்றன்றலை
சேர்த்தனேதிருவீழிமிழலையுட்
கூத்தனேயடியேனைக்குறிக்கொளே (சு)

நீதியானவர்நித்தனியமஞ்செய்
தோதியானவரும்முணராததோர்
வேதியாவிகிர்தாதிருவீழியு
ளாதியேயடியேனைக்குறிக்கொளே. (எ)

தாயானைச்சக்கரமாற்கீந்தான்றன்னைச்
சங்கரனைச்சந்தோகசாமமோதும்
வாயானைமந்திரிப்பார்மனத்துளானை
வஞ்சனையாலஞ்செழுத்தும்வழுத்துவார்க்குச்
சேயானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே (௪)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வந்த
நஞ்சமுதுசெய்தானையமுதமுண்ட
மற்றமரருலந்தாலுமுலவாதானை
வருகாலஞ்செல்காலம்வந்தகால
முற்றவத்தையுணர்ந்தாருமுணரலாகா
வொருசுடரையிருவிசும்பினூர்மூன்றொன்றச்
செற்றவனைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௫)

மைவானமிடற்றானையவ்வானமின்போல்
வளர்சடைமேன்மதியானைமழையாயெங்கும்
பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்
பிலவாயபேய்க்கணங்களார்க்கச்சூலம்
பொய்வானைப்பொய்யிலாமெய்யன்றன்னைப்
பூதலமுமண்டலமும்பொருந்துபவாழ்க்கை
செய்வானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே (௬)

மிகானைக்குறைந்தடைந்தார்மேலானை
வெவ்வேறாயிருமூன்றுசமயமாகிப்
புகானையெப்பொருட்கும்பொதுவானானைப்
பொன்னுலகத்தவர்போற்றும்பொருளுக்கெல்லாந்
தகானைத்தானன்றிவேறொன்றில்லாத்
தத்துவனைத்தடவரையைநடுவுசெய்த
திகானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௭)

வானவர்கோன்றோளிறுத்தமைந்தன்றன்னை
வளைகுளமுமறைக்காடுமன்னினானை
யூனவனையுயிரவனையொருநாட்பார்த்தன்
னுயர்தவத்தினிலையறியலுற்றுச்சென்ற
கானவனைக்கயிலாயமேவினானைக்
கங்கைசேர்சடையானைக்கலந்தார்க்கென்றுந்
தேனவனைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௮)

பரத்தானையிப்பக்கம்பலவானானைப்
பசுபதியைப்பத்தர்க்குமுத்திகாட்டும்
வரத்தானைவணங்குவார்மனத்துளானை
மாருதமாலெரிமூன்றும்வாயம்பீர்க்காஞ்

சரத்தானைச்சரதத்தையுந்தன்றாட்கீழ்வைத்த
தபோதனனைச்சடாமகுடத்தணிந்தபைங்கட்
சிரத்தானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௯)

அருத்தானையயன்றலைகளஞ்சிலொன்றை
யஞ்சாதேவரையெடுத்தவரக்கன்றோள்க
ளிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானை
யிந்துவினைத்தேய்த்தானையிரவிதன்பற்
பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப்
பரந்திழியும்புனற்கங்கைபனிபோலாக்கிச்
செறுத்தானைத்திருவீழிமிழலையானைச்
சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

கயிலாயமலையுளார்காரோணத்தார்
கந்தமாதனத்துளார்காளத்தியார்
மயிலாடுதுறையுளார்மாகாளத்தார்
வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
வயில்வாயசூலமுங்காபாலமு
மமருந்திருக்கரத்தாரானேறேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்
வீழிமிழலையேமேவினாரே (௧)

பூதியணிபொன்னிறத்தர்பூணநூலர்
பொங்கரவர்சங்கரர்வெண்குழையோர்காதர்
கேதிசரமேவினார்கேதாரத்தார்
கெடிலவடவதிகைவீரட்டத்தார்
மாதுயரந்தீர்த்தென்னையுய்யக்கொண்டார்
மழபாடிமேயமழுவாளனார்
வேதிகுடியுளார்மீயச்சூரார்
வீழிமிழலையேமேவினாரே (௨)

அண்ணாமலையமர்ந்தாராரூருளா
ரளப்பூராரந்தணர்கண்மாடக்கோயி
லுண்ணாழிகையாருமையாளோடு
மிமையோர்பெருமானாரொற்றியூரார்
பெண்ணாகடத்துப்பெருந்தூங்கானை
மாடத்தார்கூடத்தார்பேராவூரார்
விண்ணோர்களெல்லாம்விரும்பியேத்த
வீழிமிழலையேமேவினாரே. (௩)

வெண்காட்டார்செங்காட்டங்குடியார்வெண்ணி
நன்னகரார்வேட்களத்தார்வேதநாவார்

பண்காட்டும்வண்டார்பழனத்துள்ளார்
பராய்த்துறையார்சிராப்பள்ளியுள்ளார்பண்டோர்
வெண்கோட்டுக்கருங்களிற்றைப்பிளிறப்பற்றி
யுரித்துரிவைபோர்த்தவிவலவேடம்
விண்காட்டும்பிறைநுதலியஞ்சக்காட்டி
வீழிமிழலையேமேவினாரே (௪)

புடைசூழ்ந்தபூதங்கள்வேதம்பாடப்
புலியூர்ச்சிற்றம்பலத்தேநட்டமாடுவா
ருடைசூழ்ந்தபுலித்தோலர்கலிக்கச்சிமேற்
றளியுளார்குளிர்சோலையேகம்பத்தார்
கடைசூழ்ந்துபலிதேருங்கங்காளனார்
கழுமலத்தார்செழுமலர்த்தார்க்குழலியோடும்
விடைசூழ்ந்தவெல்கொடியார்மல்குசெல்வ
வீழிமிழலையேமேவினாரே (௫)

பெரும்புலியூர்விரும்பினார்பெரும்பாழியார்
பெரும்பற்றப்புலியூர்மூலட்டானத்தா
ரிரும்புதலாரிரும்பூளையுள்ளாரேரா
ரின்னம்பராரீங்கோய்மலையாரின்சொற்
கரும்பனையாளுமையோடுங்கருகாவூரார்
கருப்பறியலூரார்கரவீரத்தார்
விரும்பமரரிரவுபகல்வணங்கியேத்த
வீழிமிழலையேமேவினாரே (௬)

மறைக்காட்டார்வலிவலத்தார்வாய்மூர்மேயார்
வாள்கொளிபுத்தூரார்மாகாளத்தார்
கறைக்காட்டுங்கண்டனார்காபாலியார்
கற்குடியார்விற்குடியார்கானப்பேரார்
பறைக்காட்டுங்குழிவிழிகட்பல்பேய்சூழப்
பழையனூராலங்காட்டடிகள்பண்டோர்
மிறைக்காட்டுங்கொடுங்காலன்வீடப்பாய்ந்தார்
வீழிமிழலையேமேவினாரே (௭)

அஞ்சைக்களத்துள்ளாரையாற்றுள்ளா
ராரூரார்பேரூராரழுந்தூருள்ளார்
தஞ்சைத்தளிக்குளத்தார்தக்களூரார்
சாந்தையயவந்திதங்கினார்தா
நஞ்சைத்தமக்கமுதாவுண்டநம்பர்
நாகேச்சரத்துள்ளார்நாரையூரார்
வெஞ்சொற்சமண்சிறையிலென்னைமீட்டார்
வீழிமிழலையேமேவினாரே (௮)

கொண்டலுள்ளார்கொண்டீச்சரத்தினுள்ளார்
கோவலூர்வீரட்டங்கோயில்கொண்டார்
தண்டலையார்தலையாலங்காட்டினுள்ளார்
தலைச்சங்கைப்பெருங்கோயிறங்கினார்தாம்

கண்ணுமொருமூன்றுடையகாபாலிகாண்
காமனுடல்வேவித்தகண்ணினுங்கா
ணெண்ணிலசமண்டீர்த்தென்னையாட்கொண்டான்கா
ணிருவர்க்கெரியாயருளினான்காண்
விண்ணவர்கள்போற்றவிருக்கின்றான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௩)

காதிசைந்தசங்கக்குழையினான்காண்
கனகமலையனையகாட்சியான்காண்
மாதிசைந்தமாதவமுஞ்சோதித்தான்காண்
வல்லேனவெள்ளெயிற்றாபரணத்தான்கா
ணாதியன்காணண்டத்துக்கப்பாலான்கா
ணைந்தலைமாநாகநாணாகினான்காண்
வேதியன்காண்வேதவிதிகாட்டினான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே (௪)

நெய்யினொடுபாலிளநீராடினான்கா
ணித்தன்மணவாளனெனநிற்கின்றான்காண்
கையின்மழுவாளொடுமானேந்தினான்காண்
காலனுயிர்காலாற்கழிவித்தான்காண்
செய்யதிருமேனிவெண்ணீற்றினான்காண்
செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினான்காண்
வெய்யவனல்விளையாட்டாடினான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே (௫)

கண்டுஞ்சுங்கருநெடுமாலாழிவேண்டிக
கண்ணிடந்துசூட்டக்கண்டருளுவான்காண்
வண்டுண்ணுமதுக்கொன்றைவன்னிமத்தம்
வான்கங்கைசடைக்கரந்தமாதேவன்காண்
பண்டங்குமொழிமடவாள்பாகத்தான்காண்
பரமன்காண்பரமேட்டியாயினான்காண்
வெண்டிங்களரவொடுசெஞ்சடைவைத்தான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே (௬)

கற்பொலிதோட்சலந்தரனைப்பிளந்தவாழி
கருமாலுக்கருள்செய்தகருணையான்காண்
விறற்பொலிதோள்விசயன்வலிதேய்வித்தான்காண்
வேடுவனாய்ப்போர்பொருதுகாட்டினான்காண்
தற்பரமாந்தற்பரமாய்நிற்கின்றான்காண்
சதாசிவன்காண்டன்னொப்பாரில்லாதான்காண்
வெற்பரையன்பாவைவிருப்புளான்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௭)

மெய்த்தவன்காண்மெய்த்தவத்தினிற்பார்க்கெல்லாம்
விருப்பிலாவிருப்புமனவினையர்க்கென்றும்
பொய்த்தவன்காண்புத்தன்மறவாதோடி
யெறிசல்லிபுதுமலர்களாக்கினான்கா

னுய்த்தவன்காணுயர்கதிக்கேயுள்கினரை
யுலகனைத்துமொளித்தளித்திட்டுய்யச்செய்யும்
வித்தகன்காண்வித்தகர்தாமவிரும்பியேத்தும்
விண்ணிழிதண்வீழிமிழலையானே. (அ)

சந்திரனைத்திருவடியாறறளர்வித்தான்காண்
டக்கனையுமுனிந்தெச்சன்றலைகொண்டான்கா
ணிந்திரனைத்தோண்முறிவித்தருள்செயதான்கா
ணீசன்காணேசன்காணினையோர்க்கெல்லா
மந்திரமுமறைப்பொருளுமாயினுன்காண
மாலொடயன்மேலொடுகீழறியாவணணம்
வெந்தழலின்விரிசுடராயோயகினன்காண்
விண்ணிழிதண்வீழிமிழலையானே (௯)

ஈங்கைப்பேரீமவனததிருககின்ருன்கா
ணமமானகாணகைமமாவினுரிபோர்த்தான்கா
ணோங்குமலைககரையன்றன்பாவையோடு
மோருருவாயநின்ருனகாணேங்காரன்காண்
கோஙகுமலர்க்கொனறையந்தார்க்கண்ணியான்காண்
கொலலேறுவெலலகொடிமேற்கூட்டினுன்கானை
வேங்கைவரிப்புலிததோலமேலாடையான்காண்
விண்ணிழிதணவீழிமிழலையானே (௰)

திருச்சிறறமபலம.



---

திருத்தாணடகம் (௬-ம். திருமுறை.)

திருசசிறறம்பலம.

மானேறுகரமுடையவரதர்போலு
மால்வரைகாலவளைவிலலாவளைத்தார்போலுங
கானேறுகரிகதறவுரித்தார்போலுங
கட்டங்கங்கொடிதுடிகைககொணடார்போலுந்
தேனேறுதிருவிதழிததாரார்போலுந
திருவீழிமிழலையமர்செலவர்போலு
மானேறதேறுமழகர்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (௧)

சமரமிகுசலந்தரன்போர்வேண்டினனைச்
சக்கரத்தாற்பிளப்பித்தசதுரர்போலு
நமனையொருகாலகுறைத்தநாதர்போலு
நாரணனைவிடப்பாகத்தடைத்தார்போலுங்
குமரனையுமகனகவுடையார்போலுங்
குளிர்வீழிமிழலையமர்குழகர்போலு
மமரர்கள்பினமுதுணநஞ்சுண்டார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (௨)

நீறணிந்ததிருமேனிநிமலர்போலு
நேமிநெடுமாற்கருளிச்செய்தார்போலு

மேறணிந்தகொடியுடையெம்மிறைவர்போலு
மெயின்மூன்றுமெரிசரத்தாலெய்தார்போலும்
வேறணிந்தகோலமுடைவேடர்போலும்
வியன்வீழிமிழலையுறைவிகிர்தர்போலு
மாறணிந்தசடாமகுடத்தழகர்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (ங)

கைவேழமுகத்தவனைப்படைத்தார்போலுங்
கயாசுரனையவனாற்கொல்வித்தார்போலுஞ்
செய்வேள்வித்தக்கனைமுன்சிதைத்தார்போலுந்
திசைமுகன்றன்சிரமொன்றுசிதைத்தார்போலு
மெய்வேளவிமூர்த்திதலையறுத்தார்போலும்
வியன்வீழிமிழலையிடங்கொண்டார்போலு
மைவேள்வியாறங்கமானார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (ச)

துன்னத்தின்கோவணமொன்றுடையார்போலுஞ்
சுடர்மூன்றுஞ்சோதியுமாய்த்தூயார்போலும்
பொன்னொத்ததிருமேனிப்புனிதர்போலும்
பூதகணம்புடைசூழவருவார்போலு
மின்னொத்தசெஞ்சடைவெண்பிறையார்போலும்
வியன்வீழிமிழலைசேர்விமலர்போலு
மன்னத்தேரயன்முடிசேரடிகள்போலு
மடியேனையாளுடையவடிகடாமே (ரு)

மாலாலுமறிவரியவரதர்போலு
மறவாதார்பிறப்பறுக்கவல்லார்போலு
நாலாயமறைக்கிறைவரானார்போலு
நாமவெழுத்தஞ்சாயநம்பர்போலும்
வேலார்கைவீரியைமுன்படைத்தார்போலும்
வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலு
மாலாலமிடற்றடக்கியளித்தார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (சு)

பஞ்சடுத்தமெல்விரலாள்பங்கர்போலும்
பைந்நாகமரைக்கசைத்தபரமர்போலு
மஞ்சடுத்தமணிநீலகண்டர்போலும
வடகயிலைமலையுடையமணாளர்போலுஞ்
செஞ்சடைக்கண்வெண்பிறைகொண்டணிந்தார்போலுந்
திருவீழிமிழலையமர்சிவனார்போலு
மஞ்சடக்குமடியவர்கட்கணியார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (எ)

குண்டரொடுபிரித்தெனையாட்கொண்டார்போலுங்
குடமூக்கிலிடமாக்கிக்கொண்டார்போலும்
புண்டரிகப்புதுமலராதனத்தார்போலும்
புள்ளரசைக்கொன்றுயிர்பின்கொடுத்தார்போலும்

வெண்டலையிற்பலிகொண்டவிகிர்தர்போலும்
வியன்வீழிமிழலைநகருடையார்போலு
மண்டத்துப்புறத்தப்பாலானார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (௯)

முத்தனையமுகிழ்முறுவலுடையார்போலு
மொய்பவளக்கொடியனையசடையார்போலு
மெத்தனையும்பத்திசெய்வார்க்கினியார்போலு
மிருநான்குமூர்த்திகளுமானார்போலு
மித்திரவச்சிரவணற்குவிருப்பர்போலும்
வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலு
மத்தனொடுமம்மையெனக்கானார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (௰)

கரியுரிசெய்துமைவெருவக்கண்டார்போலுங்
கங்கையைச்செஞ்சடைமேற்கரந்தார்போலு
மெரியதொருகைதரித்தவிறைவர்போலு
மேனத்தின்கூனெயிறுபூண்டார்போலும்
விரிகதிரோரிருவரைமுன்வெகுண்டார்போலும்
வியன்வீழிமிழலையமர்விமலர்போலு
மரிபிரமர்துதிசெய்யநின்றளித்தார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே (௧௰)

கயிலாயமலையெடுத்தான்கதறிவீழக்
காலவிரலாலடர்த்தருளிச்செய்தார்போலுங்
குயிலாருமென்மொழியாள்குளிர்ந்துநோக்கக்
கூத்தாடவல்லகுழகர்போலும்
வெயிலாயசோதிவிளக்கானார்போலும்
வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலு
மயிலாருமூவிலைவேற்படையார்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண - சீகாமரம். (எ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

நமபினார்க்கருள்செய்யுமந்தணர்நான்மறைக்கிடமாயவேள்வியுட்
செம்பொனேர்மடவாரணிபெற்றதிருமிழலை
யும்பரார்தொழுதேத்தமாமலையாளொடும்முடனேயுறைவிட
மம்பொன்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௧)

விடங்கொண்மாமிடற்றீர்வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்டகாதினீரெ [ன்று
திடங்கொள்சிந்தையினார்கலிகாக்குந்திருமிழலை
மடங்கல்பூண்டவிமானமண்மிசைவந்திழிச்சியவானநாட்டையு
மடங்கல்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௨)

ஊனையுற்றுயிராயினீரொளிமூன்றுமாய்த்தெளிநீரோடானஞ்சின்
றேனையாட்டுகந்தீர்செழுமாடத்திருமிழலை
மானைமேவியகையினீர்மழுவேந்தினீர்மங்கைபாகத்தீர்விண்ணி
லானவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௩)

பந்தம்வீடிவைபண்ணினீர்படிநீர்மதிப்பிதிர்க்கண்ணியீரென்று
சிந்தைசெய்திருக்குஞ்செங்கையாளர்திருமிழலை
வந்துநாடகம்வானநாடியராடமாலயனேத்தநாடொறு
மந்தண்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௪)

புரிசைமூன்றையும்பொன்றக்குன்றவிலேந்திவேதப்புரவித்தேர்மிசைத்
திரிசெய்நான்மறையோர்சிறந்தேத்துந்திருமிழலைப்
பரிசினாலடிபோற்றுபத்தர்கள்பாடியாடப்பரிந்துநல்கினீ
ரரியவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௫)

எறிந்தசண்டியிடந்தகண்ணப்ப*னேத்துபத்தர்கட்கேற்றநல்கினீர்
செறிந்தபூம்பொழிற்றேன்றுளிவீசுந்திருமிழலை
நிறைந்தவந்தணர்நித்தநாடொறுநேசத்தாலுமைப்பூசிக்குமிட
மறிந்துவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௬)

பணிந்தபார்த்தன்பகீரதன்பலபத்தர்சித்தர்க்குப்பண்டுநல்கினீர்
திணிந்தமாடந்தொறுஞ்செல்வமல்குதிருமிழலைத்
தணிந்தவந்தணர்சந்திநாடொறுமந்திவானிடுபூச்சிறப்பவை
யணிந்துவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௭)

பரந்தபாரிடமூரிடைப்பலிபற்றிப்பார்த்துணுஞ்சுற்றமாயினீர்
தெரிந்தநான்மறையோர்க்கிடமாயதிருமிழலை
யிருந்துநீர்தமிழோடிசைகேட்குமிச்சையாற்காசுநித்தநல்கினீ
ரருந்தண்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௮)

தூயநீரமுதாயவாறதுசொல்லுகென்றுமைகேட்கச்சொல்லினீர்
தீயராக்குலையாளர்செழுமாடத்திருமிழலை [பொரு
மேயநீர்பலியேற்றதென்னென்றுவிண்ணப்பஞ்செய்பவர்க்குமெய்ப்
ளாயவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே. (௯)

வேதவேதியர்வேதநீதியரோதுவார்விரிநீர்மிழலையு
ளாதிவீழிகொண்டீரடியேற்குமருளுகென்று
நாதகீதம்வண்டோதுவார்பொழினாவலூரன்வன்றொண்டனற்றமிழ்
பாதமோதவல்லார்பரனோடுங்கூடுவரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவீழிமிழலை திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - வீழியழகர்.
தேவி - சுந்தரகுசாம்பிகை.

---

ஆ திருப்பதிகம் - ௧௫௧.

---

* "னேற்றபத்தர்" என்றும்பாடம்.

# ௬௨. திருவன்னியூர்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை. (௫-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

காடுகொண்டரங்காக்கங்குலவாய்க்கணம்
பாடமாநடமாடும்பரமனார்
வாடமானிறங்கொள்வர்மணங்கமழ்
மாடமாமதில்சூழ்வன்னியூரரே (௧)

செங்கணாகமரையதுதீத்திர
ளங்கையேந்திநின்றாடெரியாடுவர்
கங்கைவார்சடைமேலிடங்கொண்டவர்
மங்கைபாகம்வைத்தார்வன்னியூரரே. (௨)

ஞானங்காட்டுவர்நன்னெறிகாட்டுவர்
தானங்காட்டுவர்தம்மடைந்தார்க்கெலாந்
தானங்காட்டித்தன்றாளடைந்தார்கட்கு
வானங்காட்டுவர்போலும்வன்னியூரரே (௩)

இம்மையம்மையெனவிரண்டுமிவை
மெய்ம்மைதானறியாதுவிளம்புவர்
மெய்ம்மையானினைவார்கடம்வல்வினை
வம்மின்தீர்ப்பர்கண்டீர்வன்னியூரரே. (௪)

பிறைகொள்வாணுதற்பெய்வளைத்தோளியர்
நிறையைக்கொள்பவர்நீறணிமேனியர்
கறைகொள்கண்டத்தர்வெண்மழுவாளினர்
மறைகொள்வாய்மொழியார்வன்னியூரரே. (௫)

திளைக்கும்வண்டொடுதேன்படுகொன்றையர்
துளைக்கைவேழத்தர்தோலர்சுடர்மதி
முளைக்குமூரற்கதிர்கண்டுநாகநா
வளைக்கும்வார்சடையார்வன்னியூரரே. (௬)

குணங்கடோளெட்டுமூர்த்தியிணையடி
யிணங்குவார்கட்கினியனுமாய்நின்றான்
வணங்கிமாமலர்கொண்டவர்வைகலும்
வணங்குவார்மனத்தார்வன்னியூரரே. (௭)

இயலுமாலொடுநான்முகன்செய்தவ
முயலிற்காண்பரிதாய்நின்றமூர்த்திதா
னயலெலாமன்னமேயுமந்தாமரை
வயலெலாங்கயல்பாய்வன்னியூரரே. (௮)

நலங்கொள்பாகனைநன்றுமுனிந்திடா
விலங்கல்கோத்தெடுத்தானதுமிக்கிட
விலங்கைமன்னனிருபதுதோளினை
மலங்கவூன்றிவைத்தார்வன்னியூரரே. (கூ,க0)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - அக்கினீசுவரர்.
தேவி - பார்வதியம்மை.

---

ஆ திருப்பதிகம் - கருஉ.

---

## சஅ. திருக்கருவிலியூர்.

---

### திருநாவுக்கரசுநாயனார்.

---

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டகுழலார்சுழலிலவலைப்
பட்டிட்டும்மயங்கிப்பரியாதுநீர்
கட்டிட்டவினைபோகக்கருவிலிக்
கொட்டிட்டையுறைவான்கழல்கூடுமே. (க)

ஞாலமலகுமனிதர்காணுடொறு
மேலமாமலரோடிலைகொண்டுநீர்
காலனார்வருதன்முன்கருவிலிக
கோலவார்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (உ)

பங்கமாயினபேசப்பறைந்துநீர்
மங்குமாநினையாதேமலர்கொடு
கங்கைசேர்சடையான்றன்கருவிலிக்
கொங்குவார்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (ங)

வாடிநீர்வருந்ாதேமனிதர்காள்
வேடனாய்விசயற்கருள்செய்தவெண்
காடனாருறைகின்றகருவிலிக்
கோடுநீள்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (ச)

உய்யுமாறிதுகேணமினுலகத்தீர்
பைகொள்பாம்பரையான்படையார்மழுக்
கையினானுறைகின்றகருவிலிக்
கொய்கொள்பூம்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (ரு)

ஆற்றவும்மவலத்தழுந்தாதுநீர்
தோற்றுந்தீயொடுநீர்நிலந்தூவெளி
காற்றுமாகிநின்றான்றன்கருவிலிக்
கூற்றங்காய்ந்தவன்கொட்டிட்டைசேர்மினே. (சா)

நில்லாவாழ்வுநிலைபெறுமென்றெண்ணிப்
பொல்லாவாறுசெயப்புரியாதுநீர்
கல்லாரும்மதில்சூழ்தண்கருவிலிக்
கொல்லேறூர்பவன்கொட்டிட்டைசேர்மினே. (எ)

பிணித்தநோய்ப்பிறவிப்பிறிவெய்துமா
றுணர்த்தலாமிதுகேண்மினுருத்திர
கணத்தினார்தொழுதேத்துங்கருவிலிக
குணத்தினானுறைகொட்டிட்டைசேர்மினே (அ)

நம்புவீரிதுகேண்மின்கணுடொறு
மெம்பிரானென்றிமையவரேத்துமே
கம்பனூருறைகின்றகருவிலிக
கொம்பனார்பயிலகொட்டிட்டைசேர்மினே. (௯)

பாருளீரிதுகேண்மின்பருவரை
பேருமாறெடுத்தானையடர்த்தவன்
கார்கொணீர்வயலசூழ்தண்கருவிலிக்
கூர்கொள்வேலினன்கொட்டிட்டைசேர்மினே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - சற்குணநாதர்.
தேவி - சர்வாங்கநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௧௫௫.

---

# ௯௪. திருப்பேணுபெருந்துறை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம். (௩ஆ திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பைம்மாநாகம்பன்மலர்க்கொன்றைபன்றிவெண்கொம்பொன்றுபூண்டு
செம்மாந்தையம்பெய்கென்றுசொலலிச்செய்தொழில்பேணியோர்செ [ல்வ
ரம்மானேக்கியவந்தளிர்மேனியரிவையோர்பாகமமர்ந்த
பெம்மானல்கியதொலபுகழாளர்பேணுபெருந்துறையாரே. (௧)

மூவருமாகியிருவருமாகிமுதலவனுமாய்நின்றமூர்த்தி
பாவங்கடீர்தரநலவினைநலகிப்பலகணநின்றுபணியச்
சாவமதாகியமால்வரைகொண்டுதண்மதின்மூன்றுமெரித்த
தேவர்கடேவரெம்பெருமானார்தீதிலபெருந்துறையாரே. (௨)

செய்பூங்கொன்றைகூவிளமாலைசென்னியுட்சேர்புனல்சேர்த்திக்
கொய்பூங்கோதைமாதுமைபாகங்கூடியோர்பீடுடைவேடர்
கைபோனான்றகனிகுலைவாழைகாய்குலையிற்கமுகினைப்
பெய்பூம்பாளைபாய்ந்திழிதேறல்பில்குபெருந்துறையாரே. (௩)

நிலனொடுவானுநீரொடுதீயும்வாயுவுமாகியோரைந்து
புலனொடுவென்றுபொய்ம்மைகடீர்ந்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
நலனொடுதீங்குந்தானலதின்றிநன்கெழுசிந்தையராகி
மலனொடுமாசுமில்லவர்வாழுமல்குபெருந்துறையாரே. (ச)

பணிவாயுள்ளநன்கெழுநாவின்பத்தர்கள்பத்திமைசெய்யத்
துணியார்தங்களுள்ளமிலாதசுமடர்கள்சோதிப்பரியா
ரணியார்நீலமாகியகண்டரரிசிலுரிஞ்சுகரைமேன்
மணிவாய்நீலம்வாய்கமழ்தேறன்மல்குபெருந்துறையாரே. (ரு)

எண்ணார்தங்கண்மும்மதில்வேவவேவலங்காட்டியவெந்தை
விண்ணோர்சாரத்தன்னருள்செய்தவித்தகர்வேதமுதல்வர்
பண்ணாபாடலாடலறாதபசுபதியீசனோர்பாகம்
பெண்ணாணாயவர்சடையண்ணலபேணுபெருந்துறையாரே. (சா)

விழையாருள்ளநன்கெழுநாவின்வினைகெடவேதமாறங்கம்
பிழையாவண்ணம்பண்ணியவாற்றாற்பெரியோரேத்தும்பெருமான்
றழையார்மாவின்றாழ்கனியுந்திதண்ணரிசிலபுடைசூழ்ந்த
குழையார்சோலைமென்னடையன்னங்கூடுபெருந்துறையாரே. (எ)

பொன்னங்கானலவெண்டிரைசூழ்ந்தபொருகடலவேலியிலங்கை
மன்னனொல்கமாலவரையூன்றிமாமுரணாகமுந்தோளு
முன்னைவாட்டிப்பின்னருள்செய்தமூவிலைவேலுடைமூர்த்தி
யன்னங்கன்னிப்பேடையொடாடியணவுபெருந்துறையாரே. (அ)

புள்வாய்போழ்ந்துமாநிலங்கீண்டபொருகடல்வண்ணனும்பூவி
னுள்வாயலலிமேலுறைவானுமுணர்வரியானுமைகேள்வன்
முள்வாய்தாளின்றாமரைமொட்டின்முகமலரக்கயலபாயக்
கள்வாய்நீலங்கண்மலரேய்க்குங்காமர்பெருந்துறையாரே. (கூ)

குண்டுந்தேருங்கூறைகளைந்துங்கூப்பிலர்செப்பிலராகி
மிண்டும்மிண்டர்மிண்டவைகண்டுமிண்டுசெயாதுவிரும்புந்
தண்டும்பாம்பும்வெண்டலைசூலந்தாங்கியதேவாதலைவர்
வண்டுந்தேனும்வாழ்பொழிற்சோலைமல்குபெருந்துறையாரே. (க0)

கடையார்மாடநன்கெழுவீதிக்கழுமலவூரன்கலந்து
நடையாரின்சொன்ஞானசம்பந்தனல்லபெருந்துறைமேய
படையார்சூலம்வல்லவன்பாதம்பரவியபத்திவைவல்லா
ருடையாராகியுள்ளமுமொன்றியுலகினின்மன்னுவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - சிவானந்தர்.
தேவி - மலையரசி.

---

ஆ திருப்பதிகம் - கருச.

---

# ௬௫. திருநறையூர்ச்சித்தீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம். (௲ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஊருலாவுபலிகொண்டுலகேத்த
நீருலாவுநிமிர்புன்சடையண்ணல்
சீருலாவுமறையோர்நறையூரிற்
சேருஞ்சித்தீச்சரஞ்சென்றடை நெஞ்சே (௧)

காடுநாடுங்கலக்கப்பலிநண்ணி
யோடுங்கங்கையொளிர்புன்சடைதாழ
வீடுமாகமறையோர்நறையூரி
னீடுஞ்சித்தீச்சரமேநினைநெஞ்சே. (௨)

கல்வியாளர்கனகமழன்மேனி
புல்குகங்கைபுரிபுன்சடையானூர்
மல்குதிங்கட்பொழில்சூழ்நறையூரிற்
செல்வர்சித்தீச்சரஞ்சென்றடை நெஞ்சே (௩)

நீடவல்லநிமிர்புன்சடைதாழ
வாடவல்லவடிகளிடமாகும்
பாடல்வண்டுபயிலுநறையூரிற்
சேடர்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௪)

உம்பராலுமுலகின்னவராலுந்
தம்பெருமையளத்தற்கரியானூர்
நண்புலாவுமறையோர்நறையூரிற்
செம்பொன்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௫)

கூருலாவுபடையான்விடையேறி
போருலாவுமழுவானனலாடி
பேருலாவுபெருமானறையூரிற்
சேருஞ்சித்தீச்சரமேயிடமாமே. (௬)

அன்றிநின்றவவுணர்புரமெய்த
வென்றிவில்லிவிமலன்விரும்புமூர்
மன்றில்வாசமணமார்நறையூரிற்
சென்றுசித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௭)

அரக்கனாண்மையழியவரைதன்னா
னெருக்கவூன்றும்விரலான்விரும்புமூர்
பரக்குங்கீர்த்தியுடையார்நறையூரிற்
றிருக்கொள்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௮)

ஆழியானுமலரினுறைவானு
மூழிநாடியுணரார்திரிந்துமேற்
சூழுநேடவெரியாமொருவன்சீர்
நீழல்சித்தீச்சரமேநினைநெஞ்சே. (௯)

மெய்யின்மாசர்விரிநுண்டுகிலிலார்
கையிலுண்டுகழறுமுரைகொள்ளே
லுய்யவேண்டிலிறைவனறையூரிற்
செய்யுஞ்சித்தீச்சரமேதவமாமே. (௧௦)

மெய்த்துலாவுமறையோர்நறையூரிற்
சித்தன்சித்தீச்சரத்தையுயர்காழி
யத்தன்பாதமணிஞானசம்பந்தன்
பத்தும்பாடப்பறையும்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - தக்கேசி (௭-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பிறைகொள்சடையர்புலியினுரியர்பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர்கபாலமேந்துங்கையர்கங்காளர்
மறைகொள்கீதம்பாடச்சேடாமனையின்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டுதேனார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே (௧)

பொங்கார்சடையர்புனலரனலர்பூதம்பாடவே
தங்காதலியுந்தாமுமுடனாய்த்தனியோர்விடையேறிக்
கொங்கார்கொன்றைவன்னிமத்தஞ்சூடிக்குளிர்பொய்கைச்
செங்காலனமும்பெடையுஞ்சேருஞ்சித்தீச்சரத்தாரே (௨)

முடிகொள்சடையர்முளைவெண்மதியர்மூவாமேனிமேற்
பொடிகொண்ணூலர்புலியினதளர்புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலைவயல்சூழ்மடுவிற்கயலாரினம்பாயக்
கொடிகொண்மாடக்குழாமார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (௩)

பின்றாழ்சடைமேனகுவெண்டலையர்பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற்சங்கார்குழைதான்மிளிருமொருகாதர்
பொன்றாழ்கொன்றைசெருந்திபுன்னைபொருந்துசண்பகஞ்
சென்றார்செல்வத்திருவார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே (௪)

நீரார்முடியர்கறைகொள்கண்டர்மறைகணிறைநாவர்
பாரார்புகழாற்பத்தர்சித்தர்பாடியாடவே
தேரார்வீதிமுழவார்விழவினொலியுந்திசைசெல்லச்
சீரார்கோலம்பொலியுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (௫)

நீண்டசடையர்நிரைகொள்கொன்றைவிரைகொண்மலர்மாலை
தூண்டுசுடர்பொன்னொளிகொண்மேனிப்பவளத்தெழிலார்வந்
தீண்டுமாடமெழிலார்சோலையிலங்குங்கோபுரந்
தீண்டுமதியந்திகழுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (௬

குழலார்சடையர்கொக்கினிறகர்கோலநிறமத்தந்
தழலார்மேனித்தவளநீற்றர்சரிகோவணக்கீள்
ளெழிலார்நாகம்புலியினுடைமேலிசைத்துவிடையேறிக்
கழலார்சிலம்புபுலம்பவருவார்சித்தீச்சரத்தாரே. (எ)

கரையார்கடல்சூழிலங்கைமன்னன்கயிலைமலைதன்னை
வரையார்தோளாலெடுக்கமுடிகணெரிந்துமனமொன்றி
யுரையார்கீதம்பாடநல்லவுலப்பிலருள்செய்தார்
திரையார்புனல்சூழ்செல்வநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (அ)

நெடியான்பிரமனேடிக்காணார்நினைப்பார்மனத்தாரா
யடியாரவருமருமாமறையுமண்டத்தமரரு
முடியால்வணங்கிக்குணங்களேத்திமுதல்வாவருளென்னச்
செடியார்செந்நெற்றிகழுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (கூ)

நின்றுண்சமணரிருந்துண்டேரர்நீண்டபோர்வையா
ரொன்றுமுணராவூமர்வாயிலுரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பாலுண்ணமுலையிற்கபாலமயல்பொழியச்
சென்றுண்டார்ந்துசேருநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (கO)

குயிலார்கோலமாதவிகள்குளிர்பூஞ்சுரபுன்னை
செயிலார்பொய்கைசேருநறையூர்ச்சித்தீச்சரத்தாரை
மயிலார்சோலைசூழ்ந்தகாழிமல்குசம்பந்தன்
பயில்வார்க்கினியபாடல்வல்லார்பாவநாசமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - பியந்தைக்காந்தாரம். (உ - ம. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

நேரியனாகுமல்லனொருபாலுமேனியரியான்முனாயவொளியா
னீரியல்காலுமாகிநிறைவானுமாகியுறுதீயுமாயநிமல
னூரியல்பிச்சைபேணியுலகங்களேத்தநல்கண்டுபண்டுசுடலை
நாரியொர்பாகமாகநடமாடவல்லநறையூரினம்பனவனே. (க)

இடமயிலன்னசாயன்மடமங்கைதன்கையெதிர்நாணிபூணவரையிற்
கடுமயிலம்புகோத்துவெயில்செற்றுகந்தவமரர்க்களித்ததலைவன்
மடமயிலூர்திதாதையெனநின்றுதொண்டர்மனநின்றமைந்தன்மருவு
நடமயிலாலநீடுகுயில்கூவுசோலைநறையூரினம்பனவனே. (உ)

சூடகமுன்கைமங்கையொருபாகமாகவருள்காரணங்கள்வருவா
னீடகமானநோக்கியிடுபிச்சைகொண்டுபடுபிச்சனென்றுபரவத்
தோடகமாயொர்காதுமொருகாதிலங்குகுழைதாழவேழவுரிய
னாடகமாடவாடிமடவார்கள்பாடுநறையூரினம்பனவனே. (ங)

சாயனன்மாதொர்பாகன்விதியாயசோதிகதியாகநின்றகடவு
ளாயகமென்னுள்வந்தவருளாயசெல்வனிருளாயகண்டனவனித்
தாயெனநின்றுகந்ததலைவன்விரும்புமலையின்கண்வந்துதொழுவார்
நாயகனென்றிறைஞ்சிமறையோர்கள்பேணுநறையூரினம்பனவனே. (ச)

நெதிபடுமெய்யெமையணிறைசோலைசுற்றிநிகழம்பலத்தினடுவே
யதிர்படவாடவல்லவமரர்க்கொருத்தனெமர்சுற்றமாயவிறைவன்
மதிபடுசென்னிமன்னுசடைதாழவந்துவிடையேறியிலபலிகொள்வா
னதிபடவுந்திவந்துவயலவாளைபாயுநறையூரினம்பனவனே. (௫)

கணிகையொர்சென்னிமன்னுமதுவன்னி கொன்றைமலர்துன்றுசெஞ்ச
டையினன், பணிகையின்முன்னிலங்கவருவேடமன்னுபலவாகிநின்றப
ரம, னணுகியவேதவோசையகலங்கமாறின்பொருளானவாதியருளா, ன
ணுகியதொண்டர்கூடிமலர்தூவியேத்துநறையூரினம்பனவனே. (௬)

ஒளிதருகின்றமேனியுருவெங்குமங்கமவையாரவாடலரவ
மிளிர்தருகையிலங்கவனலேந்தியாடும்விகிர்தனவிடங்கொண்மிடறன்
றுளிதருசோலையாலைதொழின்மேவவேதமெழிலாரவென்றியருளு
நளிர்மதிசேருமாடமடவார்களாருநறையூரினம்பனவனே. (௭)

அடலெருதேறுகந்தவதிருங்கழற்களதிருஞ்சிலம்பொடிசையக
கடவிடைநஞ்சமுண்டகனிவுற்றகண்டன்முனிவுற்றிலங்கையரைய
னுடலொடுதோளனைத்துமுடிபத்திறுத்துமிசைகேட்டிரங்கியொருவா
ணடலைகடூர்த்துநல்கிநமையாளவல்லநறையூரினம்பனவனே. (௮)

குலமலர்மேவினானுமிகுமாயனாலுமெதிர்கூடிநேடிநினைவு
றிலபலவெய்தொணாமையெரியாயுயர்ந்தபெரியானிலங்குசடையன்
சிலபலதொண்டர்நின்றுபெருமைகள்பேசவருமைத்திகழ்ந்தபொழிலி
னலமலர்சிந்தவாசமணநாறுவீதிநறையூரினம்பனவனே. (௯)

துவருறுகின்றவாடையுடல்போர்த்துழன்றவவர்தாமுமல்லசமணுங்
கவருறுசிந்தையாளருரைநீத்துகந்தபெருமானெபிறங்குசடையன்
றவமலிபத்தர்சித்தர்மறையாளர்பேணமுறைமாதர்பாடிமருவு
நவமணிதுன்றுகோயிலொளிபொன்செயமாடநறையூரினம்பனவனே

கானலுலாவியோதமெதிர்மல்குகாழிமிகுபந்தன்முந்தியுணர
ஞானமுலாவுசிந்தையடிவைத்துகந்தநறையூரினம்பனவனை
யீனமிலாதவண்ணமிசையாலுரைத்ததமிழ்மாலைபத்துநினைவார்
வானநிலாவவல்லர்நிலமெங்குநின்றவழிபாடுசெய்யுமிகவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பண் - குறிஞ்சி. (எ-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நீரும்மலருந்நிலவுஞ்சடைமே
லூருமரவம்முடையானிடமாம்
வாரும்மருவிமணிபொன்கொழித்துச்
சேருந்நறையூர்ச்சித்தீச்சரமே. (௧)

அளைப்பையரவேரிடையாளஞ்சத்
துளைக்கைக்கரித்தோலுரித்தானிடமாம்
வளைக்கைம்மடவார்மடுவிற்றடநீர்
திளைக்குந்நறையூர்ச்சித்தீச்சரமே. (௨)

இகழுந்தகையோ ரெயின்மூன்றெரித்த
பகழியொடுவில் லுடையோன்பதிதான்
முகிழ்மென்முலையார் முகமேகமலந்
திகழுந்நறையூர்ச் சித்தீச்சரமே. (௩)

மறக்கொளரக்கன் வரைதோள்வரையா
லிறகொள்விரற்கோ னிருக்குமிடமா
நறக்கொள்கமலந் நனிபள்ளியெழத்
திறக்குந்நறையூர்ச் சித்தீச்சரமே. (௪)

முழுநீறணிமேனியனமொய்குழலா
ரெழுநீர்மைகொள்வா னமருமிடமாங்
கழுநீர்கமழக் கயல்சேலுகளுஞ்
செழுநீர்நறையூர்ச் சித்தீச்சரமே (௫)

ஊனாருடைவெண் டலையுண்பலிகொண்
டானாரடலே றமர்வானிடமாம்
வானார்மதியம் பதிவண்பொழில்வாய்த்
தேனார்நறையூர்ச் சித்தீச்சரமே (௬)

காரூர்கடலில் விடமுண்டருள்செய்
நீரூர்சடையன் னிலவுமிடமாம்
வாரூர்முலையார் மருவும்மறுகிற்
றேரூர்நறையூர்ச் சித்தீச்சரமே. (௭)

கரியின்னுரியுங் கலைமானுரியு
மெரியும்மழுவு முடையானிடமாம்
புரியும்மறையோர் நிறைசொற்பொருள்கட்
டெரியுந்நறையூர்ச் சித்தீச்சரமே. (௮)

பேணாமுனிவன் பெருவேள்வியெலா
மாணாமைசெய்தான் மருவுமிடமாம்
பாணார்குழலும் முழவும்விழவிற்
சேணார்நறையூர்ச் சித்தீச்சரமே. (௯)

குறியில்வழுவாக் கொடுங்கூற்றுதைத்த
வெறியும்மழுவாட் படையானிடமா
நெறியில்வழுவா நியமத்தவர்கள்
செறியுந்நறையூர்ச் சித்தீச்சரமே. (௧௦)

போரார்புரமெய் புனிதன்னமருஞ்
சீரார்நறையூர்ச் சித்தீச்சரத்தை
யாரூரன்சொல்லிவை வல்லவர்க
ளேராரிமையோ ருலகெய்துவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருநறையூர்ச்சித்தீச்சரத்திருப்பதிகம் - ௪.

---

சுவாமி - சித்தநாதர்.
தேவி - அழகம்மை.

---

ஆ திருப்பதிகம் - ௧௫௮.

## ௯௯. அரிசிற்கரைப்புத்தூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம். (௨-ம், திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மின்னுஞ்சடைமேலிளவெண்டிங்களவிளங்கவே
துன்னுங்கடனஞ்சிருடோய்கண்டர்தொன்மூதூ
ரன்னம்படியும்புனலாரரிசிலலைகொண்டு
பொன்னும்மணியும்பொருதென்கரைமேற்புத்தூரே. (௧)

மேவாவசுரர்மேவெயில்வேவமலைவில்லா
லேவாரெரிவெங்கணையாலெய்தானெய்துமூ
ராவானாதனாமமோதிநாடோறும்
பூவானீராற்பூசுரர்போற்றும்புத்தூரே. (௨)

பல்லார்தலைசேர்மாலைசூடிப்பாம்பும்பூண்
டெல்லாவிடமும்வெண்ணீறணிந்தோரேறேறி
கல்லார்மங்கைபங்கரேனுங்காணுங்காற்
பொல்லாரல்லரழகியர்புத்தூர்ப்புனிதரே. (௩)

வரியேர்வளையாளரிவையஞ்சவருகின்ற
கரியேருரிவைபோர்த்தகடவுள்கருதுமூ
ரரியேர்கழனிப்பழனஞ்சூழ்ந்தங்கழகாய
பொரியேர்புன்குசொரிபூஞ்சோலைப்புத்தூரே. (௪)

என்போடரவமேனத்தெயிற்றோடெழிலாமை
மின்போற்புரிநூல்விரவிப்பூண்டவரைமார்ப
ரன்போடுருகுமடியார்க்கன்பரமருமூர்
பொன்போதலர்கோங்கோங்குசோலைப்புத்தூரே. (௫)

வள்ளிமுலைதோய்குமரன்றாதைவான்றோயும்
வெள்ளிமலைபோல்விடையொன்றுடையான்மேவுமூர்
தெள்ளிவருநீரரிசிற்றென்பாற்சிறைவண்டும்
புள்ளுமலிபூம்பொய்கைசூழ்ந்தபுத்தூரே. (௬)

நிலந்தணீரோடனல்காலவிசும்பினீர்மையான்
சிலந்திசெங்கட்சோழனாகச்செய்தானூ
ரலந்தவடியானற்றைக்கன்றோர்காசெய்திப்
புலர்ந்தகாலைமாலைபோற்றும்புத்தூரே. (௭)

இத்தேரேகவிம்மலைபேர்ப்பனென்றேந்தும்
பத்தோர்வாயான்வரைக்கீழலறப்பாதந்தான்
வைத்தாரருள்செய்வரதன்மருவுமூரான
புத்தூர்காணப்புகுவார்வினைகள்போகுமே. (௮)

முள்ளார்கமலத்தயன்மான்முடியோடடிதேட
வொள்ளாரெரியாயுணர்தற்கரியானூர்போலுங்
கள்ளார்நெய்தல்கழுநீராம்பல்கமலங்கள்
புள்ளார்பொய்கைப்பூப்பலதோன்றும்புத்தூரே. (௯)

கையார்சோறுகவர்குண்டர்களுந்துவருண்ட
மெய்யார்போர்வைமண்டையர்சொல்லுமெய்யல்ல
பொய்யாமொழியாலந்தணர்போற்றும்புத்தூரி
லையாவென்பார்க்கையுறவின்றியழகாமே. (௧0)

நறவங்கமழ்பூங்காழிஞானசம்பந்தன்
பொறிகொளரவம்பூண்டானைப்புத்தூர்மேய
செறிவண்டமிழ்செய்மாலைசெப்பவல்லார்க
ளறவன்கழல்சேர்ந்தன்போடின்பமடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

முத்தூரும்புனன்மொய்யரிசிற்கரைப்
புத்தூரன்னடிபோற்றியென்பாரெலாம்
பொய்த்தூரும்புலனைந்தொடும்புல்கிய
மைத்தூரும்வினைமாற்றவும்வல்லரே. (௧)

பிறைக்கணிச்சடையெம்பெருமானென்று
கறைக்கணித்தவனண்டவணக்கத்தா
யுறக்கணித்துருகாயனைத்தார்களைப்
புறக்கணித்திடும்புத்தூர்ப்புனிதரே (௨)

அரிசிலின்கரைமேலணியார்தரு
புரிசைநந்திருப்புத்தூர்ப்புனிதனைப்
பரிசொடும்பரவிப்பணிவார்க்கெலாந்
துரிசினன்னெறிதோன்றிடுங்காண்மினே. (௩)

வேதனைமறிகுவீணையின்மேவிய
கீதனைக்கிளருந்நறுங்கொன்றையம்
போதனைப்புனல்சூழ்ந்தபுத்தூரனை
நாதனைந்நினைந்தென்மனநையுமே. (௪)

அருப்புப்போன்முலையாரல்லல்வாழ்க்கைமேல்
விருப்புச்சேர்நிலைவிட்டுநல்லிட்டமாய்த்
திருப்புத்தூரனைச்சிந்தைசெய்ச்செயக்
கருப்புச்சாற்றிலுமண்ணிக்குங்காண்மினே. (ரு)

பாம்பொடும்மதியும்படர்புன்சடைப்
பூம்புனலும்பொதிந்தபுத்தூருளா
னும்பணிந்தடிபோற்றிடநாடொறுஞ்
சாம்பலென்புதமக்கணியாகுமே. (௬)

கனலங்கைதனிலேந்திவெங்காட்டிடை
யனலங்கெய்திநின்றாடுவர்பாடுவர்
பினலஞ்செஞ்சடைமேற்பிறையுந்தரு
புனலுஞ்சூடுவர்போலும்புத்தூரரே. (எ)

காற்றினுங்கடிதாகிநடப்பதோ
ரேற்றினும்மிசைந்தேறுவரென்பொடு
நீற்றினையணிவர்நினைவாய்த்தமைப்
போற்றியென்பவர்க்கன்பர்புத்தூரரே. (அ)

முன்னுமுப்புரஞ்செற்றனராயினு
மன்னமொப்பரலந்தடைந்தார்கமெலா
மின்னுமொப்பர்விரிசடைமேனிசெம்
பொன்னுமொப்பர்புத்தூரெம்புனிதரே. (௯)

செருத்தனுறறனதேர்செலவுய்த்திடுங்
கருத்தனைக்கயிலையெடுததானுடல்
பருத்ததோள்கெடப்பாதத்தொருவிரல்
பொருத்தினாபொழிலார்ந்தபுததூரரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - இந்தளம். (எ-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மலைக்கும்மகளஞ்சமதகரியை
யுரித்தீரெரிததீர்வருமுப்புரங்கள்
சிலைகக்குங்கொலைச்சேவுகந்தேற்றொழியீர்
சில்பலிக்கில்கடொறுஞ்செலவொழியீர்
கலைக்கொம்புங்கரிமருப்பும்மிடறிக
கலவம்மயிற்பீலியுங்காரகிலு
மலைக்கும்புனல்சேரரிசிற்றென்கரை
யழகார்திருப்புத்தூரழகனீரே. (க)

அருமலரோன்சிரமொன்றறுத்தீர்
செறுத்தீரழற்சூலத்திலந்தகனைத்
திருமகள்கோனெடுமால்பலநாள்
சிறப்பாகியபூசனைசெய்பொழுதி
லொருமலராயிரத்திற்குறைவா
நிறைவாகவொர்கண்மலர்சூட்டலுமே
பொருவிறலாழிபுரிந்தளித்தீர்
பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே. (உ)

தரிக்குந்தரைநீர்தழல்காற்றந்தரஞ்
சந்திரன்சவிதாவியமானனுனீர்

சரிக்கும்பலிக்குத்தலையங்கையேந்தித்
　　தையலார்பெய்யக்கொள்வதுதக்கதன்றான்
முரிக்குந்தளிர்ச்சந்தனத்தோடுவேயு
　　முழங்குந்திரைகைகளால்வாரிமோதி
யரிக்கும்புனலசேரரிசிற்றென்கரை
　　யழகார்திருப்புத்தூரழகனீரே. (௩)

கொடியுடைமும்மதில்வெந்தழியக
　　குன்றவில்லாணியிற்கோலொன்றினா
லிடிபடவெய்தெரிதீரிமைக்கும்
　　மளவிலுமக்காரெதிரெம்பெருமான்
கடிபடுபூங்கணையாயகருப்புச
　　சிலைக்காமனைவேவக்கடைக்கண்ணினாற
பொடிபடநோக்கியதென்னைகொலோ
　　பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே (௪)

வணங்கித்தொழுவாரவர்மாலபிரமன்
　　மறறும்வானவாதானவர்மாமுனிவ
ருணங்கற்றலையிற்பலிகொண்டலென்னே
　　யுலகங்ளெலாமுடையீருரையீ
ரிணங்கிக்கயலிளஞ்சேலிளவாளைபாய
　　வினக்கெண்டைதுள்ளக்கண்டிருந்தவன்ன
மணங்கிக்குணங்கொளரிசிற்றென்கரை
　　யழகார்திருப்புத்தூரழகனீரே. (௫)

அகத்தடிமைசெய்யுமந்தணன்றா
　　னரிசிற்புனல்கொண்டுவந்தாட்டுகின்றான்
மிகத்தளர்வெய்திக்குடத்தையுநமமுடி
　　மேல்விழுத்திட்டுநடுங்குதலும்
வகுத்தவனுக்குநித்தற்படியும
　　வருமென்றொருகாசினைநின்றநன்றிப்
*புகழ்த்துணைகைப்புகச்செய்துகந்தீர்
　　பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே. (௬)

பழிக்கும்பெருந்தக்கனெச்சம்மழியப்
　　பகலோன்முதலாப்பலதேவரையுந்
தெழித்திட்டவரங்கஞ்சிதைத்தருளுஞ்
　　செய்கையென்னைகொலோமைகொள்செம்மிடற்றீர்
விழிக்குந்தழைப்பீலியொடேலமுந்தி
　　விளங்கும்மணிமுத்தொடுபொன்வரன்றி
யழிக்கும்புனலசேரரிசிற்றென்கரை
　　யழகார்திருப்புத்தூரழகனீரே. (௭)

பறைக்கண்ணெடும்பேய்க்கணம்பாடல்செய்யக்
　　குறட்பாரிடங்கள்பறைதாமுழக்கப்

---

* புகழ்த்துணை நாயனாரைச்சிறப்பித்துப்பாடியது.

பிறைக்கொள்சடைதாழப்பெயர்ந்துநட்டம்
பெருங்காடரங்காகநின்றாடலென்னே
கறைக்கொண்மணிகண்டமுந்திண்டோள்களுங்
கரங்கள்சிரந்தன்னிலுங்கச்சுமாகப்
பொறிக்கொளரவம்புனைந்தீர்பலவும்
பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே. (அ)

மழைக்கண்மடவாளையோர்பாகமவைத்தீர்
வளர்புன்சடைக்கங்கையைவைத்துகந்தீர்
முழைகொள்ளரவோடென்பணிகலனா
முழுநீறுமெய்பூசுதலென்னைகொலோ
கழைக்கொள்கரும்புங்கதலிக்கனியுங்
கமுகின்பழுக்காயுங்கவர்ந்துகொண்டிட்
டழைக்கும்புனலரிசிற்றென்கரை
யழகார்திருப்புத்தூரழகனீரே. (௯)

கடிக்கும்மரவான்மலையாலமரர்
கடலைக்கடையவெழுகாளகூட
மொடிக்கும்மூலகங்களையென்றதனை
யுமக்கேயமுதாகவுண்டதுமிழ்
ரிடிக்கும்மழைவீழ்த்திழுத்திட்டருவி
யிருபாலுமோடியிரைக்குந்திரைகைகை
யடிக்கும்புனல்சேரரிசிற்றென்கரை
யழகார்திருப்புத்தூரழகனீரே. (௧௦)

காரூர்மழைபெய்துபொழியருவிக
கழையோடகிலுந்திட்டிருகரையும்
போரூர்புனல்சேரரிசிற்றென்கரைப்
பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதர்தம்மை
யாரூரனருந்தமிழைந்தினொடைந்
தழகாலுரைப்பார்களுங்கேட்பவருஞ்
சீரூர்தருதேவர்கணங்களொடு
மிணங்கிச்சிவலோகமதெய்துவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

அரிசிற்கரைப்புத்தூர்த்திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - படிக்காசுவைத்தபரமர்
தேவி - அழகம்மை.

---

ஆ திருப்பதிகம் - ௧௭௧.

---

# ௬௭. திருச்சிவபுரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிராகம்.

பண் - நட்டபாடை. (௧. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

புவம்வளிகனல்புனல்புவிகலையுரைமறைதிரிகுணமமர்நெறி
திவமலிதருசுரர்முதலியர்திகழ்தருமுயிரவையவைதம
பவமலிதொழிலதுநினைவொடுபதுமநன்மலரதுமருவிய
சிவனதுசிவபுரநினைபவர்செழுநிலனினினிலைபெறுவரே. (௧)

மலைபலவளர்தருபுவியிடைமறைதருவழிமலிமனிதர்க
ணிலைமலிசுரர்முதலுலகுகணிலைபெறுவகைநினைவொடுமிகு
மலைகடனெடுவறிதுயிலமரரியுருவியல்பரனுறைபதி
சிலைமலிமதில்சிவபுரநினைபவர்திருமகளொடுதிகழ்வரே. (௨)

பழுதிலகடல்புடைதழுவியபடிமுதலியவுலகுகண்மலி
குழுவியசுரர்பிறமனிதர்கள்குலமலிதருமுயிரவையவை
முழுவதுமழிவகைநினைவொடுமுதலுருவியல்பரனுறைபதி
செழுமணியணிசிவபுரநகர்தொழுமவர்புகழ்மிகுமுலகிலே. (௩)

நறைமலிதருமளறொடுமுகைநகுமலர்புகைமிகுவளரொளி
நிறைபுனல்கொடுதனைநினைவொடுநியதமுமவழிபடுமடியவர்
குறைவிலபதமணைதரவருள்குணமுடையிறையுறைவனபதி
சிறைபுனலமர்சிவபுரமதுநினைபவர்செயமகடலைவரே. (௪)

சினமலியறுபகைமிகுபொறிசிதைதருவகைவளிநிறுவிய
மனனுணர்வொடுமலர்மிசையெழுதருபொருணியதமுமுணர்பவர்
தனதெழிலுருவதுகொடுவடைதகுபரனுறைவதுநகர்மதில்
கனமருவியசிவபுரநினைபவர்கலைமகடரநிகழ்வரே. (௫)

சுருதிகள்பலநலமுதல்கலைதுகளறுவகைபயில்வொடுமிகு
வுருவியலுலகவைபுகழ்தரவழியொழுகுமெய்யுறுபொறியொழி
யருதவமுயல்பவர்தனதடியடைவகைநினையரனுறைபதி
திருவளர்சிவபுரநினைபவர்திகழ்குலனிலனிடைநிகழுமே. (௬)

கதமிகுகருவுருவொடுவுகிரிடவடவரைகணகணவென
மதமிகுநெடுமுகனமர்வளைமதிதிகழெயிறதனுதிமிசை
யிதமமர்புவியதுநிறுவியவெழிலரிவழிபடவருள்செய்த
பதமுடையவனமர்சிவபுரநினைபவர்நிலவுவர்படியிலே. (௭)

அசைவுறுதவமுயல்வினிலயனருளினில்வருவலிகொடுசிவ
னிசைகயிலையையெழுதருவகையிருபதுகரமவைநிறுவிய
நிசிசரன்முடியுடைதரவொருவிரல்பணிகொளுமவனுறைபதி
திசைமலிசிவபுரநினைபவர்செழுநிலனினினிகழ்வுடையரே. (௮)

அடன்மலிபடையரியயனொடுமறிவரியதொரழன்மலிதரு
சுடருருவொடுநிகழ்தரவவர்வெருவொடுதுதியதுசெயவெதிர்
விடமலிகளநுதலமர்கணதுடையுருவெளிபடுமவனகர்
திடமலிபொழிலெழிலசிவபுரநினைபவர்வழிபுவிதிகழுமே. (கூ)

குணமறிவுகணிலையிலபொருளுரைமருவியபொருள்களுமில
திணமெனுமவரொடுசெதுமதிமிகுசமணருமலிதமதுகை
யுணலுடையவருணர்வருபரனுறைதருபதியுலகினினல
கணமருவியசிவபுரநினைபவரெழிலுருவுடையவர்களே (க0)

திகழ்சிவபுரநகர்மருவியசிவனடியிணைபணிசிரபுர
நகரிறைதமிழ்விரகனதுரைநலமலியொருபதுநவிலபவர்
நிகழ்குலநிலநிறைதிருவுருநிகரிலகொடைமிகுசயமகள்
புகழ்புவிவளர்வழியடிமையின்மிகைபுணர்தரநலமிகுவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - வியாழகுறிஞ்சி. (கூ திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

இன்குரலிசைகெழுமியாழ்முரலத்
தன்கரமருவியசதுரனகர்
பொன்கரைபொருபழங்காவிரியின்
றென்கரைமருவியசிவபுரமே (க)

அன்றடற்காலனைப்பாலனுக்காயப
பொன்றிடவுதைசெய்தபுனிதனகா
வென்றிகொளெயிறறுவெண்பன்றிமுன்னாட
சென்றடிவீழ்தருசிவபுரமே. (உ)

மலைமகணமறுகிடமதகரியைக்
கொலைமல்கவுரிசெயதகுழகனக
ரலைமல்குமரிசிலினதனயலே
சிலைமலகுமதிலணிசிவபுரமே. (ங)

மண்புனலனலொடுமாருதமும்
விண்புனைமருவியவிகிர்தனகர்
பண்புனைகுரலவழிவண்டுகிண்டிச
செண்பகமலர்பொழிறசிவபுரமே. (ச)

வீறுநன்குடையவண்மேனிபாகங்
கூறுநன்குடையவன்குளிர்நகர்தா
னாறுநன்குரவிரிவண்டுகிண்டித்
தேறலுண்டெழுதருசிவபுரமே. (ரு)

மாறெதிர்வருதிரிபுரமெரித்து
நீறதுவாக்கியநிமலனகர்
நாறுடைநடுபவருழவரொடுஞ்
சேறுடைவயலணிசிவபுரமே. (சா)

ஆவிலைந்தமர்ந்தவனரிவையொடு
மேவிநன்கிருந்ததொர்வியனகர்தான்
பூவிலவண்டமர்தருபொய்கையன்னச்
சேவறன்பெடைபுலகுசிவபுரமே. (௭)

எழின்மலையெடுத்தவல்லிராவணன்றன்
முழுவலியடககியமுதலவனகர்
விழவினிலெடுததவெண்கொடிமிடைந்து
செழுமுகிலடுக்கும்வணசிவபுரமே. (௮)

சங்களவியகையன்சதுமுகனு
மங்களவறிவரியவனகர்தான்
கங்குலும்பறவைகள்கமுகுதொறுஞ்
செங்கனிநுகாதருசிவபுரமே. (௯)

மண்டையிறகுண்டிகைமாசுதரு
மிண்டரைவிலக்கியவிமலனகா
பண்டமர்தருபழங்காவிரியின்
றெண்டிரைபொருதெழுசிவபுரமே. (௧௦)

சிவனுறைதருசிவபுரநகரைக்
கவுணியர்குலபதிகாழியாகோன
றவமலகுதமிழிவைசொலலவலலார்
நவமொடுசிவகதிநண்ணுவரே. (௧௧)

திருசசிறறம்பலம

---

## திருவிராகம்.

பண் - வியாழககுறிஞசி. (௩ திருமுறை.)

திருசசிறறமபலம்.

கலைமலியகலலகுலரிவைதனுருவினன்
முலைமலிதருதிருவுருவமதுடையவன்
சிலைமலிமதிலபொதிசிவபுரநகர்தொழ
விலைநலிவினையிருமையுமிடர்கெடுமே. (௧)

படரொளிசடையினன்விடையினன்மதிலவை
சுடரெரிகொளுவியசிவனவனுறைபதி
திடலிடுபுனல்வயல்சிவபுரமடையநம்
மிடர்கெடுமுயர்கதிபெறுவதுதிடனே. (௨)

வரைதிரிதரவரவகடழலெழவரு
நுரைதருகடலவிடநுகர்பவனெழிறிகழ்
திரைபொருபுனலரிசிலதடைசிவபுர
முரைதருமடியவருயர்கதியினரே. (௩)

துணிவுடையவர்சுடுபொடியினருடலடு
பிணியடைவிலர்பிறவியுமறவிசிறுவர்
தணிவுடையவர்பயில்சிவபுரமருவிய
மணிமிடறனதடியிணைதொழுமவரே. (௪)

மறையவன்மதியவன்மலையவனிலையவ
னிறையவனுமையவண்மகிழ்நடநவில்பவ
னிறையவனிமையவர்பணிகொடுசிவபுர
முறைவெனவுடையவனெமையுடையவனே. (௫)

முதிர்சடையிளமதிநதிபுனல்பதிவுசெய்
ததிர்கழலொலிசெயவருநட நவில்வோ
னெதிர்பவர்புரமெய்தவினையிலியணைபதி
சதிர்பெறுமுளமுடையவர்சிவபுரமே. (௬)

வடிவுடை மலைமகள்சலமகளுடனமர்
பொடிபடுமுழையதள்பொலிதிருவுருவினன்
செடிபடுபலிதிரிசிவனுறைசிவபுர
மடைதருமடியவருவினையிலரே. (௭)

கரமிருபதுமுடியொருபதுமுடையவ
னுரநெரிதரவரையடர்வுசெய்தவனுறை
பரனெனவடியவர்பணிதருசிவபுர
நகரதுபுகுதனம்முயர்கதியதுவே. (௮)

அன்றியலுருவுகொளரியயனெனுமவர்
சென்றளவிடலரியவனுறைசிவபுர
மென்றிருபொழுதுமுன்வழிபடுமவாதுய
ரொன்றிலர்புகழொடுமுடையரிவ்வுலகே. (௯)

புத்தரொடமணர்களறவுரைபுறவுரை
வித்தகமொழிகிலவிடையுடையடிகட
மித்தவமுயலவுறிலிறைவனசிவபுர
மெய்த்தகவழிபடல்விழுமியகுணமே. (௰)

புந்தியர்மறைநவில்புகலிமன்ஞானசம்
பந்தனதமிழ்கொடுசிவபுரநகருறை
யெந்தையையுரைசெய்தவிசைமொழிபவாவினை
சிந்திமுனுறவுயர்கதிபெறுவர்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வானவன்காண்வானவர்க்குமேலானான்காண்
வடமொழியுந்தென்றமிழுமறைகணான்கு
மானவன்காணனைந்துமாடினான்கா
ணையன்காண்கையிலனலேந்தியாடுங்
கானவன்காண்கானவனுக்கருள்செய்தான்காண்
கருதுவாரிதயத்துக்கமலத்தூறுந்
தேனவன்காண்சென்றடையாச்செல்வன்றான்காண்
சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செல்வன்றானே. (௧)

நக்கன்காணக்கரவமரையிலார்த்த
நாதன்காண்பூதகணமாடவாடுஞ்
சொக்கன்காண்கொக்கிறகுசூடினான்காண்
டுடியிடையாடுணைமுலைக்குச்சேர்வதாகும்
பொக்கன்காண்பொககணத்தவெண்ணீற்றான்காண்
புவனங்கண்மூன்றினுககும்பொருவாய்நின்ற
திககன்காணசெக்கரதுதிகழுமேனிச்
சிவனவன்காண்சிவபுரதடுதஞ்செல்வன்றானே. (உ)

வம்பின்மலர்க்குழலுமையாண்மணவாளன்காண்
மலரவன்மாலகாண்பரியமைந்தன்றான்காண்
கம்பமதககரிபிளிறவுரிசெயதோன்காண்
கடனஞ்சமுண்டிருண்டகண்டத்தோன்கா
ணம்பர்நகர்ப்பெருங்கோயிலமர்கின்றான்கா
ணயவந்தியுள்ளான்காணையாறன்காண்
செம்பொன்னைத்திகழ்கின்றவுருவத்தான்காண்
சிவனவன்காணசிவபுரத்தெஞ்செலவனறானே. (௩)

பித்தன்காண்டக்கன்றன்வேளவியெலலாம்
பீடழியச்சாடியருள்கள்செய்த
முத்தன்காண்முத்தீயுமாயினான்காண்
முனிவர்ககும்வானவாககுமுதலாயமிக்க
வத்தன்காண்புததூரிலமாந்தான்றான்கா
ணரிசிறபெருந்துறையேயாட்சிகொண்ட
சித்தன்காண்சிததீச்சரத்தான்றான்காண்
சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செலவன்றானே. (௪)

தூயவன்காணீறுதுதைந்தமேனித்
துளஙகும்பளிங்கனையசோதியான்காண்
டீயவன்காண்டீயவுணர்புரஞ்செற்றான்காண்
சிறுமான்கொள்செங்கையெம்பெருமானறான்கா
ணுயவன்காணூரிலம்மான்றான்கா
ணடியார்கடகாரமுதமாயினான்காண்
சேயவன்காணசேமநெறியாயினான்காண்
சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செலவன்றானே. (௫)

பாரவன்காண்பாரதனிற்பயிரானான்காண்
பயிர்வளர்ககுந்துளியவன்காண்டுளியினின்ற
நீரவன்காணீர்சடைமேனிகழ்வித்தான்கா
ணிலவேந்தர்பரிசாகநினைவுற்றோங்கும்
பேரவன்காண்பிறையெயிற்றுவெள்ளைப்பன்றி
பிரியாதுபலநாளும்வழிபட்டேத்துஞ்
சீரவன்காண்சீருடையதேவர்க்கெல்லாஞ்
சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செல்வன்றானே. (௬)

வெய்யவன்காண்வெய்யகனலேந்தினான்காண்
வியன்கெடிலவீரட்டமேவினான்காண்

மெய்யவன்காண்பொய்யர்மனம்விரவாதான்காண்
　　வீணையோடிசைந்துமிகுபாடன்மிக்க
கையவன்காண்கையின்மழுவேந்தினான்காண்
　　காமரங்கம்பொடிவீழ்த்தகண்ணினான்காண்
செய்யவன்காண்செய்யவளைமாலுக்கீந்த
　　சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செலவன்றானே. (எ,அ,௬)

கலையாருநூலங்கமாயினான்காண்
　　கலைபயிலுங்கருத்தன்காணடிருத்தமாகி
மலையாகிமறிகடலேழ்சூழ்ந்துநின்ற
　　மண்ணாகிவிண்ணாகிநின்றான்றான்காண்
டலையாயமலையெடுத்தவகவிலோனைத்
　　தகர்ந்துவிழவொருவிரலாற்சாதித்தாண்ட
சிலையாருமடமகளோர்கூறன்றான்காண்
　　சிவனவன்காண்சிவபுரத்தெருசெலவன்றானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சிவபுரத் திருப்பதிகம் - ௪.

---

சுவாமி - பிரமபுரிநாதர்.
தேவி - பெரியநாயகி

---

ஆ. திருப்பதிகம் - ௧௭௫.

---

# ௬அ. திருக்கலயநல்லூர்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்

---

பண் - தக்கராகம். (எ - ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

குரும்பைமுலைமலர்க்குழலிகொண்டதவங்கண்டு
　　குறிப்பினொடுஞ்சென்றவன்குணத்தினைநன்கறிந்து
விரும்பும்வரங்கொடுத்தவளைவேட்டருளிச்செய்த
　　விண்ணவர்கோன்கண்ணுதலோன்மேவியவூர்வினவி
லரும்பருகேசுரும்பருவவறுபதம்பண்பாட
　　வணிமயில்கணடமாடுமணிபொழில்சூழயலின்
கரும்பருகேகருங்குவளைகண்வளருங்கழனிக்
　　கமலங்கண்முகமலருங்கலயநல்லூர்காணே. (௧)

செருமேவுசலந்தரனைப்பிளந்தசுடராழி
　　செங்கண்மலர்ப்பங்கயமாச்சிறந்தானுக்கருளி
யிருண்மேவுமந்தகன்மேற்றிரிசூலம்பாய்ச்சி
　　யிந்திரனைத்தோண்முரித்தவிறையவனூர்வினவிற்

பெருமேதைமறையொலியும்பேரிமுழவொலியும்
பிள்ளையினந்துள்ளிவிளையாட்டொலியும்பெருகக்
கருமேதிபுனன்மண்டக்கயன்மண்டக்கமலங்
களிவண்டின்கணமிரியுங்கலயநல்லூர்காணே. (௨)

இண்டைமலர்கொண்டுமணலிலிங்கமதியற்றி
யினத்தாவின்பாலாட்டவிடறியதாதையைத்தா
டுண்டமிடுசண்டியடியண்டர்தொழுதேத்தத்
தொடர்ந்தவனைப்பணிகொண்டவிடங்கனதூர்வினவின்
மண்டபமுங்கோபுரமுமாளிகைசூளிகையு
மறையொலியும்விழவொலியுமறுகுநிறைவெய்திக
கண்டவர்கண்மனங்கவரும்புண்டரிகப்பொய்கைக்
காரிகையாாகுடைந்தாடுங்கலயநல்லூர்காணே. (௩)

மலைமடந்தைவிளையாடிவளையாடுகரததான்
மகிழ்ந்தவன்கண்புதைத்தலுமேவல்லிருளாயெல்லா
வுலகுடன்றான்மூடவிருளோடுமவகைநெற்றி
யொற்றைககண்படைத்துகந்தவுத்தமனூர்வினவி
லலையடைந்தபுனலபெருகியானைமருப்பிடறி
யகிலொடுசந்துந்திவருமரிசிலின்றென்கரைமேற்
கலையடைந்துகலிகடியந்தணரோமப்புகையாற்
கணமுகிலபோன்றணிகிளருங்கலயநல்லூர்காணே. (௪)

நிற்பானுங்கமலத்திலிருப்பானுமுதலா
நிறைந்தமரர்குறைந்திரப்பநினைந்தருளியவர்க்காய
வெற்பார்விலலரவுநாணெரியம்பாலவிரவார்
புரமூன்றுமெரிவித்தவிகிர்தனூர்வினவிற்
சொறபாலபொருட்பாலசுருதியொருநான்குந்
தோத்திரமும்பலசொலலித்துதித்திறைவன்றிறத்தே
கற்பாருங்கேட்பாருமாயெங்குநன்கார்
கலைபயிலந்தணாவாழுங்கலயநல்லூர்காணே. (௫)

பெற்றிமையொன்றறியாததககனதுவேள்விப்
பெருந்தேவர்சிரந்தோள்பற்கரங்கண்பீடழியச்
செற்றுமதிககலைசிதையத்திருவிரலாற்றேய்வித்
தருள்பெருகுசிவபெருமான்சேர்தருமூர்வினவிற்
றெற்றுகொடிமுலலையொடுமலலிகைசெண்பகமுந்
திரைபொருதுவருபுனல்சேரரிசிலின்றென்கரைமேற்
கற்றினநன்கரும்பின்முளைகறிகற்கக்கறவை
கமழ்கழுநீர்கவர்கழனிக்கலயநல்லூர்காணே. (௬)

இலங்கையர்கோன்சிரம்பத்தோடிருபதுதிண்டோளு
மிற்றலறவொற்றைவிரலவெற்பதன்மேலூன்றி
நிலங்கிளர்நீர்நெருப்பொடுகாற்றாகாயமாகி
நிற்பனவுநடப்பனவாநின்மலனூர்வினவிற்
பலங்கள்பலதிரையுந்திப்பருமணிபொன்கொழித்துப்
பாதிரிசந்தகிலினொடுகேதகையும்பருங்கிக்

கலங்குபுனலலம்பிவருமரிசிலின்றென்கரைமேற்
கயலுகளும்வயல்புடைசூழ்கலயநல்லூர்காணே. (எ)

மாலயனுங்காண்பரியமாலெரியாய்நிமிர்ந்தோன்
வன்னிமதிசென்னிமிசைவைத்தவன்மொய்த்தெழுந்த
வேலைவிடமுண்டமணிகண்டன்விடையூரும்
விமலனுமையவளோடுமேவியவூர்வினவிற்
சோலைமலிகுயில்கூவக்கோலமயிலாலச்
சுரும்பொடுவண்டிசைமுரலப்பசுங்கிளிசொற்றுதிப்பக்
காலையிலுமாலையிலுங்கடவுளடிபணிந்து
கசிந்தமனத்தவர்பயிலுங்கலயநல்லூர்காணே. (அ)

பொரும்பலமதுடையசுரன்றாரகனைப்பொருது
பொன்றுவித்த*பொன்னினைமுன்படைத்துகந்தபுனிதன்
கரும்புவிலின்மலர்வாளிககாமனுடலவேவக்
கனல்விழித்தகண்ணுதலோன்கருதுமூர்வினவி
லிரும்புனல்வெண்டிரைபெருகியேலமிலவங்க
மிருகரையும்பொருதலைகுமரிசிலின்றென்கரைமேற்
கரும்புனைவெண்முத்தரும்பிப்பொன்மலர்ந்துபவளக
கவின்காட்டுங்கடிபொழில்சூழ்கலயநல்லூர்காணே. (கூ)

தண்கமலப்பொய்கைபுடைசூழ்ந்தழகார்தலத்திற்
றடங்கொள்பெருங்கோயிறனிற்றககவகையாலே
வண்கமலத்தயன்முன்னாள்வழிபாடுசெய்ய
மகிழ்ந்தருளியிருந்தபரன்மருவியவூர்வினவில்
வெண்கவரிகரும்பீலிவேங்கையொடுகோங்கின்
விரைமலரும்விரவுபுனலரிசிலின்றென்கரைமேற்
கண்கமுகின்பூம்பாளைமதுவாசங்கலந்த
கமழ்தென்றலபுகுந்துலவுகலயநல்லூர்காணே. (க௦)

தண்புனலும்வெண்மதியுந்தாங்கியசெஞ்சடையன்
றாமரையோன்றலைகலனுக்காமரமுன்பாடி
யுண்பலிகொண்டுழல்பரமனுறையுமூர்நிறைநீ
ரொழுகுபுனலரிசிலின்றென்கலயநல்லூரதனை
நண்புடையநன்சடையனிசைஞானிசிறுவ
னுவலர்கோனாரூரனுவினயந்துரைசெய்
பண்பயிலும்பத்துமிவைபத்திசெய்துபாட
வல்லவர்களலலலொடுபாவமிலர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - அமிர்தகலாநாதர்
தேவி - அமிர்தவல்லியம்மை.

---

ஆ௲ திருப்பதிகம் - களசு.

---

* "பொருளினை" என்றும்பாடம்.

# சாசு. திருக்கருக்குடி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்.

பண் - காந்தாரபஞ்சமம். (ந-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நனவிலுங்கனவிலுநாளுந்தன்னெளி
நினைவிலுமெனககுவந்தெய்துநின்மலன்
கனைகடல்வையகந்தொழுகருக்குடி
யனலெரியாடுமெம்மடிகள்காண்மினே. (க)

வேதியன்விடையுடைவிமலனென்னலர்
மூதெயிலெரியெழமுனிந்தமுக்கணன்
காதியலகுழையினன்கருக்குடியம
ராதியையடிதொழவல்லலில்லையே. (உ)

மஞ்சுறுபொழில்வளமலிகருககுடி
நஞ்சுறுதிருமிடறுடையநாதனை
ரஞ்சுரும்பார்குழலரிவையஞ்சவே
வெஞ்சுரந்தனிலவிளையாடலென்கொலோ. (ங)

ஊனுடைப்பிறவியையறுக்கவுன்னுவீர்
கானிடையாடலானபயில்கருககுடிக
கோனுயர்கோயிலைவணங்கிவைகலும்
வானவர்தொழுகழலவாழ்த்திவாழ்மினே. (ச)

சூடுவர்சடையிடைககங்கைநங்கையைக
கூடுவருலகிடையையமகொண்டொலி
பாடுவரிசைபறைகொட்டநட்டிரு
ளாடுவர்கருககுடியண்ணலவண்ணமே. (ரு)

இன்புடையாரிசைவீணைபூணரா
வென்புடையாரெழின்மேனிமேலெரி
முன்புடையார்முதலேத்துமன்பருக
கன்புடையார்கருக்குடியெமண்ணலே. (சு)

காலமுஞாயிறுந்தீயுமாயவர்
கோலமுமுடியரவணிந்தகொள்கையர்
சீலமுமுடையவர்திருககருக்குடிச்
சாலவுமினிதவருடையதன்மையே. (எ)

எறிகடல்புடைதழுவிலங்கைமன்னனை
முறிபடவரையிடையடர்த்தமூர்த்தியார்
கறைபடுபொழின்மதிதவழ்கருக்குடி
யறிவொடுதொழுமவராள்வர்நன்மையே. (அ)

பூமனுந்திசைமுகன்றானும்பொற்பமா
வாமனனறிகிலாவண்ணமோங்கெரி
யாமெனவுயர்ந்தவனணிகருகச்குடி
நாமனனினிலவரநினைதனன்மையே. (௯)

சாக்கியர்சமண்படுகையர்பொய்ம்மொழி
யாக்கியவுரைகொளேலருந்திருந்நமக்
காக்கியவரனுறையணிகருக்குடிப்
பூக்கமழ்கோயிலேபுடைபட்டுய்ம்மினே. (௧௦)

கானலில்விரைமலர்விம்முகாழியான்
வானவன்கருக்குடிமைந்தன்றன்னொளி
யானமெய்ஞ்ஞானசம்பந்தன்சொல்லிய
வூனமின்மொழிவலார்கருயருமின்பமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - சற்குணநாதர்.
தேவி - சர்வாலங்கிருதமின்னமமை.

ஆ திருப்பதிகம் - ௬௭௭.

# ௭௦. திருவாஞ்சியம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடுகூவிளம்
பொன்னியன்றசடையிற்பொலிவித்தபுராணனார்
தென்னவென்றுவரிவண்டிசைசெய்திருவாஞ்சிய
மென்னையாளுடையானிடமாகவுகந்ததே. (௧)

காலகாலர்கரிகானிடைமாநடமாடுவா
மேலர்வேலைவிடமுண்டிருள்கின்றமிடற்றினர்
மாலைகோலமதிமாடமன்னுந்திருவாஞ்சிய
ஞாலம்வந்துபணியப்பொலிகோயினயந்ததே. (௨)

மேவிலொன்றர்விரிவுற்றவிரண்டினர்மூன்றுமாய்
நாவினாலருடலஞ்சினராறரேழோசையர்
தேவிலெட்டர்திருவாஞ்சியமேவியசெலவனார்
பாவந்தீர்ப்பர்பழிபோக்குவர்தம்மடியார்கட்கே. (௩)

சூலமேந்திவளர்கையினர்மெய்சுவண்டாகவே
சாலநல்லபொடிப்பூசுவர்பேசுவர்மாமறை
சீலமேவுபுகழாற்பெருகுந்திருவாஞ்சிய
மாலமுண்டவடிகள்ளிடமாகவமர்ந்ததே. (௪)

கையிலங்குமறியேந்துவர்காந்தளம்மெல்விரற்
றையல்பாகமுடையாரடையார்புரஞ்செற்றவர்
செய்யமேனிககரியமிடறுரர்திருவாஞ்சியத்
தையர்பாதமடைவார்க்கடையாவருநோய்களே. (ரு)

அரவம்பூண்பரணியுஞ்சிலம்பார்க்கவகந்தொறு
மிரவினலலபலிபேணுவர்நாணிலர்நாமமே
பரவுவார்வினைதீர்க்கநின்றார்திருவாஞ்சிய
மருவியேத்தமடமாதொடுநின்றவெம்மைந்தரே. (சா)

விண்ணிலானபிறைசூடுவர்தாழ்ந்துவிளங்கவே
கண்ணினலநங்கனுடலம்பொடியாக்கினர்
பண்ணிலானவிசைபாடன்மலருந்திருவாஞ்சியத்
தண்ணலார்தம்மடிபோற்றவலலார்க்கில்லையலலலே. (எ)

மாடநீடுகொடிமன்னியதென்னிலங்கைககுமன்
வாடியூடவரையாலடர்த்தன்றருள்செய்தவர்
வேடவேடர்திருவாஞ்சியமேவியவேந்தரைப்
பாடநீடுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. (அ)

செடிகொணோயினடையார்திறமபார்செறுதீவினை
கடியகூற்றமுங்கணடகலும்புகழுன்வரு
நெடியமாலொடயனேத்தநின்றார்திருவாஞ்சியத்
தடிகள்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே. (கூ)

பிண்டமுண்டுதிரிவார்பிரியுந்துவராடையார்
மிண்டர்மிண்டுமொழிமெய்யலபொய்யிலையெம்மிறை
வண்டுகிண்டிமருவும்பொழில்சூழ்திருவாஞ்சியத்
தண்டவாணனடிகைதொழுவார்ககிலலையலலலே. (கo)

தென்றறுன்றுபொழில்சென்றணையுந்திருவாஞ்சியத்
தென்றுநின்றவிறையானையுணர்ந்தடியேத்தலா
னன்றுகாழிமறைஞானசம்பந்தனசெந்தமி
ழொன்றுமுள்ளமுடையாரடைவாருயர்வானமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

படையும்பூதமும்பாம்பும்புல்வாயத
னுடையுந்தாங்கியவுத்தமனுர்க்கிடம்
புடைநிலாவியபூம்பொழில்வாஞ்சிய
மடையவல்லவர்க்கலலலொன்றில்லையே. (க)

பறப்பையும்பசுவும்படுத்துப்பல
திறத்தவும்முடையோர்திகழும்பதி
கறைப்பிறைச்சடைக்கண்ணுதல்சேர்தரு
சிறப்புடைத்திருவாஞ்சியஞ்சேர்மினே. (௨)

புற்றிலாடரவோடப்புனன்மதி
தெற்றுஞ்செஞ்சடைத்தேவர்பிரான்பதி
சுற்றுமாடங்களசூழ்திருவாஞ்சியம்
பற்றிபபாடுவார்க்குப்பாவமில்லையே. (௩)

அங்கமாறுமருமறைநான்குடன்
றங்குவேள்வியர்தாம்பயிலுங்கர்
செங்கண்மாலிடமார்திருவாஞ்சியந்
தங்குவார்நமமமரர்ககமரரே. (௪)

நீறுபூசிநிமிர்சடைமேற்பிறை
யாறுசூடுமடிகளுறைபதி
மாறுதானெருங்குமவயலவாஞ்சியந்
தேறிவாழ்பவர்க்குச்செலவமாகுமே. (௫)

அற்றுப்பற்றின்றியாரையுமில்லவர்க
குற்றநற்றுணையாவானுறைபதி
தெற்றுமாடங்கள்சூழ்திருவாஞ்சியங்
கற்றுச்சேர்பவர்ககுககருத்தாவதே. (௬)

அருக்கனங்கியமனொடுதேவர்க
டிருத்துஞ்சேவடியான்றிகழுங்கக
ரொருத்திபாகமுகந்தவன்வாஞ்சிய
மருத்தியாலடைவார்ககில்லையலலலே. (௭,௮,௯,௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்

---

பண் - பியந்தைக்காந்தாரம். (௭-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பொருவனார்புரிநூலர்புணர்முலையுமையவளோடு
மருவனார்மருவார்பால்வருவதுவுமில்லைநம்மடிக
டிருவனார்பணிந்தேத்துந்திகழ்திருவாஞ்சியத்துறையு
மொருவனாரடியாரையூழ்வினைநலியவொட்டாரே. (௧)

தொறுவிலானிளவேறுதுண்ணெனவிடிகுரல்வெருவிச்
செறுவில்வாளைகளோடச்செங்கயல்பங்கயத்தொதுங்கக்
கறுவிலாமனத்தார்கள்காண்டகுவாஞ்சியத்தடிகண்
மறுவிலாதவெண்ணீறுபூசுதன்மன்னுமொன்றுடைத்தே. (௨)

தூர்த்தர்மூவெயிலெய்துசுடுநுனைப்பகழியதொன்றும்
பார்த்தனார்திரடோண்மேற்பன்னுனைப்பகழிகள்பாய்ச்சித்
தீர்த்தமாமலர்ப்பொய்கைத்திகழ்திருவாஞ்சியத்தடிகள்
சாத்துமாமணிக்கச்சங்கொருதலைபலதலையுடைத்தே. (௩)

சள்ளைவெள்ளையங்குருகுதானதுவாமெனககருதி
வள்ளைவெண்மலரஞ்சிமறுகியொர்வாளையின்வாயிற்
றுள்ளுதெள்ளுநீர்ப்பொய்கைத்துறைமல்குவாஞ்சியத்தடிகள்
வெள்ளைநுண்பொடிபூசுமவிகிர்தமொன்றுமறிகிலர்தாமே. (௪)

மைகொள்கண்டரெண்டோளர்மலைமகளுடனுறைவாழ்க்கை
கொய்தகூவிளமாலைகுலவியசடைமுடிககுழகர்
கைதனெய்தலங்கழனிகமழ்புகழ்வாஞ்சியத்தடிகள்
பைதல்வெண்பிறையோடுபாம்புடன்வைப்பதுபரிசே. (௫)

கரந்தைகூவிளமாலைகடிமலர்கொன்றையுஞ்சூடிப்
பரந்தபாரிடஞ்சூழவருவர்நம்பரமர்தம்பரிசாற்
றிருந்துமாடங்கணீடுதிகழ்திருவாஞ்சியத்துறையு
மருந்தனாரடியாரைவல்வினைநலியவொட்டாரே. (௬)

* அருவிபாய்தருகழனியலர்தருகுவளையங்கண்ணார்
குருவிபாய்கிளிசேர்ப்பககுருகினமிரிதருகிடங்கிற்
பருவரால்குதிகொள்ளும்பைம்பொழில்வாஞ்சியத்துறையு
மிருவராலறிவொண்ணாவிறைவனதறைகழல்சரணே. (௭)

களங்களார்தருகழனியளிதரக்களிதருவண்டு
வுளங்களார்கலிப்பாடலும்பரிலொலித்திடுகாட்சி
குளங்களானிழற்கீழ்நறகுயிலபயிலவாஞ்சியத்தடிகள்
விளங்குதாமரைப்பாதநினைபவர்வினைநலிவிலரே (௮)

வாழையின்கனிதானுமதுவிம்முவருக்கையின்சுளையுங்
கூழைவானரந்தம்மிற்கூறிதுசிறிதெனககுழறித்
தாழைவாழையந்தண்டாற்செருச்செயதுதருக்குவாஞ்சியத்து
ளேழைபாகனையலலாலிறையெனககருதுதலிலமே. (௯)

செந்நெலங்கலங்கழனித்திகழ்திருவாஞ்சியத்துறையு
மின்னலங்கலஞ்சடையெம்மிறைவனதறைகழலபரவும்
பொன்னலங்கனன்மாடப்பொழிலணிநாவலாரூரன்
பன்னலங்கனன்மாலைபாடுமின்பத்தருளீரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாஞ்சியத்திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - வாஞ்சியநாதர்.
தேவி - வாழவந்தநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௧௮௦.

---

# ௭௧. திருநன்னிலத்துப்பெருங்கோயில்.

## சுந்தரமூர்த்திநாயனார்·

பண் - பஞ்சமம். (௭-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தண்ணியலவெம்மையினான்றலையிற்கடைதோறும்பலி
பண்ணியன்மென்மொழியாரிடகொண்டுழலபண்டரங்கன்
புண்ணியநான்மறையோர்முறையாலடிபோற்றிசைப்ப
நண்ணியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௧)

வலங்கிளர்மாதவஞ்செய்மலைமங்கையொர்பங்கினனாய்ச்
சலங்கிளர்கங்கைதங்கச்சடையொன்றிடையேதரித்தான்
பலங்கிளர்பைம்பொழிறண்பனிவெண்மதியைத்தடவ
நலங்கிளர்நன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௨)

கச்சியனின்கருப்பூர்விருப்பன்கருதிக்கசிவா
ருச்சியன்பிச்சையுண்ணியுலகங்களெல்லாமுடையா
னொச்சியம்பச்சிலையானுரைதீர்புனலாற்றொழுவார்
நச்சியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௩)

பாடியநான்மறையான்படுபல்பிணககாடரங்கா
வாடியமாநடத்தானடிபோற்றியென்றன்பினராய்ச்
சூடியசெங்கையினார்பலதோத்திரம்வாய்ததசொலலி
நாடியநன்னிலததுப்பெருங்கோயினயந்தவனே. (௪)

பிலந்தருவாயினொடுபெரிதும்வலிமிககுடைய
சலந்தரனாகமிருபிளவாக்கியசக்கரமுன்
னிலந்தருமாமகள்கோனெடுமாற்கருள்செய்தபிரா
னலந்தருநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௫)

வெண்பொடிமேனியினான்கருநீலமணிமிடற்றான்
பெண்படிசெஞ்சடையான்பிரமன்சிரம்பீடழித்தான்
பண்புடைநான்மறையோர்பயின்றேத்திப்பலகால்வணங்கு
நண்புடைநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௬)

தொடைமலிகொன்றைதுன்றுஞ்சடையன்சுடர்வெண்மழுவாட்
படைமலிகையன்மெய்யிற்பகட்டுரிபபோர்வையினான்
மடைமலிவண்கமலம்மலர்மேன்மடவன்னமன்னி
நடைமலிநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௭)

குளிர்தருதிங்கள்கங்கைகுரவோடரக்கூவிளமு
மிளிர்தருபுன்சடைமேலுடையான்விடையான்விரைசேர்
தளிர்தருகோங்குவேங்கைதடமாதவிசண்பகமு
நளிர்தருநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௮)

கமர்பயில்வெஞ்சுரத்துக்கடுங்கேழற்பின்கானவனா
யமர்பயில்வெய்தியருச்சுனற்கருள்செய்தபிரான்
றமர்பயிறண்விழவிற்றகுசைவர்தவத்தின்மிக்க
நமர்பயினன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௯)

கருவரைபோலரக்கன்கயிலைம்மலைகீழ்கதற
வொருவிரலாலடர்த்தின்னருள்செய்தவுமாபதிதான்
றிரைபொருபொன்னிநன்னீர்த்துறைவன்றிகழ்செம்பியர்கோ
னரபதிநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே. (௧௦)

கோடுயர்வெங்களிற்றுத்திகழ்கோச்செங்கணான்செய்கோயி
னாடியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனைச்
சேடியல்சிங்கிதந்தைசடையன்றிருவாரூரன்
பாடியபத்தும்வல்லார்புகுவார்பரலோகத்துளே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - பிரகேசுரர்.
தேவி - பிரகேசுவரி.

ஆ திருப்பதிகம் - ௧௮௧.

## ௭௨. திருக்கொண்டீச்சரம்.

### திருநாவுக்கரசுநாயனார்

திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வரைகிலேன்புலன்களைந்துமவரைகிலாப்பிறவிமாயப்
புரையிலேயடங்கிநின்றுபுறப்படும்வழியுங்காணே
னரையிலேமிளிருநாகத்தண்ணலேயஞ்சலென்னாய்
திரையுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௧)

தொண்டனேன்பிறந்துவாளாதொலவினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநைந்துபேர்வதோர்வழியுங்காணே
னண்டனேயண்டவானாவறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௨)

காலகொடுத்தெலும்புமூட்டிக்கதிர்நரம்பாக்கையார்த்துத்
தோலுடுத்துதிரமட்டித்தொகுமயிர்மேய்ந்தகூரை
யோலெடுத்துழைஞர்கூடியொளிப்பதற்கஞ்சுகின்றேன்
சேலுடைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௩)

கூட்டமாயைவர்வந்துகொடுந்தொழிற்குணத்தராகி
யாட்டுவார்க்காற்றகில்லேனாடரவசைத்தகோவே
காட்டிடையரங்கமாகவாடியகடவுளேயோ
சேட்டிரும்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௪)

பொக்கமாய்நின்றபொல்லாப்புழுமிடைமுடைகொளாக்கை
தொக்குநின்றைவர்தொண்ணூற்றறுவருந்துயக்கமெய்த
மிக்குநின்றிவர்கள்செய்யும்வேதனைக்கலந்துபோனேன்
செக்கரேதிகழுமேனித்திருக்கொண்டீச்சுரத்துளானே. (௫)

ஊனுலாமுடைகொளாக்கையுடைகலமாவதென்று
மானுலாமழைக்கணார்தம்வாழ்க்கையைமெய்யென்றெண்ணி
நானெலாமினையகாலநண்ணிலேனெண்ணமிலேன்
றேனுலாம்பொழில்கள்சூழ்ந்ததிருக்கொண்டீச்சுரத்துளானே. ()

சாணிருமடங்குநீண்டசழக்குடைப்பதிக்குநாதர்
வாணிகரைவர்தொண்ணூற்றறுவருமயக்கஞ்செய்து
பேணியபதியினின்றுபெயருமபோதறியமாட்டேன்
சேணுயாமாடநீடுதிருக்கொண்டீச்சுரத்துளானே. (எ)

பொய்மறித்தியற்றிவைத்துப்புலாலகமழ்பண்டமபெய்து
மைமறித்தியற்றியன்னபாங்கிலாககுரம்பைநின்று
கைமறித்தனையவாவிகழியுமபோதறியமாட்டேன்
செந்நெறிச்செலவுகாணேன்றிருக்கொண்டீச்சுரத்துளானே (அ)

பாலனாய்க்கழிந்தநாளும்பனிமலர்க்கோதைமார்தம்
மேலனாய்க்கழிந்தநாளுமெலிவொடுமூப்புவந்து
கோலனாய்க்கழிந்தநாளுங்குறிக்கோளிலாதுகெட்டேன்
சேலுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சுரத்துளானே (௯)

விரைதருகருமென்கூந்தலவிளங்கிழைவேலொண்கணாள்
வெருவரவிலங்கைக்கோமான்விலங்கலையெடுத்தஞான்று
பருவரையனையதோளுமுடிகளும்பாறிவீழத்
திருவிரலூன்றினானேதிருக்கொண்டீச்சுரத்துளானே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

கண்டபேச்சினிற்காளையர்தங்கள்பால்
மண்டியேச்சுனுமாதரைச்சேராதே
சண்டியீச்சுரவர்க்கருள்செய்தவக
கொண்டியீச்சுரவன்கழலகூறுமே. (௧)

சுற்றமுந்துணைநன்மடவாளொடு
பெற்றமக்களும்பேணலொழிந்தனர்
குற்றமில்புகழ்க்கொண்டீச்சுரவனார்
பற்றலாலொருபற்றுமற்றில்லையே. (௨)

மாடுதானதுவிலலெனின்மானுடர்
பாடுதான்செல்வாரில்லைபன்மாலையாற்
கூடநீர்சென்றுகொண்டீச்சுரவனைப்
பாடுமின்பரலோகத்திருத்துமே (௩)

தந்தைதாயொடுதாரமெனுந்தளைப்
பந்தமாங்கறுத்துப்பயிலவெய்திய
கொந்தவிழ்பொழிற்கொண்டீச்சரவனைச்
சிந்தைசெய்ம்மினவனடிசேரவே. (௪)

கேளுமின்னிளமையதுகேடுவந்
தீளையோடிருமல்லதுவெய்தனமுன்
கோளரவணிகொண்டீச்சரவனை
நாளுமேத்தித்தொழுமினன்காகுமே. (௫)

வெம்புநோயுமிடரும்வெறுமையுந்
துன்பமுந்துயரும்மெனுஞ்சூழ்வினை
கொம்பனாபயில்கொண்டீச்சரவனை
யெம்பிரானெனவல்லவர்க்கில்லையே. (௬)

அல்லலோடருநோயிலழுந்திநீர்
செல்லுமாநினையாதேகனைகுரற்
கொல்லையேறுடைக்கொண்டீச்சரவனை
வல்லவாறுதொழவினைமாயுமே. (௭)

நாறுசாந்தணிநன்முலைமென்மொழி
மாறிலாமலைமங்கையொர்பாகமாக்
கூறனாருறைகொண்டீச்சரநினைந்
தூறுவார்தமக்கூனமொன்றில்லையே. (௮)

அயிலாரம்பெரிமேருவிலாகவே
யெயிலாரும்பொடியாய்விழவெய்தவன்
குயிலாரும்பொழிற்கொண்டீச்சரவனைப்
பயில்வாரும்பெருமைபெறுபாலரே. (௯)

நிலையினார்வரைநின்றெடுத்தான்றனை
மலையினாலடர்த்துவிறல்வாட்டினான்
குலையினார்பொழிற்கொண்டீச்சரவனைத்
தலையினால்வணங்கத்தவமாகுமே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கொண்டீச்சரத் திருப்பதிகம் - ௨.

---

சுவாமி - பசுபதியார்.
தேவி - சாந்தநாயகி.

---

ஆக திருப்பதிகம் - ௧௮௩.

---

# ௭௩. திருப்பனையூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - தக்கராகம். (௧ஆம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அரவச்சடைமேன்மதிமத்தம்
விரவிப்பொலிகின்றவனூரா
நிரவிப்பலதொண்டர்கணாளும்
பரவிப்பொலியும்பனையூரே. (௧)

எண்ணொன்றிநினைந்தவர்தம்பா
லுண்ணின்றுமகிழ்ந்தவனூராங்
கண்ணின்றெழுசோலையில்வண்டு
பண்ணின்றொலிசெய்பனையூரே. (௨)

அலரும்மெறிசெஞ்சடைதன்மேன்
மலரும்பிறையொன்றுடையானூர்
சிலரென்றுமிருந்தடிபேணப்
பலரும்பரவும்பனையூரே. (௩)

இடியார்கடனஞ்சமுதுண்டு
பொடியாடியமேனியினானூ
ரடியார்தொழமன்னவரேத்தப
படியார்பணியும்பனையூரே. (௪)

அறையார்கழன்மேலரவாட
விறையார்பலிதேர்ந்தவனூராம்
பொறையார்மிகுசீர்விழமல்கப்
பறையாரொலிசெய்பனையூரே. (௫)

அணியார்தொழவல்லவரேத்த
மணியார்மிடறொன்றுடையானூர்
தணியார்மலர்கொண்டிருபோதும்
பணிவார்பயிலும்பனையூரே. (௬)

அடையாதவர்மூவெயில்சீறும்
விடையான்விறலார்கரியின்றோ
லுடையானவனெண்பலபூதப்
படையானவனூர்பனையூரே. (௭)

இலகும்முடிபத்துடையானை
யலல்கண்டருள்செய்தவெம்மண்ண
லுலகில்லுயிர்நீர்நிலமற்றும்
பலகண்டவனூர்பனையூரே. (௮)

வரமுன்னிமகிழ்ந்தெழுவீர்காள்
சிரமுன்னடிதாழவணங்கும்
பிரமன்னொடுமாலறியாத
பரமன்னுறையும்பனையூரே. (௯)

அழிவில்லமணஃதொடுதேரர்
மொழிவல்லனசொல்லியபோதும
மிழிவில்லதொர்செம்மையினானார்
பழியில்லவர்சேர்பனையூரே. (௧0)

பாரார்விடையார்பனையூர்மேற்
சீரார்தமிழ்ஞானசம்பந்த
னாரதசொன்மாலைகள்பத்து
மூரூர்நினைவாருயர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - சீகாமரம். (எ-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

* மாடமாளிகைகோபுரத்தொடுமண்டபம்வளரும்வளர்பொழிற்
பாடல்வண்டறையும்பழனத்திருப்பனையூர்த்
தோடுபெய்தொருகாதினிற்குழைதூங்கத்தொண்டர்களுள்ளிப்பாடநின்
றாடுமாறுவல்லாரவரேயழகியரே (௧)

நாறுசெங்கழுநீர்மலர்நல்லமல்லிகைசண்பகத்தொடு
சேறுசெய்கழனிப்பழனத்திருப்பனையூர்
நீறுபூசிநெய்யாடிதன்னைநினைப்பவர்தம்மனத்தனாகிநின்
றாறுசூடவல்லாரவரேயழகியரே. (௨)

செங்கண்மேதிகள்சேடெறிந்துதடம்படிதலிற்சேலினத்தொடு
பைங்கண்வாளைகள்பாய்பழனத்திருப்பனையூர்த்
திங்கள்சூடியசெல்வனாரடியார்தம்மேல்வினைதீர்ப்பராய்விடி
லங்கிருந்துறைவாரவரேயழகியரே. (௩)

வாளைபாயமலங்கிளங்கயல்வரிவராலுகளுங்கழனிப்
பாளையொண்கமுகம்புடைசூழ்திருப்பனையூர்த்
தோளுமாகமுந்தோன்றநட்டமிட்டாடுவாரடித்தொண்டர்தங்களை
யாளுமாறுவல்லாரவரேயழகியரே. (௪)

கொங்கையார்பலருங்குடைந்தாடக்குவளைமலர்தரப்
பங்கயமலரும்பழனத்திருப்பனையூர்
மங்கைபாகமுமாலொர்பாகமுந்தாமுடையவர்மான்மழுவினொ
டங்கைத்தீயுகப்பாரவரேயழகியரே. (௫)

காவிரிபுடைசூழ்சோணாட்டவர்தாம்பரவிய
பாவிரிபுலவர்பயிலுந்திருப்பனையூர்
மாவிரிமடநோக்கியஞ்சமதகரியுரிபோர்த்துகந்த
வாவிலைந்துகப்பாரவரேயழகியரே. (௬)

மரங்கண்மேன்மயிலாலமண்டபமாடமாளிகைகோபுரத்தின்மேற்
றிரங்கல்வன்முகவன்புகப்பாயதிருப்பனையூர்த்
துரங்கன்வாய்பிளந்தானுந்தாமலர்த்தோன்றலுமறியாமற்றோன்றிநின்
றரங்கிலாடவல்லாரவரேயழகியரே (௭)

மண்ணெலாமுழவமதிரமாடமாளிகைக்கோபுரத்தின்மேற்
பண்ணியாழ்முரலும்பழனத்திருப்பனையூர்
வெண்ணிலாச்சடைமேவியவிண்ணவரொடுமண்ணவர்தொழ
வண்ணலாகிநின்றாரவரேயழகியரே (௮)

குரக்கினங்குதிகொள்ளத்தேனுகக்குண்டுதண்வயற்கெண்டைபாயத்தாழ்
பரக்குந்தண்பழனத்திருப்பனையூ
ரிரக்கமில்லவரைந்தொடைந்தலைதோளிருபதுந்தாணெரிதர
வரக்கனையடர்த்தாரவரேயழகியரே (௯)

வஞ்சிநுண்ணிடைமங்கைபங்கினர்மாதவர்வளரும்வளர்பொழிற்
பஞ்சின்மெல்லடியார்பயிலுந்திருப்பனையூர்
வஞ்சியும்வளர்நாவலூரன்வனப்பகையப்பன்வன்றொண்டன்
செஞ்சொற்கேட்டுகப்பாரவரேயழகியரே (௰)

திருச்சிற்றம்பலம்.

---

* சுந்தரமூர்த்திநாயனாருக்குத் திருப்பனையூர்க்கு முன்னே சிவபெருமான் திருக்கூத்தோடு காட்சிகொடுத்தருள, நாயனார் அதிசயித்து, "மாடமாளிகை" யென்னுந் திருப்பதிகம்பாடியருளினார்.

---

திருப்பனையூர்த் திருப்பதிகம் - .

---

சுவாமி - சௌந்தரநாதர்
தேவி - பெரியநாயகி

---

௯ திருப்பதிகம் - ௧௮௫.

---

# எச. திருவிற்குடிவீரட்டம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். (உ-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

வடிகொண்மேனியர்வானமாமதியினர்நதியினர்மதுவார்ந்த
கடிகொள்கொன்றையஞ்சடையினர்கொடியினருடைபுலியதளார்ப்பர்
விடையதேறுமெம்மானமர்ந்தினிதுறைவிற்குடிவீரட்ட
மடியராகிநின்றேத்தவல்லார்தமையருவினையடையாவே. (க)

களம்பொள்கொன்றையுங்கதிர்விரிமதியமுங்கடிகமழ்சடைக்கேற்றி
யுளம்கொள்பத்தர்பாலருளியபெருமையர்பொருகரியுரிபோர்த்து
விளங்குமேனியரெம்பெருமானுறைவிற்குடிவீரட்டம்
வளங்கொள்மாமலரானினைந்தேத்துவார்வருத்தமதறியாரே. (உ)

கரியகண்டத்தர்வெளியவெண்பொடியணிமார்பினர்வலங்கையி
லெரியர்புன்சடையிடம்பெறக்காட்டகத்தாடியவேடத்தர்
விரியுமாமலர்ப்பொய்கைசூழ்மதுமலிவிற்குடிவீரட்டம்
பிரிவிலாதவர்பெருந்தவத்தோரெனப்பேணுவருலகத்தே. (ங)

பூதஞ்சேர்ந்திசைபாடலராடலர்பொலிதரநலமார்ந்த
பாதஞ்சேரிணைச்சிலம்பினர்கலம்பெறுகடலெழுவிடமுண்டார்
வேதமோதியநாவுடையானிடம்விற்குடிவீரட்டஞ்
சேருநெஞ்சினார்க்கல்லதுண்டோபிணிதீவினைகெடுமாறே. (ச)

கடியவேற்றினர்கனலனமேனியரனலெழவூர்மூன்று
மிடியமால்வரைகால்வளைத்தான்றனதடியவர்மேலுள்ள
வெடியவல்வினைவீட்டுவிப்பானுறைவிற்குடிவீரட்டம்
படியதாகவேபரவுமின்பரவினாற்பற்றறுமருநோயே. (ரு)

பெண்ணொர்கூறினர்பெருமையர்சிறுமறிகையினர்மெய்யார்ந்த
வண்ணலன்புசெய்வாரவர்க்கெளியவரரியவரல்லார்க்கு
விண்ணிலார்பொழில்மல்கியமலர்விரிவிற்குடிவீரட்ட
மெண்ணிலாவியசிந்தையினார்தமக்கிடர்களவந்தடையாவே. (சு,எ)

இடங்கொண்மால்கடலிலங்கையர்கோன்றனையிகலழிதரவூன்று
திடங்கொண்மால்வரையானுரையார்தருபொருளினனிருளார்ந்த
விடங்கொண்மாமிடறுடையவனுறைதிருவிற்குடிவீரட்டந்
தொடங்குமாறிசைபாடிநின்றார்தமைத்துன்பநோயடையாவே. (அ)

செங்கண்மாலொடுநான்முகன்றேடியுந்திருவடியறியாமை
யெங்குமாரெரியாகியவிறைவனையறைபுனன்முடியார்ந்த
வெங்கண்மாலவரைக்கரியுரித்துகந்தவன்விற்குடிவீரட்டந்
தங்கையாற்றொழுதேத்தவல்லாரவர்தவமல்குகுணத்தாரே. (கூ)

பிண்டமுண்டுழல்வார்களும்பிரிதுவராடையரவர்வார்த்தை
பண்டுமின்றுமோர்பொருளெனக்கருதன்மின்பரிவுறுவீர்கேண்மின்
விண்டமாமலர்ச்சடையவனிடமெனில்விற்குடிவீரட்டங்
கண்டுகொண்டடிகாதல்செய்வாரவர்கருத்துறுங்குணத்தாரே. (௧0)

விலங்கலேசிலையிடமெனவுடையவன்விற்குடிவீரட்டத்
திலங்குசோதியையெம்பெருமான்றனையெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசைமொழியுமின்மொழிந்தக்கான்மற்றதுவரமாமே. ()

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - வீரட்டநாதர்.
தேவி - ஏலவார்குழலி

ஆட திருப்பதிகம் - ௧௮௬.

# எ௫. திருப்புகலூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை. (ஆ, திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

குறிகலந்தவிசைபாடலினானசையாலிவ்வுலகெல்லா
நெறிகலந்ததொருநீர்மையனாயெருதேறும்பலிபேணி
முறிகலந்ததொருதோலரைமேலுடையானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில்சூழ்ந்தயலேபுயலாரும்புகலூரே. (௧)

காதிலங்குகுழையன்னிழைசேர்திருமார்பன்னொருபாகம்
மாதிலங்குதிருமேனியினன்கருமானின்னுரியாடை
மீதிலங்கவணிந்தானிமையோர்தொழமேவுமிடஞ்சோலைப்
போதிலங்குநசையால்வரிவண்டிசைபாடும்புகலூரே. (௨)

பண்ணிலாவும்மறைபாடலினானிறைசேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடையான்பெரியார்கழலென்றுந்தொழுதேத்த
வுண்ணிலாவியவர்சிந்தையுணீங்காவொருவற்கிடமென்பர்
மண்ணிலாவும்மடியார்குடிமைத்தொழின்மல்கும்புகலூரே. (௩)

நீரின்மல்குசடையன்விடையன்னடையார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலையேசிலையாகமுனிந்தானுலகுய்யக்
காரின்மல்குகடனஞ்சமதுண்டகடவுள்ளிடமென்ப
ரூரின்மல்கிவளர்செம்மையினாலுயர்வெய்தும்புகலூரே. (௪)

செய்யமேனிவெளியபொடிப்பூசுவர்சேரும்மடியார்மேற்
பையநின்றவினைபாற்றுவர்போற்றிசைத்தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெருமானுறையும்மிடமென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத்தார்பிரியாதுபொருந்தும்புகலூரே. (௫)

கழலினோசைசிலம்பின்னொலியோசைகலிக்கப்பயில்கானிற்
குழலினோசைகுறட்பாரிடம்போற்றக்குனித்தாரிடமென்பர்
விழவினோசையடியார்மிடைவுற்றுவிரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந்நீரயர்வெய்தமுழங்கும்புகலூரே (௬)

வெள்ளமார்ந்துமிளிர்செஞ்சடைதன்மேல்விளங்குமதிசூடி
யுள்ளமார்ந்தவடியார்தொழுதேத்தவுகக்குமருட்டந்தெங்
கள்ளமார்ந்துகழியப்பழிதீர்த்தகடவுளிடமென்பர்
புள்ளையார்ந்தவயலின்விளைவால்வளமல்கும்புகலூரே. (௭)

தென்னிலங்கையரையன்வரைபற்றியெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிரலானெரிவித்திசைகேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடையான்மடமாதொடுமேவுமிடமென்பர்
பொன்னிலங்குமணிமாளிகைமேன்மதிதோயும்புகலூரே. (௮)

நாகம்வைத்தமுடியானடிகைதொழுதேத்துமடியார்கள்
ஆகம்வைத்தபெருமான்பிரமனொடுமாலுந்தொழுதேத்த
வேகம்வைத்தவெரியாய்மிகவோங்கியவெம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழிலின்னிழலான்மதுவாரும்புகலூரே. (௯)

செய்தவத்தர்மிகுதேரர்கள்சாக்கியர்செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழியைத்தவிர்வார்கள்கடவுள்ளிடம்போலுங்
கொய்துபத்தர்மலரும்புனலுங்கொடுதூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல்வாருயர்வானகமெய்தும்புகலூரே. (௧௦)

புற்றில்வாழுமரவம்மரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றுநல்லவர்காழியுண்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றுமிசைபாடியமாந்தர்பரமனடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - செவ்வழி. (௨-ம. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முகுழலிளையராடவ்வெறிவிரவுநீர்ப்
பொங்குசெங்கட்கருங்கயல்கள்பாயும்புகலூர்தனுட்
டிங்கள்சூடித்திரிபுரமோரம்பாலெரியூட்டிய
வெங்கள்பெம்மானடிபரவநாளும்மிடர்கழியுமே. (௧)

வாழ்ந்தநாளும்மினிவாழுநாளும்மிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம்பெருமானையேத்தாவிதியில்லிகாள்
போழ்ந்ததிங்கட்புரிசடையினான்றன்புகலூரையே
சூழ்ந்தவுள்ளமுடையீர்களுங்கட்குயர்தீருமே. (௨)

மடையினெய்தல்கருங்குவளைசெய்யமலர்த்தாமரை
புடைகொள்செந்நெல்விளைகழனிமல்கும்புகலூர்தனுட்
டொடைகொள்கொன்றைபுனைந்தானொர்பாகமதிசூடியை
யடையவல்லாரமருலகமாளப்பெறுவார்களே. (௩)

பூவுநீரும்பலியுஞ்சுமந்துபுகலூரையே
நாவினாலேநவின்றேத்தலோவார்செவித்துளைகளா
லியாவுங்கேளாரவன்பெருமையல்லாலடியார்கடா
மோவுநாளுமுணர்வொழிந்தநாளென்றுள்ளங்கொள்ளவே. (௪)

அன்னங்கன்னிப்பெடைபுல்கியொல்கியணிநடையவாய்ப்
பொன்னங்காஞ்சிமலர்ச்சின்னமாலும்புகலூர்தனுள்
முன்னம்மூன்றும்மதிலெரித்தமூர்த்திதிறங்கருதுங்கா
லின்னரென்னப்பெரிதரியரேத்தச்சிறிதெளியரே (௫)

குலவராகக்குலமிலருமாகக்குணம்புகழுங்கா
லுலகினல்லகதிபெறுவரேனுமலருறுதேன்
புலவமெல்லாம்வெறிகமழுமந்தண்புகலூர்தனு
ணிலவமல்குசடையடிகள்பாதநினைவார்களே (௬)

ஆணும்பெண்ணுமெனநிற்பரேனுமரவாரமாப்
பூணுமேனும்புகலூர்தனக்கோர்பொருளாயினா
னூணுமூராரிடுபிச்சையேயுறுவதுடைகோவணம
பேணுமேனும்பிரானென்பராலெம்பெருமானையே. (௭)

உய்யவேண்டியெழுபோதநெஞ்சேயுயரிலங்கைக்கோன்
கைகளொல்கக்கருவரையெடுத்தானையோர்விரலினாற்
செய்கைதோன்றச்சிதைத்தருளவல்லசிவன்மேயபூம்
பொய்கைசூழ்ந்தபுகலூர்புகழப்பொருளாகுமே (௮)

நேமியானுமுகநான்குடையந்நெறியண்ணலு
மாமிதென்றுதனக்கேத்தப்போயாரழலாயினன்
சாமிதாதைசரணாகுமென்றுதலைசாய்மினே
பூமியெல்லாம்புகழ்செல்வமல்குமபுகலூரையே (௯)

வேர்த்தமெய்யருருமத்துடைவிட்டுழல்வார்களும்
போர்த்தகூறைப்பொதிநீழலாருமபுகலூர்தனுட்
டூர்த்தமெல்லாஞ்சடைக்கரந்ததேவன்றிறங்கருதுங்கா
லோர்த்துமெய்யென்றுணராதுபாதந்தொழுதுய்ம்மினே. (௧௦)

புந்தியார்ந்தபெரியோர்களேத்தும்புகலூர்தனுள்
வெந்தசாம்பற்பொடிப்பூசவல்லவிடையூர்தியை
யந்தமில்லாவனலாடலானையணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடியாடக்கெடும்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

பண் - இந்தளம் (ச-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளுங்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின் றவர்க்கல் லாதவர்க் கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே. (க)

மேகநல் லூர்தியர் மின்போல் மிளிர்சடைப்
பாகமதிநுத லாளையொர் பாகத்தர்
நாகவளையினர் நாகவுடையினர்
போகர் புகலூர்ப் புரிசடை யாரே. (உ)

பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. (ங)

அக்கா ரணிவட மாகத்தர் நாகத்தர்
நக்கா ரிளமதிக் கண்ணியர் நாடொறு
முக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தொறும்
புக்கார் புகலூர்ப் புரிசடை யாரே (ச)

ஆர்த்தா ருயிரடு மந்தகன் றன்னுடல்
பேர்த்தார் பிறைநுதற் பெண்ணினல் லாளுட்கக்
கூர்த்தார் மருப்பிற் கொலைக்களிற் றீருரி
போர்த்தார் புகலூர்ப் புரிசடை யாரே. (ரு)

தூமன் சுறவந் துதைந்த கொடியுடைக்
காமனைக் கண்ணழ லாற்காய்ந்த முக்கண்ணினர்
சேமநெறியினர் சீரை யுடையவர்
பூமன் புகலூர்ப் புரிசடை யாரே. (சா)

உதைத்தார் மறலி யுருளவொர் காலாற்
சிதைத்தார் திகழ்தக் கனைசெய்த வேள்வி
பதைத்தார சிரங்கரங் கொண்டுவெய் யோன்கண்
புதைத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. (எ)

கரிந்தார் தலையர் கடிமதில் மூன்றுந்
தெரிந்தார் கணைகள் செழுந்தழ லுண்ண
விரிந்தார் சடைமேல் விரிபுனற் கங்கை
புரிந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. (அ)

ஈண்டா ரழலி னிருவருங் கைதொழ
நீண்டார் நெடுந்தடு மாற்ற நிலையஞ்ச
மாண்டார்தம் என்பு மலர்க்கொன்றை மாலையும்
பூண்டார் புகலூர்ப் புரிசடை யாரே. (கூ)

கறுத்தார்மணிகண்டங்கால்விரலூன்றி
யிறுத்தாரிலங்கையர்கோன்முடிபத்து
மறுத்தார்புலனைந்துமாயிழைபாகம்
பொறுத்தார்புகலூர்ப்புரிசடையாரே (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை (ச-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்

பகைத்திட்டார்புரங்கண்மூன்றும்பாறிநீறாகிவீழப்
புகைத்திட்டதேவர்கோவேபொறியிலேனுடலந்தன்னு
ளகைத்திட்டங்கதனைநாளுமைவர்கொண்டாட்டவாடித்
திகைத்திட்டேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே. (௧)

மையரிமதர்த்தவொண்கண்மாதரார்வலையிற்பட்டுக்
கைம்மெரிசூலமேந்துங்கடவுளைநினையமாட்டே
னூனெரிந்தகர்ந்தநறேயனைக்குயமேபோதாவியாநாளுஞ்
செய்வதொன்றறியமாட்டேன்றிருப்புகலூரனீரே (௨)

முப்பதுமுப்பத்தாறுமுப்பதுமிடுகுரம்பை
யப்பர்போலைவர்வந்துஅதுதருகிதுவிடென்று
ஒப்பவேநலியலுற்றாலுய்யுமாறறியமாட்டேன்
செப்பமேதிகழுமேனித்திருப்புகலூரனீரே (௩)

பொறியிலாவழுக்கையோம்பிப்பொய்யினைமெய்யென்றெண்ணி
நெறியலாநெறிகள்சென்றேனீதனேநீதியேது
மறிவிலேனமரர்கோவேயமுதினைமன்னில்வைக்குஞ்
செறிவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே (௪)

அளியினார்குழலினார்களவர்களுக்கன்பதாகிக்
களியினார்பாடலோவாக்கடவூர்வீரட்டமென்னுந்
தளியினார்பாதநாளுநினைவிலாத்தகவினெஞ்சந்
தெளிவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே. (௫)

இலவினார்மாதர்பாலேயிசைந்துநானிருந்துபின்னு
நிலவுநாள்பலவென்றெண்ணிநீதனேனாதியுன்னை
யுலவினாலுள்கமாட்டேனுன்னடிபரவுஞானஞ்
செலவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே. (௬)

காத்திலேனிரண்டுமூன்றுங்கல்வியேலில்லையென்பால்
வாய்த்திலேனடிமைதன்னுள்வாயமையாதறாயேனல்லே
பார்த்தனுக்கருள்கள்செய்தபரமனைப்பரவுவாக
டீர்த்தமேதிகழும்பொய்கைத்திருப்புகலூரனீரே. (௭)

நீருமாய்த்தீயுமாகிநிலனுமாய்விசும்புமாகி
யேருடைக்கதிர்களாகிமையவரிறைஞ்சநின்று
ராவதற்கரியராகியங்கங்கேயாடுகின்ற
தேவர்க்குந்தேவராவார்திருப்புகலூரனாரே. (௮)

மெய்யுளே விளக்கையேற்றிவேண்டளவுயரத்தூண்டி
யுய்வதோருபாயம்பற்றியுகக்கின்றேனுக்காவண்ண
மைவரையகத்தேவைத்திரவர்களேவலியர்சாலச்
செய்வதொன்றறியமாட்டேன்றிருப்புகலூரனீரே. (கூ)

அருவரைதாங்கினானுமருமறையாதியானு
மிருவருமறியமாட்டாவீசனாரிலங்கைவேந்தன
கருவரையெடுத்தஞான்றுகண்வழிகுருதிசோரத்
திருவிரல்சிறிதுவைத்தார்திருப்புகலூரனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

தன்னைச்சரணென்றுதாளடைந்தேன்றன்னடியடைந்தார்
புன்னைப்பொழிற்புகலூரண்ணல்செய்வனகேண்மின்களோ
வென்னைப்பிறப்பறுத்தென்வினைகட்டறுத்தேழ்நரகத்
தென்னைக்கிடக்கவொட்டான்சிவலோகத்திருத்திடுமே. (க)

பொன்னைவகுத்தன்னமேனியனேபுணர்மென்முலையா
ளன்னைவகுத்தன்னபாகத்தனேதமியேற்கிரங்காய்
புன்னைமலர்த்தலைவண்டுறங்கும்புகலூரரசே
யென்னைவகுத்திலையேலிடும்பைக்கிடம்யாதுசொல்லே. (உ,ங)

பொன்னளவார்சடைக்கொன்றையினாய்புகலூரரசே
மன்னுளதேவர்கடேடுமருந்தேவலஞ்சுழியா
யென்னளவேயுனக்காட்பட்டிடைக்கலத்தேகிடப்ப
துன்னளவேயெனக்கொன்றுமிரங்காதவுத்தமனே. (ச',ரு,சு,எ,அ,கூ)

ஓணப்பிரானுமொளிர்மாமலர்மிசையுத்தமனுங்
காணப்பராவியுங்காண்கின்றிலர்கரநாலைந்துடைத்
தோணப்பிரானைவலிதொலைத்தோனைத்தொல்லைநீர்ப்புகலூர்க்
கோணப்பிரானைக்குறுகக்குறுகாகொடுவினையே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. (ரு-ம திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

துன்னக்கோவணச்சுண்ணவெண்ணீறணி
பொன்னக்கன்னசடைப்புகலூரரோ
மின்னக்கன்னவெண்டிங்களைப்பாம்புட
னென்னுக்கோவுடன்வைத்திட்டிருப்பதே. (க)

இரைக்கும்பாம்புமெறிதருதிங்களு
நுரைக்கும்கங்கையுநுண்ணியசெஞ்சடைப்
புரைப்பிலாதபொழிற்புகலூரரை
யுரைக்குமாசொல்லியொள்வளைசோருமே. (உ)

ஊசலாமரவல்குலென்சோர்குழ
லேசலாமபழிதந்தெழில்கொண்டன
ரோசொலாய்மகளேமுறையோவென்று
பூசனுமிடுதும்புகலூரர்க்கே. (௩)

மின்னினேரிடையாளுமைபங்கனை
தன்னைநேரொப்பிலாததலைவனைப்
புன்னைக்கானற்பொழிற்புகலூரனை
யென்னுளாகவைத்தின்புற்றிருப்பனே (௪)

விண்ணினார்மதிசூடியவேந்தனை
யெண்ணிநாமங்களோதியெழுத்தஞ்சுங்
கண்ணினாற்கழல்காண்பிடமேதெனிற்
புண்ணியன்புகலூருமென்னெஞ்சுமே (௫)

அண்டவாணரமுதுணநஞ்சுண்டு
பண்டுநான்மறையோதியபாடலன்
றொண்டராகித்தொழுதுமதிப்பவர்
புண்டரீகத்துளார்புகலூரரே (௬)

தத்துவந்தலைகண்டறிவாரிலை
தத்துவந்தலைகண்டவர்கண்டிலர்
தத்துவந்தலைநின்றவர்க்கல்லது
தத்துவனலன்றண்புகலூரனே (௭)

பெருங்கையாகிப்பிளிறிவருவதோர்
கருங்கையானைக்களிறுரிபோர்த்தவர்
வருங்கையானைமதக்களிறஞ்சினைப்
பொருங்கையானைக்கண்டா புகலூரரே (௮)

பொன்னொத்தநிறத்தானும்பொருகடற்
றன்னொத்தநிறத்தானுமறிகிலாப்
புன்னைத்தாதுபொழிற்புகலூரரை
யென்னத்தாவெனவென்னிடர்தீருமே (௯)

மத்தனாயமதியாதுமலைதனை
யெத்தினான்றிரடோண்முடிபத்திற
வொத்தினான்விரலாலொருங்கேத்தலும்
பொத்தினைப்புகலூரைத்தொழுமினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

***என்னுகேனென்சொல்லியென்னுகேனோ**
**வெம்பெருமான்றிருவடியேயெண்ணினல்லாற்**
**கண்ணிலேன்மற்றோர்களைகணில்லேன்**
**கழலடியேகைதொழுதுகாணினல்லால்**

லொண்ணுளேயொன்பதுவாசல்வைத்தா
யொக்கவடைக்கும்போதுணரமாட்டேன்
புண்ணியாவுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (க)

அங்கமேபூண்டாயனலாடினா
யாதிரையாயானிழலாயானேறூர்ந்தாய்
பங்கமொன்றில்லாதபடர்சடையினாய
பாம்போடுதிங்கள்பகைதீர்த்தாண்டாய்
சங்கையொன்றின்றியேதேவர்வேண்டச்
சமுத்திரத்தின்னஞ்சுண்டுசாவாமூவாச்
சிங்கமேயுன்னடிக்கேபோதுகின்றேன்
திருப்புகலூர்மேவியதேவதேவே. (உ)

பையரவக்கச்சையாய்பால்வெண்ணீற்றாய்
பளிக்குக்குழையினாய்பண்ணாரின்சொன்
மைவிரவுகண்ணாளைபாகங்கொண்டாய்
மான்மறிக்கையேந்தியோர்வஞ்சக்கள்வ
ரைவரையுமென்மேற்றரவறுத்தா
யவர்வேண்டுங்காரியமிங்காவதில்லைப்
பொய்யுரையாதுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (ங)

தெருளாதார்மூவெயிலுந்தீயில்வேவச்
சிலைவளைத்துச்செங்கணையாற்செற்றதேவே
மருளாதார்தம்மனத்தில்வாட்டந்தீர்ப்பாய்
மருந்தாய்ப்பிணிதீர்ப்பாய்வானோர்க்கென்று
மருளாகியாதியாய்வேதமாகி
யலர்மேலானீர்மேலானாய்ந்துங்காணாப்
பொருளானாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (ச)

நீரேறுசெஞ்சடைமேனிலாவெண்டிங்க
ணீங்காமைவைத்துகந்தநீதியானே
பாரேறுபடுதலையிற்பலிகொள்வானே
பண்டநங்கைப்பார்த்தானேபாவநாசா
காரேறுமுகிலனையகண்டத்தானே
கருங்கைக்களிற்றுரிவைகதறப்போர்த்த
போரேறேயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (ரு)

விரிசடையாய்வேதியனேவேதகீதா
விரிபொழில்சூழ்வெண்காட்டாய்மீயச்சூராய்
திரிபுரங்களெரிசெய்ததேவதேவே
திருவாரூர்த்திருமூலட்டானமேயாய்
மருவினியார்மனத்துளாய்மாகாளத்தாய்
வலஞ்சுழியாய்மாமறைக்காட்டெந்தாயென்றும்

புரிசடையாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (௬)

தேவார்ந்ததேவனைத்தேவரெல்லாந்
திருவடிமேலலரிட்டுத்தேடிநின்று
நாவார்ந்தமறைபாடிநட்டமாடி
நான்முகனுமிந்திரனுமாலும்போற்றக
காவார்ந்தபொழிற்சோலைக்கானப்பேற்றாய்
கழுக்குன்றத்துச்சியாய்கடவுளேநின்
பூவார்ந்தபொன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே. (௭)

நெய்யாடிநின்மலனேநீலகண்டா
நிறைவுடையாய்மறைவல்லாயநீதியானே
மையார்கண்மடவாள்பாகத்தானே
மான்றோலுடையாயமகிழ்ந்துநின்றாய
பொய்யாதுகூவிளயகொன்றைமாலை
கொண்டடியேனுனிட்டுககூறிநின்று
பொய்யாதசேவடிக்கேபோதுகின்றேன
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (௮)

துன்னாருசேர்கோவணத்தாயதூயநீறாய்
துதைந்திலங்குவெண்மழுவாளகையிலேந்தித்
தன்னனையுந்தணமதியும்பாம்புநீருஞ்
சடைமுடிமேல்வைத்துகந்ததன்மையானே
யன்னநடைமடவாளபாகத்தானே
யக்காரம்பூண்டானேயாதியானே
பொன்னங்கழலடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (௯)

ஒருவனையுமல்லாதுணராதுள்ள
மூணர்சசித்தமொற்றதுள்ளேநின்ற
விருவரையுமூவரையுமென்மேலேவி
யில்லாததரவறுத்தாயகில்லேனேலக
கருவரைசூழ்கானலிலங்கைவேந்தன்
கடுந்தேர்மீதோடாமைககாலாற்செற்ற
பொருவரையாயுன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர்மேவியபுண்ணியனே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* திருநாவுக்கரசுநாயனார், பல சிவஸ்தலங்களை தரிசித்துத் திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு திருப்புகலூருக் கெழுந்தருளி அங்கு சிலநாள திருத்தொண்டு செய திருந்து, என்னை இனிச் சேவடிக்கீழிருத்திடும் என்று சித்திரைமாதம் சதயநக்ஷத் திரத்தில், "எண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனோ" என்னும் திருத்தாண்ட கத் திருப்பதிகம்பாடிச் சிவபெருமானுடைய திருவடியை அடைந்தருளினார்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - கொல்லி. (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

* தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்வினுந்தொண்டர்தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்கா
ளிம்மையேதருஞ்சோறுங்கூறையுமேத்தலாமிடர்கெடலுமா
மம்மையேசிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே (க)

மிடுக்கிலாதானைவீமனேவிறல்விசயனேவில்லுக்கிவனென்று
கொடுக்கிலாதானைப்பாரியேயென்றுகூறினுங்கொடுப்பாரிலைப் [கா
பொடிக்கொண்மேனியெம்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்
ளடுக்குமேலமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே (உ)

காணியேற்பெரிதுடையனேகற்றுநல்லனேசுற்றநற்கிளை
பேணியேவிருந்தோம்புமேயென்றுபேசினுங்கொடுப்பாரிலைப்
பூணிபூண்டுழப்புட்சிலம்புந்தண்புகலூர்பாடுமின்புலவீர்கா
ளாணியாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே (௩)

நரைகள்போந்துமெய்தளர்ந்துமூத்துடனடுங்கிநிற்குமிக்கிழவனை
வரைகள்போற்றிரளோளனேயென்றுவாழ்த்தினுங்கொடுப்பாரிலைப்
புரைவெள்ளேறுடைப்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளரையனாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே (௪)

வஞ்சநெஞ்சனைமாசழக்கனைப்பாவியைவழக்கிலியைப்
பஞ்சதுட்டனைச்சாதுவேயென்றுபாடினுங்கொடுப்பாரிலைப்
பொன்செய்செஞ்சடைப்புண்ணியன்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ணெஞ்சினோயறுத்துஞ்சுபோவதற்கியாதுமையுறவில்லையே (௫)

நலமிலாதானைநல்லனேயென்றுநரைத்தமாந்தரையிளையனேயென்று
குலமிலாதானைக்குலவனேயென்றுகூறினுங்கொடுப்பாரிலைப்
புலமெலாம்வெறிகமழும்பூம்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளலமராதமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௬)

நோயனைத்தடந்தோளனேயென்றுநொய்யமாந்தரைவிழுமிய
தாயன்றேபுலவோர்க்கெலாமென்றுசாற்றினுங்கொடுப்பாரிலைப்
போயுழன்றுகண்குழியாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்கா
ளாயமின்றிப்போயண்டமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௭)

எள்விழுந்திடம்பார்க்குமாகிலுமீக்குமீகிலனாகிலும
வள்ளலேயெங்கண்மைந்தனேயென்றுவாழ்த்தினுங்கொடுப்பாரிலைப்
புள்ளெலாஞ்சென்றுசேரும்பூம்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளள்ளற்பட்டழுந்தாதுபோவதற்கியாதுமையுறவில்லையே. (௮)

கற்றிலாதானைக்கற்றுநல்லனேகாமதேவனையொக்குமே
முற்றிலாதானைமுற்றனேயென்றுமொழியினுங்கொடுப்பாரிலைப்
பொத்திலாந்தைகள்பாட்டறாப்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளத்தனாயமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (௯)

தையலாருக்கொர்காமனேசாலநல்வழக்குடையயனே
கையுலாவியவேலனேயென்றுகழறினுங்கொடுப்பாரிலைப்
பொய்கைவாவியின்மேதிபாய்புகலூரைப்பாடுமின்புலவீர்கா
ளையனுமமருலகமாள்வதற்கியாதுமையுறவில்லையே. (கo)

செறுவினிற்செழுங்கமலமோங்குதென்புகலூர்மேவியசெல்வனை
நறவம்பூம்பொழினாவலூரன்வனப்பகையப்பன்சடையன்றன்
சிறுவன்வன்றொண்டனூரன்பாடியபாடல்பத்திவைவல்லவ
ரறவனாரடிசென்றுசேர்வதற்கியாதுமையுறவில்லையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

* சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூரில் பங்குனி உத்திரத் திருவிழாச்செலவிற்கு பொன்கொண்டுவரும்பொருட்டு, திருப்புகலூரை அடைந்து சுவாமியை வணங்கிச் சமீபத்தில் இருக்கின்ற மடாலயத்தில் திருப்பணிக்காகக் கட்டப்பட்ட செங்கற்களைத் தலையணையாகக்கொண்டு, உத்தரீயத்தை விரித்து நித்திரைசெய்தார். பின்விழித்தெழுந்தபோது, அந்தச் செங்கற்கள் எல்லாம் பொற்கட்டிகளாய் இருக்கக் கண்டு, திருவருளைத் துதித்து, திருக்கோயிலினுட்போய் "தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்" என்னும் திருப்பதிகம் பாடியருளினர்.

---

திருப்புகலூர்த் திருப்பதிகம் - அ.

சுவாமி - அக்கினீசுவரர்.
தேவி - கருந்தார்க்குழலி.

ஆக திருப்பதிகம் - ககச.

## ரகூ. திருப்புகலூர்வர்த்தமானீச்சரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைக்காந்தாரம். (உ-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பட்டம்பானிறமதியம்படர்சடைச்சுடர்விடுபாணி
நட்டநள்ளிருளாடுநாதனார்நவின்றுறைகோயில்
புட்டன்பேடையொடாடும்பூம்புகலூர்த்தொண்டர்போற்றி
வட்டஞ்சூழ்ந்தடிபரவும்வர்த்தமானீச்சரத்தாரே. (க)

முயல்வளாவியதிங்கள்வாண்முகத்தரிவையிற்றெரிவை
யியல்வளாவியதுடையின்னமிர்தனைத்தையபெருமான்
கயல்வளாவியகழனிக்கருநிறக்குவளைகண்மலரும்
வயல்வளாவியபுகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (உ)

தொண்டர்தண்கயமூழ்கித்துணையலுஞ்சாந்தமும்புகையுங்
கொண்டுகொண்டடிபரவிக்குறிப்பறி*முருகன்செய்கோலங்
கண்டுகண்டுகண்குளிரக்களிபரந்தொளிமல்குகள்ளார்
வண்டுபண்செயும்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (௩)

---

* முருகநாயனார் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடியது.

பண்ணவண்ணத்தராகிப்பாடலொடாடலறாத
விண்ணவண்ணத்தராயவிரிபுகலூரரொர்பாகம்
பெண்ணவண்ணத்தராகும்பெற்றியொடாணிணைபிணைந்த
வண்ணவண்ணத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே. (ச)

ஈசனேறமர்கடவுளின்னமிர்தெந்தையெம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீற்றர்பொலிவுடைப்பூம்புகலூரின்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செய்முடிமேல்
வாசமாமலருடையார்வர்த்தமானீச்சரத்தாரே. (ரு)

தளிரிளங்கொடிவளரத்தண்கயமிரியவண்டேறிக்
கிளரிளமுழைநுழையக்கெழுதரும்பொழிற்புகலூரி
லுளரிளஞ்சுனைமலருமொளிதருஞ்சடைமுடியதன்மேல்
வளரிளம்பிறையுடையார்வர்த்தமானீச்சரத்தாரே. (சா)

தென்சொல்விஞ்சமர்வடசொற்றிசைமொழியெழினரம்பெடுத்துத்
துஞ்சுநெஞ்சிருணீங்கத்தொழுதெழுதொல்புகலூரி
லஞ்சனம்பிதிர்ந்தனையவலைகடல்கடையவன்றெழுந்த
வஞ்சநஞ்சணிகண்டர்வர்த்தமானீச்சரத்தாரே. (எ)

சாமவேதமொர்கீதமோதியத்தசமுகன்பரவு
நாமதேயமதுடையார்நன்குணர்ந்தடிகளென்றேத்தக்
காமதேவனைவேவக்கனலெரிகொளுவியகண்ணார்
வாமதேவர்தண்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே (அ)

சீரணங்குறுநிறச்செருவுறுதிசைமுகனோடு
நாரணன்கருத்தழியநகைசெய்தசடைமுடிநம்ப
ராரணங்குறுமுமையையஞ்சுவித்தருளுதல்பொருட்டால்
வாரணத்துரிபோர்த்தார்வர்த்தமானீச்சரத்தாரே. (சூ)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையினுற்றம
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யெனவிரும்பேல்
செய்யில்வாளைகளோடுசெங்கயல்குதிகொளும்புகலூர்
மைகொள்கண்டத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே. (க0)

பொங்குதண்புனல்சூழ்ந்தபோதணிபொழிற்புகலூரின்
மங்குன்மாமதிதவழும்வர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்திகழ்ஞானசம்பந்தன்றண்டமிழ்பத்து
மெங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - வர்த்தமானீசுவரர்.
தேவி - கருந்தார்க்குழலி.

---

ஆ திருப்பதிகம் - ககரு.

---

தனமணிதையறன்பாகன்றன்னை
யனமணியயனணிமுடியுங்காணான்
பனமணிவரவரிபாதங்காணா
னினமணியிராமனதீச்சரமே. (க௯)

தறிபோலாஞ்சமணர்சாக்கியர்சொற்பேணா
லறிவோராணுமறிந்துரைமினா
மறிகையோன்றன்முடிமணியார்கங்கை
யெறிபவனிராமனதீச்சரமே. (க0)

தேனமலர்க்கொன்றையோ ...
முந்தமக்கூனமன்றே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - இராமநாதர்
தேவி - சரிவார்குழலி

---

ஆ திருப்பதிகம் - க...

---

# எஅ. திருப்பயற்றூர்.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருநேரிசை (ச-ம் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

உரித்திட்டாரானையின்றோலுதிரவாறொழுகியோட
விரித்திட்டாருமையாளஞ்சிவிரல்விதிர்த்தலறக்கண்டு
தரித்திட்டார்சிறிதுபோதுதரிக்கிலராகித்தாமுஞ்
சிரித்திட்டாரெயிறுதோன்றத்திருப்பயற்றூரனாரே (க)

உவந்திட்டங்குமையோர்பாகம்வைத்தவரூழியூழி
பவந்திட்டபரமனார்தாமலைச்சிலைநாகமேற்றிக்
கவர்ந்திட்டபுரங்கண்மூன்றுங்கனலெரியாகச்சீறிச்
சிவந்திட்டகண்ணர்போலுந்திருப்பயற்றூரனாரே. (உ)

நங்களுக்கருளதென்றுநான்மறையோதுவார்க
டங்களுக்கருளுமெங்கடத்துவன்றழலன்றன்னை
யெங்களுக்கருள்செயென்னநின்றவனாகமஞ்சுந்
திங்களுக்கருளிச்செய்தார்திருப்பயற்றூரனாரே. (௩)

பார்த்தனுக்கருளும்வைத்தார்பாம்பரையாடவைத்தார்
சாத்தனைமகனாவைத்தார்சாமுண்டிசாமவேதங்
கூத்தொடும்பாடவைத்தார்கோளராமதியநல்ல
தீர்த்தமுஞ்சடைமேல்வைத்தார்திருப்பயற்றூரனாரே. (௪)

மூவகைமூவர்போலுமுற்றுமாநெற்றிக்கண்ணர்
நாவகைநாவர்போலுநான்மறைஞானமெல்லா
மாவகையாவர்போலுமாதிரைநாளர்போலுந்
தேவர்கடேவர்போலுந்திருப்பயற்றூரனாரே. (ரு)

ஞாயிறாய்நமனுமாகிவருணனாய்ச்சோமனாகித்
தீயறாநிருதிவாயுத்திப்பியசாந்தனாகிப்
பேயறாக்காட்டிலாடும்பிஞ்ஞகனெந்தைபெம்மான்
நீயறுக்கையர்போலுந்திருப்பயற்றூரனாரே. (சா)

ஆவியாயவியுமாகியருக்கமாயபெருக்கமாகிப்
பாவியாயபாவந்தீர்க்கும்பரமனாயபிரமனாகிக்
காவியங்கண்ணளாகிக்கடல்வண்ணமாகிநின்ற
தேவியைப்பாகம்வைத்தார்திருப்பயற்றூரனாரே. (எ)

தந்தையாய்த்தாயுமாகித்தரணியாய்த்தரணியுள்ளார்க்
கெந்தையுமென்னநின்றவேழுலகுடனுமாகி
யெந்தையெம்பிரானேயென்றென்றுள்குவாருள்ளத்தென்றுஞ்
சிந்தையுஞ்சிவமுமானார்திருப்பயற்றூரனாரே. (அ)

புலன்களைப்போகநீக்கிப்புந்தியையொருங்கவைத்து
விலங்களைப்போகநின்றுவிரண்டையுநீக்கியொன்றாய
மலங்களையாறறவல்லார்மனத்தினுள்போகமாகிச்
சினங்களைக்களைவர்போலுந்திருப்பயற்றூரனாரே (சு)

மூர்த்திதன்மலையின்மீதுபோகாதுமுனிந்துநோக்கிப்
பார்த்துத்தான்பூமிமேலாற்பாய்ந்துதான்மலையைப்பற்றி
யார்த்திட்டான்முடிகள்பத்துமடர்த்துநல்லரிவையஞ்சத்
தேத்தெத்தாவென்னக்கேட்டார்திருப்பயற்றூரனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஸ்வாமி - பயற்றூர்நாதர்.
தேவி - காவியங்கண்ணி.

ஆ திருப்பதிகம் - ககஎ.

## எகூ. திருச்செங்காட்டங்குடி.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம். (கஆம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நறைகொண்டமலர்தூவிவிரையளிப்பநாடோறு
முறைகொண்டுநின்றடியார்முட்டாமேபணிசெய்யச்
சிறைகொண்டவண்டறையுஞ்செங்காட்டங்குடியதனுட்
கறைகொண்டகண்டத்தான்கணபதீச்சரத்தானே. (க)

வாரேற்றபறையொலியுஞ்சங்கொலியும்வந்தியம்ப
வூரேற்றசெல்வத்தோடோங்கியசீர்விழவோவாச்
சீரேற்றமுடைத்தாயசெங்காட்டங்குடியதனுட்
காரேற்றகொன்றையான்கணபதீச்சரத்தானே. (௨)

வரந்தையான்சோபுரத்தான்மந்திரத்தான்றந்திரத்தான்
கிரந்தையான்கோவணத்தான்கிண்கிணியான்கையதோர்
சிரந்தையான்செங்காட்டங்குடியான்செஞ்சடைசேருங்
கரந்தையான்வெண்ணீற்றான்கணபதீச்சரத்தானே. (௩)

தொங்கலுங்கமழ்சாந்துமகிற்புகையுந்தொண்டர்கொண்
டங்கையாற்றொழுதேத்தவருச்சுனற்கன்றருள்செய்தான்
செங்கயல்பாய்வயலுடுத்தசெங்காட்டங்குடியதனுட்
கங்கைசேர்வார்சடையான்கணபதீச்சரத்தானே. (௪)

பாலினானறுநெய்யாற்பழத்தினாற்பயின்றாட்டி
நூலினான்மணமாலைகொணர்ந்தடியார்புரிந்தேத்தச்
சேலினார்வயல்புடைசூழ்செங்காட்டங்குடியதனுட்
காலினாற்கூற்றுதைத்தான்கணபதீச்சரத்தானே. (௫)

நுண்ணியான்மிகப்பெரியானோவுளார்வாயுளான்
றண்ணியான்வெய்யானந்தலைமேலான்மனத்துளான்
றிண்ணியான்செங்காட்டங்குடியான்செஞ்சடைமதியக்
கண்ணியான்கண்ணுதலான்கணபதீச்சரத்தானே (௬)

மையினார்மலர்நெடுங்கண்மலைமகளோர்பாகமா
மெய்யினான்பையரவமரைக்கசைத்தான்மீன்பிறழச்
செய்யினாரகன்கழனிச்செங்காட்டங்குடியதனுட்
கையினார்கூரெரியான்கணபதீச்சரத்தானே (௭)

தோடுடையானொருகுழையுடையானரக்கன்றன்றோளடர்த்த
பீடுடையான்போர்விடையான்பெண்பாகமிகப்பெரியான்
சேடுடையான்செங்காட்டங்குடியுடையான்சேர்ந்தாடுங்
காடுடையானாடுடையான்கணபதீச்சரத்தானே (௮)

ஆனூராவுழிதருவானன்றிருவர்தேர்ந்துணரா
வானூரான்வையகத்தான்வாழ்த்துவார்மனத்துளான்
றேனூரான்செங்காட்டங்குடியான்சிற்றம்பலத்தான்
கானூரான்கழுமலத்தான்கணபதீச்சரத்தானே. (௯)

செடிநுகருஞ்சமணர்களுஞ்சீவரத்தசாக்கியரும்
படிநுகராதயருழப்பார்க்கருளாதபண்பினன்
பொடிநுகருஞ்சிறுத்தொண்டர்க்கருள்செய்யும்பொருட்டாகக்
கடிநகராய்வீற்றிருந்தான்கணபதீச்சரத்தானே. (௧௦)

கறையிலங்குமலர்க்குவளைகண்காட்டக்கடிபொழிலி
ளறையிலங்குவயற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
சிறையிலங்குபுனற்படப்பைச்செங்காட்டங்குடிசேர்த்து
மறையிலங்குதமிழ்வல்லார்வானுலகத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### பண் - பஞ்சமம். (௩-ம். திருமுறை.)

---

பைங்கோட்டுமலர்ப்புன்னைப்பறவைகாள்பயப்பூரச்
சங்காட்டந்தவிர்த்தென்னைத்தவிராநோயதந்தானே
செங்காட்டங்குடிமேய*சிறுத்தொண்டன்பணிசெய்ய
வெங்காடடுளனலேந்திவிளையாடும்பெருமானே (௧)

பொன்னம்பூங்கழிக்கானற்புணர்துணையோடுடன்வாழு
மன்னங்காளன்றில்காளகன்றும்போயவருவீர்காள்
கன்னவிறோட்சிறுத்தொண்டன்கணபதீச்சரமேய
வின்னமுதினிணையடிக்கீழெனதல்லலுரையீரே. (௨)

குட்டத்துங்குழிக்கரையுங்குளிர்பொய்கைத்தடத்தகத்து
மிட்டத்தாலிரைதேருஞ்சிறகினமடநாராய
சிட்டன்சீர்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வட்டவார்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே (௩)

கானருகும்வயலருகுங்கழியருகுங்கடலருகு
மீனிரியவருபுனலிலிரைதேர்வெண்மடநாராய
தேனமர்தார்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வானமருஞ்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. (௪)

ஆரலாஞ்சுறவமேய்ந்தகன்கழனிச்சிறகுலர்த்தும
பாரலவாயசிறுகுருகேபயிறூவிமடநாராய
சீருலாஞ்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
நீருலாஞ்சடையார்க்கென்நிலைமைசென்றுரையீரே (௫)

குறைக்கொண்டாரிடர்தீர்த்தல்கடனன்றேகுளிர்பொய்கைத்
துறைக்கெண்டைகவர்குருகேதுணைபிரியாமடநாராய
கறைக்கண்டன்பிறைச்சென்னிக்கணபதீச்சரமேய
சிறுத்தொண்டன்பெருமான்சீரருளொருநாட்பெறலாமே (௬)

கருவடியபசுங்காலவெண்குருகேயொண்கழிநாராய
யொருவடியாளிரந்தாளென்றொருநாட்சென்றுரையீரே
செருவடிதோட்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
திருவடிதன்றிருவருளேபெறலாமோதிறத்தவர்க்கே (௭)

கூராரலிரைதேர்ந்துகுளமுலவிவயலவாழும்
தாராவேமடநாராய்தமியேற்கொன்றுரையீரே
சீராளன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பேராளன்பெருமான்றனருளொருநாட்பெறலாமே. (௮)

நறப்பொலிபூங்கழிக்கானனவில்குருகேயுலகெல்லா
மறப்பலிதேர்ந்துழல்வார்க்கென்னலர்கோடலழகியதே
சிறப்புலவன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பிறப்பிலிபேர்பிதற்றிநின்றிழக்கோவெம்பெருநலமே. (௯)

---

* சிறுத்தொண்ட நாயனாரைச் சிறப்பித்துப்பாடியது.

நஞ்சடைந்தகண்டத்துநாதன்றன்னை
நளிர்மலர்ப்பூங்கணைவேளைநாசமாக
வெஞ்சினத்தீவிழித்ததொருநயனத்தானை
வியன்கெடிலவீரட்டமேவினானை
மஞ்சடுத்தநீள்சோலைமாடவீதி
மதிலாரூரிடங்கொண்டமைந்தன்றன்னைச்
செஞ்சினத்ததிரிசூலப்படையான்றன்னைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே (௫)

சன்னியையங்கொருசடையிற்கரந்தான்றன்னைக்
கடவூரில்வீரட்டங்கருதினானைப்
பொன்னிறத்தவாய்மொழியாறெமபுனிதன்றன்னைப்
பூந்துருத்திநெய்த்தானம்பொருந்தினானைப்
பன்னியநான்மறைவிரிக்கும்பண்பன்றன்னைப்
பரிந்திமையோர்தொழுதேத்திப்பரனேயென்று
சென்னிமிசைக்கொண்டணிசேவடியினானைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே (௬)

எத்திக்குமாயநின்றவிறைவன்றன்னை
யேகம்பமேயானையில்லாததெய்வம்
பொத்தித்தமயிர்பறிச்சுஞ்சமணர்பொய்யிற்
புக்கழுந்திவீழாமேபோதவாங்கிப்
பத்திக்கேவழிகாட்டிப்பாவந்தீர்த்துப்
பண்டைவினைப்பயமானவெல்லாம்போக்கித்
தித்தித்தென்மனத்துள்ளேயூறுந்தேனைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே. (எ)

கல்லாதார்மனத்தணுகாக்கடவுடன்னைக்
கற்றார்களுற்றோருங்காதலானைப்
பொல்லாதநெறியுகந்தார்புரங்கண்மூன்றும்
பொன்றிவிழவன்றுபொருசரந்தொட்டானை
நில்லாதநிணக்குரம்பைபபிணக்கநீக்க
நிறைதவத்தையடியேற்குநிறைவித்தென்றுஞ்
செல்லாதசெந்நெறிக்கேசெலவிப்பானைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே (அ)

அரியபெரும்பொருளாகிநின்றான்றன்னை
யலைகடலிலாலாலமமுதுசெய்து
கரியதொருகண்டத்துச்செங்கணேற்றுக்
கதிர்விடுமாமணிபிறங்குகாட்சியானை
யுரியபலதொழில்செய்யுமடியார்தங்கட்
குலகமெலாமுழுதளிக்குமுலப்பிலானைத்
தெரிவையொருபாகத்துச்சேர்த்தினானைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே. (௯)

போரரவமால்விடையொன்றூர்தியானைப்
புறம்பயமும்புகலூருமன்னினானை

நீரரவச்செஞ்சடை மேனிலாவெண்டிங்க
ளீங்காமைவைத்தானைநிமலன்றன்னைப்
பேரரவப்புடபகத்தேருடையவென்றிப்
பிறங்கொளிவாளரக்கன்முடியிடியச்செற்ற
சீரரவக்கழலானைச் செல்வன்றன்னைச்
செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - கணபதியீச்சுவரர்.
தேவி - திருக்குழல்மாதம்மை.

---

ஆக திருப்பதிகம் - ௨௦௦.

---

## அ௦. திருமருகலுந் திருச்செங்காட்டங்குடியும்வினாவுரை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண் - நட்டபாடை. (௩. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்

*அங்கமும்வேதமுமோதுநாவரந்தணர்நாளுமடிபரவ
மங்குன்மதிதவழ்மாடவீதிமருகனிலாவியமைந்தசொல்லாய்
செங்கயலார்புனற்செல்வமல்குசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கங்குல்விளங்கெரியேந்தியாடுங்கணபதியீச்சரங்காமுறவே. (௧)

நெய்தவழ்மூவெரிகாவலோம்புநேர்புரிநூன்மறையாளரேத்த
மைதவழ்மாடமலிந்தவீதிமருகனிலாவியமைந்தசொல்லாய்
செய்தவநான்மறையோர்களேத்துஞ்சீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கைதவழ்கூரெரியேந்தியாடுங்கணபதியீச்சரங்காமுறவே. (௨)

தோலொடுநூலிழைசேர்ந்தமார்பர்தொகுமறையோர்கள்வளர்த்தசெந்தீ
மால்புகைபோய்விம்முமாடவீதிமருகனிலாவியமைந்தசொல்லாய்
சேல்புல்குதண்வயற்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கால்புல்குபைங்கழலார்க்கவாடுங்கணபதியீச்சரங்காமுறவே. (௩)

நாமருகேள்வியர்வேள்வியோவாநான்மறையோர்வழிபாடுசெய்ய
மாமருவும்மணிக்கோயின்மேயமருகனிலாவியமைந்தசொல்லாய்
தேமருபூம்பொழிற்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
காமருசீர்மகிழ்ந்தெல்லியாடுங்கணபதியீச்சரங்காமுறவே. (௪)

சிந்தாயெனுமால்சிவனேயெனுமான்
முந்தாயெனுமான்முதல்வாவெனுமால்
கொந்தார்குவளைகுலவும்மருக
லெந்தாய்தகுமோவிவளேசறவே. (௨)

அறையார்கழலும்மழலைவரியும்
பிறையார்சடையுமுடையாய்பெரிய
மறையார்மருகன்மகிழ்வாயிவளை
யிறையார்வளைகொண்டெழில்வவ்வினையே. (௩)

ஒலிநீர்சடையிற்கரந்தாயுலகம்
பலிநீதிரிவாய்பழியில்புகழாய்
மலிநீர்மருகன்மகிழ்வாயிவளை
மெலிநீர்மையளாக்கவும்வேண்டினையே. (௪)

துணிநீலவண்ணமுகிறோன்றியன்ன
மணிநீலகண்டமுடையாய்மருகற்
கணிநீலவண்டார்குழலாளிவடன்
னணிநீலவொண்கணயர்வாக்கினையே. (௫)

பலரும்பரவப்படுவாய்சடைமேன்
மலரும்பிறையொன்றுடையாய்மருகற்
புலருந்தனையுந்துயிலாள்புடைபோந்
தலரும்படுமோவடியாளிவளே. (௬)

வழுவாள்பெருமான்கழல்வாழ்கவெனா
வெழுவாணினைவாளிரவும்பகலு
மழுவாளுடையாய்மருகற்பெருமான்
றொழுவாளிவளைத்துயராக்கினையே. (௭)

இலங்கைக்கிறைவன்விலங்கலெடுப்பத்
துலங்கவ்விரலூன்றலுந்தோன்றலனாய்
வலங்கொண்மதில்சூழ்மருகற்பெருமா
னலங்கலிவளையலராக்கினையே. (௮)

எரியார்சடையுமடியுமிருவர்
தெரியாததொர்தீத்திரளாயவனே
மரியார்பிரியாமருகற்பெருமா
னரியாளிவளையயர்வாக்கினையே. (௯)

அறிவில்சமணுமலர்சாக்கியரு
நெறியல்லனசெய்தனர்நின்றுழல்வார்
மறியேந்துகையாய்மருகற்பெருமா
னெறியார்குழலிநிறைநீக்கினையே. (௧௦)

வயஞானம்வல்லார்மருகற்பெருமா
னுயர்ஞானமுணர்ந்தடியுள்குதலா
லியன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

* திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமருகலிலிருக்கும்போது, ஒருவணிகன் வழிச்செல்வோனாகி ஒரு கன்னியையும் உடன்கொண்டு கோயிலுக்குப்புறத்திலே ஒரு மடத்தில் நித்திரைசெய்யும்போது பாம்பினாலே தீண்டப்பட்டு மாண்டான். அது கண்டு, அக்கன்னிகை மிக அயர்ந்து புலம்பி, திருக்கோயிலின் வாயிற்றிக்கைநோக்கிக் கைதொழுது பிரார்த்தித்தாள். அவளோசையை பிள்ளையார் கேட்டு, திருவுளம் இரங்கி, அவ்விஷம் நீங்கும் பொருட்டுத் திருமருகற் கடவுள்மேல் "சடையாயெனுமால்" என்னுந் திருப்பதிகம் பாடியருளினார்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருக்குறுந்தொகை (ரு-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்

பெருகலாந்தவம்பேதைமைதீரலாம்
திருகலாகியசிந்தைதிருத்தலாம்
பருகலாம்பரமாயதோராரமுதம்
மருகலானடிவாழ்த்திவணங்கவே. (க)

பாடங்கொள்பனுவற்றிறங்கற்றுப்போய்
நாடங்குள்ளனதாடியநாணிலீர்
மாடஞ்சூழ்மருகற்பெருமான்றிரு
வேடங்கைதொழவீடெளிதாகுமே (உ)

சினத்தினால்வருஞ்செய்தொழிலாம்மவை
யனைத்துநீங்கிநின்றாதரவாய்மிக
மனத்தினான்மருகற்பெருமான்றிற
நினைப்பினார்க்கில்லைநீணிலவாழ்க்கையே (௩)

ஓதுபைங்கிளிக்கொண்பாலமுதூட்டிப
பாதுகாத்துப்பலபலகற்பித்து
மாதுதான்மருகற்பெருமானுக்குத்
தூதுசொல்லவிடத்தான்றொடங்குமே. (ச)

இன்னவாறென்பதுண்டறியேனின்று
துன்னுகைவளைசோரக்கணீர்மல்கு
மன்னுதென்மருகற்பெருமான்றிற
முன்னியொண்கொடியுள்ளமுருகுமே. (ரு)

சங்குசோரக்கலையுஞ்சரியவே
மங்கைதான்மருகற்பெருமான்வரு
மங்கல்வீதியருகணையாநிற்கு
நங்கைமீரிதற்கென்செய்கேனுமே. (சா)

காட்சிபெற்றிலளாகிலுங்காதலே
மீட்சியொன்றறியாதுமிகுவதே
மாட்சியார்மருகற்பெருமானுக்குத்
தாழ்ச்சிசாலவுண்டாகுமென்றையலே. (எ)

நீடுநெஞ்சுணினைந்துகணீர்மல்கு
மோடுமாவினேடொன்றுகொடிமாதரான்
மாடநீண்மருகற்பெருமானுறைந்
கூடுநீயென்றுகூடவிழைமகுமே. (அ)

கந்தவார்குழலகட்டிலள்காரிகை
யந்தமாலவிடையோடுமன்பாயமிக
வந்திடாய்மருகற்பெருமானென்று
சிந்தைசெய்துதிகைத்திடுங்காரிகையே (சு)

ஆதியாமலையன்றெடுத்தானிற்றுச்
சோதியென்றலுந்தொல்லருள்செய்திடு
மாதியான்மருகற்பெருமான்றிற
மோதிவாழ்பவருமபர்க்குமபரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

திருமருகற்றிருப்பதிகம் - ங.

சுவாமி - மாணிக்கவண்ணர்
தேவி - வண்டுவார்குழலி.

ஆ திருப்பதிகம் - உoஅ.

# அக. திருச்சாத்தமங்கை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - பஞ்சமம். (ங-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலைதிளைக்கும்மதிசென்னிவைத்தீ
ரிருமலர்க்கணணிதன்னேடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தியயவந்தியமர்ந்தவனே. (க)

பொடிதனைப்பூசுமார்பிற்புரிநூலொருபாற்பொருந்தக்
கொடியனசாயலாளோடுடனாவதுங்கூடுவதே
கடிமணமல்கிநாளுங்கமழும்பொழிற்சாத்தமங்கை
யடிகணக்கன்பரவயவந்தியமர்ந்தவனே. (உ)

நூனலந்தங்குமார்பினுகாநீறணிந்தேறதேறி
மானனநோக்கிதன்னேடுடனாவதுமாண்பதுவே
தானலங்கொண்டுமேகந்தவழும்பொழிற்சாத்தமங்கை
யானலந்தோய்ந்தவெம்மானயவந்தியமர்ந்தவனே. (ங)

மற்றவின்மாலவரையாமதிலெய்துவெண்ணீறுபூசிப்
புற்றரவல்குலாளோடுடனாவதும்பொற்பதுவே
கற்றவர்சாத்தமங்கைநகர்கைதொழச்செய்தபாவ
மற்றவர்நாளுமேத்தவயவந்தியமர்ந்தவனே. (ச)

# அ௨. திருநாகைக்காரோணம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - குறிஞ்சி (௨-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

புனையும்விரிகொன்றைக்கடவுள்புனல்பாய
நனையுஞ்சடைமேலோர்நகுவெண்டலைசூடி
வினையில்லடியார்கள்விதியால்வழிபட்டுக்
கனையுங்கடனாகைக்காரோணத்தானே (௧)

பெண்ணாணெனநின்றபெம்மானம்பிறைச்சென்னி
யண்ணாமலைநாடனாரூருறையம்மான்
மண்ணார்முழவோவாமாடநெடுவீதிக்
கண்ணார்கடனாகைக்காரோணத்தானே (௨)

பாரோரடிதொழ விண்ணோர்பணியமதின்மூன்று
மாராரழலூட்டியடியார்க்கருள்செய்தான்
றேரார்விழவோவாச்செல்வன்றிரைசூழ்ந்த
காரார்கடனாகைக்காரோணத்தானே (௩)

மொழிசூழ்மறைபாடிமுதிருஞ்சடைதன்மே
லழிசூழ்புனல்கொண்டவண்ணலணியாய
பழிசூழ்விலராய்ப்பத்தர்பணிந்தேத்தக்
கழிசூழ்கடனாகைக்காரோணத்தானே. (௪)

ஆணும்பெண்ணுமாயடியார்க்கருணல்கிச்
சேணின்றவர்க்கின்னஞ்சிந்தைசெய்யவல்லான்
பேணிவழிபாடுபிரியாதெழுந்தொண்டர்
காணுங்கடனாகைக்காரோணத்தானே (௫)

ஏனத்தெயிறோடுமரவமெய்யபூண்டு
வானத்திளந்திங்கள்வளருஞ்சடையண்ணல்
ஞானத்துரைவல்லார்நாளும்பணிந்தேத்தக்
கானக்கடனாகைக்காரோணத்தானே. (௬)

அரையாரழனாகமக்கோடசைத்திட்டு
விரையார்வரைமார்பின்வெண்ணீறணியண்ணல்
வரையார்வனபோலவளரும்வங்கங்கள்
கரையார்கடனாகைக்காரோணத்தானே. (௭)

வலங்கொள்புகழ்பேணிவரையாலுயர்திண்டோ
ளிலங்கைக்கிறைவாடவடர்த்தங்கருள்செய்தான்
பலங்கொள்புகழ்மண்ணிற்பத்தர்பணிந்தேத்தக்
கலங்கொள்கடனாகைக்காரோணத்தானே. (௮)

திருமாலடிவீழத்திசைநான்முகனேத்தப்
பெருமானெனநின்றபெம்மான்பிறைச்சென்னிச்
செருமாலவிடையூருஞ்செல்வன்றிரைசூழ்ந்த
கருமாலகடனாகைக்காரோணத்தானே. (௯)

நல்லாரறஞ்சொல்லப்பொல்லார்புறங்கூற
வல்லாரலர்தூற்றவடியார்க்கருள்செய்வான்
பல்லார்தலைமாலையணிவான்பணிந்தேத்தக்
கல்லார்கடனாகைக்காரோணத்தானே. (௧0)

கரையார்கடனாகைக்காரோணம்மேய
நரையார்விடையானைநவிலுஞ்சம்பந்த
னுரையார்தமிழ்மாலைபாடுமவரெல்லாங்
கரையாவுருவாகிக்கலிவானடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - செவ்வழி (உ-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

கூனற்றிங்கட்குறுங்கண்ணிகான்றநெடுவெண்ணிலா
வேனற்பூத்தம்மராங்கோதையோடுவிரவுஞ்சடை
வானநாடனமரர்பெருமாற்கிடமாவது
கானல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (௧)

விலங்கலொன்றுசிலையாமதின்மூன்றுடன்வீட்டினா
னிலங்குகண்டத்தெழிலாமைபூண்டாற்கிடமாவது
மலங்கியோங்கிவருவெண்டிரைமல்கியமால்கடற்
கலங்கலோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௨)

வெறிகொளாருங்கடற்கைதைநெய்தல்விரிபூம்பொழின்
முறிகொண்ஞாழன்முடப்புன்னைமுல்லைமுகைவெண்மலர்
நறைகொள்கொன்றைநயந்தோங்குநாதற்கிடமாவது
கறைகொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௩)

வண்டுபாடவளர்கொன்றைமாலைமதியோடுடன்
கொண்டகோலங்குளிர்கங்கைதங்குங்குருள்குஞ்சியு
ஞண்டுபோலும்மனம்வைத்துகந்தவொருவற்கிடங்
கண்டல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (௪)

வார்கொள்கோலமுலைமங்கைநல்லார்மகிழ்ந்தேத்தவே
நீர்கொள்கோலச்சடைநெடுவெண்டிங்கணிகழவெய்தவே
போர்கொள்சூலப்படைபுல்குகையார்க்கிடமாவது
கார்கொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௫)

விடையதேறிவ்விடவரவசைத்தவிகிர்தரவர்
படைகொள்பூதம்பலபாடவாடும்பரமரவ
ருடைகொள்வேங்கையுரிதோலுடையார்க்கிடமாவது
கடைகொள்செல்வங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௬)

பொய்துவாழ்வார்மனம்பாழ்படுக்கும்மலர்ப்பூசனை
செய்துவாழ்வார்சிவன்சேவடிக்கேசெலுஞ்சிந்தையா
ரெய்தவாழ்வாரெழினக்கரெம்மாற்கிடமாவது
கைதல்வேலிக்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௭)

பத்திரட்டித்திரடோளுடையான்முடிபத்திற
வத்திரட்டிவிரலாலடர்த்தார்க்கிடமாவது
மைத்திரட்டிவ்வருவெண்டிரைமல்கியமால்கடல்
கத்திரட்டுங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௮)

நல்லபோதில்லுறைவானுமாலுந்நடுக்கத்திரு
வல்லராவரெனநின்றபெம்மாற்கிடமாவது
மல்லலோங்கிவ்வருவெண்டிரைமல்கியமால்கடல்
கல்லலோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௯)

உயர்ந்தபோதின்னுருவத்துடைவிட்டுழல்வார்களும
பெயர்ந்தமண்டையிடுபிண்டமாவுண்டுழல்வார்களும்
நயந்துகாணாவகைநின்றநாதர்க்கிடமாவது
கயங்கொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௧௦)

மல்குதண்பூம்புனல்வாய்ந்தொழுகும்வயற்காழியா
னல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்முன்
வல்லவாறேபுனைந்தேத்துங்காரோணத்துவண்டமிழ்
சொல்லுவார்க்குமிவைகேட்பவர்க்குந்துயரில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருநேரிசை (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மனைவிதாய்தந்தைமக்கண்மற்றுளசுற்றமென்னும்
வினையுளேவிழுந்தழுந்திவேதனைக்கிடமாகாதே
கனையுமாகடல்சூழ்நாகைமன்னுகாரோணத்தானை
நினையுமாவல்லீராகிலுய்யலாநெஞ்சினீரே. (௧)

ஐயனைவையமுண்டமாலங்கந்தோண்மேற்கொண்ட
செய்யனைச்செய்யபோதிற்றிசைமுகன்சிரமொன்றேந்து
கையனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
ஐயனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (௨)

நிருத்தனைநிமலன்றன்னைநீணிலம்விண்ணின்மிக்க
விருத்தனைவேதவித்தைவிளைபொருண்மூலமான
கருத்தனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
வொருத்தனையுணர்தலானாமுய்ந்தவாநெஞ்சினீரே. (௩)

மண்டனையிரந்துகொண்டமாயனோடசுரர்வானோர்
தெண்டிரைகடையவந்ததீவிடந்தன்னையுண்ட
கண்டனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
வண்டனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (௪)

நிறைபுனலணிந்தசென்னிநீணிலாவரவஞ்சூடி
மறையொலிபாடியாடன்மயானத்துமகிழ்ந்தமைந்தன்
கறைமலிகடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
விறைவனைநாளுமேத்தவிடும்பைபோயின்பமாமே. (௫)

வெம்பனைக்கருங்கையானைவெருவவன்றுரிவைபோர்த்த
கம்பனைக்காலறக்காய்ந்தகாலனைஞாலமேத்து
மும்பனையும்பர்கோனைநாகைக்காரோணமேய
செம்பொனைநினைந்தநெஞ்சேதிண்ணநாமுய்ந்தவாறே. (௬)

வெங்கடுங்கானத்தேழைதன்னொடும்வேடனாய்ச்சென்
றங்கமர்மலைந்துபார்த்தற்கம்புசரமருளினானை
மங்கைமாராடலோவாநாகைக்காரோணத்தானைக்
கங்குலும்பகலுங்காணப்பெற்றுநாங்களித்தவாறே (௭)

தெற்றினர்புரங்கண்மூன்றுந்தீயினில்வீழவோரம்பாற்
செற்றவெஞ்சிலையர்வஞ்சர்சிந்தையுட்சேர்விலாதார்
கற்றவர்பயிலுநாகைக்காரோணநாருதியேத்தப்
பெற்றவர்பிறந்தார்மற்றுப்பிறந்தவர்பிறந்திலாரே (௮,௯)

கருமலிகடல்சூழ்நாகைக்காரோணர்கமலபாதத்
தொருவிரனுதிக்குநில்லாதொண்டிறலரக்கனுக்கா
னிருதிறமங்கைமாரோடெம்பிரான்செம்பொனாகத்
திருவடிதரித்துநிற்கத்திண்ணநாமுய்ந்தவாறே (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவிருத்தம். (ச-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

வடிவுடைமாமலைமங்கைபங்காகங்கைவார்சடையாய்
கடிகமழ்சோலைசுலவுகடனாகைக்காரோணனே
பிடிமதவாரணம்பேணுந்துரகநிற்கப்பெரிய
விடிகுரல்வெள்ளெருதேறுமிதென்னைகொலெம்மிறையே. (௧)

கற்றார்பயில்கடனாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
விற்றாங்கியகரம்வேனெடுங்கண்ணியின்கரமே
நற்றாணெடுஞ்சிலைநாண்வலித்தகரநின்கரமே
செற்றார்புரஞ்செற்றசேவகமென்னைகொல்செப்புமினே. (௨)

தூமென்மலர்க்கணைகோத்துத்தீவேள்விதொழிற்படுத்த
காமன்பொடிபடக்காய்ந்தகடனாகைக்காரோணநின்
னாமம்பரவிநமச்சிவாயவென்னுமஞ்செழுத்துஞ்
சாமன்றுரைக்கத்தருதிகண்டாயெங்கள்சங்கரனே. (௩)

பழிவழியோடியபாவிப்பறிதலைக்குண்டர்தங்கண்
மொழிவழியோடிமுடிவேன்முடியாமைக்காத்துக்கொண்டாய்
கழிவழியோதமுலவுகடனாகைக்காரோணவென்
வழிவழியாளாகும்வண்ணமருளெங்கள்வானவனே. (௪)

செந்துவர்வாயக்கருங்கண்ணிணைவெண்ணகைத்தேமொழியார்
வந்துவலஞ்செய்துமாநடமாடமலிந்தசெல்வக்
கந்தமலிபொழில்சூழ்கடனாகைக்காரோணமென்று
சிந்தைசெய்வாரைப்பிரியாதிருக்குந்திருமங்கையே. (௫)

பனைபுரைகைம்மதயானையுரித்தபரஞ்சுடரே
கனைகடல்சூழ்தருநாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
மனைதுறந்தல்லுணவல்லமண்குண்டர்மயக்கநீக்கி
யெனைநினைந்தாட்கொண்டாய்க்கென்னினியான்செய்யுமிச்சைகளே. (௬)

சீர்மலிசெல்வம்பெரிதுடையசெம்பொன்மாமலையே
கார்மலிசோலைசூழ்கடனாகைக்காரோணனே
வார்மலிமென்முலையாள்பலிவந்திடச்சென்றிரந்து
ஊர்மலிபிச்சைகொண்டுண்பதுமாதிமையோவுரையே. (௭)

வங்கமலிகடனாகைக்காரோணத்தெம்வானவனே
யெங்கள்பெருமானோர்விண்ணப்பமுண்டதுகேட்டருளீர்
கங்கைசடையுட்கரந்தாய்க்கவ்வளத்தைமெய்யாவுமை
நங்கையறியிற்பொல்லாதுகண்டாயெங்கணாயகனே. (௮,௯)

கருந்தடங்கண்ணியுந்தானுங்கடனாகைக்காரோணத்தா
னிருந்ததிருமலையென்றிறைஞ்சாதன்றெடுக்கலுற்றான்
பெருந்தலைபத்துமிருபதுதோளுநெரிந்தலற
விருந்தருளிச்செய்ததேமற்றுச்செய்திலனெம்மிறையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

பாணத்தான்மதின்மூன்றுமெரித்தவன்
பூணத்தானரவாமைபொறுத்தவன்
காணத்தானினியான்கடனாகைக்கா
ரோணத்தானென்னநம்வினையோயுமே. (௧)

வண்டலம்பியவார்சடையீசனை
விண்டலம்பணிந்தேத்துமவிகிர்தனைக்
கண்டல்கங்கமழ்நாகைக்காரோணனைக்
கண்டலும்வினையானகழலுமே. (௨)

புனையுமாமலர்கொண்டுபுரிசடை
நனையுமாமலர்சூடியநம்பனைக்
கனையும்வார்கடனாகைக்காரோணனை
நினையவேவினையாயினநீங்குமே. (௩)

கொல்லைமால்விடையேறியகோவினை
யெல்லிமாநடமாடுமிறைவனைக்
கல்லினார்மதினாகைக்காரோணனைச்
சொல்லவேவினையானவைசோருமே. (௪)

மெய்யனைவிடையூர்தியைவெண்மழுக்
கையனைக்கடனாகைக்காரோணனை
மையனுக்கியகண்டனைவானவ
ரையனைத்தொழுவார்க்கல்லலில்லையே. (௫)

அலங்கலசேர்சடையாதிபுராணனை
விலங்கன்மெல்லியலபாகம்விருப்பனைக்
கலங்கள்சேர்கடனாகைக்காரோணனை
வலங்கொள்வார்வினையாயினமாயுமே. (௬)

சினங்கொணமாலகரிசீறியவேறினை
யினங்கொள்வானவரேத்தியவீசனைக்
கனங்கொண்மாமதினாகைக்காரோணனை
மனங்கொளவார்வினையாயினமாயுமே. (௭)

அந்தமில்புகழாயிழையார்பணிந்
தெந்தையீசனென்றேத்துமிறைவனைக்
கந்தவார்பொழினாகைக்காரோணனைச்
சிந்தைசெய்யக்கெடுந்துயர்திண்ணமே. (௮)

கருவனைக்கடனாகைக்காரோணனை
யிருவருக்கறிவொண்ணாவிறைவனை
யொருவனையுணராப்புரமூன்றெயத்
செருவனைத்தொழத்தீவினைதீருமே. (௯)

கடலகழிதழிநாகைக்காரோணனறன
வடவரையெடுத்தார்த்தவரக்கனை
யடரவூன்றியபாதமனைதரத்
தொடரவஞ்சுந்துயக்கறுங்காலனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பாரார்பரவும்பழனத்தானைப்
பருப்பதத்தானைப்பைஞ்ஞீலியானைச்
சீரார்செழும்பவளக்குன்றொப்பானைத்
திகழுந்திருமுடிமேற்றிங்கள்சூடிப்
பேராயிரமுடையபெம்மான்றன்னைப்
பிறர்தன்னைக்காட்சிக்கரியான்றன்னைக்
காரார்கடலபுடைசூழ்ந்தநாகைக்
காரோணத்தென்ஞான்றுங்காணலாமே. (௧)

விண்ணோர்பெருமானைவீரட்டானை
வெண்ணீறுமெய்க்கணிந்தமேனியானைப்
பெண்ணானையாணானைப்பேடியானைப்
பெரும்பற்றத்தண்புலியூர்பேணினானை

யண்ணாமலையானையானைந்தாடு
மணியாரூர்வீற்றிருந்தவம்மான்றன்னைக்
கண்ணார்கடல்புடைசூழ்ந்தணாகைக்
காரோணத்தென்றுங்காணலாமே. (உ)

சிறையார்வரிவண்டுதேனேபாடுந்
திருமறைக்காட்டெந்தைசிவலோகனை
மறையான்றன்வாய்மூருங்கீழ்வேளூரும்
வலிவலமுந்தேவூருமன்னியங்கே
யுறைவானையுத்தமனையொற்றியூரிற்
பற்றியாள்கின்றபரமன்றன்னைக்
கறையார்கடல்புடைசூழ்ந்தணாகைக்
காரோணத்தென்றுங்காணலாமே. (௩)

அன்னமாம்பொய்கைசூழம்பரானை
யாச்சிராமன்னகருமானைக்காவு
முன்னமேகோயிலாகக்கொண்டான்றன்னை
மூவுலகுந்தானாயமூர்த்திதன்னைச்
சின்னமாம்பன்மலர்களன்றேசூடிச்
செஞ்சடைமேல்வெண்மதியுஞ்சேர்த்தினானைக்
கன்னியம்புன்னைசூழ்ந்தணாகைக்
காரோணத்தென்றுங்காணலாமே. (௪)

நடையுடையநல்லெருதொன்றூர்வான்றன்னை
ஞானப்பெருங்கடலைநல்லூர்மேய
படையுடையமழுவாளொன்றேந்தினானைப்
பன்மையேபேசும்படிறன்றன்னை
மடையிடையேவாளையுகளும்பொய்கை
மருகல்வாய்ச்சோதிமணிகண்டனைக்
கடையுடையநெடுமாடமோங்குநாகைக்
காரோணத்தென்றுங்காணலாமே. (௫)

புலங்களிற்பூந்தேறல்வாய்ப்புகலிக்கோனைப்
பூம்புகார்க்கற்பகத்தைப்புன்கூர்மேய
வலங்கலங்கழனிசூழணிநீர்க்கங்கை
யவிர்சடைமேலாத்தரித்தவம்மான்றன்னை
யிலங்குதலைமாலைபாம்புகொண
டேகாசமிட்டியங்குமீசன்றன்னைக்
கலங்கற்கடல்புடைசூழ்ந்தணாகைக்
காரோணத்தென்றுங்காணலாமே (௬)

**பொன்மணியம்பூங்கொன்றைமாலையானைப்**
**புண்ணியனைவெண்ணீறுபூசினானைச்**
**சின்மணியமூவிலையசூலத்தானைத்**
**தென்சிராப்பள்ளிச்சிவலோகனை**
**மன்மணியைவான்சுடலையூராப்பேணி**
**வல்லெருதொன்றேறுமறைவல்லானைக்**

கன்மணிகள்வெண்டிரைசூழ்ந்தநாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (எ)

வெண்டலையும்வெண்மழுவுமேந்தினானை
விரிகோவணமசைத்தவெண்ணீற்றானைப்
புண்டலையமாலயானையுரிபோர்த்தானைப்
புண்ணியனைவெண்ணீறணிந்தான்றன்னை
யெண்டிசையுமெரியாடவல்லான்றன்னை
யேகம்பமேயானையெம்மான்றன்னைக்
கண்டலங்கழனிசூழ்ந்தநாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (அ)

சொல்லார்ந்தசோற்றுத்துறையான்றன்னைத்
தொன்னரகநன்னெறியாற்காப்பான்றன்னை
வில்லானைமீயச்சூர்மேவினானை
வேதியர்களாலவாக்கும்வேதஞ்சொல்லிப்
பொல்லாதார்தம்மரணமூன்றும்பொன்றப்
பொறியரவமார்பாரப்பூண்டான்றன்னைக்
கல்லாலின்கீழானைக்கழிசூழ்நாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (கூ)

மனைதுறந்தவல்லமணர்தங்கள்பொய்யு
மாண்புரைக்குமனக்குண்டர்தங்கள்பொய்யுஞ்
சினைபொதிந்தசீவரத்தர்தங்கள்பொய்யு
மெய்யென்றுகருதாதேபோதநெஞ்சே
பனையுரியைத்தன்னுடலிற்போர்த்தவெந்தை
யவன்பற்றேபற்றாக்காணினல்லாற்
கனைகடலின்றென்கழிசூழ்ந்தநாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே (க0)

நெடியானுமலரவனுநேடியாங்கே
நேருருவங்காணாமேசென்றுநின்ற
படியானைப்பாம்புரமேகாதலானைப்
பாம்பரையோடார்த்தபடிறன்றன்னைச்
செடிநாறும்வெண்டலையிற்பிச்சைக்கென்று
சென்றானைநின்றியூர்மேயான்றன்னைக்
கடிநாறுபூஞ்சோலையந்தநாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - கொல்லிக்கௌவாணம். (௭-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்
பாவையரைக்கிறிபேசிப்படிறாடித்திரிவீர்
செத்தார்தமெலும்பணிந்துசேவேறித்திரிவீர்
செல்வத்தைமறைத்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர்
முத்தாரமிலங்கிமிளிர்மணிவயிரக்கோவை
யவைபூணத்தந்தருளிமெய்க்கினிதாநாறுங்
கத்தூரிகமழ்சாந்துபணித்தருளவேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே (௧)

வேம்பினொடுதீங்கரும்புவிரவியெனைத்தீற்றி
விருத்திநானுமைவேண்டத்துருத்திபுக்கிருந்தீர்
பாம்பினொடுபடர்சடைகளவைகாட்டிவெருட்டிப்
பகட்டநானொட்டுவனோபலகாலுமுழன்றேன்
சேம்பினொடுசெங்கழுநீர்தண்கிடங்கிற்றிகழுந்
திருவாரூர்புக்கிருந்ததீவண்ணர்நீரே
காம்பினொடுநேத்திரங்கள்பணித்தருளவேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௨)

பூண்பதோரிளவாமைபொருவிடையொன்றேறிப்
பொல்லாதவேடங்கொண்டெல்லாருங்காணப்
பாண்பேசிப்படுதலையிற்பலிகொள்கைதவிரீர்
பாம்பினொடுபடர்சடைமேன்மதிவைத்தபண்பீர்
வீண்பேசிமடவார்கைவெள்வளைகள்கொண்டால்
வெற்பரையன்மடப்பாவைபொறுக்குமோசொல்லீர்
காண்பினியமணிமாடநிறைந்தநெடுவீதிக்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௩)

விட்டதோர்சடைதாழவீணைவிடங்காக
வீதிவிடையேறுவீர்வீணடிமையுகந்தீர்
துட்டராயினபேய்கள்சூழநடமாடிச்
சுந்தரராய்த்தூமதியஞ்சூடுவதுசுவண்டே
வட்டவார்குழன்மடவார்தம்மைமயல்செய்தன்
மாதவமோமாதிமையோவாட்டமெலாந்தீரக்
கட்டியெமக்கீவதுதானெப்போதுசொல்லீர்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௪)

மிண்டாடித்திரிதந்துவெறுப்பனவேசெய்து
வினைக்கேடுபலபேசிவேண்டியவாதிரிவீர்
தொண்டாடித்திரிவேனைத்தொழும்புதலைக்கேற்றுஞ்
சுந்தரனைக்கந்தமுதலாடையாபரணம்
பண்டாரத்தேயெனக்குப்பணித்தருளவேண்டும்
பண்டுதான்பிரமாணமொன்றுண்டேநும்மைக்

கண்டார்க்குங்காண்பரிதாய்க்கனலாகிநிமிர்ந்தீர்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௫)

இலவவிதழ்வாயுமையோடெருதேறிப்பூத
மிசைபாடவிடுபிச்சைக்கெச்சுச்சம்போது
பலவகம்புக்குழிதர்வீர்பட்டோடுசாந்தம்
பணித்தருளாதிருக்கின்றபரிசென்னபடிறே
யுலவுதிரைக்கடனஞ்சையன்றமரர்வேண்ட
வுண்டருளிச்செய்ததுமக்கிருக்கவொண்ணாதே
கலவமயிலியலவர்கணடமாடுஞ்செல்வக்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௬)

தூசுடையவகலல்குற்றூமொழியாளூட
றொலையாதகாலத்தோர்சொற்பாடாய்வந்து
தேசுடையவிலங்கையர்கோன்வரையெடுக்கவடர்த்துத்
திப்பியகீதம்பாடத்தேரொடுவாள்கொடுத்தீர்
நேசமுடையடியவர்கள்வருந்தாமையிருந்த
நிறைமறையோருறைவீழிமிழலைதனினித்தல்
காசருளிச்செயதீரின்றெனக்கருளவேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே (௭)

மாற்றமேலொன்றுரையீர்வாளாநீரிருந்தீர்
வாழ்விப்பனெனவாண்டீர்வழியடியேனுமக்கு
வாற்றவேற்றிருவுடையீர்நல்கூர்ந்தீரல்லீ
ரணியாரூர்புகப்பெய்தவருநிதியமதனிற்
றோற்றமிகுமுக்கூற்றிலொருகூறுவேண்டுந்
தாரீரேலொருபொழுதுமடியெடுக்கலொட்டேன்
காற்றனையகடும்பரிமாவேறுவதுவேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௮)

மண்ணுலகும்விண்ணுலகுமும்மதேயாட்சி
மலையரையன்பொற்பாவைசிறுவனையுந்தேறே
னெண்ணிலியுண்பெருவயிறன்கணபதியொன்றறியா
னெம்பெருமானிதுதகவோவியம்பியருள்செய்யீர்
திண்ணெனவென்னுடல்விருத்திதாரீரேயாகிற்
றிருமேனிவருந்தவேவளைக்கின்றேனுனைக்
கண்ணறையன்கொடும்பாடனென்றுரைக்கவேண்டா
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே (௯)

மறியேறுகரதலத்தீர்மாதிமையேலுடையீர்
மாநிதியந்தருவனென்றுவல்லீராயாண்டீர்
கிறிபேசிக்கீழ்வேளூர்புக்கிருந்தீரடிகேள்
கிறியுமாற்படுவனேதிருவாணையுண்டேற்
பொறிவிரவுநற்புகர்கொள்பொற்சுரிகைமேலோர்
பொற்பூவும்பட்டிகையும்புரிந்தருளவேண்டுங்
கறிவிரவுநெய்சோறுமுப்போதும்வேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (௧௦)

பண்மயத்தமொழிப்பரவைசங்கிலிக்குமெனக்கும்
பற்றாயபெருமானேமற்றாரையுடையே
னுண்மயத்தவுமக்கடியேன்குறைதீர்க்கவேண்டு
மொளிமுத்தம்பூணாரமொண்பட்டும்பூவுங்
கண்மயத்தகத்தூரிகமழ்சாந்தும்வேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரென்
றண்மயத்தாலணிநாவலாரூரன்சொன்ன
வண்டமிழ்களிவைவல்லாரமருலகாள்பவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது வெள்ளிட்டம்

திருநாகைக்காரோணத் திருப்பதிகம் - ௨.

சுவாமி - காயாரோகணேசர்.
தேவி - நீலாயதாக்ஷியம்மை.

௯௨ திருப்பதிகம் - ௨௯௯.

# ௮௫. திருச்சிக்கல்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

பண் - இந்தளம். (௨-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்

வானுலாவுமதிவந்துலவுமதின்மாளிகை
தேனுலாவுமலர்ச்சோலைமல்குந்திகழ்சிக்கலுள்
வேனல்வேளைவிழித்திட்டவெண்ணெய்ப்பெருமானடி
ஞானமாகநினைவார்வினையாயினநையுமே. (௧)

மடங்கொள்வாளைகுதிகொளுமணமலர்ப்பொய்கைசூழ்
திடங்கொண்மாமறையோரவர்மல்கியசிக்கலுள்
விடங்கொள்கண்டத்துவெண்ணெய்ப்பெருமானடிமேவியே
யடைந்துவாழுமடியாரவரல்லலறுப்பரே. (௨)

நீலநெய்தனிலவிம்மலருஞ்சுனைநீடிய
சேலுமாலுங்கழனிவ்வளமல்கியசிக்கலுள்
வேலொண்கண்ணியினாளையொர்பாகன்வெண்ணெய்ப்பிரான்
பாலவண்ணன்கழலேத்தநம்பாவம்பறையுமே. (௩)

கந்தமுந்தக்கைதைபூத்துக்கமழ்ந்துசேரும்பொழிற்
செந்துவண்டினமிசைபாடன்மல்குஞ்சிக்கலுள்
வெந்தவெண்ணீற்றண்ணல்வெண்ணெய்ப்பிரான்விரையார்கழல்
சிந்தைசெய்வார்வினையாயினதேய்வதுதிண்ணமே. (௪)

மங்குறங்குமறையோர்கண்மாடத்தயலேமிகு
தெங்குதுங்கப்பொழிற்செல்வமல்குந்திகழ்சிக்கலுள்
வெங்கண்வெள்ளேறுடைவெண்ணெய்ப்பிரானடிமேவவே
தங்குமேற்சரதந்திருநாளுந்தகையுமே (௫)

வண்டிரைத்ததும்மதுவிம்மியமாமலர்ப்பொய்கைசூழ்
தெண்டிரைக்கொண்டுபுனல்வந்தொழுகும்வயற்சிக்கலுள்
விண்டிரைந்தமலராற்றிகழ்வெண்ணெய்ப்பிரானடி
கண்டிரைத்துமனமேமதியாய்கதியாகவே (௬)

முன்னுமாடம்மதின்மூன்றுடனேயெரியாய்விழத்
துன்னுவார்வெங்கணையொன்றுசெலுத்தியசோதியான்
செந்நெலார்வயற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுன்னிநீடும்மனமேநினையாய்வினைபோயவே (௭)

தெற்றலாகியதென்னிலங்கைக்கிறைவன்மலை
பற்றினான்முடிபத்தொடுதோள்கணெரியவே
செற்றதேவன்நஞ்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுற்றுநீநினையாய்வினையாயினபோயவே. (௮)

மாலினோடருமாமறைவல்லமுனிவனும்
கோலினார்குறுகச்சிவனசேவடிகோலியுஞ்
சீலந்தாமறியார்திகழ்சிக்கல்வெண்ணெய்ப்பிரான்
பாலும்பன்மலர்தூவப்பறையுநம்பாவமே (௯)

பட்டைநற்றுவராடையினாரொடும்பாங்கிலாக்
கட்டமண்கழுக்கள்சொல்லினைக்கருதாதுநீர்
சிட்டன்சிக்கல்வெண்ணெய்ப்பெருமான்செழுமாமறைப்
பட்டன்சேவடியேபணிமின்பிணிபோகவே (௧0)

கந்தமார்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனற்
செந்தண்பூம்பொழிற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடிச்
சந்தமாச்சொன்னசெந்தமிழ்வல்லவர்வானிடை
வெந்தநீறணியும்பெருமானடிமேவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - நவநீதநாதர்.

தேவி - வேனெடுங்கண்ணியம்மை.

---

ஆ திருப்பதிகம் - உ௧உ.

---

# அச. திருக்கீழ்வேளூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். (உ - ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மின்னுலாவியசடையினர்விடையினர்மிளிர்தருமரவோடும்
பன்னுலாவியமறையொலிநாவினர்கறையணிகண்டத்தார்
பொன்னுலாவியகொன்றையந்தாரினர்புகழ்மிகுகீழ்வேளூ
ருன்னுலாவியசிந்தையர்மேல்வினையோடிடவீடாமே (க)

நீருலாவியசடையிடையரவொடுமதிசிரநிரைமாலை
வாருலாவியவனமுலையவளொடுமணிசிலம்பவையார்க்க
வேருலாவியவிறைவனதுறைவிடமெழிறிகழ்கீழ்வேளூர்
சீருலாவியசிந்தைசெய்தணைபவர்பிணியொடுவினைபோமே. (உ)

வெண்ணிலாமிகுவிரிசடையரவொடுவெள்ளெருக்கலர்மத்தம
பண்ணிலாவியபாடலோடாடலர்பயில்வுறுகீழ்வேளூர்
பெண்ணிலாவியபாகனைப்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
யுண்ணிலாவிநின்றுள்கியசிந்தையாருலகினிலுள்ளாரே (௩)

சேடுலாவியகங்கையைச்சடையிடைத்தொகுத்தவன்மிகுத்தோங்க
நாடுலாவியபலிகொளுநாதனூர்நலமிகுகீழ்வேளூர்ப்
பீடுலாவியபெருமையர்பெருந்திருக்கோயிலுட்பிரியாது
நீடுலாவியநிமலனைப்பணிபவர்நிலைமிகப்பெறுவாரே (ச)

துன்றுவார்சடைச்சுடர்மதிநகுதலைவடமணிநிரைமாலை
மன்றுலாவியமாதவரினிதியன்மணமிகுகீழ்வேளூர்
நின்றநீடியபெருந்திருக்கோயிலினிமலனைநினைவோடுஞ்
சென்றுலாவிநின்றேத்தவல்லார்வினைதேய்வதுதிணமாமே. (௫)

கொத்துலாவியகுழறிகழ்சடையனைக்கூத்தனைமகிழ்ந்துள்கித்
தொத்துலாவியநூலணிமார்பினர்தொழுதெழுகீழ்வேளூர்ப்
பித்துலாவியபத்தர்கள்பேணியபெருந்திருக்கோயிலின்மன்னு
முத்துலாவியவித்தினையேத்துமின்முடுகியவிடர்போமே. (௬)

பிறைநிலாவியசடையிடைப்பின்னலும்வன்னியுந்துன்னொருங்
கறைநிலாவியகண்டரெண்டோளினர்காதல்செய்கீழ்வேளூர்
மறையுலாவியவந்தணர்மலிதருபெருந்திருக்கோயின்மன்னு
னிறையுலாவியவீசனைநேசத்தானினைபவர்வினைபோமே. (எ)

மலைநிலாவியமைந்தனமலையினையெடுத்தலுமரக்கன்றன்
றலையெலாநெரிந்தலறிடவூன்றினனுறைதருகீழ்வேளூர்க்
கலைநிலாவியநாவினர்காதல்செய்பெருந்திருக்கோயிலுண்
ணிலைநிலாவியவீசனைநேசத்தானினையவல்வினைபோமே. (அ)

மஞ்சுலாவியகடற்கிடந்தவனொடுமலரவன்காண்பொண்ணுப்
பஞ்சுலாவியமெல்லடிப்பார்ப்பதிபாகனைப்பரிவோடுஞ்
செஞ்சொலார்பலர்பரவியதொல்புகழ்மல்கியகீழ்வேளூர்
நஞ்சுலாவியகண்டனைநணுகுமின்னடலைகணணுகாவே. (௯)

சீறுலாவியதலையினர்நிலையிலாவமணர்கள்சீவரத்தார்
வீறிலாதவெஞ்சொற்பலவிரும்பன்மின்சுரும்பமர்கீழ்வேளூ
ரேறுலாவியகொடியனேயேதமில்லபெருந்திருக்கோயின்மன்னு
பேறுலாவியபெருமையன்றிருவடிபேணுமின்றவமாமே. (க௦)

குருண்டவார்குழற்சடையுடைக்குழகனையழகமர்கீழ்வேளூர்த்
திரண்டமாமறையவர்தொழும்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
யிருண்டமேதியினினமிகுவயன்மலிகுபுகலிமன்சம்பந்தன்
றெருண்டபாடல்வல்லாரவர்சிவகதிபெறுவதுதிடமாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்

### திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஆளானவடியவர்கட் கன்பன்றன்னை
யானொருசுமாடியைநானபயமபுக்க
தாளானைத்தன்னொப்பாரில்லாதானைச்
சந்தனமுமகுங்குமமுஞ்சாந்துந்தோய்ந்த
தோளானைத்தோளாதமுத்தொப்பானைத்
தூவெளுத்தகோவணத்தையரையிலார்த்த
கீளானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௧)

சொற்பாவும்பொருடெரிந்துதூய்மைநோக்கித்
தூங்காதார்மனத்திருளைவாங்காதானை
நற்பானமையறியாதநாயினேனை
நன்னெறிக்கேசெல்லும்வண்ணநல்கினானைப்
பற்பாவுவாயாரப்பாடியாடிப்
பணிந்தெழுந்துகுறைந்தடைந்தார்பாவம்போக்க
கிற்பானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே (௨)

அளைவாயிலரவசைத்தவழகன்றன்னை
யாதரிக்குமடியவர்கட் கன்பேயென்றும்
விளைவானைமெய்ஞ்ஞானப்பொருளானானை
வித்தகனையெத்தனையும்பத்தர்பத்திக்
குளைவானையல்லாதார்க்குளையாதானை
யுலப்பிலியையுள்புக்கென்மனப்பிசாசு
கிளைவானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௩)

தாட்பாவுகமலமலர்த்தயங்குவானைத்
தலையறுத்துமாவிரதந்தரித்தான்றன்னைக்
கோட்பாவுநாளெல்லாமானான்றன்னைக்
கொடுவினையேன்கொடுநரகக்குழியினின்றுன்
மீட்பானைவித்துருவின்கொத்தொப்பானை
வேதியனைவேதத்தின்பொருள்கொள்வீணை

கேட்பானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௪)

நல்லானைநரைவிடையொன்றூர்தியானை
நாலவேதத்தாறங்கநணுகமாட்டாச்
சொல்லானைச்சுடர்மூன்றுமானான்றன்னைத்
தொண்டாகிப்பணிவார்கட்கணியான்றன்னை
வில்லானைமெல்லியலோர்பங்கன்றன்னை
மெய்யராய்நினையாதார்வினைகண்மாய்க்க
இல்லானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௫)

சுழித்தானைக்கங்கைமலர்வன்னிகொன்றை
தூமத்தமவாளரவஞ்சூடினானை
யழித்தானையரணங்கண்மூன்றும்வேவ
வாலாலநஞ்சுதனையுண்டான்றன்னை
விழித்தானைக்காமனுடல்பொடியாய்வீழ
மெல்லியலோர்பங்கனைமுன்வேனிலானைக்
கிழித்தானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே (௬)

உளரொளியையுள்ளத்தினுள்ளேநின்ற
யோகாந்தத்துறுபொருளாயிருந்தானை
விளரொளியைவிடுசுடர்களிரண்டுமொன்றும்
விண்ணொடுமண்ணுமாசமாயினானை
வளரொளியைமாகத்தினுருவினானை
வானவர்களெப்பொழுதும்வாழ்த்தியேத்துங்
கிளரொளியைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே (௭)

தடுத்தானைக்காலனைக்காலாற்பொன்றத்
தன்னடைந்தமாணிக்கன்றருள்செய்தானை
யுடுத்தானைப்புலியதளோடக்கும்பாம்பு
முன்குவாருள்ளத்தினுள்ளான்றன்னை
மடுத்தானையருநஞ்சமிடற்றுளடங்க
வானவர்கள்கூடியவத்தக்கன்வேள்வி
கெடுத்தானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே (௮)

மாண்டாரெலும்பணிந்தவாழ்க்கையானை
மயானத்திற்கூத்தனைவாளரவோடென்பு
பூண்டானைப்புறங்காட்டிலாடினானைப்
போகாதென்னுள்புகுந்திடங்கொண்டென்னை
யாண்டானையறிவரியசிந்தையானை
யசங்கையனையமரர்கடஞ்சங்கையெல்லாந்
தீண்டானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௯)

முறிப்பானபேசிமலையெடுத்தான்றானு
 முதுகிறமுன்கைந்நரம்பையெடுத்துப்பாடப்
பறிப்பான்கைச்சிறறரிவாணீட்டினானைப்
 பாவியேனெஞ்சகத்தேபாதப்போது
பொறித்தானைப்புரமூன்றுமெரிசெய்தானைப்
 பொய்யர்களைப்பொய்செய்துபோதுபோக்கிக்
கிறிப்பானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
 கேடிலியைநாடுமவர்கேடிலாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கீழ்வேளூர் திருப்பதிகம்-௨.

---

சுவாமி - அக்ஷயலிங்கமூர்த்தி
தேவி - வனமுலைநாயகி

---

ஆக திருப்பதிகம் - ௨௧௪.

---

# ௮௫. திருத்தேவூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

---

பண் - காந்தாரம், (௨-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

பண்ணிலாவியமொழியுமைபாகனெம்பெருமான்
விண்ணிலவானவர்கோனவிமலன்விடையூர்தி
தெண்ணிலாமதிதவழ்தருமாளிகைத்தேவூ
ரண்ணல்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. (௧)

ஓதிமண்டலத்தோர்முழுதுய்யவெற்பேறு
சோதிவானவன்றுதிசெயமகிழ்ந்தவன்றூநீர்த்
தீதில்பங்கயந்தெரிவையர்முகமலர்தேவூ
ராதிசேவடியடைந்தனமல்லலொன்றிலமே (௨)

மறைகளான்மிகவழிபடுமாணியைக்கொல்வான்
கறுவுகொண்டவக்காலனைக்காய்ந்தவெங்கடவுள்
செறுவில்வாளைகள்சேல்வைபொருவயற்றேவூ
ரறவன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. (௩)

முத்தன்சில்பலிக்கூர்தொறுமுறைமுறைதிரியும்
பித்தன்செஞ்சடைப்பிஞ்ஞகன்றன்னடியார்கள்
சித்தன்மாளிகைசெழுமதிதவழ்பொழிற்றேவூ
ரத்தன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. (௪)

பாடுவாரிசைபல்பொருட்பயனுகந்தன்பாற்
கூடுவார்துணைக்கொண்டதம்பற்றறப்பற்றித்
தேடுவார்பொருளானவன்செறிபொழிற்றேவூ
ராடுவானடியடைந்தனமல்லலொன்றிலமே. (௫)

பொங்குபூண்முலைப்புரிகுழலவரிவளைப்பொருப்பின்
மங்கைபங்கினன்கங்கையைவளர்சடைவைத்தான்
றிங்கள்சூடியதீநிறக்கடவுடென்றேவூ
ரங்கணனறனையடைந்தனமல்லலொன்றிலமே. (௬)

வன்புயத்தவத்தானவர்புரங்களையெரியத்
தன்புயத்துறத்தடவரைவளைத்தவன்றக்க
தென்றமிழ்க்கலைதெரிந்தவர்பொருந்தியதேவூ
ரன்பன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. (௭)

தருவுயர்ந்தவெற்பெடுத்தவத்தசமுகனெரிந்து
வெருவவூன்றியதிருவிரனெகிழ்த்துவாளவற்களித்தான
றெருவுதோறுநற்றென்றல்வந்துலவியதேவூ
ரரவுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே (௮)

முந்திக்கண்ணனுநான்முகனுமவர்காணா
வெந்தைதன்றிறலிருவருமறிதற்கரியவெம்பெருமான
செந்தினத்திசையறுபதமுரறிருத்தேவூ
ரந்திவண்ணனையடைந்தனமல்லலொன்றிலமே. (௯)

பாறுபுத்தருந்தவமணிசமணரும்பலநாள்
கூறிவைத்ததோர்குறியினைப்பிழையெனக்கொண்டு
தேறிமிக்கநஞ்செஞ்சடைக்கடவுடென்றேவூ
ராறுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே. (௧௦)

அல்லலின்றிவிண்ணாளலாங்காரணமியம்பிய
னல்லசெந்தமிழ்வல்லவன்ஞானசம்பந்த
னெல்லையில்புகழ்பரவியவெழில்வளர்தேவூர்த்
தொல்லைநம்பனைச்சொல்லியபத்தும்வல்லாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிராகம்.

பண் - சாதாரி (௩-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்

காடுபயில்வீடுமுடையோடுகலன்மூடுமுடையாடைபுலிதோ
றேடுபலியூணதுடைவேடமிகுவேதியர்திருந்துபதிதா
னாடகமதாடமஞ்ஞைபாடவரிகோடல்கைமறிப்பநலமார்
சேடுமிகுபேடையனமூடிமகிழ்மாடமிடைதேவூரதுவே. (௧)

கோளரவுகொன்றைநகுவெண்டலையெருக்குவனிகொக்கிறகொடும்
வாளரவுதண்சலமகட்குலவுசெஞ்சடைவரத்திறைவனூர்
வேளரவுகொங்கையிளமங்கையர்கள்குங்குமம்விரைக்குமணமார்
தேளரவுதென்றறெருவெங்குநிறைவொன்றிவருதேவூரதுவே. (௨)

பண்டடவுசொல்லிமலைவல்லியுமைபங்கனெமையாளுமிறைவ
னெண்டடவுவானவரிறைஞ்சுகழலோனினிதிருந்தவிடமாம்
வண்டடவுவார்பொழிலுகுத்தநறவாடிமணிசூடிவிரையார்
செண்டடவுமாளிகைசெறிந்துதிருவொன்றிவளர்தேவூரதுவே. (௩)

தடிந்தானைத்தன்னொப்பாரில்லாதானைத்
தத்துவனையுத்தமனைநினைவார்நெஞ்சிற்
படிந்தானைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநாளுழன்றவாறே. (௫)

கரந்தானைச்செஞ்சடைமேற்கங்கைவெள்ளங்
கனலாடுதிருமேனிகமலத்தோன்றன்
சிரந்தாங்குகையானைத்தேவதேவைத்
திகழொளியைத்தன்னடியேசிந்தைசெய்வார்
வருந்தாமைக்காப்பானைமண்ணாய்விண்ணாய்
மறிகடலாய்மாலவிசும்பாய்மற்றுமாகிப்
பரந்தானைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநாளுழன்றவாறே (௬)

நதியாருஞ்சடையானைநல்லூரானை
நள்ளாற்றின்மேயானைநல்லந்தானை
மதுவாரும்பொழிலுடைசூழ்வாய்மூரானை
மறைக்காட்டுமேயானையாக்கூரானை
நிதியாளன்றோழனைநீடூரானை
நெய்த்தானமேயானையாரூரென்னும்
பதியானைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநாளுழன்றவாறே (௭)

நற்றவனைநான்மறைகளாயினானை
நல்லானைநணுகாதார்புரமூன்றெய்த
செற்றவனைச்செஞ்சடைமேற்றிங்களானைத்
திருவாரூர்த்திருமூலட்டானமேய
கொற்றவனைக்கூரரவம்பூண்டான்றன்னைக்
குறைந்தடைந்துநெறியோடுங்கொண்டுசென்று
பற்றவனைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநாளுழன்றவாறே. (௮)

ஊனவனையுடலவனையுயிரானானை
யுலகேழுமானானையும்பர்கோவை
வானவனைமதிசூடும்வளவியானை
மலைமகண்முன்வராகத்தின்பின்பேசென்ற
கானவனைக்கயிலாயமலையுளானைக்
கலந்துருகிநைவார்தநெஞ்சினுள்ளே
பானவனைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநாளுழன்றவாறே. (௯)

தடுத்தானைத்தான்முனிந்துதன்றோள்கொட்டித்
தடவரையையிருபதுதோடலையினாலு
மெடுத்தானைத்தாள்விரலான்மாளவூன்றி
யெழுநரம்பினிசைபாடலினிதுகேட்டுக்

கொடுத்தானைப்பேரோடுங்கூர்வாட்டன்னைக்
குரைகழலாற்கூற்றுவனைமாளவன்று
படுத்தானைப்பள்ளியின்முக்கூட்டானைப்
பயிலாதேபாழேநானுழன்றவாறே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - முக்கோணநாதர்
தேவி - மைமேவுங்கண்ணியம்மை

ஆ திருப்பதிகம் - ௨௧௭.

# ௮௭. திருவாரூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### திருவிருக்குக்குறள்.

பண் - குறிஞ்சி (௧-ந் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

சித்தந்தெளிவீர்கா
ளத்தனாரூரைப்
பத்திமலர்தூவ
முத்தியாகுமே. (௧)

பிறவியறுப்பீர்கா
ளறவனாரூரை
மறவாதேத்துமின்
றுறவியாகுமே. (௨)

துன்பந்துடைப்பீர்கா
ளன்பனணியாரூர்
நன்பொன்மலர்தூவ
வின்பமாகுமே. (௩)

உய்யலுறுவீர்கா
ளையனாரூரைக்
கையினாற்றொழ
நையும்வினைதானே. (௪)

பிண்டமறுப்பீர்கா
ளண்டனாரூரைக்
கண்டுமலர்தூவ
விண்டுவினைபோமே. (௫)

பாசமறுப்பீர்கா
ளீசனணியாரூர்
வாசமலர்தூவ
நேசமாகுமே. (௬)

வெய்யவினைதீர
வையனணியாரூர்
செய்யமலர்தூவ
வையமுமதாமே. (௭)

அரக்கனாண்மையை
நெருக்கினானாரூர்
கருத்தினாற்றொழத்
திருத்தமாகுமே. (௮)

துள்ளுமிருவர்க்கும்
வள்ளலாரூரை
யுள்ளுமவர்தம்மேல்
விள்ளும்வினைதானே. (௯)

கடுக்கொள்சீவரை
யடக்கினானாரூ
ரெடுத்துவாழ்த்துவார்
விடுப்பர்வேட்கையே. (௧0)

சீரூர்சம்பந்த
னாரூரைச்சொன்ன
பாரூர்பாடலார்
பேராரின்பமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தந்தைதாய்தன்னுடன்றோன்றினார்புத்திரர்தாரமென்னும்
பந்தநீங்காதவர்க்குய்ந்துபோக்கில்லெனப்பற்றினாயே
வெந்தநீறாடியாராதியார்சோதியார்வேதகீத
ரெந்தையாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௯)

நெடியமால்பிரமனுநீண்டுமண்ணிடந்தின்னநேடிக்காணாப்
படியனார்பவளம்போலுருவனார்பனிவளர்மலையாள்பாக
வடிவனார்மதிபொதிசடையனார்மணியணிகண்டத்தெண்டோ
ளடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௧௦)

பல்லிதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூர
னல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனாரூ
ரெல்லியம்போதெரியாடுமெம்மீசனையேத்துபாடல்
சொல்லவேவல்லவார்தீதிலாரோதநீர்வையகத்தே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்

---

பண் - நட்டராகம். (௨-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிர்ப்புகப்
நெருக்கிவாயநித்திலந்நிரக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைக்கொடி
யருக்கன்மண்டலத்தணவுமந்தணாரூரென்பதே (௧)

விண்டவெள்ளெருக்கலர்ந்தவன்னிகொன்றைமத்தமு
மிண்டைகொண்டசெஞ்சடைமுடிச்சிவனிருந்தவூர்
கெண்டைகொண்டலர்ந்தகண்ணினார்கள்கீதவோசைபோ
யண்டரண்டமூடறுக்குமந்தணாரூரென்பதே (௨)

கறுத்தநஞ்சமுண்டிருண்டகண்டர்காலனின்னுயிர்
மறுத்துமாணிதன்றனக்குவண்மைசெய்தமைந்தனூர்
வெறித்துமேதியோடிமூசுவள்ளைவெள்ளைநீள்கொடி
யறுத்துமண்டியாவிபாயுமந்தணாரூரென்பதே. (௩)

அஞ்சுமொன்றியாறுவீசிநீறுபூசிமேனியிற்
குஞ்சியாரவந்திசெய்யவஞ்சலென்னிமன்னுமூர்
பஞ்சியாருமெல்லடிப்பணைத்தகொங்கைநுண்ணிடை
யஞ்சொலாரரங்கெடுக்குமந்தணாரூரென்பதே. (௪)

சங்குலாவுதிங்கள்சூடிதன்னையுன்னுவார்மனத்
தங்குலாவிநின்றவெங்களாதிதேவன்மன்னுமூர்
தெங்குலாவுசோலைநீடுதேனுலாவுசெண்பக
மங்குலாவியண்டநாறுமந்தணாரூரென்பதே. (௫)

கள்ளநெஞ்சவஞ்சகக்கருத்தைவிட்டருத்தியோ
டுள்ளமொன்றியுள்குவாருளத்துளானுகந்தவூர்
துள்ளிவாளைபாய்வயற்சுரும்புலாவுநெய்தல்வா
யள்ளனாரையாரல்வாருமந்தணாரூரென்பதே. (௬)

செந்துவர்வாயார்செல்வனசேவடிசிந்திப்பார்
மைந்தர்களோடுமங்கையர்கூடிமயங்குவா
ரிந்திரனாதிவானவர்சித்தரெடுத்தேத்து
மந்திரனாரூராதிரைநாளாலதுவண்ணம். (எ)

முடிகள்வணங்கிமூவாதார்கண்முன்செல்ல
வடிகொள்வேய்த்தோள்வானரமங்கையர்பின்செலலப்
பொடிகள்பூசிப்பாடுந்தொண்டர்புடைசூழ
வடிகளாரூராதிரைநாளாலதுவண்ணம். (அ)

துன்பநும்மைத்தொழாதநாள்களென்பாரு
மின்பநும்மையேத்துநாள்களென்பாரு
நும்பினெம்மைநுழையப்பணியேயென்பாரு
மன்பனாரூராதிரைநாளாலதுவண்ணம் (௯)

பாரூர்பல்லவத்தானைப்பத்தர்பணிந்தேத்தச்
சீரூர்பாடலாடலறாதசெம்மாப்பார்ந்
தோரூரொழியாதுலகமெங்கும்பணிந்தேத்து
மாரூரன்றனாதிரைநாளாலதுவண்ணம். (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

*திருநாவுக்கரசுநாயனார், திருப்புகலூரை நோக்கி எழுந்தருளிவருவதை திருஞானசம்பந்தப்பிள்ளையார் கேள்வியுற்று, அடியார் கூட்டத்தோடுஞ் சென்று, அவரை எதிர்கொண்டார். அப்பமூர்த்தி பிள்ளையாரை வணங்க, பிள்ளையார் அப்பமூர்த்தியை வணங்கி, "அப்பரே நீர் வரும் நாளிலே திருவாரூரிலே நடந்த பெருமையைச் சொல்லும்" என்ன, அப்பமூர்த்தி திருவாதிரைச்சிறப்பை "முத்துவிதானமணிப்பொற்கவரி" என்னும் திருப்பதிகத்தினாலே சொல்லியருளினார்.

---

## திருநேரிசை. (௪-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

படுகுழிப்பவ்வத்தன்னபண்டியைப்பெய்தவாற்றாற்
கெடுவதிம்மனிதர்வாழ்க்கைகாண்டொறுங்கேதுகின்றேன்
முடுகுவரிருந்துள்ளைவர்மூர்க்கரேலிவர்களோடு
மடியனேன்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௧)

புழுப்பெய்தபண்டிதன்னைப்புறமொருதோலான்மூடி
யொழுக்கறாவொன்பதுவாயொற்றுமையொன்றுமில்லைச்
சழக்குடையிதனுள்ளைவர்சங்கடம்பலவுஞ்செய்ய
வழிப்பனாய்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௨)

பஞ்சின்மெல்லடியினார்கள்பாங்கராயவர்களின்று
நெஞ்சினோய்பலவுஞ்செய்துநினையினுநினையவொட்டார்
நஞ்சணிமிடற்றினானேநாதனேநம்பனேநா
னஞ்சினேற்கஞ்சலென்னீராரூர்மூலட்டனீரே. (௩)

தொழுதகங்குழையமேவித்தோட்டிமையுடையதொண்ட
ரழுதகம்புகுந்துநின்றாரவரவர்போலுமாரூ
ரெழிலகநடுவெண்முத்தமன்றியுமோர்கொள்வேலிப்
பொழிலகம்விளங்குதிங்கட்புதுமுகிழ்சூடினாரே (௩)

நஞ்சிருண்மணிகொள்கண்டர்நகையிருளீமக்கங்குல்
வெஞ்சுடர்விளக்கதாகிவிளங்கினார்போலுமூவா
வெஞ்சுடர்முகடுதீண்டிவெள்ளிநாராசமென்ன
வஞ்சுடரணிவெண்டிங்களணியுமாரூரனாரே (௪)

எந்தளிர்நீர்மைகோலமேனியென்றிமையோரேத்தப
பைந்தளிர்க்கொம்பரன்னபடர்கொடிபயிலப்பட்டுத்
தஞ்சடைத்தொத்தினாலுந்தம்மதோர்நீர்மையாலு
மஞ்சளிராகம்போலுமடிவராரூரனாரே (௫)

வானகம்விளங்கமல்கும்வளங்கெழுமதியஞ்சூடித்
தானகமழியவந்துதாமபலிதேர்வர்போலு
மூனகங்கழிந்தவோட்டிலுண்பதுமொளிகொணஞ்ச
மானகமஞ்சுமாறுமடிகளாரூரனாரே (௬)

அஞ்சணைகணையினானையழலுறவன்றுநோக்கி
யஞ்சணைகுழலினாளையமுதமாவணைந்துநக்கு
வஞ்சணையஞ்சுமாடியாடரவாட்டுவார்தா
மஞ்சணைவேலியாரூராதரித்திடங்கொண்டாரே (௭)

வணங்கிமுன்னமரரேத்தவல்வினையானதீரப
பிணங்குடைச்சடையில்வைத்தபிறையுடைப்பெருமையண்ணல்
மணங்கமழோதிபாகமதிலாவட்டத்தாடி
யணங்கொடிமாடவீதியாரூரெம்மடிகளாரே (௮)

நகலிடம்பிறர்கட்காகநான்மறையோர்சடங்கள்
புகலிடமாகிவாழும்புகலிலியிருவர்கூடி
யிகலிடமாகநீண்டங்கீண்டெழிலழலதாகி
யகலிடம்பரவியேத்தவடிகளாரூரனாரே (௯)

ஆயிரந்திங்கண்மொய்த்தவலைகடன்முகமவாங்கி
யாயிரமசுரர்வாழுமணிமதின்மூன்றும்வேவ
வாயிரந்தோளுமட்டித்தாடியவசைவுதீர
வாயிரமடியுமவைத்தவடிகளாரூரனாரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம். (௪-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

**குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
வலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்திருமூலட்டானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.** (௧)

## திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கொக்கரைகுழலவீணைகொடுகொட்டி
பக்கமேபகுவாயனபூதங்க
ளொக்கவாடலுகந்துமன்கூத்தரா
யக்கினோடரவார்ப்பராரூரரே. (௧)

எந்தமாதவஞ்செய்தனைநெஞ்சமே
பந்தமவீடவையாயபராபர
னந்தமில்புகழாரூரரனெறி
சிந்தையுள்ளுஞ்சிரத்துளுந்தங்கவே. (௨)

வண்டுலாமலர்கொண்டுவளர்சடைக்
கிண்டைமாலைபுனைந்துமிராப்பகற்
றொண்டராகித்தொடர்ந்துவிடாதவர்க்
கண்டமாளவும்வைப்பராரூரரே. (௩)

துன்பெலாமறநீங்கிச்சுபத்தரா
யின்பெலாநெககிராப்பகலேத்திநின்
றின்பராயநினைந்தென்றுமிடையறு
வன்பராமவர்க்கன்பராரூரரே. (௪)

முருட்டுமெத்தையின்முன்கிடந்தாமுனை
மரட்டரைவரையாசறுத்திட்டுநீர்
முரட்டடித்தவத்தக்கன்றன்வேள்வியை
யரட்டடக்கிதன்னாரூரடைமினே (௫)

எம்மையாரிலையாளுமுளேனலே
னெம்மையாளுமீதுசெயவல்லரே
யம்மையாரெனக்கென்றென்றரற்றனேற்
கம்மையாரத்தந்தாராரூரையரே (௬)

தண்டவாளியைத்தக்கன்றன்வேள்வியைச்
சென்றதாடியதேவர்கணத்தனைக்
கண்டுகண்டிவள்தாதலித்தன்பதாயக்
கொண்டியாயினவாறென்றன்கோதையே. (௭)

இவணமைப்பலபேசத்தொடங்கினா
ளவணமன்றெனிலாரூரரனெனும்
பவனிவீதிவிடங்கனைக்கண்டிவ
டவனியாயினவாறென்றன்றையலே. (௮)

நீரைச்செஞ்சடைவைத்தவிமலனார்
காரொத்தமிடற்றர்கனல்வாயரா
வாரத்தருறையும்மணியாரூரைத்
தூரத்தேதொழுவார்வினைதூளியே. (௯)

உள்ளமேயொருறுதியுரைப்பனுன்
வெள்ளந்தாங்குவிரிசடைவேதிய
னள்ளனீர்வயலாரூரமர்ந்தவெம்
வள்ளல்சேவடிவாழ்த்திவணங்கிடே. (௧௦)

விண்டமாமலர்மேலுறைவானெடுங்
கொண்டலவண்ணனுங்கூடியறிகிலா
வண்டவாணன்றனாரூரடிதொழப்
பண்டைவல்வினைநில்லாபறையுமே. (௧௧)

மையுலாவியகண்டத்தனண்டத்தன்
கையுலாவியசூலத்தன்கனைகழ
லையனாரூரடிதொழுவார்க்கெலா
முய்யலாமல்லலொன்றிலைகாண்மினே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம் (௬-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

கைம்மானமதகளிற்றினுரிவையான்காண்
கறைக்கண்டன்காண்கண்ணார்நெற்றியான்கா
ணம்மான்காணாடரவொன்றாட்டினான்கா
ணனலாடிகாணயில்வாய்ச்சூலத்தான்கா
ணெம்மான்காணேழுலகுமாயினான்கா
ணெரிசுடரோன்காணிலங்குமழுவாளன்காண்
செம்மானத்தொளியன்னமேனியான்காட்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௧)

ஊனேறுபடுதலையிலுண்டியான்கா
ணோங்காரன்காணூழிமுதலானான்கா
ணானேறொன்றூர்ந்துழலுமையாறன்கா
ணண்டன்காணண்டத்துக்கப்பாலான்காண்
மானேறுகரதலத்தெம்மணிகண்டன்காண்
மாதவன்காண்மாதவத்தின்விளைவானான்காட்
டேனேறுமலர்க்கொன்றைக்கண்ணியான்காட்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௨)

ஏவணத்தசிலையான்முப்புரமெய்தான்கா
ணிறையவன்காண்மறையவன்காணீசன்றான்காண்
டேவணத்தசுடர்ச்சூலப்படையினான்காண்
சுடர்மூன்றுங்கண்மூன்றாக்கொண்டான்றான்கா
ணுவணத்தாலென்றன்னையாட்கொண்டான்கா
ணனலாடிகாணடியார்க்கமிர்தானான்காண்
டூவணத்ததிருவுருவிற்கரியுருவன்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௩)

கொங்குவார்மலர்க்கண்ணிக்குற்றாலன்காண்
கொடுமழுவன்காண்கொல்லைவெள்ளேற்றான்கா

ணைகள்பாற்றுயர்கெடுக்குமெம்பிரான்கா
ணேழ்கடலுமேழ்மலையுமாயினான்காண்
பொங்குமாகருங்கடனஞ்சுண்டான்றான்காண்
பொற்றூண்காண்செம்பவளத்திரள்போல்வான்காண்
செங்கண்வாளரமதியோடுடன்வைத்தான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (ச)

காரேறுநெடுங்குடுமிக்கயிலாயன்காண்
கறைக்கண்டன்காண்கண்ணார்நெற்றியான்காண்
போரேறுநெடுங்கொடிமேலுயர்த்தினான்காண்
புண்ணியன்காணெண்ணருப்பல்குணத்தினான்கா
ணீரேறுசுடர்ச்சூலப்படையினான்கா
ணிம்மலன்காணிகரேதுமில்லாதான்காண்
சீரேறுதிருமாலோர்பாகத்தான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே (ரு)

பிறையரவக்குறுங்கண்ணிச்சடையினான்காண்
பிறப்பிலிகாண்பெண்ணோடாணாயினான்காண்
கறையுருவமணிமிடற்றுவெண்ணீற்றான்காண்
கழற்றொழுவார்பிறப்பறுக்குங்காபாலிகா
ணிறையுருவக்கனவளையாளிடப்பாகன்கா
ணிருநிலன்காணிருநிலத்துக்கியல்பானான்காண்
சிறையுருவக்களிவண்டார்செம்மையான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே (சா)

தலையுருவச்சிரமாலைசூடினான்காண்
டமருலகந்தலைகலனாப்பலிகொள்வான்கா
ணலையுருவச்சுடராழியாக்கினான்கா
ணவ்வாழிநெடுமாலுக்கருளினான்காண்
கொலையுருவக்கூற்றுதைத்தகொள்கையான்காண்
கூரெரிநீர்மண்ணொடுகாற்றாயினான்காண்
சிலையுருவச்சரந்துரந்ததிறத்தினான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (எ)

ஐயன்காண்குமரன்காணாதியான்கா
ணடன்மழுவாடானொன்றுபியன்மேலேந்து
கையன்காண்கடற்பூதப்படையினான்காண்
கண்ணெரியாலங்கனையோடுடல்காய்ந்தான்காண்
வெய்யன்காண்டண்புனல்சூழ்செஞ்சடையான்காண்
வெண்ணீற்றான்காணவிசயற்கருள்செய்தான்காண்
செய்யன்காண்கரியன்காண்வெளியோன்றான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (அ)

மலைவளர்த்தமடமங்கைபாகத்தான்காண்
மயானத்தான்காண்மதியஞ்சூடினான்கா
ணிலைவளர்த்தமலர்க்கொன்றைமாலையான்கா
ணிறையவன்காணெறிதிரைநீர்நஞ்சுண்டான்காண்

கொலைவளர்த்தமழுவிலையசூலத்தான்காண்
கொடுங்குன்றன்காண்கொல்லையேற்றினான்காண்
சிலைவளைத்தசரந்துரந்ததிறத்தினான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௯)

பொற்றாதுமலர்க்கொன்றைசூடினான்காண்
புரிநூலன்காண்பொடியார்மேனியான்காண்
மற்றொருவர்தன்னொப்பாரில்லாதான்காண்
மறையோதிகாணெறிநீர்நஞ்சுண்டான்கா
ணெற்றாலுங்குறைவொன்றுமில்லாதான்கா
ணிறையவன்காண்மறையவன்காணீசன்றான்காண்
செற்றார்கள்புரமூன்றுஞ்செற்றான்றான்காண்
டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

உயிராவணமிருந்துற்றுநோக்கி
யுள்ளக்கிழியினுருவெழுதி
யுயிராவணஞ்செய்திட்டுன்கைத்தந்தா
லுணரப்படுவாரோடொட்டிவாழ்தி
யயிராவணமேறாதானேறேறி
யமரர்நாடாளாதேயாரூராண்ட
வயிராவணமேயென்னம்மானேநின்
னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே. (௧)

எழுதுகொடியிடையாரேழைமென்றோ
ளிளையார்கணம்மையிகழாமுன்னம்
பழுதுபடநினையேல்பாவிநெஞ்சே
பண்டுதானென்னோடுபகைதானுண்டோ
முழுதுலகில்வானவர்கண்முற்றுங்கூடி
முடியாலுறவணங்கிமுற்றம்பற்றி
யழுதுதிருவடிக்கேபூசைசெய்ய
விருக்கின்றானார்போலுமாரூர்தானே. (௨)

தேரூரார்மாவூரார்திங்களூரார்
திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடிக்
காரூரார்நின்றகழனிச்சாயற்
கண்ணார்ந்தமாடங்கலந்துதோன்று
மோரூராவுலகெலாமொப்பக்கூடி
யுமையாண்மணவாளாவென்றுவாழ்த்தி
யாரூராவாரூராவென்கின்றார்க
ளமரர்கடம்பெருமானேயெங்குற்றாயே. (௩)

கோவணமோதோலோவுடையாவது
கொல்லேறோவேழமோவூர்வதுதான்

பூவணமோபுறம்பயமோவன்றாயிற்றான்
பொருந்தாதவாழ்க்கைதிருந்தாமையோ
தீவணத்தசெஞ்சடைமேற்றிங்கள்சூடித்
திசைநான்கும்வைத்துகந்தசெந்தீவண்ண
ராவணமோவொற்றியோவம்மானார்தா
மறியேன்மற்றாராமாறாரூர்தானே. (௪)

ஏந்துமழுவாளரின்னம்பரா
ரெரிபவளவண்ணர்குடமூக்கிலார்
வாய்ந்தவளைக்கையாள்பாகமாக
வார்சடையார்வந்துவலஞ்சுழியார்
போந்தாரடிகள்புறம்பயத்தே
புகலூர்க்கேபோயினார்போரேறேறி
யாய்ந்தேயிருப்பார்போயாரூர்புக்கா
ரண்ணலார்செய்கின்றகண்மாயமே (௫)

உருவாகிக்குழம்பிருந்துகலித்துமூளை
கருநரம்பும்வெள்ளெலும்புஞ்சேர்ந்தொன்றாகி
யுருவாகிப்புறப்பட்டீங்கொருத்திதன்னால்
வளர்க்கப்பட்டுயிராருங்கண்டேபோகாராய்
மருவாகிநின்னடியேமறவேனம்மான்
மறித்தொருகாற்பிறப்புண்டேன்மறவாவண்ணந்
திருவாரூர்மணவாளாதிருத்தெங்கூரா
செம்பொனேகம்பனேதிகைத்திட்டேனே (௬)

முன்னமவனுடையநாமங்கேட்டாண்
மூர்த்தியவனிருக்குமவண்ணங்கேட்டாள்
பின்னையவனுடையவாரூர்கேட்டாள்
பெயர்த்துமவனுக்கேபிச்சியானா
ளன்னையையுமத்தனையுமன்றேநீத்தா
ளகன்றாளகலிடத்தாராசாரத்தைத்
தன்னைமறந்தாடன்னாமங்கெட்டாள்
டலைப்பட்டாணங்கைதலைவன்றாளே (௭)

ஆடுவாயநீநட்டமளவிறகுன்றா
வவியடுவாருமறையோரறிநதேனுன்னைப்
பாடுவார்தும்புருவுநாரதாதி
பரவுவாரமரர்களுமமரர்கோனுந்
தேடுவான்றிருமாலுநான்முகனுந்
தீண்டுவாண்மலைமகளுங்கங்கையாளுங்
கூடுமோநாயடியேன்செய்குற்றேவல
குறையுண்டேதிருவாரூர்குடிகொண்டீர்க்கே (௮)

நீரூருஞ்செஞ்சடையாய்நெற்றிக்கண்ணாய்
நிலாத்திங்கட்டுண்டத்தாய்நின்னைத்தேடி
யோரூருமொழியாமேயொற்றித்தெங்கு
முலகமெலாந்திரிதந்துநினைக்காண்பான்

வருகாலஞ்செலகாலமாயினானை
வண்கருப்புச்சிலைக்காமனுடலட்டானைப்
பொருவேழக்களிற்றுரிவைப்போர்வையானைப்
புள்ளரையனுடறன்னைப்பொடிசெய்தானை
யருவேள்விதகர்த்தெச்சன்றலைகொண்டானை
யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௩)

மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானை
வெண்பளிங்கினுட்பதித்தசோதியானை
யொப்பானையொப்பிலாவொருவன்றன்னை
யுத்தமனைநித்திலத்தையுலகமெல்லாம்
வைப்பானைக்களைவானைவருவிப்பானை
வல்வினையேன்மனத்தகத்தேமன்னினானை
யப்பாலைக்கப்பாலைக்கப்பாலானை
யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௪)

பிண்டத்திற்பிறந்ததொருபொருளைமற்றைப்
பிண்டத்தைப்†படைத்ததனைப்பெரியவேந்தைத்
துண்டத்திற்பணிபொருளைச்சுடுதீயாகிச்
சூழ்காலாய்நீராகிப்பாராயிற்றைக்
கண்டத்திற்றீதுநஞ்சமுதுசெய்து
கண்மூன்றுடையதொருகரும்பைப்பாலை
யண்டத்துக்கப்புறத்தார்தமக்குவித்தை
யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௫)

நீதியாய்நிலனாகிநெருப்பாய்நீராய்
நிறைகாலாயிவையிற்றினியமமாகிப்
பாதியாயொன்றாகியிரண்டாய்மூன்றாய்ப்
பரமாணுவாய்ப்பழுத்தபண்களாகிச்
சோதியாயிருளாகிச்சுவைகளாகிச்
சுவைகலந்தவப்பாலாய்வீடாய்வீட்
டாதியாயந்தமாய்நின்றான்றன்னை
யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௬,௭,௮,௯,௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*பொய்ம்மாயப்பெருங்கடலிற்புலம்பாநின்ற
புண்ணியங்காள்வினைகாள்திருவேநீங்க
ளிம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க்
கில்லையேகிடந்ததுதான்யானேல்வானோர்
தம்மானைத்தலைமகனைத்தண்ணலாரூர்த்
தடங்கடலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யு

---

† "படைத்தானை" என்றும் பாடம்.

மெம்மான்றனடித்தொடர்வா னுழிதர்கின்றே
னிடையிலேன் கெடுவீர்காளிடறேன்மின்னே. (௧)

ஐம்பெருமாபூதங்காளொருவீர் வேண்டிற்
றொருவீர் வேண்டீரீண்டிவ்வவனியெல்லா
மும்பரமேயும்வசமேயாக்கவல்லீர்
இல்லையேநுகர்போகம்யானேல்வானோ
ரும்பருமாயூழியுமாயுலகேழாகி
யொள்ளாரூர்நள்ளமிர்தாமவள்ளலானோ
தம்பெருமானுயர்நின்றவரனைக்காண்பேன்
றடைப்படுவேனாககருதித்தருக்கேன்மின்னோ (௨)

சிலவுருவிற்குறியிருத்தி நித்தலப்பற்றிச்
செழுங்கணுனைக்குமித்தூக்கமன்று
பல்லுருவிற்றொழில்பூண்ட பஞ்சபூதப்
பளகீருங்வசமனறேபாரெல்லாமு
சொல்லுருவிற்சுடர்மூன்றாயுருவுமூன்றாய்த்
தூநயனமூன்றாகியாண்டவாரூர்
நல்லுருவிற்சிவனடியேயடைவேனுமக்கா
னைப்புண்ணேன்கமைத்துநீர்நடமின்காணோ (௩)

உன்னுருவிற்சுவையொளியூறோசைநாற்றத்
துறுப்பினதுகுறிப்பாகுமைவீர்நுமக்கோர்
மன்னுருவத்தியற்கைகளாலவைப்பிறக்கைமேயா
வையகமேபோதாதேயானேல்வானோர்
பொன்னுருவைத்தென்னாரூர்மன்னுகுன்றைப்
புவிக்கெழிலாஞ்சிவக்கொழுந்தைப்புக்குநெஞ்சிற்
றன்னுருவைத்தந்தவனையெந்தைதன்னைத்
தலைப்படுவேன்றலைப்படுப்பான்றருக்கேன்மின்னே. (௪)

துப்பினைமுன்பற்றறாவிறலேமிக்க
சோர்வுபடுசூட்சியமேசுகமேநீங்க
ளொப்பனையைப்பாவித்திவ்வுலகமெல்லா
முழுறுமித்துக்குறைமுடிப்பீர்க்கரிதேயென்றன்
வைப்பினைப்பொன்மதிலாரூர்மணியைவைகு
மணாளனையெம்பெருமானைவானோர்தங்க
ளப்பனைச்செப்பிடவடைவேனும்மாலுனு
மாட்டுணேனோட்டந்தீங்கலையேன்மின்னே. (௫)

பொங்குமதமானமேயார்வச்செற்றக்
குரோதமேயுலோபமேபொறையேநீங்க
ளுங்கள்பெருமாநிலத்தினெல்லையெல்லா
முழுறுமதுகுறைமுடிப்பீர்க்கரிதேயானே
லங்கமலத்தயனொடுமாலாகிமற்று
மதற்கப்பாலொன்றாகியறியவொண்ணாச்
செங்கனகத்தணிக்குன்றைச்சிவனையாரூர்ச்
செல்வனைச்சேர்வேனும்மாற்செலுத்துணேனே. (௬)

இடர்பாவமெனமிக்கதுக்கவேட்கை
வெறுப்பேயென்றனைவீருமுலகையோடிக்
குடைகின்றீர்க்குலகங்கள்குலுங்கிநுங்கள்
குறிநின்றதமையாதேயானேல்வானோ
ரடையார்தம்புரமூன்றுமெரிசெய்தானை
யமரர்கடம்பெருமானையரனையாரூ
ருடையானைக்கடுகச்சென்றடைவேனும்மா
லாட்டுண்ணேனோட்டந்தீங்கலேயேன்மின்னே. (எ)

விரைந்தாளுநல்குரவேசெல்வேபொல்லா
வெகுட்சியேமகிழ்ச்சியேவெறுப்பேநீங்க
ணிரந்தோடிமாநிலத்தையரித்துத்தின்பீர்க்
கில்லையேநுகர்போகம்யானேல்வானோர்
கரைந்தோடவருநஞ்சையமுதுசெய்த
கற்பகத்தைத்தற்பரத்தைத்திருவாரூரிற்
பரஞ்சோதிதனைக்காண்பேனப்படேனும்பணியிற்
பரிந்தோடியோட்டந்துபகட்டேன்மின்னே (அ)

மூள்வாயதொழிற்பஞ்சேந்திரியவஞ்ச
முகரிகாணமுழுதுரியவுலகையோடி
நாள்வாயுநும்முடையமம்மரானை
நடாத்துகின்றநகமையாதேயானேல்வானோர்
நீள்வானமுகட்டதனைத்தாங்கிநின்ற
நெடுந்தூணைப்பாதாளக்கருவையாரூ
ராள்வானைக்கடுகச்சென்றடைவேனும்மா
லாட்டுண்ணேனோட்டந்தீங்கில்லேயேன்மின்னே (௯)

சுருக்கமொடுபெருக்கநிலைநிற்றல்பற்றித்
துப்பறையென்றனைவீரிவ்வுலகையோடச்
செருக்கிமிகைசெலுத்தியும்செய்கைவைகல்
செய்கின்றீரக்கமையாதேயானேனமிக்க
தருக்கிமிக்வரையெடுத்தவரக்கனாகந்
தளரவடியெடுத்தவன்றன்பாடல்கேட்டு
விரக்கமெழுந்தருளியவெம்பெருமான்பாதத்
திடையிலேன்கெடுவீர்காளிடறேன்மின்னே (௰)

திருச்சிற்றம்பலம்.

---

*சிவபிரான் திருநாவுக்கரசுநாயனாருடைய வைராக்கியத்தை யாவருக்குங் காட்டுந் தருக்குத் திருவுளங்கொண்டு அவர் திருப்புகலூரில் கைத்தொண்டு செய்யும்போது உழை வாரம் நுழைத்தவிடங்களெங்கும் பொன்னும் நவரத்தினங்களும் பிரகாசித்துக் கிடக்கும்படி அருள்செய்தார். நாயனார் அவைகளை அங்கேகிடக்கின்ற பருக்கைக் கற்களோடு சமமாக எண்ணி உழைவாரத்தில் ஏந்திக் குளத்திலேவிழ எறிந்துவிட்டார்.

பின்பு சிவபிரானுடைய திருவருளினால் அரம்பையர்கள் சுவர்க்கத்தினின்றும் வந்து, நாயனார் திருமுன்னின்று, அவரை காமவிதமாய் மோகிப்பித்தற்கு யத்தினஞ் செய்தும், அவர் தம்முடைய சித்தத்தை சிறிதும் வேறுபடாதபடி, தாஞ் செய்யுந் திருப

பணியிலே உறுதிகொண்டு இருவினை முதலியவைகளை முன்னிலைப்படுத்தி "நான் திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானுக்கு ஆளானேன், உங்களாலே நான் ஆட்டுண்ணேன் நீங்கள் என்னை அலையன்மின்" என்னுங் கருத்தால், "பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடியருளினார்.

---

திருத்தாண்டகம் (௬-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்

நீற்றினையு நெற்றிமேலிட்டார் போலு
நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார் போலுங்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங்
கண்ணின்மேற் கண்ணொன்றுடையார் போலுங்
கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலுங்
கொல்புலித்தோ லாடைக் குழகர் போலு
மாற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலு
மணியாரூர்த் திருமூலட்டானனாரே (௧)

பரியதோர் பாம்பரைமே லார்த்தார் போலும்
பாசுபதம் பார்த்தற் களித்தார் போலுங்
கரியதோர் களிற்றுரிவை போர்த்தார் போலுங்
காபாலங் கட்டங்கக் கொடியார் போலும்
பெரியதோர் மலைவில்லா வெய்தார் போலும்
போகத்தியல்பினொடு பெய்யார் போலு
மரியதோ ரரணங்க ளட்டார் போலு
மணியாரூர்த் திருமூலட்டானனாரே (௨)

துணியுடையர் தோலுடையரென்பார் போலுந்
தூயதிருமேனிச் செல்வர் போலும்
பிணியுடைய வடியாரைத் தீர்ப்பார் போலும்
பேசுவார்க் கெல்லாம் பெரியார் போலு
மணியுடைய மாநாக மார்ப்பார் போலும்
வாசுகிமா நாணாக வைத்தார் போலு
மணியுடைய நெடுவீதி நடப்பார் போலு
மணியாரூர்த் திருமூலட்டானனாரே (௩)

ஓட்டகத்தே யூணுகந்தார் போலு
மோருருவாயத் தோன்றியுயர்ந்தார் போலு
நாட்டகத்தே நடைபலவு நவின்றார் போலு
ஞானப்பெருங்கடற்கோர் நாதர் போலுங்
காட்டகத்தி லாடலுடையார் போலுங்
காமரங்கள் பாடித்திரிவார் போலு
மாட்டகத்தி லானைந்துகந்தார் போலு
மணியாரூர்த் திருமூலட்டானனாரே. (௪)

ஏனத்திளமருப்புப் பூண்டார் போலு
மிமையவர்க ளேத்தவிருந்தார் போலுங்

கானக்கல்லாற்கீழ்நிழலார்போலுங்
கடைஞ்சமுண்டிருண்டகண்டர்போலும்
வானத்திளமதிசேர்சடையார்போலும்
வான்கயிலைவெற்பின்மகிழ்ந்தார்போலு
மானத்துமுன்னெழுத்தாய்நின்றார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே. (௫)

காமனையுங்கரியாகக்காய்ந்தார்போலுங்
கடைஞ்சமுண்டிருண்டகண்டர்போலுஞ்
சோமனையுஞ்செஞ்சடைமேல்வைத்தார்போலுஞ்
சொல்லாகிச்சொற்பொருளாய்நின்றார்போலு
நாமனையும்வேதத்தார்தாமேபோலு
நங்கையோர்பான்மகிழ்ந்தநம்பர்போலு
மாமனையுந்திருமுடியார்தாமேபோலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே (௬)

முடியார்மதியரவம்வைத்தார்போலு
மூவுலகுந்தாமேயாய்நின்றார்போலுஞ்
செடியார்தலைகொண்டுழல்வார்போலுஞ்
செல்கதிதான்கண்டசிவனார்போலுங்
கடியார்நஞ்சுண்டிருண்டகண்டர்போலுங்
கங்காளவேடக்கருத்தர்போலு
மடியாரடிமையுகப்பார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே. (௭)

இந்திரத்தையினிதாகவீந்தார்போலு
மிமையவர்கள்வந்திறைஞ்சுமிறைவர்போலுஞ்
சுந்தரத்தபொடிதன்னைத்துதைந்தார்போலுந்
தூயதிருமேனித்தோன்றல்போலு
மந்திரத்தைமனத்துள்ளேவைத்தார்போலு
மாநாகநாணாகவளைத்தார்போலு
மந்திரத்தேயணியாநஞ்சுண்டார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே (௮)

பிண்டத்தைக்காக்கும்பிரானார்போலும்
பிறவியிறவியிலாதார்போலு
முண்டத்துமுக்கண்ணுடையார்போலு
முழுநீறுபூசுமுதல்வர்போலுங்
கண்டத்திறையேகறுத்தார்போலுங்
காளத்திகாரோணமேயார்போலு
மண்டத்துக்கப்புறமாய்நின்றார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே (௯)

ஒருகாலத்தொன்றாகிநின்றார்போலு
மூழிபலகண்டிருந்தார்போலும்
பெருகாமேவெள்ளந்தவிர்த்தார்போலும்
பிறப்பிடும்பைசாக்காடொன்றில்லார்போலு

சந்திரனும்வெங்கதிருமாயினானைச்
சங்கரனைச்சங்கக்குழையான்றன்னை
மந்திரமுமறைப்பொருளுமானான்றன்னை
மறுமையுமிம்மையுமானான்றன்னை
யந்திரனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௪)

பிறநெறியாய்ப்பீடாகிப்பிஞ்ஞகனுமாய்ப
பித்தனாய்ப்பத்தர்மனத்தினுள்ளே
யுறநெறியாயோமமாய்யீமக்காட்டி
லோரிபலவிடநட்டமாடினானைத்
துறநெறியாய்த்தூபமாய்த்தோற்றமாகி
நாற்றமாய்நன்மலர்மேலுறையாநின்ற
வறநெறியையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௫)

பழகியவல்வினைகள்பாற்றுவானைப்
பசுபதியைப்பாவகனைப்பாவந்தீர்க்குங்
குழகனைக்கோளரவொன்றாட்டுவானைக்
கொடுகொட்டிகொண்டதோர்கையான்றன்னை
விழவனைவீரட்டமேவினானை
விண்ணவர்களேத்திவிரும்புவானை
யழகனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே (௬)

சூளாமணிசேர்முடியான்றன்னைச்
சுண்ணவெண்ணீறணிந்தசோதியானைக்
கோள்வாயரவமசைத்தான்றன்னைக்
கொலபுலித்தோலாடைககுழகன்றன்னை
நாள்வாயும்பத்தர்மனத்துளானை
நம்பனைநக்கனைமுக்கணானை
யாள்வானையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௭)

முத்தினைமணிதன்னைமாணிக்கத்தை
மூவாதகற்பகத்தின்கொழுந்துதன்னைக்
கொத்தினைவயிரத்தைக்கொலலேறார்ந்து
கோளரவொன்றாட்டுங்குழகன்றன்னைப்
பத்தனைப்பத்தர்மனத்துளானைப்
பரிதிபோற்றிருமேனியுடையான்றன்னை
யத்தனையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௮)

பையாடரவங்கையேந்தினானைப்
பரிதிபோற்றிருமேனிப்பானீற்றானை
நெய்யாடுதிருமேனிநிமலன்றன்னை
நெற்றிமேன்மற்றொருகண்ணிறைவித்தானைச்

செய்யானைச்செழும்பவளத்திரளொப்பானைச்
செஞ்சடைமேல்வெண்டிங்களசோத்திஞனை
யையாறுமேயானையாரூரானை
யறியாதடிநாயேனயாத்தவாறே. (க)

சீரார்முடிபத்துடையான்றனைத
தேசழியத்திருவிரலாற்சிதையநூக்கிப்
பேரார்பெருமைகொடுத்தான்றன்னைப
பெண்ணிரண்டுமாணுமாய்நின்றான்றன்னைப
போரார்புரங்கள்புரளநூறும
புண்ணியனைவெண்ணீறணிந்தான்றனனை
யாரானையாரூரிலம்மான்றன்னை
யறியாதடிநாயேனயர்ததவாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

எம்பந்தவல்வினைநோயதீர்த்திட்டானகா
ணேழ்கடலுமேழுலகுமாயினான்கான
வம்புந்துகொன்றையந்தாரமாலையான்காண
வளர்மதிசேர்கண்ணியன்காண்வானோர்வேண்ட
வம்பொன்றூன்றுமெயிலுமெரிசெய்தான்கா
ணனலாடியானஞ்சுமாடினான்காண்
செம்பொன்செய்மணிமாடத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றனே. (க)

அகருலாமரையினன்காணடியார்கன்கென்று
மாரமுதாயண்ணிக்குமையாற்றான்காண்
கொகருலாமயீலியொடுகொன்றைமாலை
குளிர்மதியுங்கூரரவுநீருஞ்சென்னி
தொக்குலாஞ்சடையினன்காண்டொண்டர்செல்லுந
தூநெறிகாண்வானவர்கடுதிசெய்தேத்துந்
திகலெலாநிறைந்தபுகழ்த்திருவாரூரிற
றிருமூலட்டானத்தெஞ்செலவன்றனே. (உ)

நீரேறுசடைமுடியெங்கிமலன்றான்காண்
ணெற்றிமேலொற்றைக்கணணிறைவித்தான்காண்
வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண்
வளர்மதிசேர்சடையான்காணமாதேவன்காண்
காரேறுமுகிலனையகண்டத்தான்காண்
கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண்
சீரேறுமணிமாடத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றனே. (௩)

கானேறுகளிற்றுரிவைப்போர்வையான்காண்
கற்பகங்காண்காலனையன்றுதைசெய்தான்கா

ணூனேறு முடைதலையிற் பலிகொள்வான்கா
ணுத்தமன்கா ணொற்றியூர் மேவினுன்கா
ணனே றென்றதுவே றுமண்ணுன்கா
ணதிதன்பலவி றுத்தவாதிதான்காண்
டேனேறுமலர்ச்சோலைத் திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றுனே (௪)

பிறப்போடிறப்பெனறுமில்லாதானகாண்
பெண்ணுருவோடாணுருவமாயினுன்காண
மறபபடுமென்சிந்தைமருணீக்கினுன்காண்
வானவருமறியாதநெறிதந்தான்கா
ணறபபடுபூமலர்தூபந்தீபநலல
நறுஞ்சாந்தநகொணடேத்திநாளும்வாழ்
சிறப்போடுபூசிக்குந்திருவாரூரிற்
றிருமூலட்டானதமெஞ்செலவனறுனே (௫)

சஙகரன்காண்சககரமாற்கருளசெயதானகாண்
டருணேந்துசேகரன்காணடலைவன்றுன்கா
ணஙகமலத்தயன்சிரஙகளைந்திலொன்றை
யறுததவன்காணணிபொழிலசூழையாறருனகா
ணெங்கள்பெருமானகாணெனணிடாசளபோக
வருளசெய்யுமிறைவனகாணிமையோரேத்துஞ்
செங்கமலவயலபுடைசூழதிருவாரூரிற்
றிருமூலட்டானதமெஞ்செலவன்றுனே (௬)

நன்றருளித்தீதகற்றுநமபிரான்கா
ணன்மறையோடாறஙகமாயினுன்காண்
மின்றிகழுஞ்சோதியனகாணுதிதான்காண
வெள்ளேறுநின்றுலவுகொடியினுனகாண்
டுன்றுபொழிற்கச்சியேகமபனறுன்காண
சோறறுததுறையான்காணசோலைசூழ்ந்த
தென்றலார்மணங்கமழுந்திருவாரூரிற
றிருமூலட்டானதமெஞ்செல்வன்றுனே. (எ)

பொன்னலத்தநறுநகொனறைச்சடையினுன்காண்
புகலூரும்பூவணமுமபொருந்தினுன்காண்
மின்னலத்தநுணணிடையாள்பாகததான்காண்
வேதியன்காண்வெணபுரிநூன்மார்பினுன்காண
கொன்னலத்தமூவிலைவேலேந்தினுன்காண்
கோலமாநீறணிந்தமேனியான்காண்
செந்நலத்தவயல்புடைசூழ்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றுனே. (அ)

விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்
வேலைவிடமுண்டிருண்டகண்டத்தான்காண்
மண்டலத்திலொளிவளரவிளங்கினுன்காண்
வாய்மூருமறைக்காடுமருவினுன்காண்

புண்டரிகக்கண்ணனும்பூவின்மேலைப்
புத்தேளுங்காண்பரியபுராணன்றான்காண
வெண்டிரைநீர்வயலபுடைசூழ்திருவாரூரிற
றிருமூலட்டானத்தெந்செலவன்றானே. (௯)

செருவளருஞ்செங்கண்மாலேற்றினன்காண்
டென்னனைக்காவான்காண்டீயிலவீழ
மருவலர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்
வஞ்சகர்பாலணுகாதமைந்தன்றான்கா
ணருவரையையெடுத்தவன்றன்சிரங்கள்பத்து
மைஞ்நான்குதோளுநெரிந்தலறவன்று
திருவிரலாலடர்த்தவன்காண்டிருவாரூரிற்
றிருமூலட்டானத்தெந்செலவன்றானே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம் (௬-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

இடர்கெடுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா
வீண்டொளிசேர்கங்கைச்சடையாயென்றுஞ்
சுடரொளியாயுள்விளங்குசோதியென்றுந்
தூநீறுசேர்ந்திலங்குதோளாயென்றுங்
கடல்விடமதுண்டிருண்டகண்டாவென்றுங்
கலைமான்மறியேந்துகையாவென்று
மடல்விடையாயாரமுதேயாதீயென்று
மாரூராவென்றென்றேயலறாநில்லே (௧)

செடியேறுதீவினைகடீரும்வண்ணஞ்
சிந்தித்தேநெஞ்சமேதிண்ணமாகப்
பொடியேறுதிருமேனியுடையாயென்றும
புரந்தரன்றன்றோடுணித்தபுனிதாவென்று
மடியேனையாளாகக்கொண்டாயென்று
மம்மானேயாரூரெம்மரசேயென்றுங்
கடிநாறுபொழிறகச்சிக்கம்பாவென்றுங்
கற்பகமேயென்றென்றேகதறாநில்லே. (௨)

நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா
நித்தலுமெம்பிரானுடையகோயில்புக்குப்
புலர்வதன்முன்னலகிட்டுமெழுககுமிட்டுப்
பூமாலைபுனைந்தேத்திப்புகழ்ந்துபாடித்
தலையாரக்கும்பிட்டுக்கூத்துமாடிச்
சங்கராசயபோற்றிபோற்றியென்று
மலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதீயென்று
மாரூராவென்றென்றேயலறாநில்லே. (௩)

புண்ணியமுநன்னெறியுமாவதெல்லா
நெஞ்சமேயிதுகண்டாய்பொருந்தக்கேணீ

நுண்ணியவெண்ணூல்கிடந்தமார்பாவென்று
நுந்தாதவொண்சுடரேயென்றுநாளும்
விண்ணியங்குதேவர்களும்வேதநான்கும
விரைமலர்மேனான்முகனுமாலுங்கூடி
யெண்ணரியதிருநாமமுடையாயென்று
மெழிலாரூராவென்றேயேத்தாநில்லே (௪)

இழைத்தநாளெல்லைகடப்பதன்று
மிரவினொடுநண்பகலுமேத்திவாழ்த்திப
பிழைத்ததெலாம்பொறுத்தருள்செய்பெரியோயென்றும
பிஞ்ஞகனேமைஞ்ஞவிலுங்கண்டாவென்று
மழைத்தலறியடியேனுன்னரணங்கண்டா
யணியாரூரிடங்கொண்டவழகாவென்றுங்
குழற்சடையெங்கோனென்றுங்கூறுநெஞ்சே
குற்றமில்லையெனமேனான்கூறினேனே. (௫)

நீப்பரியபலபிறவிநீக்கும்வண்ண
நினைந்திருந்தேன்காணெஞ்சேநித்தமாகச
சேப்பிரியாவெல்லகொடியினானேயென்றுஞ்
சிவலோகநெறிதந்தசிவனேயென்றும
பூப்பிரியாநான்முகனும்புள்ளின்மேலைப்
புண்டரிகக்கண்ணனுமபோற்றியென்னத
தீப்பிழம்பாய்நின்றவனேசெல்வமல்கு
திருவாரூராவென்றேசிந்திநெஞ்சே (௬)

பற்றிநின்றபாவங்கள்பாற்றவேண்டிற்
பரகதிக்குச்செல்வதொருபரிசுவேண்டிற
சுற்றிநின்றசூழ்வினைகள்வீழ்க்கவேண்டிற்
சொல்லுகேன்கேணெஞ்சேதுஞ்சாவண்ண
முற்றவருமுறுதுணையுநீயேயென்று
முன்னையலாலொருதெய்வமுள்கேனென்றும
புற்றரவகக்சார்த்தபுனிதாவென்றும்
பொழிலாரூராவென்றேபோற்றுநில்லே. (௭)

மதிதருவனெஞ்சமேயுஞ்சுபோக
வழியாவதிதுகண்டாய்வானோர்கெல்லா
மதிபதியேயாரமுதேயாதீயென்று
மம்மானேயாரூரெம்மையாவென்றுந்
துதிசெய்துதுன்றுமலர்கொண்டுதூவிச்
சூழும்வலஞ்செய்துதொண்டுபாடிக்
கதிர்மதிசேர்சென்னியனேகாலகாலா
கற்பகமேயென்றென்றேகதறுநில்லே. (௮)

பாசத்தைப்பற்றறுக்கலாகுநெஞ்சே
பரஞ்சோதீபண்டரங்காபாவநாசா
தேசத்தொளிவிளக்கேதேவதேவே
திருவாரூர்த்திருமூலட்டாணாவென்று

நேசத்தைநீபெருக்கிநேர்நின்றுள்கி
நித்தலுஞ்சென்றடிமேல்வீழ்ந்துநின்று
வேசற்றுநின்றிமையோரேறேயென்று
மெம்பெருமானென்றென்றேயேத்தாநில்லே. (௯)

புலன்களைந்தாலாட்டுண்டுபோதுபோக்கிப்
புறம்புறமேதிரியாதேபோதுநெஞ்சே
சலங்கொள்சடைமுடியுடையதலைவாவென்றுந்
தக்கன்செய்பெருவேள்விதகர்த்தாயென்று
மிலங்கையர்கோன்சிரநெரித்தவிறைவாவென்று
மெழிலாரூரிடங்கொண்டவெந்தாயென்று
நலங்கொளடியென்றலைமேல்வைத்தாயென்று
நாடோறுநவின்றேத்தாயநன்மையாமே. (௧௦)

திருச்சிற்றமபலம்.

---

போற்றிததிருத்தாண்டகம். (௬-ம். திருமுறை.)

---

திருச்சிறறம்பலம்.

கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றி
கழலடைந்தார்செல்லுங்கதியேபோற்றி
யற்றவர்கட்காரமுதமானுய்போற்றி
யலலலறுத்தடியேனையாண்டாய்போற்றி
மற்றொருவரொப்பிலலாமைந்தாபோற்றி
வானவர்கள்போற்றுமருந்தேபோற்றி
செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௧)

வங்கமலிகடனஞ்சமுண்டாயபோற்றி
மதயானையீருரிவைபோர்த்தாய்போற்றி
கொங்கலருநறுங்கொன்றைத்தாராய்போற்றி
கொல்புலித்தோலாடைக்குழகாபோற்றி
யங்கணனேயமரர்கடம்மிறைவாபோற்றி
யாலமரநீழலறஞ்சொன்னுய்போற்றி
செங்கனகத்தனிகுன்றேசிவனேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௨)

மலையான்மடந்தைமணளாபோற்றி
மழவிடையாய்நின்பாதம்போற்றிபோற்றி
நிலையாகவென்னெஞ்சினின்றுய்போற்றி
நெற்றிமேலொற்றைக்கண்ணுடையாய்போற்றி
யிலையார்ந்தமூவிலைவேலேந்திபோற்றி
யேழ்கடலுமேழ்பொழிலுமானுய்போற்றி
சிலையாலன்றெயிலெரித்தசிவனேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௩)

பொன்னியலுமேனியனேபோற்றிபோற்றி
பூதப்படையுடையாய்போற்றிபோற்றி

மன்னியசீர்மறைநான்குமானாய்போற்றி
மறியேறுகையானேபோற்றிபோற்றி
யுன்னுமவர்க்குண்மையனேபோற்றிபோற்றி
யுலகுக்கொருவனேபோற்றிபோற்றி
சென்னிமிசைவெண்பிறையாய்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௪)

நஞ்சுடையகண்டனேபோற்றிபோற்றி
நற்றவனேநின்பாதம்போற்றிபோற்றி
வெஞ்சுடரோன்பல்லிறுத்தவேந்தேபோற்றி
வெண்மதியங்கண்ணிவிகிர்தாபோற்றி
துஞ்சிருளிலாடலுகந்தாயபோற்றி
தூநீறுமெய்க்கணிந்தசோதீபோற்றி
செஞ்சடையாய்நின்பாதம்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி (௫)

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றி
சதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி
பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றி
புண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி
யங்கமலத்தயனோடுமாலுங்காணா
வனலுருவாநின்பாதம்போற்றிபோற்றி
செங்கமலத்திருப்பாதம்போற்றிபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௬)

வம்புலவுகொன்றைச்சடையாய்போற்றி
வான்பிறையும்வாளரவும்வைத்தாய்போற்றி
கொம்பனையநுண்ணிடையாள்கூறாபோற்றி
குரைகழலாற்கூற்றுதைத்தகோவேபோற்றி
நம்புமவர்க்கரும்பொருளேபோற்றிபோற்றி
நாலவேதமாறங்கமானாய்போற்றி
செம்பொனேமரகதமேமணியேபோற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௭)

உள்ளமாயுள்ளத்தேநின்றாய்போற்றி
யுகப்பார்மனத்தென்றுநீங்காய்போற்றி
வள்ளலேபோற்றிமணாளாபோற்றி
வானவர்கோன்றோடுணித்தமைந்தாபோற்றி
வெள்ளையேறேறும்விகிர்தாபோற்றி
மேலோர்க்குமேலோர்க்குமேலாய்போற்றி
தெள்ளுநீர்க்கங்கைச்சடையாய்போற்றி
திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௮)

பூவார்ந்தசென்னிப்புனிதாபோற்றி
புத்தேளிர்போற்றும்பொருளேபோற்றி
தேவார்ந்ததேவர்க்குந்தேவேபோற்றி
திருமாலுக்காழியளித்தாய்போற்றி

# ௯௮. திருவிரும்பூளை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### வினாவுரை.

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளையிடங்கொண்டவீசன்
காரார்கடனஞ்சமுதுண்டகருத்தே. (௧)

தொழலார்கழலேதொழுதொண்டர்கள்சொல்லீர்
குழலார்மொழிக்கோல்வளையோடுடனாகி
யெழிலாரிரும்பூளையிடங்கொண்டவீசன
கழறான்கரிகானிடையாடுகருத்தே. (௨)

அன்பாலடிகைதொழுவீரறியீரே
மின்போன்மருங்குன்மடவாளொடுமேவி
யின்பாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
பொன்போற்சடையிற்புனல்வைத்தபொருளே. (௩)

நச்சித்தொழுவீர்கணமக்கிதுசொல்லீர்
கச்சிப்பொலிகாமக்கொடியுடன்கூடி
யிச்சித்திரும்பூளையிடங்கொண்டவீச
னுச்சித்தலையிற்பலிகொண்டுழலூணே (௪)

சுற்றார்ந்தடியேதொழுவீரிதுசொல்லீர்
நற்றாழ்குழனங்கையொடுமுடனாகி
யெற்றேயிரும்பூளையிடங்கொண்டவீசன்
புற்றாடரவோடென்புபூண்டபொருளே. (௫)

தோடார்மலர்தூய்த்தொழுதொண்டர்கள்சொல்லீர்
சேடார்குழற்சேயிழையோடுடனாகி
யீடாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
காடார்கடுவேடுவனானகருத்தே. (௬,௭)

ஒருக்கும்மனத்தன்பருள்ளீரிதுசொல்லீர்
பருக்கைமதவேழமுரித்துமையோடு
மிருக்கையிரும்பூளையிடங்கொண்டவீச
னரக்கன்னுரந்தீர்த்தருளாக்கியவாறே. (௮)

துயராயினநீங்கித்தொழுந்தொண்டர்சொல்லீர்
கயலார்கருங்கண்ணியொடும்முடனாகி
யியல்பாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
முயல்வாரிருவர்க்கெரியாகியமொய்ம்பே. (௯)

துணைநன்மலர்தூய்த்தொழுந்தொண்டர்கள்சொல்லீர்
பணைமென்முலைப்பார்ப்பதியோடுடனாகி
யிணையில்லிரும்பூளையிடங்கொண்டவீச
னணைவில்சமண்சாக்கியமாக்கியவாறே. (௰)

எந்தையிரும்பூளையிடங்கொண்டவீசன்
சந்தம்பயிலசண்பையுண்ஞானசம்பந்தன்
செந்தண்டமிழ்செப்பியபத்திவைவல்லார்
பந்தம்மறுத்தோங்குவர்பானமையினாலே, (௧௧)

திருச்சிற்றமபலம்.

சுவாமி - காசியாரணியர்.
தேவி - உமையம்மை

ஆ திருப்பதிகம - உ௬௭.

# ௬௯. திருவாரதைப்பெரும்பாழி.

## திருஞானசமபந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லி. (௩-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம

பைத்தபாமபோடரைக்கோவணம்பாய்புலி
மொய்த்தபேய்கணமுழக்கமுதுகாட்டிடை
நித்தமாகநட மாடிவெண்ணீறணி
பித்தர்கோயிலலரதைப்பெரும்பாழியே (௧)

கயலசேலகருங்கண்ணியர்நாடொறும்
பயலைகொள்ளப்பலிதேர்ந்துழல்பான்மையா
ரியலைவானோர்நினைந்தோர்களுக்கெண்ணருமப
பெயரர்கோயிலலரதைப்பெரும்பாழியே. (௨)

கோடல்சாலவ்வுடையார்கொலையானையின்
மூடல்சாலவ்வுடையார்முளிகானிடை
யாடல்சாலவ்வுடையாரழகாகிய
பீடர்கோயிலலரதைப்பெரும்பாழியே. (௩)

மண்ணர்நீரார்அழலார்மலிகாலினார்
விண்ணர்வேதம்விரித்தோதுவார்மெய்ப்பொருள்
பண்ணர்பாடலுடையாரொருபாகமும்
பெண்ணர்கோயிலலரதைப்பெரும்பாழியே. (௪)

மறையர்வாயின்மொழிமானொடுவெண்மழுக்
கறைகொள்சூலம்முடைக்கையர்காரார்தரு
நறைகொள்கொன்றைநயந்தார்தருஞ்சென்னிமேற்
பிறையர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (௫)

புற்றரவம்புலித்தோலரைக்கோவணந்
தற்றிரவின்னடமாடுவர்தாழ்தரு
சுற்றமர்பாரிடந்தொல்கொடியின்மிசைப்
பெற்றர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (௬)

துணையிறுத்தஞ்சுரிசங்கமர்வெண்பொடி
யிணையிலேற்றையுகந்தேறுவரும்மெரி
கணையினன் முப்புரஞ்செற்றவர் கையினிற்
பிணையர்கோயிலலரதைப்பெரும்பாழியே. (௭)

சரிவிலாவல்லரககன்றடந்தோடலை
நெரிவிலாரவ்வடர்த்தாரநெறிமென்குழ
லரிவைபாகம்மமர்ந்தாரடியாரொடும
பிரிவில்கோயிலலரதைப்பெரும்பாழியே. (௮)

வரியராவென்பணிமார்பினர்நீர்மலகு
மெரியராவுஞ்சடைமேற்பிறையேற்றவர்
கரியமாலோடயன்காண்பரிதாகிய
பெரியர்கோயில்லரதைப்பெருமபாழியே. (௯)

நாணிலாதசமண்சாக்கியர்நாடொறு
மேணிலாதம்மொழியவ்வெழிலாயவர்
சேணுலாமும்மதிறீயெழச்செற்றவர்
பேணுகோயில்லரதைப்பெரும்பாழியே. (௧௦)

நீரினர்புன்சடைநிமலனுக்கிடமெனப்
பாரினர்பரவரதைப்பெருமபாழியைச்
சீரினர்காழியுண்ஞானசம்பந்தன்செய்
யேரினர்தமிழ்வல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமி - பாதாளநாதர்.
தேவி - அலங்காரநாயகி.

ஆட திருப்பதிகம் - ௧௭௧.

## ௧௦௦. திரு அவளிவணல்லூர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

திருவிராகம்.

பண் - சாதாரி. (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கொம்பிரியவண்டுலவுகொன்றைபுரிநூலொடுகுலாவித்
தம்பரிசினேடுசுடுநீறுதடவந்திடபமேறிக்
கம்பரியசெம்பொனெடுமாடமதில்கல்வரைவிலாக
வம்பெரியவெய்தபெருமானுறைவதவளிவணலூரே. (௧)

ஓமையனகள்ளியனவாகையனகூகைமுரலோசை
யீமமெரிசூழ்சுடலைவாசமுதுகாடுநடமாடித்
தூய்மையுடையக்கொடரவம்மிரவிமிக்கொளிதுளங்க
வாமையொடுபூணுமடிகள்ளுறைவதவளிவணலூரே. (௨)

நீறுடையமார்பிலிமவான்மகளொர்பாகநிலைசெய்து
கூறுடையவேடமொடுகூடியழகாயதொருகோல
மேறுடையரேனுமிடுகாடிரவினின்றுநடமாடு
மாறுடையவார்சடையினானுறைவதவளிவணலூரே. (௩)

பிணியுமிலர்கேடுமிலர்தோற்றமிலரென்றுலகுபேணிப்
பணியுமடியார்களனபாவமறவின்னருள்பயந்து
துணியுடையதோலுமுடைகோவணமுநாகமுடனொருங்க
வணியுமழகாகவுடையானுறைவதவளிவணலூரே. (௪)

குழலின்வரிவண்டுமுரன்மெல்லியனபொன்மலர்கள்கொண்டு
கழலின்மிசையிண்டைபுனைவாரகடவுளென்றமரர்கூடித்
தொழலும்வழிபாடுமுடையார்துயருநோயுமிலராவ
ரழலுமழுவேந்துகையினானுறைவதவளிவணலூரே. (௫)

துஞ்சலிலராயமரநின்றுதொழுதேத்தவருள்செய்து
நஞ்சமிடறுண்டுகரிதாயவெளிதாகியொருநம்பன்
மஞ்சுறநிமிர்ந்துமைநடுங்கவகலத்தொடுவளாவி
யஞ்சமதவேழவுரியானுறைவதவளிவணலூரே. (௬)

கூடரவமொந்தைகுழலியாழ்முழவினோடுமிசைசெய்யப்
பீடரவமாகுபடரம்புசெய்துபேரிடபமோடுங்
காடரவமாகுகனல்கொண்டிரவினின்றுநடமாடி
யாடரவமார்த்தபெருமானுறைவதவளிவணலூரே. (௭)

ஒருவரையுமேலவலிகொடேனெனவெழுந்தவிறலோனிப்
பெருவரையின்மேலொர்பெருமானுமுளனோவெனவெகுண்ட
கருவரையுமாழ்கடலுமன்னதிறலைகளுடையோனை
யருவரையிலூன்றியடர்த்தானுறைவதவளிவணலூரே. (௮)

பொறிவரியநாகமுயர்பொங்கணையணைந்தபுகழோனும
வெறிவரியவண்டறையவிண்டமலர்மேலவிழுமியோனுஞ்
செறிவரியதோற்றமொடுவாற்றன்மிகநின்றுசிறிதேயு
மறிவரியனாயபெருமானுறைவதவளிவணலூரே. (௯)

கழியருகுபள்ளியிடமாகவடுமீன்கள்கவர்வாரும்
வழியருகுசாரவெயினின்றடிசிலுள்கிவருவாரும்
பழியருகினாரொழிகபான்மையொடுநின்றுதொழுதேத்து
மழியருவிதோய்ந்தபெருமானுறைவதவளிவணலூரே (௧௦)

ஆனமொழியானதிறலோர்பரவுமவளிவணலூர்மேற்
போனமொழிநன்மொழிகளாயபுகழ்தோணிபுரவூரன்
ஞானமொழிமாலைபலநாடுபுகழ்ஞானசம்பந்தன்
றேனமொழிமாலைபுகழ்வார்துயர்கடீயதிலர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருநேரிசை. (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தோற்றினானெயிறுகவ்வித்தொழிலுடையரக்கன்றன்னைத்
தேற்றுவான்சென்றுசொல்லச்சிக்கெனத்தவிருமென்று
வீற்றினையுடையனாகிவெடுவெடுத்தெழுந்தவன்ற
னாற்றலையழிக்கவல்லாரவளிவணல்லூராரே (க)

வெம்பினாரரக்கரெல்லாமிகச்சழக்காயிற்றென்று
செம்பினாலெடுத்தகோயிற்சிக்கெனச்சிதையுமென்ன
நம்பினாரென்றுசொல்லிநன்மையான்மிக்குநோக்கி
யம்பினாலழியவெய்தாரவளிவணல்லூராரே. (உ)

கீழ்ப்படக்கருதலாமோகீர்த்திமையுள்ளதாகிற்
றோட்பெருவலியினாலேநொலைப்பனான்மலையையென்று
வேட்படவைத்தவாறேவிதிர்விதிர்த்தரக்கன்வீழ்ந்து
வாட்படக்கருதிப்புக்காரவளிவணல்லூராரே (ங)

நிலைவலம்வல்லனல்லனேர்மையைநினையமாட்டான்
சிலைவலங்கொண்டசெல்வன்சீரியகயிலைதன்னைத்
தலைவலங்கருதிப்புக்குத்தாக்கினான்றன்னையன்று
வலைகுலையாக்குவித்தாரவளிவணல்லூராரே. (ச)

நல்வலியொன்றனாகித்தனதொருபெருமையாலே
மெய்வ்வலியுடையனென்றுமிகப்பெருந்தேரையூர்ந்து
செவ்வலிகூர்விழியாற்சிரமத்தாலெடுக்குற்றானை
யவ்வலிதீர்க்கவல்லாரவளிவணல்லூராரே. (ரு)

நன்மைதானறியமாட்டானடுவிலாவரக்கர்கோமான்
வன்மையேகருதிச்சென்றுவலிதனைச்செலுத்தலுற்றுக்
கன்மையான்மலையையோடிக்கருதித்தானெடுத்துவாயா
லம்மையோவென்னவைத்தாரவளிவணல்லூராரே. (சு)

கதம்படப்போதுவார்கள்போதுமக்கருத்தினாலே
சிதம்படநின்றநீர்கள்சிக்கெனத்தவிருமென்று
மதம்படமனத்தனாகிவன்மையான்மிக்குநோக்க
வதம்படழத்துருவுசெய்தாரவளிவணல்லூராரே. (எ)

நாடுமிக்குழிதர்கின்றநடுவிலாவரக்கர்கோனை
யோடுமிக்கென்றுசொல்லியூன்றினானுகிரினாலே
பாடுமிக்குய்வனென்றுபணியநற்றிறங்கள்காட்டி
யாடுமிக்கரவம்பூண்டாரவளிவணல்லூராரே. (அ)

ஏனமாயிடந்தமாலுமெழிற்றருமுளரியானு
ஞானந்தானுடையராகிநன்மையையறியமாட்டார்
சேனந்தானிலாவரக்கன்செழுவரையெடுக்கவூன்றி
யானந்தவருள்கள்செய்தாரவளிவணல்லூராரே. (கூ)

ஊக்கினான்மலையைப்போடியுணர்விலாவரக்கன்றன்னைத்
தாக்கினான்விரலினாலேதலைபத்துந்தகரவூன்றி
நோக்கினனஞ்சத்தன்னைநோன்பிறவூன்றுசொல்லி
யாக்கினாரமுதமாகவவளிவணலலூராரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

திருஅவளிவணலலூரா திருப்பதிகம் - உ.

சுவாமி - சாக்ஷிநாதர்
தேவி - சௌந்தரவல்லி.

ஆக திருப்பதிகம் - உ௭0.

## ௧0௧. திருப்பரிதிநியமம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழம்பஞ்சுரம (௩ - ம் - திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

விண்கொண்டதூமதிசூடிநீடுவிரிபுன்சடைதாழப
பெண்கொண்டமாா்பில்வெண்ணீறுபூசிபபேணார்பலிதேர்ந்து
கண்கொண்டசாயலொடேர்கவர்ந்தகளவர்க்கிடம்போலும
பண்கொண்டவண்டினம்பாடியாடும்பரிதிநியமமே. (௧)

அரவொலிவில்லொலியம்பினொலியடங்கார்புரமூன்று
நிரவவல்லார்நிமிர் புன்சடைமேனிரம்பாமதிசூடி
யிரவிலபுகுந்தென்னெழிலகவாந்தவிறைவர்க்கிடம்போலும்
பரவவல்லார்வினைபாழ்படுக்கும்பரிதிநியமமே. (உ)

வாணமுகவார்குழலவாணெடுங்கண்வளைதோண்மாதஞ்ச
நீண்முகமாகியபைங்களிறறினனுரிமேனிகழ்வித்து
நாண்முகங்காட்டிநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
பாண்முகவண்டினம்பாடியாடும்பரிதிநியமமே (௩)

வெஞ்சுரஞ்சேர்விளையாடலபேணிவிரிபுன்சடைதாழத்
துஞ்சிருணமாலையுநண்பகலுந்துணையார்பலிதேர்ந்து
வஞ்சருமபார்குழலசோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடமபோலும்
பஞ்சுரம்பாடிவணடியாழ்முரலும்பரிதிநியமமே. (௪)

நீர்புல்குபுன்சடைநின்றிலங்கநெடுவெண்மதிசூடித்
தார்புல்குமார்பிலவெண்ணீறணிந்துதலையார்பலிதேர்வா
ரோ்புல்குசாயலெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பார்புலகுதொல்புகழாலவிளங்கும்பரிதிநியமமே. (௫)

வெங்கடுங்காட்டகத்தாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
திங்கடிருமுடிமேல்விளங்கததிசையாரபலிதேர்வார்
சங்கொடுசாயலெழிலகவர்ந்தசைவாக்கிடமபோலும்
பைங்கொடிமுல்லைபடர்புறவிற்பரிதிநியமமே. (௬)

பிறைவளர்செஞ்சடைபின்றயங்கப்பெரியமழுவேந்தி
மறையொலிபாடிவெண்ணீறுபூசிமனைகள்பலிதேர்வா
ரிறைவளைசோரவெழிலகவர்ந்தவிறைவர்ககிடமபோலும
பறையொலிசங்கொலியால்விளஙகுமபரிதிநியமமே. (௭)

ஆசடைவானவர்தானவரோடடியாரமர்ந்தேதத
மாசடையாதவெண்ணீறுபூசிமனைகள்பலிதோவா
காசடை மேகலைசோரவுள்ளஙகவாந்தாா ககிடமபோலும்
பாசடைத்தாமரைவைகுபொய்கைப்பரிதிநியமமே. (௮)

நாடினர்காண்கிலர்நான்முகனுந்திருமானயந்தேத்தக
கூடலராடலராகிநாளுஙகுழகர்பலிதேர்வா
ரேடலர்சோரவெழிலகவர்ந்தவிறைவர்ககிடமபோலும
பாடலராடலராயவணங்கும்பரிதிநியமமே (௯)

கல்வளராடையர்கையிலுண்ணுஙகழுககளிழுககான
சொலவளமாகநினைககவேண்டாசுடுநீறதுவாடி
நலவளைசோரநலஙகவர்ந்தநாதாககிடமபோலும்
பல்வளர்முல்லையங்கொல்லைவேலிப்பரிதிநியமமே. (௧௦)

பையரவம்விரிகாந்தள்விம்முபரிதிந்நியமத்துத
தையலொர்பாகமமாநதவனைததமிழ்ஞானசமபந்தன்
பொயயிலிமாலைபுனைந்தபத்துமபரவிபபுகழ்நதேத்த
வையுறவிலலைப்பிறப்பறுததலவலமமடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - பரிதியப்பா
தேவி - மஙகளநாயகி.

ஆடூ திருபபதிகம - உ௭௧.

# ௧௦௨. திருவெண்ணியூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம் (௨ - ம் - திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சடையானைச்சந்திரனோடுசெங்கண்ணரா
வுடையானையுடைதலையிற்பலிகொண்டூரும்
விடையானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியை
யுடையானையல்லதுள்காதெனதுள்ளமே. (௧

சோதியைச்சுண்ணவெண்ணீறணிந்திட்டவெம்
மாதியையாதியுமந்தமுமில்லாத
வேதியைவேதியர்தாந்தொழும்வெண்ணியி
னீதியைநினையவல்லார்வினைநில்லாவே (௨)

கனிதனைக்கனிந்தவரைக்கலந்தாட்கொள்ளு
முனிதனைமூவுலகுக்கொருமூர்த்தியை
நனிதனைநல்லவர்தாந்தொழும்வெண்ணியி
லினிதனையேத்துவரேதமிலாதாரே (௩)

மூத்தானைமூவுலகுக்கொருமூர்த்தியாய்க்
காத்தானைக்கனிந்தவரைக்கலந்தாளாக
வார்த்தானையழகமர்வெண்ணியம்மான்றன்னை
யேத்தாதாரென்செய்வாரேழையப்பேய்களே. (௪)

நீரானைநிறைபுனல்சூழ்தருநீள்கொன்றைத்
தாரானைத்தையலோர்பாகமுடையானைச்
சீரானைத்திகழ்தருவெண்ணியமர்ந்துறை
யூரானையுள்கவல்லார்வினையோயுமே. (௫)

முத்தினைமுழுவயிரத்திரண்மாணிக்கத்
தொத்தினைத்துளக்கமிலாதவிளக்காய
வித்தினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லத்தனையடையவல்லார்க்கில்லையல்லலே. (௬)

காய்ந்தானைக்காமனையுஞ்செறுகாலனைப்
பாய்ந்தானைப்பரியகைமாவுரித்தோன்மெய்யின்
மேய்ந்தானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
னீந்தானைநினையவல்லார்வினைநில்லாவே (௭)

மறுத்தானைமாமலையைமதியாதோடிச்
செறுத்தானைத்தேசழியத்திகழ்தோண்முடி
யிறுத்தானையெழிலமர்வெண்ணியெம்மானெனப்
பொறுத்தானைப்போற்றுவராற்றலுடையாரே. (௮)

மண்ணினைவானவரோடுமனிதர்க்குங்
கண்ணினைக்கண்ணனுநான்முகனுங்காணா
விண்ணினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லண்ணலையடையவல்லார்க்கில்லையல்லலே. (௯)

குண்டருங்குணமிலாதசமண்சாக்கிய
மிண்டர்கண்மிண்டவைகேட்டுவெகுளன்மின்
விண்டவர்தம்புரமெய்தவன்வெண்ணியிற்
றொண்டராயேத்தவல்லார்துயர்தோன்றாவே. (௧௦)

மருவாருமல்குகாழித்திகழ்சம்பந்தன்
றிருவாருந்திகழ்தருவெண்ணியமர்ந்தானை
யுருவாருமொண்டமிழ்மாலையிவைவல்லார்
பொருவாகப்புக்கிருப்பார்புவலோகத்தே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருக்குறுந்தொகை (௫ - ம் - திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

முத்தினைப்பவளத்தைமுளைத்தவெண்
டொத்தினைச்சுடரைச்சுடர்போலொளிப
பித்தனைக்கொலுநஞ்சினைவானவர்
நித்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௧)

வெண்ணித்தொன்னகர்மேயவெண்டிங்களாா்
கண்ணிததொத்தசடையர்கபாலியா
ரெண்ணித்தம்மைநினைந்திருந்தேனுக்கு
நண்ணித்திட்டமுதூறுமென்னாவுக்கே. (௨)

காற்றினைக்கனலைக்கதிர்மாமணி
நீற்றினைநினைப்பார்வினைநீக்கிடுங்
கூற்றினையுதைத்திட்டகுணமுடை
வீற்றினைநெருநற்கண்டவெண்ணியே (௩)

நலலனைத்திகழ்நான்மறையோதியைச்
சொலலனைச்சுடரைச்சுடர்போலொளிர்
கலலனைக்கடிமாமதின்மூன்றெய்த
விலலனைநெருநற்கண்டவெண்ணியே. (௪)

சுடரைப்போலொளிாசுண்ணவெண்ணீற்றனை
யடருஞ்சென்னியிலவைத்தவமுதினைப்
படருஞ்செஞ்சடைப்பான்மதிசூடியை
யிடரைநீக்கியையான்கண்டவெண்ணியே. (௫)

பூதநாதனைப்பூம்புகலூரனைத்
தாதெனத்தவழும்மதிசூடியை
நாதனைநல்லநான்மறையோதியை
வேதனைநெருநற்கண்டவெண்ணியே (௬)

ஒருத்தியையொருபாகத்தடக்கியும
பொருத்திப்புனிதன்புரிபுன்சடைக்
கருத்தனைக்கறைக்கண்டனைக்கண்ணுத
னிருத்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௭)

சடையனைச்சரிகோவணவாடைகொண
டுடையனையுணர்வார்வினைதீர்த்திடும்
படையனைமழுவாளொடுபாய்தரும்
விடையனைநெருநற்கண்டவெண்ணியே. (௮)

பொருப்பனைப்புனலாளொடுபுன்சடை
யருப்பனையிளந்திங்களங்கண்ணியான்
பருப்பதம்பரவித்தொழுந்தொண்டர்கள்
விருப்பனைநெருநற்கண்டவெண்ணியே. (௯)

சூலவஞ்சனைவெல்லவெஞ்சுந்தரன்
கோலமாவருள்செய்தசெதார்கொள்கையான்
காலனஞ்சவுதைத்திருள்கண்டமாம்
வேலைநஞ்சனைக்கண்டதுவெண்ணியே (௧0)

இலையினார்கொன்றைசூடியவீசனார்
மலையினாலரக்கன்றிறலவாட்டினார்
சிலையினான்மதிலெய்தவன்வெண்ணியைத்
தலையினாற்றொழுவாரவினைதாவுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம் (௬-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்

தொண்டிலங்குமடியவர்க்கோர்நெறியினாருந்
தூநீறுதுதைந்திலங்குமார்பினாரும்
புண்டரிகத்தயனொடுமாலகாணவண்ணம்
பொங்குதழற்பிழம்பாயபுராணனாரும்
வண்டமருமலர்க்கொன்றைமாலையாரும்
வானவர்காநஞ்சுண்டமைந்தனாரும்
விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧)

நெருப்பனையமேனிமேல்வெண்ணீற்றாரு
நெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தாரும்
பொருப்பரையன்மடப்பாவையிடப்பாலாரும்
பூந்துருத்திநகர்மேயபுராணனாரு
மருப்பனையவெண்மதியக்கண்ணியாரும்
வளைகுளமுமறைக்காடுமன்னினாரும்
விருப்புடையவடியவர்தம்முள்ளத்தாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௨)

கையுலாமூவிலைவேலேந்தினாருங்
கரிகாட்டிலெரியாடுங்கடவுளாரும்
பையுலாநாகங்கொண்டாட்டுவாரும்
பரவுவார்பாவங்கள்பாற்றுவாருஞ்
செய்யுலாங்கயல்பாயவயல்கள்சூழ்ந்த
திருப்புன்கூர்மேவியசெல்வனாரு
மெய்யெலாமவெண்ணீறுசண்ணித்தாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௩)

சடையேறுபுனல்வைத்தசதுரனாருந்
தக்கன்றன்பெருவேள்விதகைசெய்தாரு
முடையேறுபுலியதண்மேனைகங்காட்டி
யுண்பலிக்கென்றூரூரினுழிதர்வாரு
மடையேறிக்கயல்பாயவயல்கள்சூழ்ந்த
மயிலாடுதுறையுறையுமணாளனாரும்

விடையேறுவெல்கொடியெம்விமலனாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௪)

மண்ணிலங்குநீரனல்காலவானுமாகி
மற்றவற்றின்குணமெலாமாய்நின்றாரும்
பண்ணிலங்குபாடலோடாடலாரும்
பருப்பதமும்பாசூருமன்னினாருங்
கண்ணிலங்குநுதலாருங்கபாலமேந்திக்
கடைதோறும்பலிகொள்ளுங்காட்சியாரும்
விண்ணிலங்குவெண்மதியக்கண்ணியாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௫)

விடுதனையெமெய்யடியார்ககருள்செய்வாரும்
வேலைவிடமுண்டிருண்டகண்டத்தாருங்
கூடலர்தம்மூவெயிலுமெரிசெயதாருங்
குரைகழலாற்கூற்றுவனைககுமைசெயதாரு
மாடமரவரைககசைததயகாடுவாரு
மாலமரநீழலிருந்தறஞ்சொன்னாரும
வேடுவனாய்மேல்விசயற்கருள்செயதாரும
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௬)

மட்டிலங்குகொன்றையந்தார்மாலைசூடி
மடவாளவளோடுமொன்றாயேந்திச்
சிட்டிலங்குவேடத்தராகிநாளுஞ்
சில்பலிகளென்றூரூர்திரிதர்வாரும்
கட்டிலங்குபாசத்தாலவீசவந்த
காலன்றன்காலமறுபபார்தாமும்
விட்டிலஙகுவெண்குழைசேர்காதினாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௭)

செஞ்சடைக்கோர்வெண்டிங்கள்சூடினாருந்
திருவாலவாயுறையுஞ்செல்வனாரு
மஞ்சனக்கணரிவையொருபாகத்தாரு
மாறங்கநால்வேதமாய்நின்றாரு
மஞ்சடுத்தநீள்சோலைமாடவீதி
மதிலாரூர்புககங்கேமன்னினாரும்
வெஞ்சினததவேழமதுவுரிசெயதாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௮)

வளங்கிளர்மாமதிசூடும்வேணியாரும்
வானவர்க்காநஞ்சுண்டமைந்தனாருங்
களங்கொளவென்சிந்தையுள்ளேமன்னினாருங்
கச்சியேகம்பத்தெங்கடவுளாரு
முளங்குளிரவமுதூறியண்ணிப்பாரு
முத்தமராயெத்திசையுமன்னினாரும்
விளங்கிளரும்வெண்மழுவொன்றேந்தினாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௯)

பொன்னிலங்குகொன்றையந்தார்மாலைசூடிப்
புகலூரும்பூவணமும்பொருந்தினாருங்
கொன்னிலங்குமூவிலைவேலேந்தினாருங்
குளிரார்ந்தசெஞ்சடையெங்குழகனாருந்
தென்னிலங்கைமன்னவர்கோன்சிரங்கள்பத்துந்
திருவிரலாலடர்த்தவனுக்கருள்செயதாரு
மின்னிலங்குநுண்ணிடையாளபாகததாரும்
வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருவெண்ணியூாததிருப்பதிகம் - ௩.

சுவாமி - வெண்ணிநாதா.
தேவி - அழகியநாயகி.

ஆ திருபபதிகம் - ௨௭௪.

# ௧௦௩. திருப்பூவணூர்.

திருநாவுக்காசுநாயனார்

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பூவணூர்ப்புனிதன்றிருநாமந்தா
னாவினாறுநூறுயிரநண்ணினார்
பாவமாயினபாறிபபறையவே
தேவர்கோவினுஞ்செலவர்களாவரே. (௧)

என்னனென்மனையெந்தையெனாருயிர்
தன்னன்றன்னடியேன்றனமாகிய
பொன்னன்பூவணூர்மேவியபுண்ணிய
னின்னனென்றறிவொண்ணுணியற்கையே. (௨)

குற்றங்கூடிககுணம்பலகூடாதீர்
மற்றுந்தீவினைசெய்தனமாய்க்கலாம்
புற்றராவினன்பூவணூரீசன்பேர்
கற்றுவாழ்த்துங்கழிவதன்முன்னமே. (௩)

ஆவின்மேவியவைந்தமர்ந்தாடுவான்
றாவணீறுதுதைந்தசெம்மேனியான்
மேவநூல்விரிவெண்ணியின்றென்கரைப்
பூவணூர்புகுவார்வினைபோகுமே. (௪)

புல்லமூர்தியூர்பூவனூர்பூம்புன
னலலமூர்திநல்லூர்நனிபள்ளியூர்
தில்லையூர்திருவாரூர்சீககாழிநல
வலலமூரெனவலவினைமாயுமே. (௫)

அனுசயப்பட்டதுவிதுவென்னாதே
கனிமனத்தொடுகணகளுநீர்மல்கிப
புனிதனைப்பூவனூரனைபபோற்றுவார்
மனிதரிற்றலையானமனிதரே. (௬)

ஆதிநாதனமரர்களர்ச்சிதன்
வேதநாவன்வெறபின்மடபபாவையோர்
பாதியானும்பரந்தபெருமபடைப்
பூதநாதனறென்பூவனூர்நாதனே. (௭)

பூவனூாதண்புரம்பயமபூமபொழி
ஞுவலூர்நள்ளாறுநெடுநன்னிலங்
கோவலூர்குடவாயிலகொடுமுடி
மூவலூருமுககண்ணனூாகாண்மினே (௮)

ஏவமேதுமிலாவமணேதலர்
பாவகாரிகள்சொலவலைப்பட்டுநான்
றேவதேவன்றிருநெறியாகிய
பூவனூர்புகுதப்பெற்றநாளின்றே. (௯)

நாரணன்னொடுநான்முகனிந்திரன்
வாரணன்குமரன்வணங்குநகழற்
பூரணன்றனைப்பூவனூர்மேவிய
காரணன்னெனையாளுடைக்காளையே. (௧0)

மைககடுத்தநிரததரககன்வரை
புககெடுத்தலும்பூவனூரன்னடி
மிககடுததவிரலசிறிதூன்றலும்
பக்கடுத்தபின்பாடியுய்ந்தானென்றே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - புஷ்பவனநாதர்.
தேவி - கற்பகவலலி.

---

௮௨ திருபபதிகம் - ௨௭௫.

---

# ௧௦௪. திருப்பாதாளீச்சரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - வியாழக்குறிஞ்சி. (௩ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மின்னியல்செஞ்சடைமேல்விளங்கும்மதிமத்தமொடு நல்ல
பொன்னியல்கொன்றையினான்புனல்சூடிப்பொற்பமரு
மன்னமனநடையாளொருபாகத்தமர்ந்தருளி நாளும்
பன்னியபாடலினானுறைகோயில்பாதாளே. (௧)

நீடலர்கொன்றையொடுநிரம்பாமதிசூடி வெள்ளைத்
தோடமர்காதினல்லகுழையான்சுடுநீற்ற
னாடரவம்பெருகவனலேந்திக்கைவீசி வேதம்
பாடலினானினியானுறைகோயில்பாதாளே (௨)

காகமும்வான்மதியுநலமல்குசெஞ்சடையான் சாமம்
போகநல்வில்வரையாற்புரமூன்றெரித்துகந்தான்
றோகைநன்மாமயில்போல்வளர்சாயறாமொழியைக் கூடப்
பாகமுமைவைத்துகந்தானுறைகோயில்பாதாளே. (௩)

அங்கமுநான்மறையுமருள்செய்தழகார்ந்த வஞ்சொன்
மங்கையோர்கூறுடையான்மறையானுறைகோயில்
செங்கயனின்றுகளுஞ்செறுவிற்றிகழ்கின்ற சோதிப்
பங்கயநின்றலரும்வயல்சூழ்ந்தபாதாளே. (௪)

பேய்பலவுந்நிலவப்பெருங்காடரங்காகவுன்னி நின்று
தீயொடுமான்மறியுமழுவுந்திகழ்வித்துத்
தேயபிறையும்மரவும்பொலிகொன்றைச்சடைதன்மேற் சேரப்
பாய்புனலுமுடையானுறைகோயில்பாதாளே. (௫)

கண்ணமர்நெற்றியினான்கமழ்கொன்றைச்சடைதன்மே னின்றும்
விண்ணியன்மாமதியுமுடன்வைத்தவன்விரும்பும்
பெண்ணமர்மேனியினான்பெருங்காடரங்காக வாடும்
பண்ணியல்பாடலினானுறைகோயில்பாதாளே (௬)

விண்டலர்மத்தமொடுமிளிரும்மிளநாகம்வன்னி திகழ்
வண்டலர்கொன்றைநகுமதிபுல்குவார்சடையான்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்துரைவேதநான்கு மவை
பண்டிசைபாடலினானுறைகோயில்பாதாளே. (௭)

மல்கியநுண்ணிடையாளுமைநங்கைமறுகவன்று கையாற்
றொல்லைமலையெடுத்தவரக்கன்றலைதோணெரித்தான்
கொல்லைவிடையுகந்தான்குளிர்திங்கள்சடைக்கணிந்தோ னலி
பல்லிசைபாடலினானுறைகோயில்பாதாளே. (௮)

தாமரைமேலயனுமரியுந்தமதாள்வினையாற் றேடிக
காமனைவீடுவித்தான்கழல்காண்பிலராயகன்றார்
பூமருவுங்குழலாளுமைநங்கைபொருந்தியிட்ட நல்ல
பாமருவுங்குணத்தானுறைகோயில்பாதாளே. (௯)

காலையிலுண்பவருஞ்சமணுங்கையருங்கட்டுரைவிட் டகன்
றாலவிடநுகர்ந்தானவன்றன்னடியேபரவி
மாலையிலவண்டினங்கண்மதுவுண்டிசைமுரல வாய்த்த
பாலையாழ்ப்பாட்டுகந்தானுறைகோயில்பாதாளே. (௧௦)

பன்மலர்வைகுபொழிலபுடைசூழ்ந்தபாதாளைச் சேரப்
பொன்னியன்மாடமலகுபுகலிந்நகர்மன்னன்
றன்னொளிமிககுயர்ந்ததமிழ்ஞானசம்பந்தன் சொன்ன
வின்னிசைபததுமவலலாரெழிலவானததிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - சர்ப்பபுரிநாதா.
தேவி - அமுதநாயகி.

ஆ திருப்பதிகம் - ௨௪௬.

# ௧௦௫. திருக்களர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனா

பண் - சீகாமரம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நீருளாரகயலவாவிசூழ்பொழினீண்டமாவயலீண்டுமாமதிற
றேரினார்மறுகிலவிழாமலகுதிருக்கள
ரேருளாரிடுபிச்சைபேணுமொருவனேயொளிர்செஞ்சடைமமதி
யாரநின்றவனேயடைந்தாரக்கருளாயே. (௧)

தோளின்மேலொளிநீறுதாங்கியதொண்டர்வந்தடிபோற்றமிண்டிய
தாளினார்வளருந்தவமலகுதிருக்களருள்
வேளினேர்விசயற்கருள்புரிவித்தகாவிருமபுமமடியரை
யாளுகந்தவனேயடைந்தார்ககருளாயே. (௨)

பாடவலலநன்மைந்தரோடுபனிமலர்பலகொண்டுபோற்றிசெய
சேடர்வாழ்பொழிலசூழ்செழுமாடத்திருக்களரு
ணீடவலலநிமலனேயடிநிரைகழலசிலம்பார்ககமாநட
மாடவலலவனேயடைந்தார்க்கருளாயே. (௩)

அம்பினேர்தடங்கண்ணினாருடனடவர்பயின்மாடமாளிகை
செம்பொனார்பொழிலசூழ்ந்தழகாயதிருக்களரு
ளென்புபூண்டதோர்மேனியெம்மிறைவாவிணையடிபோற்றிநின்றவர்க
கன்புசெய்தவனேயடைந்தார்க்கருளாயே. (௪)

கொங்குலாமலர்ச்சோலைவண்டினங்கெண்டிமாமதுவுண்டிசைசெயத்
தெங்குபைங்கமுகம்புடைசூழ்ந்ததிருக்களருண்
மங்கைதன்னொடுங்கூடியமணவாளனேபிணைகொண்டொர்கைத்தலத்
தங்கையிற்படையாயடைந்தார்க்கருளாயே. (௫)

கோலமாமயிலாலக்கொண்டல்கள்சேர்பொழிற்குலவும்வயலிடைச்
சேலிளங்கயலார்புனல்சூழ்ந்ததிருக்களரு
ணீலமேவியகண்டனேநிமிர்புன்சடைப்பெருமானெனப்பொலி
யாலநீழலுளாயடைந்தார்க்கருளாயே. (௬)

தம்பலம்மறியாதவர்மதிற்றிருங்குமால்வரையாலழலெழத்
திண்பலங்கெடுத்தாய்திகழ்கின்றதிருக்களருள்
வம்பலர்மலர்தூவிநின்னடிவானவர்தொழக்கூத்துகந்தபே
ரம்பலத்துறைவாயடைந்தார்க்கருளாயே. (௭)

குன்றடுத்தநன்மாளிகைக்கொடிமாடநீடுயர்கோபுரங்கண்மேற்
சென்றடுத்துயர்வான்மதிதோயுந்திருக்களரு
ணின்றடுத்துயர்மால்வரைத்திரடோளினாலெடுத்தான்றனீண்முடி
யன்றடர்த்துகந்தாயடைந்தார்க்கருளாயே. (௮)

பண்ணியாழ்பயில்கின்றமங்கையர்பாடலாடலொடாரவாழ்பதி
தெண்ணிலாமதியம்பொழில்சேருந்திருக்களரு
ளுண்ணிலாவியவொருவனேயிருவர்க்குநினைகழல்காட்சியாரழ
லண்ணலாயவெம்மானடைந்தார்க்கருளாயே. (௯)

பாக்கியம்பலசெய்தபத்தர்கள்பாட்டொடும்பலபணிகள்பேணிய
தீக்கியல்குணத்தார்சிறந்தாருந்திருக்களருள்
வாக்கினான்மறையோதினாயமண்டேரர்சொல்லியசொற்களானபொய்
யாக்கிநின்றவனேயடைந்தார்க்கருளாயே. (௧௦)

இந்துவந்தெழுமாடவீதியெழில்கொள்காழிநகர்க்கவுணியன்
செந்துநேர்மொழியாரவர்சேருந்திருக்களரு
ளந்திவன்னதொர்மேனியானையமரர்தம்பெருமானைஞானசம்
பந்தன்சொல்லிவைபத்தும்பாடத்தவமாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - களர்முளைநாதர்.
தேவி - இளங்கொம்பன்னாள்.

---

ஆ திருப்பதிகம் - ௨௭௭.

---

# ௧௦௬. திருச்சிற்றேமம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொல்லிகௌவாணம் (௩-ம். திருமுறை.)

திருச்சிறறம்பலம்.

நிறைவெண்டிங்களவாண்முகமாதர்பாடநீள்சடைக
குறைவெண்டிங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
சிறைவண்டியாழ்செயபைமபொழிற்பழனஞ்சூழ்சிறறேமததா
னிறைவனென்றேயுலகெலலாமேத்தநின்றபெருமானே. (௧)

மாகத்திங்கள்வாண்முகமாதாபாடவாாசடைப்
பாகத்திங்கள்சூடியோராடன்மேயபண்டங்கன்
மேகத்தாடுசோலைசூழ்மிடைசிற்றேமமேவினு
ஞகத்தேர்கொளாமையைப்பூண்டவண்ணலலலலனே. (௨)

நெடுவெண்டிங்களவாணமுகமாதர்பாடநீள்சடைக
கொடுவெண்டிஙகள்சூடியோராடன்மேயகொளகையான்
படுவண்டியாழ்செய்பைம்பொழிற்பழனஞ்சூழ்சிற்றேமத்தான்
கடுவெங்கூறறைக்காலினுறகாயநதகடவுளலலனே. (௩)

கதிரார்திங்கள்வாண்முகமாதர்பாடககண்ணுதன்
முதிரார்திங்கள்சூடியோராடன்மேயமுககண
னெதிராாபுனலமபுன்சடை யெழிலாருஞ்சிற்றேமத்தா
னதிரார்பைங்கணேறுடையாதிமூாததியலலனே. (௪)

வானூர்திங்கள்வாண்முகமாதர்பாடவார்சடைக
கூனூர்திஙகள்சூடியோராடனமேயகொள்கையான்
றேனூர்வணடுபண்செயுந்திருவாருஞ்சிற்றேமத்தான்
மானூர்விழிநன்மாதொடுமகிழ்நதமைந்தனலலனே. (௫)

பனிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடபபலசடைக
குனிவெண்டிங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
றனிவெளவிடையன்புள்ளினத்தாமஞ்சூழ்சிற்றேமத்தானை
முனிவுமூப்புநீககியமுக்கண்மூர்த்தியலலனே. (௬)

கிளருந்திங்கள்வாண்முகமாதர்பாடக்கேடிலா
வளருந்திங்கள்சூடியோராடன்மேயமாதவன்
றளிருங்கொம்புமதுவுமார்தாமஞ்சூழ்சிற்றேமத்தா
னொளிரும்வெண்ணூன்மார்பனென்னுள்ளத்துள்ளானலலனே. ()

சூழ்ந்ததிங்கள்வாண்முகமாதர்பாடச்சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள்சூடியோராடன்மேயபுண்ணியன்
றாழ்ந்தவயற்சிற்றேமத்தான்றடவரையைத்தன்றாளினு
லாழ்ந்தவரக்கனுலகவன்றடர்த்தவண்ணலல்லனே. (௮)

தனிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடத்தாழ்சடைத்
துணிவெண்டிங்கள்சூடியோராடன்மேயதொன்மையா
னணிவண்ணச்சிறறேமத்தானலர்மேலந்தணனு
மணிவண்ணனுமுன்காண்கிலாமழுவாட்செல்வனல்லனே. (௯)

வெள்ளைத்திங்கள்வாண்முகமாதர்பாடவீழ்சடைப்
பிள்ளைத்திங்கள்சூடியோராடன்மேயபிஞ்ஞக
னுள்ளத்தார்சிற்றேமததானுருவாாபுததரொப்பிலாக
கள்ளததாரைத * தானுககியுட்கரந்துவைத்தானலலனே. (௧௦)

கலவிலோதமலகுதண்கானலசூழ்ந்தகாழியா
னல்லவாயவின்றமிழ்நவிலுஞானசம்பந்தன்
செலவனூர்சிறறேமத்தைபபாடலசீரார்நாவினலல
வலலராகிவாழ்த்துவாரலலலின்றிவாழ்வரே. (௧௧)

திருச்சிறறமபலம்.

சுவாமி - பொன்வைததநாயகர்.
தேவி - அகிலாண்டேசுவரி

ஆ திருபபதிகம் - உ௭அ.

## ௧௦௭. திருவுசாத்தானம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - கொலலி. (௩-ம. திருமுறை)

திருசசிறறம்பலம்.

நீரிடைத்துயின்றவன்றம்பிநீள்சாம்புவான்
பேருடைச்சுக்கிரீவன்னநுமான்றெழுக்
காருடைநஞ்சுண்டுகாததருள்செய்தவெஞ்
சீருடைச்சேடர்வாழ்திருவுசாததானமே. (௧)

கொல்லையேறுடையவன்கோவணவாடையன்
பல்லையார்படுதலைப்பலிகொளும்பரமனா
முலலையார்புறவணிமுதுபதிநறைகமழ்
தில்லையானுறைவிடந்திருவுசாத்தானமே. (௨)

தாமலார்போலவேதக்கனார்வேள்வியை
யூமனார்தங்கணுவாக்கினொருநொடிக்
காமனாருடல்கெடககாய்ந்தவெங்கண்ணுதல்
சேமமாவுறைவிடந்திருவுசாத்தானமே. (௩)

* "தனுதி" என்றும் பாடம்.

மறிதருகரத்தினன்மால்விடையேறியான்
குறிதருகோலநற்குணத்தினரடிதொழ
நெறிதருவேதியர்நித்தலுநியமஞ்செய்
செறிதருபொழிலணிதிருவுசாத்தானமே. (௪,௫,௬)

பண்டிரைத்தயனுமாலும்பலபத்தர்க
ளொண்டிரைத்தும்மலர்தூவித்தோத்திரஞ்சொலக்
கொண்டிரைக்கொடியொடுங்குருகினினலவினந்
தெண்டிரைக்கழனிசூழ்திருவுசாத்தானமே. (௭)

மடவரல்பங்கினன்மலைதனைமதியாது
சடசடவெடுத்தவன்றலைபத்துநெரிதர
வடர்தரவூன்றியங்கேயவற்கருள்செய்தான்
றிடமெனவுறைவிடந்திருவுசாத்தானமே. (௮)

ஆணலார்பெண்ணலாரயனொடுமாலுகருங்
காணொணவண்ணத்தான்கருதுவார்மனத்துளான்
பேணுவார்பிணியொடும்பிறப்பறுப்பானிடஞ்
சேணுலாமாளிகைத்திருவுசாத்தானமே. (௯)

கானமார்வாழ்க்கையான்காரமண்டேரர்சொல்
லூனமாக்கொண்டுநீருரைமினுய்யவெனில்
வானமார்மதிலணிமாளிகைவளர்பொழிற்
றேனமாமதியந்தோய்திருவுசாத்தானமே. (௧0)

வரைதிரிந்திழியுநீர்வளவயற்புகலிமன்
றிரைதிரிந்தெறிகடற்றிருவுசாத்தானரை
யுரைதெரிந்துணருஞ்சம்பந்தனொண்டமிழ்வல்லார்
நரைதிரையின்றியேநன்னெறிசேர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - மந்திரபுரிநாதர்.
தேவி - பெரியநாயகி.

---

௮௨ திருப்பதிகம் - ௨௭௯.

---

# கoஅ. திரு இடும்பாவனம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டபாடை (ஆ. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மனமார்தருமடவாரொடுமகிழ்மைந்தர்கண்மலர்தூய்த்
தனமார்தருசங்கக்கடல்வங்கத்திரளுந்திச்
சினமார்தருதிறல்வாளெயிற்றரக்கன்மிகுகுன்றி
லினமாதவரிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (க)

மலையார்தருமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
நிலையார்தருநிமலன்வலிநிலவும்புகழொளிசேர்
கலையார்தருபுலவோரவர்காவன்மிகுகுன்றி
லிலையார்தருபொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (உ)

சீலம்மிகுசித்தத்தவர்சிந்தித்தெழுமெந்தை
ஞாலம்மிகுகடல்சூழ்தருமுலகத்தவர்நலமார்
கோலம்மிகுமலர்மென்முலைமடவார்மிகுகுன்றி
லேலங்கமழ்பொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (ங)

பொழிலார்தருகுலைவாழைகளெழிலார்திகழ்போழ்திற்
றொழிலான்மிகுதொண்டரவர்தொழுதாடியமுன்றிற்
குழலார்தருமலர்மென்முலைமடவார்மிகுகுன்றி
லெழிலார்தருமிறைவர்கிடமிடும்பாவனமிதுவே. (ச)

பந்தார்விரலுமையாளொருபங்காகங்கைமுடிமேற்
செந்தாமரைமலராமல்கியசெழுநீர்வயற்கரைமேற்
கொந்தார்மலர்புன்னைமகிழ்குரவங்கமழ்குன்றி
லெந்தாயெனவிருந்தானிடமிடும்பாவனமிதுவே. (ரு)

நெறிநீர்மையர்நீள்வானவர்நினையுந்நினைவாகி
யறிநீர்மையிலெய்தும்மவர்க்கறியும்மறிவருளிக்
குறிநீர்மையர்குணமார்தருமணமார்தருகுன்றி
லெறிநீர்வயல்புடைசூழ்தருமிடும்பாவனமிதுவே. (சு)

நீறேறியதிருமேனியர்நிலவும்முலகெல்லாம்
பாறேறியபடுவெண்டலைகையிற்பலிவாங்காக்
கூறேறியமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
யேறேறியவிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (எ)

தேரார்தருதிகழ்வாளெயிற்றரக்கன்சிவன்மலையை
யோராதெடுத்தார்த்தான்முடியொருபஃதவைநெரிந்துக்
கூரார்தருகொலைவாளொடுகுணநாமமுங்கொடுத்த
வேரார்தருமிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (அ)

பொருளார்தருமறையோர்புகழ்விருத்தர்பொலிமலிசீர்த்
தெருளார்தருசிந்தையொடுசந்தமமலர்பலதூய்
மருளார்தருமாயன்னயன்காணூர்மயலெய்த
விருளார்தருகண்டர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௯)

தடுக்கையுடனிடுக்கித்தலைபறித்துச்சமணடப்ப
ருடுக்கைபலதுவர்க்கூறைகளுடம்பிட்டுழலவாரு
மடுககண்மலர்வயலசேர்செங்நென்மலிநீர்மலர்க்கரைமே
லிடுககண்பலகளைவானிடமிடும்பாவனமிதுவே. (௧௦)

கொடியார்நெடுமாடக்குன்றளூரிற்கரைக்கோல
விடியார்கடலடிவீழ்தருமிடும்பாவனத்திறையை
யடியாயுமந்தணர்காழியுளணிஞானசம்பந்தன்
படியாற்சொன்னபாடலசொலப்பறையும்வினைதானே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - சற்குணநாதர்.
தேவி - மங்களநாயகி.

---

ஆ திருப்பதிகம் - உ௮௦

---

## ௧௦௯. திருக்கடிக்குளம்.

---

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

பண்-நட்டராகம். (உ-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பொடிகொண்மேனிவெண்ணூலினர்தோலினர்புலியுரியதளாடை
கொடிகொளேற்றினர்மணிகிணினெனவருகுரைகழலசிலம்பார்க்கக்
கடிகொள்பூம்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகத்தைத்தம்
முடிகள்சாய்த்தடிவீழ்தருமடியரைமுன்வினைமூடாவே. (௧)

விண்களார்தொழும்விளக்கினைத்துளக்கிலாவிகிர்தனைவிழவாரு
மண்களார்துதித்தன்பராயின்புறும்வள்ளலைமருவித்தங்
கண்களார்தரக்கண்டுநங்கடிக்குளத்துறைதருகற்பகத்தைப்
பண்களார்தரப்பாடுவார்கேடிலர்பழியிலர்புகழாமே. (௨)

பொங்குநற்கரியுரியதுபோர்ப்பதுபுலியதளழுகைக்
தங்கமங்கையைப்பாகமதுடையவர்தழலபுரைதிருமேனிக்
கங்கைசேர்தருசடையினர்கடிக்குளத்துறைதருகற்பகத்தை
யெங்குமேத்திநின்றின்புறுமடியரையிடும்பைவந்தடையாவே. (௩)

நீர்கொணீள்சடைமுடியனைநித்திலத்தொத்தினைநிகரில்லாப்
பார்கொளபாரிடத்தவர்தொழும்பவளத்தைப் பசும்பொனைவிசும்பாரும்
கார்கொள்பூம்பொழிலசூழ்தருகடிககுளத்துறையுங்கற்பகந்தன்னைச்
சீர்கொள்செலவங்களேததவலலார்வினைதேய்வதுதிணமாமே. (௪)

சுரும்புசேர்சடைமுடியினன்மதியொடுதுன்னியதழுகை
மருமபுதாதவிழ்ந்தலர்ந்தமலர்பலகொண்டடியவர்போறறக்
கரும்புகார்மலிகொடிமிடைகடிககுளத்துறைதருகற்பகத்தை
விரும்புவேட்கையோடுளமகிழ்ந்துரைபபவாவிதியுடையவர்தாமே. (௫)

மாதிலங்கியபாகததன்மதியமொடலைபுனலழுகம்
போதிலங்கியகொன்றையுமததமுமபுரிசடைககழகாகக்
காதிலங்கியகுழையினன்கடிககுளததுறைதருகறபகத்தின்
பாதங்கைதொழுதேததவலலார்வினைபற்றறககெடுமனறே (௬)

குலவுகோலத்தகொடிநெடுமாடங்கள்குழாம்பலகுளிர்பொயகை
யுலவுபுள்ளினமன்னநகளாலிடுமபூவைசேருங்கூந்தற்
கலவைசேர்தருகண்ணியன்கடிக்குளத்துறையுங்கற்பகத்தைச்சீர்
நிலவிநின்றுநின்றேததுவார்மேலவினைநிறககிலலாதானே (௭)

மடுத்தவாளரக்கன்னவன்மலைதன்மேன்மதியிலாமையிலோடி
யெடுத்தலுமமுடிதோள்கரநெரிந்திறவிறையவன்விரலூன்றக
கடுததுவாயொடுகையெடுததலறிடககடிக்குளந்தனின்மேவிக்
கொடுத்தபேரருட்கூததனையேததுவார்குணமுடையவர்தாமே. (௮)

நீரினார்கடற்றுயினறவனயனொடுநிகழடிமுடிகாணார்
பாரினார்விசும்புறப்பரந்தெழுந்ததோர்பவளத்தின்படியாகிக
காரினார்பொழிலசூழ்தருகடிககுளத்துறையுங்கற்பகத்தின்றன்
சீரினார்கழலேத்தவலலார்களைத்தீவினையடையாவே (௯)

குண்டர்தம்மொடுசாககியாசமணருநகுறியினினெறிநில்லா
மிண்டர்மிண்டுரைகேட்டவைமெய்யெனக்கொள்ளன்மின்விடமுண்ட
கண்டர்முண்டநன்மேனியர்கடிககுளததுறைதருமெம்மீசர்
தொண்டர்தொண்டரைத்தொழுதடிபணிமின்கடநெறியெளிதாமே. ()

தனமலிபுகழ்தயங்குபூந்தராயவர்மனனனறசமபந்தன்
மனமலிபுகழ்வண்டமிழ்மாலைகண்மாலதாய்மகிழ்வோடுங்
கனமலிகடலோதமவந்துலவியகடிக்குளத்தமர்வானை
யினமலிந்திசைபாடவலலார்கள்போயிறைவனோடுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - கற்பகநாதர்.
தேவி - சௌந்தரநாயகி.

---

௯௯ திருப்பதிகம் - ௨௮௧.

---

# ககO. திருத்தண்டலைநீணெறி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-கௌசிகம். (ங-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

விரும்புந்திங்களுங்கங்கையும்விம்மவே
சுரும்புந்தும்பியுஞ்சூழ்சடையார்க்கிடங்
கரும்புஞ்செந்நெலுங்காயகமுகின்வளர்
நெருங்குந்தண்டலைநீணெறிகாண்மினே. (க)

இகழுங்காலனிதயததுமென்னுளுந்
திகழுஞ்சேவடியான்றிருந்தும்மிடம்
புகழுமபூமகளுமபுணர்பூசுரர்
நிகழுந்தணடலைநீணெறிகாண்மினே. (உ)

பரந்தநீலப்படரெரிவலவிடங்
கரந்தகண்டதனென்கருதும்மிடஞ்
சுரந்தமேதிதுறைபடிந்தோடையி
னிரந்ததண்டலைநீணெறிகாண்மினே. (ங)

தவந்தவெண்புந்தவளப்பொடியுமே
யுவந்தமேனியினானுறையுமமிடஞ்
சிவந்தபொனனுஞ்செழுந்தரளங்களு
நிவந்ததண்டலைநீணெறிகாணமினே. (ச,ரு,சா,எ)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
விலங்கலில்லடர்த்தான்விருமபுமமிடஞ்
சலங்கொளிப்பிதரளமுருசங்கமு
நிலங்கொடண்டலைநீணெறிகாணமினே. (அ)

கருவருந்தியினான்முகன்கண்ணனென்
றிருவருந்தெரியாவொருவன்னிடஞ்
செருவருந்தியசெமபியன்கோச்செங்க
ணிருபர்தண்டலைநீணெறிகாண்மினே. (சு)

கலவுசீவரத்தார்கையிலுண்பவர்
குலவமாட்டாகுழகனுறைவிடஞ்
சுலவுமாமதிலுஞ்சுதைமாடமு
நிலவுதண்டலைநீணெறிகாணமினே. (கO)

நீற்றர்தண்டலைநீணெறிநாதனைத்
தோற்றமேன்மையர்தோணிபுரத்திறை
சாற்றுஞானசம்பந்தன்றமிழ்வல்லார்
மாற்றில்செல்வர்மறப்பர்பிறப்பையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - நீணெறிநாதர்.
தேவி - ஞானம்பிகை.

ஆ திருப்பதிகம் - உஅஉ.

# ௧௧௧, திருக்கோட்டூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - நட்டராகம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நீலமார்தருகண்டனேநெற்றியோர்கண்ணனேயொற்றைவிடைச்
சூலமார்தருகையனேதுன்றுபைம்பொழில்கள்சூழ்ந்தழகாய
கோலமாமலர்மணங்கமழ்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சாலநீடலமதனிடைப்புகழ்மிகத்தாங்குவர்பாங்காவே (௧)

பங்கயம்மலர்ச்சீறடிப்பஞ்சுறுமெல்விரலரவல்குன்
மங்கைமார்பலர்மயிலகுயிலகிளியெனமிழற்றியமொழியார்மென்
கொங்கையார்குழாங்குணலைசெய்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழு
சங்கையொன்றிலராகிச்சங்கரன்றிருவருளபெறலெளிதாமே. [வார்கள்

நம்பனார்நலமலர்கொடுதொழுதெழுமடியவர்தமக்கெல்லாஞ்
செம்பொனார்தருமெழிறிகழ்முலையவர்செலவமலகியநல்ல
கொம்பனார்தொழுதாடியகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ளம்பொனார்தருமுலகினிலமரரோடமர்ந்தினிதிருப்பாரே (௩)

பலவுநீள்பொழிற்றீங்கனிதேன்பலாமாங்கனிபயிலவாய
கலவமஞ்ஞைகணிலவுசொறகிள்ளைகளன்னஞ்சேர்ந்தழகாய
குலவுநீள்வயற்கயலுகள்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ணிலவுசெலவத்தராகிநீணிலத்திடைநீடியபுகழாரே. (௪)

உருகுவாருள்ளத்தொண்சுடர்தனகமேலாறுமன்பராமடியார்கள்
பருகுமாரமுதெனநின்றுபரிவொடுபத்திசெய்தெத்திசையுங்
குருகுவாழ்வயலசூழ்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ளருகுசேர்தருவினைகளுமகலும்போயவனருள்பெறலாமே. (௫)

துன்றுவார்சடைத்தூமதிமத்தமுந்துன்னெருக்கார்வன்னி
பொன்றினார்தலைக்கலனொடுபரிகலமபுலியுரியுடையாடை [ரை
கொன்றைபொன்னெனமலர்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவா
யென்றுமேத்துவார்க்கிடரிலைகேடிலையேதம்வந்தடையாவே. (௬)

மாடமாளிகைகோபுரங்கூடங்கண்மணியரங்கணிசாலை
பாடுசூழ்மதிற்பைம்பொன்செய்மணடபம்பரிசொடுபயில்வாய
கூடுபூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
கேடதொன்றிலராகிநல்லுலகினிற்கெழுவுவர்புகழாலே. (௭)

ஒளிகொள்வாளெயிற்றரக்கனவ்வுயர்வரையெடுத்தலுமுமையஞ்சிச்
சுளியவூன்றலுஞ்சோர்ந்திடவாளொடுநாளவற்கருள்செய்த [ர்க
குளிர்கொள்பூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற் கொழுந்தினைத்தொழுவா
டளிர்கொடாமரைப்பாதங்களருள்பெறுந்தவமுடையவர்தாமே. (௮)

பாடியாடுமெய்ப்பத்தர்கட்கருள்செயுமுத்தினைப்பவளத்தைத்
தேடிமாலயன்காணவொண்ணுதவத்திருவினைத்தெரிவைமார்
கூடியாடவர்கைதொழுகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ணீடுசெலவததராகியிவ்வுலகினினிகழ்தருபுகழாரே (௯)

கோணல்வெண்பிறைச்சடையனைகோட்டூர்நற்கொழுந்தினைச்செழுந்தி
ரளைப், பூணலசெய்தடிபோற்றுமின்பொய்யிலாமெய்யனலலருளென்
றும், காணலொன்றிலாக்காரமண்டேரர்குணடாக்கர்சொற்கருதாதே
பேணல்செயதரனைத்தொழுமடியவர்பெருமையைப்பெறுவாரே (௧0)

பந்துலாவிரற்பவளவாய்த்தேன்மொழிப்பாவையோடுருவாருங்
கொந்துலாமலர்விரிபொழிற்கோட்டூர்நற்கொழுந்தினைச்செழும்பவளம்
வந்துலாவியகாழியுண்ஞானசமபந்தன்வாயந்துரைசெய்த
சந்துலாந்தமிழ்மாலைகள்வலலவர்தாங்குவர்புகழாலே ௧௧

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - கொழுந்துநாதர்.
தேவி - மதுரவசனியமமை

ஆ திருப்பதிகம் - உ௮௩.

## ௧௧௨. திருவெண்டுறை.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண - பஞ்சமம். (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஆதியனாதிரையன்னனலாடியவாரழகன்
பாதியொர்மாதினெடும்பயிலுமபரமாபரமன்
போதியலும்முடிமேற்புனலோடரவம்புனைந்த
வேதியன்மாதிமையால்விரும்பும்மிடம்வெணடுறையே. (௧)

காலனையோருதையில்லுயிர்வீடுசெய்வார்கழலான்
பாலொடுநெய்தயிரும்பயின்றாடியபண்டரங்கன்
மாலைமதியொடுநீரரவம்புனைவார்சடையான்
வேலனகண்ணியொடும்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௨)

படைநவில்வெண்மழுவான்பலபூதப்படையுடையான்
கடைநவின்மும்மதிலும்மெரியூட்டியகண்ணுதலா
னுடைநவிலும்புலித்தோலுடையாடையினன்கடிய
விடைநவிலுங்கொடியான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௩)

பண்ணமர்வீணையினன்பரவிப்பணிதொண்டர்கட
மெண்ணமர்சிந்தையினனிமையோர்க்குமறிவரியான்
பெண்ணமர்கூறுடையான்பிரமன்றலையிற்பலியான்
விண்ணவர்தம்பெருமான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௪)

பாரியலும்பலியான்படியாரகுமறிவரியான்
சீரியலும்மலையாளொருபாகமுஞ்சேரவைத்தான்
போரியலும்புரமூன்றுடன்பொன்மலையேசிலையா
வீரியநின்றுசெய்தான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௫)

ஊழிகளாயுலகாயொருவர்க்குமுணர்வரியான்
போழிளவெண்மதியும்புனலும்மணிபுன்சடையான்
யாழின்மொழியுமையாள்வெருவவ்வெழில்வெண்மருப்பின்
வேழமுரித்தபிரான்விரும்புமமிடம்வெண்டுறையே. (௬)

கன்றியகாலனையும்முருளக்கனல்வாயலறிப்
பொன்றமுனின்றபிரான்பொடியாடியமேனியினன்
சென்றிமையோர்பரவுந்திகழ்சேவடியான்புலன்கள்
வென்றவனம்மிறைவன்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௭)

கரமிருபத்தினலுங்கடுவன்சினமாயெடுத்த
சிரமொருபத்துமுடை யரககன்வலிசெற்றுகந்தான்
பரவவலலார்வினைகளறுப்பானொருபாகமும்பெண்
விரவியவேடத்தினன்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௮)

கோலமலரயனுங்குளிர்கொண்ட னிறத்தவனுஞ்
சீலமறிவரிதாத்திகழ்ந்தோங்கியசெந்தழலான்
மூலமதாகிநின்றான்முதிர் புன்சடைவெண்பிறையான்
வேலைவிடமிடற்றான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (௯)

நக்குருவாயவருந்துவராடைநயந்துடையாம்
பொக்கர்கடம்முரைகளவைபொய்யெனவெம்மிறைவன்
றிக்குநிறைபுகழார்தருதேவர்பிரான்கனக
மிக்குயர்சோதியவன்விரும்பும்மிடம்வெண்டுறையே (௧0)

திண்ணமரும்புரிசைத்திருவெண்டுறைமேயவனைத்
தண்ணமருமபொழிலசூழ்தருசண்பையர்தந்தலைவ
னெண்ணமர்பல்கலையானிசைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணமர்பாடலவலலார்வினையாயினபற்றறுமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - வெண்டுறைநாதர்.
தேவி - வேனெடுங்கண்ணியம்மை.

---

௮௨ திருப்பதிகம் - ௨௮௪.

---

# ௧௧௩. திருக்கொள்ளம்பூதூர்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

ஈரடிமேல்வைப்பு.

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

* கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர்
நட்டமாடியநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧)

கோட்டகக்கழனிக்கொள்ளம்பூதூர்
நாட்டகத்துறைநம்பனையுள்கச்
செலலவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௨)

குலையினார்தெங்குசூழ்கொள்ளம்பூதூர்
விலையிலாட்கொண்டவிகிர்தனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே (௩)

குவளைகண்மலருங்கொள்ளம்பூதூர்த்
தவளநீறணிதலைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௪)

கொன்றைபொன்சொரியுங்கொள்ளம்பூதூர்
நின்றபுன்சடைநிமலனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௫)

ஓடம்வந்தணையுங்கொள்ளம்பூதூ
ராடல்பேணியவடிகளையுள்கச்
செலலவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௬)

ஆறுவந்தணையுங்கொள்ளம்பூதூ
ரேறுதாங்கியவிறைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௭)

குரக்கினம்பயிலுங்கொள்ளம்பூதூ
ரரக்கனைச்செற்றவாதியையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௮)

பருவராலுகளுங்கொள்ளம்பூதூ
ரிருவர்காண்பரியான்கழலுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௯)

நீரகக்கழனிக்கொள்ளம்பூதூர்த்
தேரமண்செற்றசெல்வனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧0)

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுண்ஞானசம்பந்த
னின்றுசொன்மாலைகொண்டேத்தவல்லார்போ
யென்றும்வானவரோடிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தப்பிள்ளையார், திருக்கூட்டத்தோடு முள்ளிவாய்க் கரையை அணைந்தபோது ஆறு மிகப்பெருகுதலால், ஓடக்காரர்கள் ஓடத்தை ஓடக்கோல் நிலையில்லாமைபற்றிக் கரையிலே நிறுத்திப் போய்விட்டார்கள். பிள்ளையார் அது கண்டு கரையிலே எழுந்தருளி நின்றபோது, கொள்ளம்பூதூர் எதிரேதோன்ற அங்கே சென்று சுவாமிதரிசனஞ் செய்தற்குத் திருவுளம் பற்றி ஓடத்தின் கட்டை அவிழ்த்து, சிவனடியார்களை அதிலே ஏற்றி, நாவலமேமகோலாக அதன்மேல் நின்று. "கொட்டமே கமழும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். ஓடஞ்சென்று மற்றக் கரையை அடைந்தது.

---

சுவாமி - வில்வவனநாதர்.
தேவி - சௌந்தரநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௨௮௫.

---

# ௧௧௪. திருப்பேரெயில்.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மறையுமோதுவர்மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டமுடையகபாலியார்
துறையும்போகுவர்தூயவெண்ணீற்றினர்
பிறையுஞ்சூடுவர்பேரெயிலாளரே. (௧)

கணக்கிலாரையுங்கற்றுவல்லாரையும்
வணக்கிலாநெறிகண்டுகொண்டாரையுந்
தணக்குவார்தணிப்பாரெப்பொருளையும்
பிணக்குவாரவர்பேரெயிலாளரே. (௨)

சொரிவிப்பாாமழைசூழ்கதிர்த்திங்களை
விரிவிப்பார்வெயிற்பட்டவிளங்கொளி
யெரிவிப்பார்தணிப்பாரெபபொருளையும்
பிரிவிப்பாரவர்பேரெயிலாளரே. (௩)

செறுவிப்பார்சிலையானமதிற்றீர்த்தங்க
ளுறுவிப்பார்பலபத்தர்களுள்வினை
யறுவிப்பாரதுவன்றியுநல்வினை
பெறுவிப்பாரவர்பேரெயிலாளரே. (௪)

மற்றையாரறியார்மழுவாளினர்
பற்றியாட்டியோரைந்தலைப்பாம்பரைச்
சுற்றியாரவர்தூநெறியான்மிகு
பெற்றியாரவர்பேரெயிலாளரே. (௫)

திருககுவார்குழற்செலவனசேவடி
யிருக்குவாய்மொழியாற்றனையேத்துவார்
சுருககுவார்துயர்தோற்றங்களாற்றறப்
பெருககுவாரவர்பேரெயிலாளரே. (௬)

முன்னையார்மயிலூர்திமுருகவே
டன்னையாரெனிற்றானோர்தலைமக
னென்னையாளுமிறையவனெம்பிரான்
பின்னையாரவர்பேரெயிலாளரே (௭)

உழைத்துந்துள்ளியுமுள்ளததுளேயுரு
விழைத்துமெந்தைபிரானென்றிராப்பக
லழைக்குமன்பினராயவடியவர்
பிழைப்புநீக்குவர்பேரெயிலாளரே. (௮)

நீருலாநிமிர்புன்சடையாவென
வேருலாவநங்கன்றிறலவாட்டிய
வாருலாவனமென்முலையாளொடும்
பேருளாரவர்பேரெயிலாளரே. (௯)

பாணியார்படுதம்பெயர்ந்தாடுவர்
தூணியார்விசயற்கருள்செய்தவர்
மாணியாய்மண்ணளந்தவனுன்முகன்
பேணியாரவர்பேரெயிலாளரே. (௧௦)

மதத்தவாளரக்கன்மணிப்புட்பகஞ்
சிதைக்கவேதிருமாமலைகீழ்ப்புக்குப்
பதைத்தங்கார்த்தெடுத்தான்பத்துநீண்முடி
பிதக்கவூன்றியபேரெயிலாளரே (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - ஜகதீசுவரர்.
தேவி - பெண்ணமிர்தநாயகி.

ஆ திருப்பதிகம் - உ௮சுா.

# ககரு. திருக்கொள்ளிக்காடு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரபஞ்சமம். (௩-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம.

நிணம்படுசுடலையினீறுபூசிநின்
றிணங்குவாபேய்களோடிடுவர்மாநட
முணங்கல்வெண்டலைதனிலுணபராயினுங்
குணம்பெரிதுடையர்நங்கொள்ளிககாடரே (க)

ஆற்றனல்லடியிணையலர்கொண்டேத்துவான்
சாற்றியவந்தணனுறகுதிகண்டநாண்
மாற்றலனுகிமுன்னடாத்துவந்தணை
கூற்றினையுதைத்தனர்கொள்ளிக்காடரே. (உ)

அத்தகுவானவர்க்காகமாலவிடம்
வைத்தவர்மணிபுரைகணடததின்னுளே
மத்தமும்வன்னியுமலிநதசென்னிமேற்
கொததலர்கொன்றையாகொள்ளிககாடரே. (௩)

பாவணமேவுசொன்மாலையிற்பல
நாவணங்கொள்கையினவின்றசெய்கைய
ராவணங்கொண்டெமையாள்வராயினுங்
கோவணங்கொள்கையர்கொள்ளிக்காடரே. (௪)

வாரணிவனமுலைமங்கையாளொடுஞ்
சீரணிதிருவுருத்திகழ்ந்தசென்னியர்
நாரணிசிலைதனுனணுகலாரெயில்
கூரெரிகொளுவினர்கொள்ளிக்காடரே. (௫)

பஞ்சுதோய்மெல்லடிப்பாவையாளொடு
மஞ்சுதோய்கயிலையுண்மகிழ்வர்நாடொறும்
வெஞ்சினமருப்பொடுவிரையவந்தடை
குஞ்சரமுரித்தனர்கொள்ளிக்காடரே. (௬)

இறையுறுவரிவளையிசைகள்பாடிட
வறையுறுகழலடியார்க்கவாடுவர்
சிறையுறுவிரிபுனல்சென்னியின்மிசைக்
குறையுறுமதியினர்கொள்ளிக்காடரே. (எ)

எடுத்தனன்கயிலையையியல்வலியினு
லடர்த்தனர்திருவிரலாலலறிடப்
படுத்தனரென்றவன்பாடல்பாடலுங்
கொடுத்தனர்கொற்றவாள்கொள்ளிக்காடரே. (அ)

தேடினாயன்முடிமாலுஞ்சேவடி
நாடினாவரென்றுநண்ணுகிற்றிலர்
பாடினர்பரிவொடுபத்தர்சித்தமுங்
கூடினர்க்கருள்செய்வர்கொள்ளிக்காடரே. (௯)

நாடிநின்றறிவிலுணிலிகள்சாக்கிய
ரோடிமுன்னோதியவுரைகண்மெய்யல
பாடுவர்நான்மறைபயின்றமாதொடுங்
கூடுவர்திருவுருக்கொள்ளிக்காடரே. (௧௦)

நற்றவர்காழியுண்ஞானசம்பந்தன்
குற்றமில்பெரும்புகழ்க்கொள்ளிக்காடரைச்
சொற்றமிழின்னிசைமாலைசோர்வின்றிக
கற்றவர்கழலடிகாணவல்லரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - அக்கினீசுவரர்.
தேவி - பஞ்சின்மெலலடியாளம்மை.

ஆடு திருப்பதிகம் - ௨அஎ.

## ௧௧௬. திருத்தெங்கூர்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பியந்தைக்காந்தாரம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

புரைசெய்வல்வினைதீர்க்கும்புண்ணியர்விண்ணவர்போற்றக்
கரைசெய்மால்கடனஞ்சையுண்டவர்கருதலர்புரங்க
ளிரைசெய்தாரழலூட்டியுழல்பவரிடுபலிக்கெழில்சேர்
விரைசெய்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௧)

சித்தந்தன்னடிநினைவார்செடிபடுகொடுவினைதீர்க்குங்
கொத்தின்றாழ்சடைமுடிமேற்கோளெயிற்றரவொடுபிறையன்
பத்தர்தாம்பணிந்தேத்தும்பரம்பரன்பைம்புனல்பதித்த
வித்தன்றாழ்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௨)

அடையும்வல்வினையகலவருள்பவரனலுடைமழுவாட்
படையர்பாய்புலித்தோலர்பைம்புனற்கொன்றையர்படர்புன்
சடையில்வெண்பிறைசூடித்தார்மணியணிதருதறுகண்
விடையர்வீங்கெழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௩)

பண்டுநான்செய்தவினைகள்பறையவோர்நெறியருள்பயப்பார்
கொண்டல்வான்மதிசூடிக்குரைகடலவிடமணிகண்டர்
வண்டுமாமலரூதிமதுவுணவிதழ்மறிவெய்தி
விண்டவார்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே (௪)

சுழித்தவார்புனற்கங்கைசூடியொர்காலனைக்காலாற்
றெழித்துவானவர்நடுங்கச்செற்றவர்சிறையணிபறவை
கழித்தவெண்டலையேந்திக்காமனதுடல்பொடியாக
விழித்தவர்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௫)

தொல்லைவல்வினைதீர்ப்பார்சுடலைவெண்பொடியணிசுவண்ட
ரெல்லிசூடிநின்றாடுமிறையவரிமையவரேத்தச்
சில்லைமால்விடையேறித்திரிபுரந்தீயெழச்செற்ற
வில்லினார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௬)

நெறிகொள்சிந்தையராகிநினைபவர்வினைகெடநின்றார்
முறிகொண்மேனிமுக்கண்ணர்முளைமதிநடுநடுத்திலங்கப்
பொறிகொளவாளரவணிந்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
வெறிகொளபூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௭)

எண்ணிலாவிறலரக்கனெழிறிகழ்மால்வரையெடுக்கக்
கண்ணெலாம்பொடிந்தலறக்கால்விரலூன்றியகருத்தர்
தண்ணுலாம்புனற்கண்ணிதயங்கியசடைமுடிச்சதுரர்
விண்ணுலாம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௮)

தேடித்தானயன்மாலுந்திருமுடியடியிணைகாணார்
பாடத்தான்பலபூதப்படையினர்சுடலையிற்பலகா
லாடத்தான்மிகவல்லரருச்சுனற்கருள்செயக்கருதும்
வேடத்தார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௯)

சடங்கொள்சீவரப்போர்வைச்சாக்கியர்சமணர்சொற்றவிர
விடங்கொள்வல்வினைதீர்க்குமேத்துமினிருமருப்பொருகைக்
கடங்கொண்மாலகளிற்றுரியர்கடலகடைந்திடக்கனன்றெழுந்த
விடங்கொள்கண்டத்தர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௧௦)

வெந்தநீற்றினர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரைக்
கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
சந்தமாயினபாடற்றண்டமிழ்பத்தும்வல்லார்மேற்
பந்தமாயினபாவம்பாறுதலேறுதல்பயனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - வெள்ளிமலைநாதர்.
தேவி - பெரியநாயகி.

---

ஆ திருப்பதிகம் - ௨௮௮.

# ௧௧௭. திருநெல்லிக்கா.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அறத்தாலுயிர்காவலமர்ந்தருளி
மறத்தான்மதின்மூன்றுடன்மாண்பழித்த
திறத்தாற்றெரிவெய்தியதீவெண்டிங்க
ணிறத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௧)

பதிதானிடுகாடுபைங்கொன்றைதொங்கன்
மதிதானதுசூடியமைந்தனுந்தான்
விதிதான்வினைதான்விழுப்பம்பயக்கு
நெதிதானெல்லிக்காவுணிலாயவனே. (௨)

நலத்தானவனான்முகன்றன்றலையைக்
கலந்தானதுகொண்டகபாலியுந்தான்
புலந்தான்புகழாலெரிவிண்புகழும்
நிலந்தானெல்லிக்காவுணிலாயவனே. (௩)

தலைதானதுவேந்தியதம்மடிகள்
கலைதான்றிரிகாடிடநாடிடமா
மலைதானெடுத்தான்மதின்மூன்றுடைய
நிலைதானெல்லிக்காவுணிலாயவனே. (௪)

தவந்தான்கதிதான்மதிவார்சடைமே
லுவந்தான்சுறவேந்தனுருவழியச்
சிவந்தான்செயச்செய்துசெறுத்துலகி
னிவந்தானெல்லிக்காவுணிலாயவனே. (௫)

வெறியார்மலர்க்கொன்றையந்தார்விரும்பி
மறியார்மலைமங்கைமகிழ்ந்தவன்றான்
குறியாற்குறிகொண்டவர்போய்க்குறுகும்
நெறியானெல்லிக்காவுணிலாயவனே. (௬)

பிறைதான்சடைசேர்த்தியவெந்தைபெம்மா
னிறைதானிறவாக்கயிலைமலையான்
மறைதான்புனலொண்மதிமல்குசென்னி
நிறைதானெல்லிக்காவுணிலாயவனே. (௭)

மறைத்தான்பிணிமாதொருபாகந்தன்னை
மிறைத்தான்வரையாலரக்கன்மிகையைக்
குறைத்தான்சடைமேற்குளிர்கோல்வளையை
நிறைத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௮)

தழலுருமழையான்வையந்தாயவனும்
கழலுன்முடிகாணியநாளொளிரும்
மழலுனடியாககருளாயப்பயக்கு
நிழலுநெல்லிககாவுணிலாயவனே. (௯)

கனத்தார்திரைமாண்டழற்கான்றநஞ்சை
யெனத்தாவெனவாங்கியதுண்டகண்டன்
மனததாற்சமண்சாககியர்மாண்பழிய
நினைத்தானெலலிக்காவுணிலாயவனே (௧௦)

புகரேதுமிலாதபுத்தேளுலகி
னிகராநெலலிககாவுணிலாயவனை
நகராநலஞானசம்பந்தன்சொன்ன
பகர்வாரவர்பாவமிலாதவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - நெலலிவனநாதர்.
தேவி - மங்களநாயகி.

---

ஆ திருப்பதிகம் - உஅ௬.

---

# ௧௧அ. திருநாட்டியத்தான்குடி.

சுந்தரமூர்த்திநாயனர்.

---

பண் - தக்கராகம். (எ-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*பூணணவதொரரவங்கண்டஞ்சேன்புறங்காட்டாடலகண்டிகழேன்
பேணீராகிலும்பெருமையையுணர்வேன்பிறவேனாகிலுமறவேன்
காணீராகிலுங்காண்பனென்மனத்தாற்கருதீராகிலுங்கருதி
நானேலும்மடிபாடுதலொழியேனாட்டியத்தான்குடிநம்பீ. (௧)

கச்சேர்பாம்பொன்றரைக்கட்டிநின்றிடுகாட்டெல்லியிலாடலைக்கவர்வன்
றச்சேனென்மனம்புகுந்திருக்கின்றமைசொல்லாய்திப்பியமூர்த்தீ
வைச்சேயிடர்களைக்களைந்திடவல்லமணியேமாணிக்கவண்ணா
நச்சேனொருவரைநானுமையல்லானாட்டியத்தான்குடிநம்பீ. (௨)

அஞ்சாதேயுமக்காட்செயவல்லேனியாதினுக்காசைப்படுகேன்
பஞ்சேர்மெல்லடிமாமலைமங்கைபங்காவெம்பரமேட்டீ
மஞ்சேர்வெண்மதிசெஞ்சடைவைத்தமணியேமாணிக்கவண்ணா
நஞ்சேர்கண்டாவெண்டலையேந்நீநாட்டியத்தான்குடிநம்பீ. (௩)

கல்லேனல்லேனின்புகழடிமைகல்லாதேபலகற்றே
னில்லேனல்லேனின்வழிநின்றார்தம்முடைநீதியைநினைய
வல்லேனல்லேன்பொன்னடிபரவமாட்டேன்மறுமையைநினைய
நல்லேனல்லேனுமக்கல்லாநாட்டியத்தான்குடிநம்பீ. (௪)

மட்டார்பூங்குழன்மலைமகள்கணவனைக்கருதாதார்தமைக்கருதே
னொட்டீராகிலுமொட்டுவனடியேனும்மடியடைந்தவர்க்கடிமைப்
பட்டேனாகிலும்பாடுதலொழியேன்பாடியுநாடியுமறிய
நட்டேனாதலானான்மறக்கில்லேனாட்டியத்தான்குடிநம்பீ. (௫)

படப்பாற்றன்மையினான்பட்டதெல்லாம்படுத்தாயென்றல்லல்பறையே
குடப்பாச்சிலுறைகோக்குளிர்வானேகோனேகூற்றுதைத்தானே
மடப்பாற்றயிரொடுநெய்மகிழ்ந்தாடுமறையோதிமங்கைபங்கா
நடப்பீராகிலுநடப்பனும்மடிக்கேநாட்டியத்தான்குடிநம்பீ. (௬)

ஐவாயரவினைமதியுடன்வைத்தவழகாவமரர்கடலைவா
வெய்வான்வைத்ததொரிலக்கினையணைதரநினைந்தேனுள்ளமுள்ளளவு
முய்வானெண்ணிவந்தும்மடியடைந்தேனுகவீராகிலுமுகப்ப
னைவானன்றுமக்காட்பட்டதடியேனாட்டியத்தான்குடிநம்பீ. (௭)

கலியேன்மானுடவாழ்க்கையொன்றாகக்கருதிடிற்கண்கணீர்பில்கும்
பலிதேர்ந்துண்பதொர்பண்புகண்டிகழேன்பசுவேயேறிலும்பழியேன்
வலியேயாகிலும்வணங்குதலொழியேன்மாட்டேன்மறுமையைநினையே
னலியேனொருவரைநானுமையல்லானாட்டியத்தான்குடிநம்பீ. (௮)

குண்டாடிச்சமண்சாக்கியப்பேய்கள்கொண்டாராகிலுங்கொள்ளக்
கண்டாலுங்கருதேனெருதேறுங்கண்ணாநின்னலதறியேன்
றொண்டாடித்தொழுவார்தொழக்கண்டுதொழுதேனென்வினைபோக
நண்டாடும்வயற்றண்டலைவேலிநாட்டியத்தான்குடிநம்பீ. (௯)

கூடாமன்னரைக்கூட்டத்துவென்றகொடிறன்கோட்புலிசென்னி
நாடார்தொல்புகழ்நாட்டியத்தான்குடிநம்பியைநாளுமறவாச்
சேடார்பூங்குழற்சிங்கடியப்பன்றிருவாரூரனுரைத்த
பாடீராகிலும்பாடுமின்றொண்டீர்பாடநும்பாவம்பற்றறுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* சுந்தரமூர்த்திநாயனார், நாட்டியத்தான் குடியை அடைந்தபோது, அங்கிருந்த கோட்புலிநாயனார் எதிர்கொண்டு வணங்கி, நாயனாரைத் தம்முடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், விதிப்படி அருச்சனைசெய்து, திருவமுது செய்வித்து, சிங்கடியார், வனப்பகையார், என்கின்ற தமதுபுத்திரிகள் இருவரையும்கொண்டுவந்து, அவரை நமஸ்கரிப்பித்து, தாமும் வணங்கி, அவ்விருவரையும் அடிமையாகக் கொண்டருளவேண்டும் என்று பிரார்த்திக்க, நாயனார் அப்பெண்கள் இருவரும் தனக்குப் புத்திரிகள் என்று சொல்லி, அவர்களைத் தம்முடைய திருத்தொடையின் மேலிருத்தி, மனக்கசிவுடனே அணைத்து உச்சிமோந்து, அவர்கள் விரும்பியவைகளைக் கொடுத்தருளி, சிவபிரான் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தை அடைந்து அவரை வணங்கி, "பூணாணவதோரரவம்" என்னுந்திருப்பதிகம் பாடினார். அப்பதிகத்தின் திருக்கடைக்காப்பிலே கோட்

புலிநாயனுரைச்சிறப்பித்து, சிங்கடியாருக்குத் தம்மைப் பிதாவாக நினைத்தபடியினுல் தம்மைச் "சிஙகடியப்பன்" என்று வைத்தருளினா.

சுவாமி - இரத்நகிரிநாதர்.
தேவி - மலர்மங்கைநாயகி.

ஆ திருபபதிகம் - உகூ0.

## கககூ. திருக்காறுயில்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்.

பண் - இந்தளம. (உ-ம். திருமுறை.)

திருச்சிறறம்பலம்.

நீரானேநீள்சடைமேலொர்நிரைகொன்றைத
தாரானேதாமரைமேலயன்ருெழுஞ்
சீரானேசீர்திகழுந்திருககாறுயி
லூரானேயென்பவருனமிலாதாரே (க)

மதியானேவரியரவோடுடன்மததஞ்சேர்
விதியானேவிதியுடைவேதியர்தாந்தொழு
நெதியானேநீர்வயலசூழ்திருககாறுயிற்
பதியானேயென்பவர்பாவமிலாதாரே. (உ)

விண்ணுனேவிண்ணவரேத்திவிரும்புஞ்சீர்
மண்ணுனேமண்ணிடைவாழுமுயிாகெலலாங்
கண்ணுனேகடிபொழிலசூழ்திருககாறுயி
லெண்ணுனேயென்பவரேதமிலாதாரே (ங)

தாயானேதந்தையுமாகியதன்மைக
ளாயானேயாயநலன்பர்ககணியானே
சேயானேசீர்திகழுந்திருககாறுயின்
மேயானேயென்பவர்மேலவினைமேவாவே. (ச)

கலையானேகலைமலிசெம்பொற்கயிலாய
மலையானேமலைபவர்மும்மதின்மாயவித்த
சிலையானேசீர்திகழுந்திருக்காறுயி
னிலையானேயென்பவர்மேல்வினைநில்லாவே. (ரு)

ஆற்ருனேயாறணிசெஞ்சடையாடர
வேற்ருனேயேழுலகும்மிமையோர்களும்
போற்ருனேபொழிறிகழுந்திருக்காறுயி
னீற்ருனேயென்பவர்மேல்வினைநில்லாவே. (சு)

சேர்த்தானேதீவினைதேய்ந்தறத்தேவர்க
ளேத்தானேயேத்துநன்மாமுனிவர்க்கிடர்
காத்தானேகார்வயல்சூழ்திருக்காறாயி
லார்த்தானேயென்பவர்மேல்வினையாடாவே. (எ)

கடுத்தானேகாலனைக்காலாற்கயிலாய
மெடுத்தானையேதமாகம்முனிவர்க்கிடர்
கெடுத்தானேகேழ்கிளருந்திருக்காறாயி
லடுத்தானேயென்பவர்மேலவினையாடாவே. (அ)

பிறையானேபேணியபாடலொடின்னிசை
மறையானேமாலொடுநான்முகன்காணாத
விறையானேயெழிறிகழுந்திருக்காறாயி
லுறைவானேயென்பவர்மேல்வினையோடுமே. (கூ)

செடியாரும்புன்சமண்சீவரத்தார்களும்
படியாரும்பாவிகள்பேச்சுப்பயனில்லை
கடியாரும்பூம்பொழில்சூழ்திருககாறாயில்
குடியாருங்கொள்கையினார்க்கில்லைகுற்றமே. (கo)

ஏய்ந்தசீரெழிறிகழுந்திருக்காறாயி
லாய்ந்தசீரானடியேத்தியருள்பெற்ற
பாய்ந்தநீர்க்காழியுண்ஞானசம்பந்தன்சொல்
வாய்ந்தவாறேத்துவார்வானுலகாள்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - கண்ணாயிரநாதர்.
தேவி - கைலாசநாயகி.

ஆ திருப்பதிகம் - உகூக.

## கஉo. திருக்கன்றாப்பூர்.

### திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். (சு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

மாதினையோர்கூறுகந்தாய்மறைகொணாவா
மதிசூடீவானவர்கடங்கட்கெல்லா
நாதனேயென்றென்றுபரவிநாளு
நைந்துருகிவஞ்சகமற்றன்புகூர்ந்து
வாதனையான்முப்பொழுதும்பூநீர்கொண்டு
வைகன்மறவாதுவாழ்த்தியேத்திக்
காதன்மையாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (க)

விடிவதுமேவெண்ணீற்றைமெய்யிற்பூசி
வெளுத்தமைந்தகீளொடுகோவணமுந்தற்றுச்
செடியுடையவல்வினைநோய்தீர்ப்பாயென்றுஞ்
செல்கதிக்குவழிகாட்டுஞ்சிவனேயென்றுந்
துடியனையவிடைமடவாள்பங்காவென்றுஞ்
சுடலைதனினடமாடுஞ்சோதியென்றுங்
கடிமலர்தூய்த்தொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௨)

எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட
திருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி
யுவராதேயவரவரைககண்டபோது
வுகந்தடிமைத்திறநினைந்தங்குவந்துநோக்கி
யிவர்தேவரவர்தேவரென்றுசொலலி
யிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக்
கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே (௩)

இலங்காலஞ்செலலாநாளென்றுநெஞ்சத்
திடையாதேயாவர்க்கும்பிச்சையிட்டு
விலங்காதேநெறிநின்றங்கறிவேமிகக
மெயயன்புபுகப்பெய்துபொய்யைநீக்கித்
துலங்காமெய்வானவரைக்காத்துநஞ்ச
முண்டபிரானடியிணைக்கேசித்தம்வைத்துக்
கலங்காதேதொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௪)

விருததனைவேலைவிடமுண்டகண்டா
விரிசடைமேலவெண்டிங்கள்விளங்கச்சூடு
மொருத்தனேயுமைகணவாவுலகமூர்த்தி
நுந்தாதவொண்சுடரேயடியார்தங்கள்
பொருத்தனேயென்றென்றுபுலம்பிநாளும்
புலனைந்துமகத்தடககிப்புலமபிநோக்கிக்
கருத்தினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௫)

பொசியினான்மிடைந்துபுழுப்பொதிந்தபோர்வைப்
பொல்லாதபுலாலுடம்பைநிலாசுமென்று
பசியினான்மீதூரப்பட்டேயீட்டிப்
பலர்க்குதவலதுவொழிந்துபவளவாயார்
வசியினாலகப்பட்டுவீழாமுன்னம்
வானவர்கோன்றிருநாமமஞ்சுஞ்சொல்லிக்
கசிவினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௬)

ஐயினான்மிடறடைப்புண்டாக்கைவிட்டு
வாவியார்போவதுமேயகத்தார்கூடி

மையினாற்கண்ணெழுதிமாலைசூட்டி
　　மயானத்திலிடுவதன்முன்மதியஞ்சூடு
மையனார்க்காளாகியன்புமிககு
　　வகங்குழைந்துமெய்யரும்பியடிகள்பாதங்
கையினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே
　　கன்றாப்பூர்நடுதறியைககாணலாமே. (எ)

திரிதிமையாலைவரையுங்காவலேவித்
　　திகையாதேசிவாயநமவென்னுஞ்சிந்தைச்
சுருதிதனைத்துயககறுத்துத்துன்பவெள்ளக்
　　கடனீந்திககரையேறுஙகருத்தேமிககுப்
பரிதிதனைப்பறபறித்தபாவநாசா
　　பரஞ்சுடரேயென்றென்றுபரவிநாளுங்
கருதிமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளே
　　கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (அ.கூ)

குனிந்தசிலையாற்புரமூன்றெரித்தாயென்றுங்
　　கூற்றுதைததகுரைகழற்சேவடியாயென்றுங்
தனஞ்சயற்குப்பாசுபதமீந்தாயென்றுந்
　　தசககிரிவன்மலையெடுககவிரலாலூன்றி
முனிந்தவன்றன்சிரம்பத்துந்தாளுந்தோளு
　　முரணழித்திட்டருளகொடுத்தமூர்த்தியென்றுங்
கனிந்துமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளே
　　கன்றாப்பூர்நடுதறியைககாணலாமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி - நடுதறியப்பர்.
தேவி - உமையமமை.

ஆ௨ திருப்பதிகம் - உகூஉ.

# கஉக. திருவலிவலம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம். (௲ திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஒலலையாறியுள்ளமொன்றிககள்ளமொழிந்துவெய்ய
சொலலையாறித்தூய்மைசெய்துகாமவினையகற்றி
நல்லவாறேயுன்றனாமநாவினவின்றேத்த
வல்லவாறேவந்துநலகாய்வலிவலமேயவனே. (க)

இயங்குகின்றவிரவிதிங்கண்மற்றுநற்றேவரெல்லாம்
பயங்களாலேபற்றிநின்பாற்சித்தந்தெளிகின்றிலர்
தயங்குசோதிசாமவேதாகாமனைக்காய்ந்தவனே
மயங்குகின்றேன்வந்துநல்காய்வலிவலமேயவனே. (உ)

பெண்டிர்மக்கள்சுற்றமென்னும்பேதைப்பெருங்கடலை
விண்டுபண்டேவாழமாட்டேன்வேதனைநோய்நலியக்
கண்டுகண்டேயுன்றனுமங்காதலிக்கின்றதுள்ளம்
வண்டுகிண்டிப்பாடுஞ்சோலைவலிவலமேயவனே. (௩)

மெய்யராகிப்பொய்யைநீக்கிவேதனையைத்துறந்து
செய்யரானார்சிந்தையானேதேவர்குலக்கொழுந்தே
நைவனாயேனுன்றனுமனாளுநவிற்றுகின்றேன்
வையமுன்னேவந்துநல்காய்வலிவலமேயவனே. (௪)

துஞ்சும்போதுந்துற்றும்போதுஞ்சொல்லுவனுன்றிறமே
தஞ்சமில்லாததேவர்வந்துன்றாளிணைக்கீழ்ப்பணிய
நஞ்சையுண்டாய்க்கென்செய்கேனோநாளுநினைந்தடியேன்
வஞ்சமுண்டென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே (௫)

புரிசடையாய்புண்ணியனேநண்ணலார்மூவெயிலு
மெரியவெய்தாயெம்பெருமானென்றிமையோர்பரவுங்
கரியுரியாய்காலகாலாநீலமணிமிடற்று
வரியரவாவந்துநல்காய்வலிவலமேயவனே (௬)

தாயுநீயேதந்தைநீயேசங்கரனேயடியே
னாயுநின்பாலன்புசெய்வானாதரிக்கின்றதுள்ள
மாயமாயகாயந்தன்னுளைவர்நின்றொன்றலொட்டார்
மாயமேயென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே (௭)

நீரொடுங்குஞ்செஞ்சடையாய்நின்னுடையபொன்மலையை
வேரொடும்பீழ்ந்தேந்தலுற்றவேந்தனிராவணனைத்
தேரொடும்போய்வீழ்ந்தலறத்திருவிரலாலடர்த்த
வாரொடுங்குங்கொங்கைபங்காவலிவலமேயவனே. (௮)

ஆதியாயநான்முகனுமாலுமறிவரிய
சோதியானேநீதியிலேன்சொல்லுவதுன்றிறமே
யோதிநாளுமுன்னையேத்துமென்னைவினையவலம்
வாதியாமேவந்துநல்காய்வலிவலமேயவனே. (௯)

பொதியிலானேபூவணத்தாய்பொன்றிகழுங்கயிலைப்
பதியிலானேபத்தர்சித்தம்பற்றுவிடாதவனே
விதியிலாதார்வெஞ்சமணர்சாக்கியரென்றிவர்கண்
மதியிலாதாரென்செய்வாரோவலிவலமேயவனே. (௧௦)

வன்னிகொன்றைமத்தஞ்சூடும்வலிவலமேயவனைப்
பொன்னிநாடன்புகலிவேந்தன்ஞானசம்பந்தன்சொன்ன
பன்னுபாடல்பத்தும்வல்லார்மெய்த்தவத்தோர்விரும்பு
மன்னுசோதியீசனோடேமன்னியிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

" இத்திருப்பதிகத்தின் முதற்றிருப்பாடலில் " [" யாழியுள் " என்பதுமுதல் பதாந் திருப்பாடலில் "யோ"] என்பதுவரை வெள்ளிபாட்டல்.

## திருவிராகம்.

பண் - வியாழக்குறிஞ்சி. (ஆம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுத
லேவியல்கணைபிணையெதிர்விழியுமையவண்
மேவியதிருவுருவுடையவன்விரைமலர்
மாவியலபொழில்வலிவலமுறையிறையே. (க)

இட்டமதமர்பொடியிசைதலினசைபெறு
பட்டவிர்பவளநன்மணியெனவணிபெறு
விட்டொளிர்திருவுருவுடையவன்விரைமலர்
மட்டமர்பொழில்வலிவலமுறையிறையே. (உ)

உருமலிகடல்கடைவுழியுலகமருயிர்
வெருவுறுவகையெழுவிடம்வெளிமலையணி
கருமணிநிகர்களமுடையவன்மிடைதரு
மருமலிபொழிலவலிவலமுறையிறையே. (ங)

அனனிகர்சடையழலவியுறவெனவரு
புனனிகழ்வதுமதிநனைபொறியரவமு
மெனநினைவொடுவருமிதுமெலமுடிமிசை
மனமுடையவர்வலிவலமுறையிறையே. (ச)

பிடியதனுருவுமைகொளமிகுகரியது
வடிகொடுதனதடிவழிபடுமவரிடர்
கடிகணபதிவரவருளினன்மிகுகொடை
வடிவினர்பயிலவலிவலமுறையிறையே. (ரு)

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகைவகுவருளினனெழில்
வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே. (சு)

நலிதருதரைவரநடைவருமிடையவர்
பொலிதருமடவரலியர்மனையதுபுகு
பலிகொளவருபவனெழின்மிகுதொழில்வளர்
வலிவருமதில்வலிவலமுறையிறையே. (எ)

இரவணனிருபதுகரமெழின்மலைதனி
னிரவணநினைதரவவன்முடிபொடிசெய்து
விரவணமமர்பெயரருளினனகநெகி
யிரவணநிகர்வலிவலமுறையிறையே. (அ)

தேனமர்தருமலரணையவன்வலிமிகு
மேனமதாய்நிலமகழரியடிமுடி
தானணையாவுருவுடையவன்மிடைகொடி
வானணைமதில்வலிவலமுறையிறையே. (கூ)

இலைமலிதருமிகுதுவருடையவர்களு
நிலைமையிலுணலுடையவர்க்ளுநினைவது
தொலைவலிநெடுமறைதொடர்வகையுருவினன்
மலைமலிமதில்வலிவலமுறையிறையே. (௧௦)

மன்னியவலிவலநகருறையிறைவனை
யின்னியல்கருமலநகரிறையெழின்மறை
தன்னியலகலைவலதமிழ்விரகனதுரை
யுன்னியவொருபதுமுயர்பொருடருமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

திருத்தாண்டகம். (௬-ம. திருமுறை.)

திருச்சிற்றம்பலம.

நல்லான்காணான்மறைகளாயினான்கா
ணம்பன்காணனுகாதார்புரமூன்றெய்த
வில்லான்காண்விண்ணவர்க்குமேலானான்காண்
மெலலியலாள்பாகன்காண்வேதவேள்விச்
சொலலான்காண்சுடர்மூன்றுமாயினான்கா
டொண்டாகிபபணிவார்ககுததொலவானீய
வலலான்காண்வானவர்கள்வணஙகியேத்தும
வலிவலததான்காணவனென்மனத்துளானே. (௧)

ஊனவன்காணுடறனகோருயிரானான்கா
ணுளளவன்காணில்லவன்காணுமையாட்கென்றுந்
தேனவன்காண்டிருவவன்காண்டிசையானான்காண்
டீர்ததன்காண்பார்த்தன்றன்பணியைக்கண்ட
கானவன்காண்கடலவன்காண்மலையானான்காண்
களியானையீருரிவைகதறப்போர்த்த
வானவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௨)

ஏயவன்காணெல்லார்ககுமியலபானான்கா
ணின்பன்காண்டுனபங்களில்லாதான்காண்
டாயவன்காணுலகுக்கோர்தன்னொப்பில்லாத்
தத்துவன்காணுத்தமன்காண்டானேயெங்கு
மாயவன்காணண்டத்துக்கப்பாலான்கா
ணகங்குழைந்து *மெய்வருந்தியழுவார்தங்கள்
வாயவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௩)

உய்த்தவன்காணுடறனகோருயிரானான்கா
ணோங்காரத்தொருவன்காணுலகுக்கெல்லாம்
வித்தவன்காண்விண்பொழியுமழையானான்காண்
விளைவவன்காண்விரும்பாதார்நெஞ்சத்தென்றும்

* "மெய்யரும்பி" எனவும் பாடம்.

பொய்த்தவன்காண்பொழிலேழுந்தாங்கினான்காண்
புனலோடுவளர்மதியும்பாம்புஞ்சென்னி
வைத்தவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (ச)

கூற்றவன்காண்குணமவன்காண்குறியானான்காண்
குன்றங்களனைத்துங்காண்கோலமாய
நீற்றவன்காணிழலவன்காணெருப்பானான்கா
ணிமிர்புன்சடைமுடிமேனீரார்கங்கை
யேற்றவன்காணேழுலகுமாயினான்கா
ணிமைப்பளவிற்காமனைமுன்பொடியாய்வீழ
மாற்றவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே (ரு)

நிலையவன்காணடோற்றவன்காணிறையானான்கா
ணீரவன்காண்பாரவன்காணூர்மூன்றெய்த
சிலையவன்காணசெய்யவாயக்கரியகூந்த
றேன்மொழியையொருபாகஞ்சேர்த்தினான்காண்
கலையவன்காண்காற்றவன்காண்காலன்வீழக்
கறுத்தவன்காண்கயிலாயமென்னுந்தெய்வ
மலையவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (சா)

பெண்ணவன்காணணவன்காண்பெரியோர்க்கென்றும்
பெரியவன்காணரியவன்காணயனானான்கா
ணெண்ணவன்காணெழுத்தவன்காணின்பக்கேள்வி
யிசையவன்காணியலவன்காணெல்லாங்காணுங்
கண்ணவன்காண்கருத்தவன்காண்கழிந்தோர்செல்லுங்
கதியவன்காண்மதியவன்காண்கடலேழ்சூழ்ந்த
மண்ணவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (எ)

முன்னவன்காண்பின்னவன்காண்மூவாமேனி
முதலவன்காண்முடிவவன்காண்மூன்றுசோதி
யன்னவன்காணடியார்கட்குமண்டத்தார்க்கு
மணியவன்காண்சேயவன்காணளவில்சோதி
மின்னவன்காணுருமவன்காண்டிருமாலபாகம்
வேண்டினான்காணீண்டுபுனற்கங்கைக்கென்று
மன்னவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (அ)

நெதியவன்காண்யாவர்க்குநினையவொண்ணா
நீதியன்காண்வேதியன்காணினைவார்க்கென்றுங்
கதியவன்காண்காரவன்காண்கனலானான்காண்
காலங்களூழியாக்கலந்துநின்ற
பதியவன்காண்பழமவன்காணிரதந்தான்காண
பாம்போடுதிங்கள்பயிலவைத்த

மதியவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (கூ)

பங்கயத்தின்மேலானும்பாலனாகி
யுலகளந்தபடியானும்பரவிக்காணா
தங்கைவைத்தசென்னியராயளக்கமாட்டா
வனலவனகாணலைகடல்சூழிலங்கைவேந்தன்
கொங்கலர்ந்தமுடிநெரியவிரலாலூன்றுங்
குழகன்காணழகன்காண்கோலமாய
மங்கையர்க்கோர்கூறன்காண்வானோரேத்தும்
வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - தக்கேசி. (எ-ம. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

ஊனங்கத்துயிர்ப்பாயுயிர்க்கெல்லா
மோங்காரத்துருவாகிநின்றானை
வானங்கத்தவர்க்குமளப்பரிய
வள்ளலையடியார்கடமுள்ளத்
தேனங்கத்தமுதாகியுள்ளூறுந்
தேசனைத்திளைத்தற்கினியானை
மானங்கைத்தலத்தேந்தவல்லானை
வலிவலந்தனில்வந்துகண்டேனே. (க)

பல்லடியார்பணிக்குப்பரிவானைப்
பாடியாடும்பத்தர்க்கன்புடையானைச்
செல்லடியேநெருக்கித்திறம்பாது
சேர்ந்தவர்க்கேசித்திமுத்திசெய்வானை
நல்லடியார்மனத்தெய்ப்பினில்வைப்பை
நாலுறுகுறையறிந்தருள்புரிவானை
வல்லடியார்மனத்திச்சையுளானை
வலிவலந்தனில்வந்துகண்டேனே. (உ)

ஆழியனயகனாறேயுயர்ந்தானை
யாதியந்தம்பணிவார்க்கணியானைக்
கூழையராகிப்பொய்யேகுடியோம்பிக்
குழைந்துமெய்யடியார்குழுப்பெய்யும்
வாழியர்க்கேவழுவாநெறிகாட்டி
மறுபிறப்பென்னைமாசறுத்தானை
மாழையொண்கண்ணுமையைமகிழ்ந்தானை
வலிவலந்தனில்வந்துகண்டேனே. (ங)

நாத்தானுன்றிறமேதிறம்பாது
நண்ணியண்ணித்தமுதம்பொதிந்தூறு

மாத்தானையடியேன்றனக்கென்று
மளவிறந்தபஃறேவர்கள்போற்றுஞ்
சோத்தானைச்சுடர்மூன்றிலுமொன்றித்
துருவிமால்பிரமன்னறியாத
மாத்தானைமாத்தெனக்குவைத்தானை
வலிவலந்தனில்வநதுகண்டேனே. (௪)

நல்லிசைஞானசம்பந்தனுநாவுக
கரசரும்பாடியநற்றமிழ்மாலை
சொல்லியவேசொல்லியேத்துகப்பானைத்
தொண்டனேனறியாமையறிந்து
கல்லியன்மனத்தைக்கசிவிததுக
கழலடிகாட்டியென்களைகளையறுக்கும்
வலலியலவானவர்வணஙகநின்றானை
வலிவலந்தனிலவந்துகணடேனே (௫)

பாடுமாபாடிப்பணியுமாறறியேன்
பனுவுமாபனுவிப்பரவுமாறறியேன்
றேடுமாதேடித்திருத்துமாறறியேன்
செல்லுமாசெலலைச்செலுததுமாறறியேன்
கூடுமாறெங்ஙனமோவென்றுகூறக்
குறித்துக்காட்டிககொணர்ந்தெனையாண்டு
வாடிநீவாளாவருந்தலென்பானை
வலிவலந்தனில்வந்துகண்டேனே (௬)

பந்தித்தவல்வினைப்பற்றறப்பிறவிப்
படுகடற்பரப்புத்தவிர்ப்பானைச்
சந்தித்ததிறலாற்பணிபூட்டித்
தவத்தையீட்டியதம்மடியார்கருச்
சிந்தித்தற்கெளிதாய்ததிருப்பாதஞ்
சிவலோகந்திறந்தேற்றவலலானை
வந்திப்பார்தம்மனத்தினுள்ளானை
வலிவலந்தனிலவந்துகண்டேனே (௭)

எவ்வவர்தேவரிருடிகண்மன்ன
ரெண்ணிறந்தார்கண்மற்றெங்குநின்றேத்த
வவ்வவர்வேண்டியதேயருள்செய்து
வடைந்தவர்க்கேயிடமாகிநின்றானை
யிவ்வவர்கருணையெங்கற்பகக்கடலை
யெம்பெருமானருளாயென்றபின்னை
வவ்வியென்னாவிமனங்கலந்தானை
வலிவலந்தனிலவந்துகண்டேனே. (௮)

திரியுமுப்புரஞ்செற்றதுங்குற்றத்
திறலரக்கனைச்செறுத்ததுமற்றைப்
பெரியநஞ்சமுதுண்டதுமுற்றும்
பின்னையாய்முன்னமேமுளைத்தானை

யரியநான்மறையந்தணரோவா
தடிபணிந்தறிதற்கரியானை
வரையின்பாவைமணாளனெம்மானை
வலிவலந்தனிலவந்துகண்டேனே. (௯)

ஏன்றவந்தணன்றலையினையறுத்து
நிறைக்கமாலுதிரத்தினையேற்றுத்
தோன்றுதோண்மிசைக்களேபரந்தன்னைச்
சுமந்தமாவிரதத்தகங்காளன்
சான்றுகாட்டுதற்கரியவனெளிய
வன்றனைத்தன்னிலாமனத்தார்க்கு
மான்றுசென்றணையாதவன்றன்னை
வலிவலந்தனிலவந்துகண்டேனே. (௧௦)

கலிவலங்கெடவாரழலோம்புங்
கற்றநான்மறைமுற்றனலோம்பும்
வலிவலந்தனில்வந்துகண்டடியேன்
மனனுநாவலாரூரனவன்றொண்ட
னொலிகொளின்னிசைச்செந்தமிழ்பத்து
முள்ளத்தாலுகந்தேத்தவல்லார்போய்
மெலிவில்வானுலகத்தவரேத்த
விரும்பிவிண்ணுலகெய்துவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவலிவலத்திருப்பதிகம் - ௬.

சுவாமி - மனத்துணைநாதர்.
தேவி - மாழையங்கண்ணியம்மை.

---

ஆக திருப்பதிகம் - ௨௯௬.

---

## ௧௨௨. திருக்கைச்சினம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - சீகாமரம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

தையலோர்கூறுடையான்றண்மதிசேர்செஞ்சடையான்
மையுலாமணிமிடற்றான்மறைவிளங்குபாடலா
னெய்யுலாமூவிலைவேலேந்திநிவந்தொளிசேர்
கையுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௧)

விடமல்குகண்டத்தான்வெள்வளையோர்கூறுடையான்
படமல்குபாம்பரையான்பற்றாதார்புரமெரித்தா
னடமல்குமாடலினான்மறையோர்பாடலினான்
கடமல்குமாவுரியானுறைகோயில்கைச்சினமே. (௨)

பாடலார்நான்மறையான்பைங்கொன்றைபாம்பினொடுஞ்
சூடலான்வெண்மதியந்துன்றுகரந்தையொடு
மாடலானங்கையனலேந்தியாடரவக்
காடலான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௩)

பண்டமரர்கூடிக்கடைந்தபடுகடனஞ்
சுண்டபிரானென்றிறைஞ்சியும்பர்தொழுதேத்த
விண்டவர்கடொன்னகரமூன்றுடனேவெந்தவியக்
கண்டபிரான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௪)

தேய்த்துமலிவெண்பிறையான்செய்யதிருமேனியினான்
வாய்ந்திலங்குவெண்ணீற்றான்மாதினையோர்கூறுடையான்
சாய்ந்தமரர்வேண்டத்தடங்கடனஞ்சுண்டநங்கைக்
காய்ந்தபிரான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௫)

மங்கையோர்கூறுடையான்மன்னுமறைபயின்று
னங்கையோர்வெண்டலையானாடரவம்பூண்டுகந்தான்
றிங்களொடுபாம்பணிந்தசீரார்திருமுடிமேற்
கங்கையினான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௬)

வரியரவேநாணாகமால்வரையேவில்லாக
வெரிகணையான்முப்புரங்களெய்துகந்தவெம்பெருமான்
பொருசுடலையீமப்புறங்காட்டான்போர்த்ததோர்
கரியுரியான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௭)

போதுலவுகொன்றைபுனைந்தான்றிருமுடிமேன்
மாதுமையாளஞ்சமலையெடுத்தவாளரக்க
னீதியினாலேத்தநிகழ்வித்துநின்றாடுங்
காதலினான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௮)

மண்ணினைமுன்சென்றிரந்தமாலுமலரவனு
மெண்ணறியாவண்ணமெரியுருவமாயபிரான்
பண்ணிசையாலேத்தப்படுவான்றன்னெற்றியின்மேற்
கண்ணுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௯,௧௦)

தண்வயல்சூழ்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
கண்ணுதலான்மேவியுறைகோயில்கைச்சினத்தைப்
பண்ணிசையாலேத்திப்பயின்றவிவைவல்லார்
விண்ணவராயோங்கிவியனுலகமாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - கைச்சினநாதர்.
தேவி - வெள்வளைநாயகி.

---

ஆ. திருப்பதிகம் - உகள.

---

# ௧௨௫. திருக்கோளிலி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - பழந்தக்கராகம். (௧ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

நாளாயபோகாமேநஞ்சணியுங்கண்டனுக்கே
யாளாயவன்புசெய்வோமடநெஞ்சேயரனாமங்
கேளாய்நங்கிளைகிளைக்குங்கேடுபடாத்திறமருளிக்
கோளாயநீக்குமவன்கோளிலியெம்பெருமானே. (௧)

ஆடரவத்தழகாமையணிகேழற்கொம்பார்த்த
தோடரவத்தொருகாதன்றுணைமலர்நற்சேவடிக்கே
பாடரவத்திசைபயின்றுபணிந்தெழுவார்தம்மனத்திற்
கோடரவந்தீர்க்குமவன்கோளிலியெம்பெருமானே. (௨)

நன்றுநகுநாண்மலரானல்லிருக்குமந்திரங்கொண்
டொன்றிவழிபாடுசெயலுற்றவன்றனோங்குயிர்மேற்
கன்றிவருகாலனுயிர்கண்டவனுக்கன்றளித்தான்
கொன்றைமலர்பொன்றிகழுங்கோளிலியெம்பெருமானே. (௩)

வந்தமணலாலிலிங்கமண்ணியின்கட்பாலாட்டுஞ்
சிந்தைசெய்வோன்றன்கருமந்தேர்ந்துசிதைப்பான்வருமத்
தந்தைதனைச்சாடுதலுஞ்சண்டீசனென்றருளிக்
கொந்தணவுமலர்கொடுத்தான்கோளிலியெம்பெருமானே. (௪)

வஞ்சமனத்தஞ்சொடுக்கிவைகலுநற்பூசனையா
னஞ்சமுதுசெய்தருளுநம்பியெனவேநினையும்
பஞ்சவரிற்பார்த்தனுக்குப்பாசுபதமீந்துகந்தான்
கொஞ்சுகிளிமஞ்சணவுங்கோளிலியெம்பெருமானே. (௫)

தாவியவனுடனிருந்துங்காணாததற்பரனை
யாவிதனிலஞ்சொடுக்கியங்கணனென்றாதரிக்கு
நாவியல்சீர்நமிநந்தியடிகளுக்குநல்குமவன்
கோவியலும்பூவெழுகோற்கோளிலியெம்பெருமானே. (௬)

கன்னவிலுமாலவரையான்கார்திகழுமாமிடற்றான்
சொன்னவிலுமாமறையான்றோத்திரஞ்சேர்வாயினுளான்
மின்னவிலுஞ்செஞ்சடையான்வெண்பொடியானங்கையினிற்
கொன்னவிலுஞ்சூலத்தான்கோளிலியெம்பெருமானே. (௭)

அந்தரத்திற்றேருருமரக்கன்மலையன்றெடுப்பச்
சுந்தரத்தன்றிருவிரலாலூன்றவவனுடனெரிந்து
மந்திரத்தமறைபாடவாளவனுக்கீந்தானுங்
கொந்தரத்தமதிச்சென்னிக்கோளிலியெம்பெருமானே. (௮)

நாணமுடைவேதியனுநாரணனுநண்ணவொணாத்
தாணுவெனையாளுடையான்றன்னடியார்ககன்புடைமை
பாணனிசைபத்திமையாற்பாடுதலும்பரிந்தளித்தான்
கோணவிளம்பிறைச்சென்னிககோளிலியெம்பெருமானே. (௯)

தடுக்கமருஞ்சமணரொடுதர்ககசாத்திரத்தவர்சொல்
விடுக்கண்வருமொழிகேளாதீசனையேயேத்துமின்க
ணடுககமிலாவமருலகநண்ணலுமாமண்ணல்கழல
கொடுககிலாவரங்கொடுககுங்கோளிலியெம்பெருமானே. (௧0)

நமபனைநலலடியார்களுமுடைமாடென்றிருககும்
கொம்பனையாள்பாகனெழிற்கோளிலியெமபெருமானை
வமபமருந்தண்காழிச்சமபந்தன்வண்டமிழ்கொண்
டின்பமரவலலார்களெயதுவார்களீசனையே (௧௧)

திருச்சிறறமபலம

## திருநாவுக்கரசுநாயனா

திருக்குறுந்தொகை (௫-ம. திருமுறை.)

திருச்சிறறம்பலம.

மைகொளகண்ணுமைபஙகினன்மானமழு
தொக்கையினன்செயயதோர்சோதியன்
கொககமர்பொழிலசூழ்தருகோளிலி
நக்கனைத்தொழநம்வினைநாசமே (௧)

முத்தினைமுதலாகியமூர்த்தியை
வித்தினைவிளைவாயவிகிர்தனைக
கொததலர்பொழிலசூழ்தருகோளிலி
யத்தனைத்தொழநீங்குநமமலலலே (௨)

வெண்டிரைப்பரவைவிடமுணடதோர்
கண்டனைககலந்தார்தமக்கன்பனைக
கொண்டலம்பொழிற்கோளிலிமேவிய
வண்டனைத்தொழுவார்ககலலலில்லையே. (௩)

பலவும்வலவினைபாறும்பரிசினு
லுலவுங்கங்கையுந்திங்களுமொண்சடை
குலவினுன்குளிரும்பொழிற்கோளிலி
நிலவினுன்றனைநித்தனினைமினே. (௪)

அலலலாயினதீருமழகிய
முல்லைவெண்முறுவல்லுமையஞ்சவே
கொல்லையானையுரித்தவன்கோளிலிச்
செல்வன்சேவடிசென்றுதொழுமினே. (௫)

ஆவின்பால்கண்டளவிலருந்தவப்
பாலன்வேண்டலுஞ்செல்லென்றுபாற்கடல்
கூவினான்குளிரும்பொழிற்கோளிலி
மேவினானைத்தொழவினைவீடுமே. (௬)

சீர்த்தநன்மனையாளுஞ்சிறுவரு
மார்த்தசுற்றமும்பற்றிலையாதலாற்
கூத்தனாருறையுந்திருக்கோளிலி
யேத்திநீர்தொழுமினிடர்தீருமே (௭)

மாலதாகிமயங்குமனிதர்காள்
காலம்வந்துகடைமுடியாமுனங்
கோலவார்பொழிற்கோளிலிமேவிய
நீலகண்டனைநின்றுநினைமினே (௮)

கேடுமூடிக்கிடந்துண்ணுநாட்டுத்
தேடிநீர்திரியாதேசிவகதி
கூடலாந்திருக்கோளிலியீசனைப்
பாடுமின்னிரவோடுபகலுமே (௯)

மடுத்துமாமலையேந்தலுற்றானை
யடர்த்துப்பின்னுமிரங்கியவற்கருள்
கொடுத்தவன்னுறைகோளிலியேதொழ
விடுத்துநீங்கிடுமேலைவினைகளே (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை. (௫-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

முன்னமேநினையாதொழிந்தேனுனை
யின்னநாளுனசேவடியேத்திலேன்
செந்நெலார்வயல்சூழ்திருக்கோளிலி
மன்னனேயடியேனைமறவலே. (௧)

விண்ணுளார்தொழுதேத்தும்விளக்கினை
மண்ணுளார்வினைதீர்க்குமருந்தினைப்
பண்ணுளார்பயிலுந்திருக்கோளிலி
யண்ணலாரடியேதொழுதுய்ம்மினே. (௨)

நாளுநம்முடைநாள்களறிகிலோ
மாளுநோய்களோரைம்பதோடாறெட்டு
மேழைமைப்பட்டிருந்துநீர்நையாதே
கோளிலியரன்பாதமேகூறுமே. (௩)

விழவினோசையொலியறாத்தண்பொழில
பழகினார்வினைதீர்க்கும்பழம்பதி
யழல்கையானமருந்திருக்கோளிலிக்
குழகனார்திருப்பாதமேகூறுமே. (௪)

மூலமாகியமூவர்க்குமூர்த்தியைக்
காலனாகியகாலற்குங்காலனைக்
கோலமாம்பொழில்சூழ்திருக்கோளிலிச்
சூலபாணிதன்பாதந்தொழுமினே. (௫)

காற்றனைக்கடனஞ்சமுதுண்டவெண்
ணீற்றனைநிமிர்புன்சடையண்ணலை
யாற்றனையமருந்திருக்கோளிலி
யேற்றனாரடியேதொழுதேத்துமே (௬)

வேதமாயவிண்ணோர்கடலைவனை
யோதிமன்னுயிரேத்துமொருவனைக்
கோதிவண்டறையுந்திருக்கோளிலி
வேதநாயகன்பாதம்விரும்புமே (௭)

நீதியாற்றொழுவார்கடலைவனை
வாதையானவிடுக்குமணியினைக
கோதிவண்டறையுந்திருக்கோளிலி
வேதநாயகன்பாதம்விரும்புமே (௮)

மாலுநான்முகனாலுமறிவொணாப்
பாலுமென்மொழியாளொருபங்கனைக்
கோலமாம்பொழில்சூழ்திருககோளிலி
நீலகண்டனைநித்தநினைமினே (௯)

அரக்கனையவிலங்கையர்மன்னனை
நெருக்கியம்முடிபத்திறுத்தானவற்
கிரக்கமாகியவன்றிருககோளிலி
யருத்தியாயடியேதொழுதுய்ம்மினே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

---

பண் - நட்டராகம் (௭-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*நீளநினைந்தடியேனுமைநித்தலுங்கைதொழுவேன்
வாளனகண்மடவாளவள்வாடிவருந்தாமே
கோளிலியெம்பெருமான்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாளிலையெம்பெருமானவையட்டித்தரப்பணியே. (௧)

வண்டமருங்குழலாளுமைநங்கையொர்பங்குடையாய்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்தவெம்வேதியனே
தெண்டிரைநீர்வயல்சூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (௨)

பாதியோர்பெண்ணைவைத்தாய்படருஞ்சடைக்கங்கைவைத்தாய்
மாதர்நல்லார்வருத்தமதுநீயுமறிதியன்றே
கோதில்பொழில்புடைசூழ்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாதியேயற்புதனேயவையட்டித்தரப்பணியே. (௩)

சொல்லுவதென்னுனைநான்றொண்டைவாயுமைநங்கையைநீ
புல்கியிடத்தில்வைத்தாய்க்கொருபூசல்செய்தாருளரே
கொல்லைவளம்புறவிற்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னல்லல்களைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (௪)

முல்லைமுறுவலுமையொருபங்குடைமுக்கணனே
பல்லயர்வெண்டலையிற்பலிகொண்டுழல்பாசுபதா
கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலியெம்பெருமா
னல்லலகளைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (௫)

குரவமருங்குழலாளுமைநங்கையொர்பங்குடையாய்
பரவைபசிவருத்தமதுநீயுமறிதியன்றே
குரவமரும்பொழிலசூழ்குணடையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னரவமசைத்தவனேயவையட்டித்தரப்பணியே. (௬)

எம்பெருமானுனையேநினைந்தேத்துவனெப்பொழுதும்
வம்பமருங்குழலாளொருபாகமமர்ந்தவனே
செம்பொனின்மாளிகைசூழ்திருக்கோளிலியெம்பெருமா
னன்பதுவாயடியேற்கவையட்டித்தரப்பணியே. (௭)

அரக்கன்முடிகரங்களடர்த்திட்டவெம்மாதிபிரான்
பரக்குமரவல்குலாள்பரவையவள்வாடுகின்றாள்
குரக்கினங்கள்குதிகொள்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னிரக்கமதாயடியேற்கவையட்டித்தரப்பணியே. (௮)

பண்டையமால்பிரமன்பறந்தும்மிடந்தும்மயர்ந்துங்
கண்டிலராயவர்கள்கழல்காண்பரிதாயபிரான்
றெண்டிரைநீர்வயலசூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (௯)

கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலிமேயவனை
நல்லவர்தாம்பரவுந்திருநாவலவூரனவ
னெல்லிடவாட்கள்வேண்டிநினைந்தேத்தியபத்தும்வல்லா
ரலலலகளைந்துலகினண்டவானுலகாள்பவரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* குண்டையூர்க்கிழவா, சுந்தரமூர்த்தி நாயனாரபொருட்டு நெடுங்காலமாகச் செய் வந்த திருத்தொண்டுக்கு முட்டு வந்ததுகண்டு, சிவபெருமான் தந்தருளிய நென்மலை னிதரால் எடுக்கப்படும் அளவினையுடையதன்று என்று விண்ணப்பஞ்செய்ய, சுந்தர மூர்த்திநாயனார் அவரோடு குண்டையூர்க்குப்போய் நென்மலையைக் கண்டு அதிசயித் ு திருவருளை வியந்து, பரவையாாவீட்டுக்கு இந்நெல்லை எடுக்க ஆளும் சிவபெரு ானே தந்தருளினன்றி முடியாது என்று திருவுளங்கொண்டு, சமீபத்திலுள்ள

கோளிலியென்னும் ஸ்தலத்திலிருக்கின்ற சிவாலயத்தை அடைந்து சிவபெருமானை வணங்கி, "நீளநினைந்தடியேனுமை" என்னும் திருப்பதிகம் பாடினார். அப்போது, சிவபெருமான் சிவகணங்களை ஏவி நென்மலையை பரவையார் திருமாளிகைக்குச் சேர பணித்தருளினார்.

---

திருக்கோளிலித் திருப்பதிகம் - ௪.

---

சுவாமி - கோளிலிநாதர்.
தேவி - வண்டமர்பூங்குழலி.

---

ஆ திருப்பதிகம் - ௩௦௧.

---

# ௧௨௪. திருவாய்மூர்.

---

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்-நட்டராகம். (௨-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

* தளிரிளவளரொளியுமைபாடத்தாளம்மிடவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னியின்மேல்
வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௧)

வெந்தழல்வடிவினர்பொடிபூசிவிரிதருகோவணவுடைமேலோர்
பந்தஞ்செய்தரவசைத்தொலிபாடிப்பலபலகடைதொறும்பலிதேர்வார்
சிந்தனைபுகுந்தெனக்கருணல்கிச்செஞ்சுடர்வண்ணர்தம்மடிபரவ
வந்தனைபலசெயவிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௨)

பண்ணிற்பொலிந்தவீணையர்பதினெண்கணமுமுணராநஞ்
சுண்ணப்பொலிந்தமிடற்றினருள்ளமுருகிலுடனாவார்
சுண்ணப்பொடிநீறணிமார்பர்சுடர்பொற்சடைமேற்றிகழ்கின்ற
வண்ணப்பிறையோடிவராணீர்வாயமூரடிகள்வருவாரே. (௩)

எரிகிளர்மதியமொடெழினுதன்மேலெறிபொறியரவினொடாறுமூழ்க
விரிகிளர்சடையினர்விடையேறிவெருவவந்திடர்செய்தவிகிர்தனார் [ம்
புரிகிளர்பொடியணிதிருவகலம்பொன்செய்தவாய்மையர்பொன்மிளிரு
வரியரவரைக்கசைத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௪)

அஞ்சனமணிவணவெழினிறமாவகமிடறணிகொளவுடறிமில
நஞ்சினையமரர்களமுதமெனநண்ணியநறுநுதலுமைநடுங்க
வெஞ்சினமால்களியானையின்றோல்வெருவுறப்போர்த்ததனிறமுமதே
வஞ்சனைவடிவினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௫)

ல்லியமலர்புல்குவிரிகுழலார்கழலிணையடிநிழலவைபரவ
வல்லியமபோதுகொண்டெரியேந்தியெழிலொடுதொழிலவையிசைய
சால்லியவருமறையிசைபாடிச்சூடிளமதியினர்தோடுபெய்து [வல்லார்
ல்லியந்தோலுடுத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௬)

டபடுகொன்றைநன்மலர்திகழுங்கண்ணியர்விண்ணவர்கனமணிசேர்
டிபில்குமிறையவர்மறுகினல்லார்முறைமுறைபலிபெயமுறுவல்செய்
ரர், பொடியணிவடிவொடுதிருவகலம்பொன்னெனமிளிர்வதொரரவி
னுடும், வடிநுனைமழுவினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௭)

டிணைபுதுமலர்ககமழ்கொன்றைக்கண்ணியர்வீணையர்தாமுமஃதே
பட்டிணைசாந்தமொடுமைதுணையாவிறைவனுருறைவதொரிடம்வினவி
பட்டிணைபகலலகுல்விரிகுழலார்பாவையர்பலியெதிர்கொணர்ந்துபெ
ர, வட்டணையாடலொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௮)

னமருப்பினொடெழிலாமையிசையப்பூண்டோரேறேறிக
னமதிடமாவுறைகின்றகள்வர்கனவிற்றுயர்செய்து
தனுணமலர்களுந்திவிம்மித்திகழ்பொற்சடைமேற்றிகழ்கின்ற
னநன்மதியினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௯)

டலவெண்பிறையினர்சுடர்முடியர்சுண்ணவெண்ணீற்றினர்சுடர்மழு
ட், பாடல்வண்டிசைமுரல்கொன்றையந்தார்பாமபொடுநூலவைப
சந்திலங்கக, கோடனன்முகிழ்விரல்கூப்பிநல்லார்குறையுறுபலியெதி
கொணர்ந்துபெய்ய, வாடல்வெண்டலைபிடித்திவராணீர்வாய்மூரடிகள்
நுவாரே. (௧௦)

ங்களொடருவரைப்பொழிற்சோலைத்தேனலங்கானலந்திருவாய்மூ
கமொடருமறையொலிபாடலழனிறவண்ணர்தம்மடிபரவி
கடம்வினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்றமிழ்மாலை
ங்கியமனத்தினாற்றொழுதெழுவார்தமர்நெறியுலகுக்கோர்தவநெறியே.

திருச்சிற்றம்பலம்.

---

* திருஞானசம்பந்தப்பிள்ளையாரும், திருநாவுக்கரசுநாயனாரும், திருமறைக்காட்டில் தங்களாலே திருக்காப்பிடப்பட்ட திருக்கதவு திறக்கவும், அடைக்கவும் பாடி, ாலயத்தை அடைந்தபின், திருநாவுக்கரசுநாயனார் தாம் பதிகம் முழுதும் பாடி பின் திருக்கதவு திறக்கப்பட்ட அருமையையும், பிள்ளையார் முதற்பாட்டைப்பாடி யுடனே, அஃதடைக்கப்பட்ட எளிமையையும் சிந்தித்து அருகித்திரை செய்தார். பொழுது சிவபிரான் அவரிடத்திற்சென்று, "நாம் வாய்மூரிலே இருப்போம், அவ் த்திற்குத் தொடர்ந்து வா" என்று அருளிச்செய்துபோக, வாகீசமூர்த்தி அவ குப்பின் னெடுந்தூரம் தொடர்ந்துசெல்ல, சுவாமி சமீபத்திலே காட்சிகொடுப் ாபோல ஒரு திருக்கோயிலை எதிரே காண்பித்து, அதனுள்ளே புகுந்தருளினார். ளையார், நாயனார் திருவாய்மூருக்குப் போவதைக் கேள்வியுற்று அங்குவந்து சே ார். அப்போது சிவபிரான் உமாதேவியாரோடு ஆடல் காட்டப் பிள்ளையார் தரி து "தளிரிள" என்னும் திருப்பதிகம்பாடினார்.

---

வளைத்தவரிசிலையுங்கையிற்கண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (ச)

கான்மறையும்போதகத்தினுரிவைகண்டேன்
காலிற்கழல்கண்டேன்கரியின்றோல்கொண்
டேன்மறையப்போர்த்தவடிவுங்கண்டே
னுள்கமனம்வைத்தவுணர்வுங்கண்டே
னான்மறையானோடுநெடியமாலு
நண்ணிவரக்கண்டேன்றிண்ணமாக
மான்மறிதங்கையின்மருவககண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (ரு)

அடியார்சிலம்பொலிகளார்ப்பக்கண்டே
னவ்வவர்க்கேயீந்தகருணைகண்டேன்
முடியார்சடைமேலரவமூழ்கி
மூரிப்பிறைபோய்மறையககண்டேன்
கொடியாரதன்மேலிடபங்கண்டேன்
கோவணமுங்கீளுங்குலாவக்கண்டேன்
வடியாருமூவிலைவேல்கையிற்கண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (சா)

குழையார்திருத்தோடுகாதிற்கண்டேன்
கொககரையுஞ்சச்சரியுங்கொள்கைகண்டே
னிழையார்புரிநூல்வலத்தேகண்டே
னேழிசையாழ்வீணைமுரலக்கண்டேன்
றழையார்சடைகண்டேன்றன்மைகண்டேன்
றக்கையொடுதாளங்கறங்கக்கண்டேன்
மழையார்திருமிடறுமற்றுங்கண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (எ)

பொருந்ாதசெய்கைபொலியக்கண்டேன்
போற்றிசைத்துவிண்ணோர்புகழக்கண்டேன்
பரிந்தார்க்கருளும்பரிசுங்கண்டேன்
பாராகிப்புனலாகிநிற்கைகண்டேன்
விருந்தாய்ப்பரந்ததொகுதிகண்டேன்
மெல்லியலும்விநாயகனுந்தோன்றக்கண்டேன்
மருந்தாயப்பிணிதீர்க்குமாறுகண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (அ)

மெய்யன்பரானார்க்கருளுங்கண்டேன்
வேடுவனாய்நின்றநிலையுங்கண்டேன்
கையம்பரனெரித்தகாட்சிகண்டேன்
கங்கணமுன்கைக்கனலுங்கண்டே
னையம்பலவூர்திரியக்கண்டே
னன்றவன்றன்வேள்வியழித்துகந்து
வையம்பரவவிருத்தல்கண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (கூ)

கலங்கவிருவர்க்கழலாய்நீண்ட
காரணமுங்கண்டேன்கருவாய்நின்று
பலங்கடரித்துகந்தபண்புங்கண்டேன்
பாடலொலியெலாங்கூடக்கண்டே
னிலங்கைத்தலைவன்சிரங்கள்பத்து
மிறுத்தவனுக்கீந்தபெருமைகண்டேன்
வலங்கைத்தலத்துளனலுங்கண்டேன்
வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

*திருநாவுக்கரசுநாயனார், திருமறைக்காட்டினின்றும் சுவாமியின் கட்டளைப்படி அவரைத் தொடர்ந்து திருவாய்மூருக்குச் செல்லும்போது, எதிரே தோன்றிய ஒரு திருக்கோயிலில் சுவாமி மறைந்தருள, நாயனார் பின்தொடர்ந்துசென்று அவரைக் காணாமல் "அடியார்களிற் சிறந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரே திருக்கதவு திறக்கவேண்டும் என்பதை நினையாமல் திறந்து குற்றஞ்செய்த சிறியேனுக்கு ஒளிக்கலாம், ஒரு திருப்பதிகத்தின் முதற்பாட்டாலேயே அத்திருக்கதவை அடைப்பித்த அப்பிள்ளையார் இங்கே வந்திருப்பதால் அவருக்கு எப்படி ஒளிக்கலாம்" என்றார், உடனே சிவபிரான் பிள்ளையாருக்குக் காட்சிகொடுத்தருளப் பிள்ளையார் தரிசித்து நாயனாருக்குக் காட்ட நாயனார் தரிசித்து "பாடவடியார் பரவக்கண்டேன்" என்னுந் திருப்பதிகம் பாடினார்.

---

திருவாய்மூர்த்திருப்பதிகம் - ௩.

---

சுவாமி - வாய்மூர்நாதர்.
தேவி - பாலினுநன்மொழியம்மை.

---

ஆ திருப்பதிகம் - ௩0௪.

---

# ௧உ௫. திருமறைக்காடு.*

---

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

---

### திருவிராகம்.

---

பண் - நட்டபாடை. (ஆ. திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

சிலைதனைநடுவிடைநிறுவியொர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரரசுரர்களொலிசலசலகடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழவவருடல்குலைதரவதுநுகர்பவனெழின்
மலைமலிமதில்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே. (௧)

---

* திருமறைக்காடு என்பது வேதாரணியம்.

கரமுதலியவவயவமவைகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடல்வலிமிகுபுலியதளுடையின
னிரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவளர்
மரநிகர்கொடைமனிதர்கள்பயின்மறைவனமமர்தருபரமனே. (உ)

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசுவொடுமெழமுளரியொடெழு
கழைநுகர்தருகரியிரிதருகயிலையின்மலிபவனிருளுறு
மழைதவழ்தருபொழினிலவியமறைவனமமர்தருபரமனே. (௩)

நலமிகுதிருவிதழியின்மலர்நகுதலையொடுகனகியின்முகை
பலசுரநதிபடவரவொடுமதிபொதிசடைமுடியினன்மிகு
தலநிலவியமனிதர்களொடுதவமுயறருமுனிவர்கடம
மலமறுவகைமனநினைதருமறைவனமமர்தருபரமனே. (௪)

கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தவதிகுணனுயர்பசு
பதியதன்மிசைவருபசுபதிபலகலையவைமுறைமுறையுணர்
விதியறிதருநெறியமர்முனிகணனொடுமிகுதவமுயறரு
மதிநிபுணர்கள்வழிபடவளர்மறைவனமமர்தருபரமனே. (௫)

கறைமலிதிரிசிகைபடையடல்கனன்மழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடைதலைமுகிழ்மலிகணிவடமுக
முறைதருகரனுலகினிலுயரொளிபெறுவகைநினைவொடுமலர்
மறையவன்மறைவழிவழிபடுமறைவனமமர்தருபரமனே. (௬)

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
விருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே. (௭)

சனம்வெருவுறவருதசமுகனொருபதுமுடியொடுமிருபது
கனமருவியபுயநெரிவகைகழலடியிலொர்விரனிறுவின
னினமலிகணநிசிசரன்மகிழ்வுறவருள்செய்தகருணையனென
மனமகிழ்வொடுமறைமுறையுணர்மறைவனமமர்தருபரமனே. (அ)

அணிமலர்மகடலைமகனயனறிவரியதொர்பரிசினிலெரி
திணிதருதிரளுருவளர்தரவவர்வெருவுறலொடுதுதிசெய்து
பணியுறவெளியுருவியபரனவனுரைமலிகடறிரளெழு
மணிவளரொளிவெயின்மிகுதருமறைவனமமர்தருபரமனே. (௯)

இயல்வழிதரவிதுசெலவுறவினமயிலிறகுறுதழையொடு
செயன்மருவியசிறுகடமுடியடைகையர்தலைபறிசெய்துதவ
முயல்பவர்துவர்படமுடல்பொதிபவரறிவருபரனவனணி
வயலினில்வளைவளமருவியமறைவனமமர்தருபரமனே. (௧௦)

வசையறுமலர்மகணிலவியமறைவனமமர்பரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவர்கள்புகழ்வழிவளர்தரு
கிசையமர்கழுமலநகரிறைதமிழ்விரகனதுரையியல்வல
விசைமலிதமிழொருபதும்வலவருலகினிலெழில்பெறுவரே. ()

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம். (௨-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

*சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கு
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
இதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே. (௧)

சங்கந்தரளம்மவைதான்கரைக்கெற்றும்
வங்கக்கடல்சூழ்மறைககாட்டுறைமைந்தா
மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (௨)

குரவங்குருக்கத்திகள்புன்னைகண்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தலழகே. (௩)

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்த
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (௪)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
ஏனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (௫)

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுன்னென்கொ
றலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (௬)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (௭)

கலங்கொள்கடலோதமுலாவுகரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
இலங்கையுடையானடர்ப்பட்டிடரெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (௮)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
ஏனங்கழுகானவருன்னைமுனென்கொல்
வானந்தலமண்டியுங்கண்டிலாவாறே. (௯)

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிவையென்கொ
லாதரொடுதோமலர்தூற்றியவாறே. (௧0)

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

*திருமறைக்காட்டில், திருநாவுக்கரசுநாயனார் வேண்டுகோளின்பேரில், திருஞானசம்பந்தப்பிள்ளையார் "சதுரம்மறை" என்னும் திருப்பதிகம்பாட அதன்முதற்பாட்டிலேயே திருக்கதவு அடைக்கப்பட்டது.

---

பண் - பியந்தைக்காந்தாரம். (உ-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழுங்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே. (௧)

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
யானிலங்கிளரைந்துமாடுவர்பூண்பதுமரவங்
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்பத்
தேனலங்கமழ்சோலைத்திருமறைக்காடமர்ந்தாரே. (௨)

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடந்திலங்குபொன்மார்பிற்
பண்ணியாழெனமுரலும் பணிமொழியுமையொருபாகன்
றண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணிததும்பக்
கண்ணிதானுமொர்பிறையார்கலிமறைக்காடமர்ந்தாரே. (௩)

ஏழைவெண்குருகயலேயிளம்பெடைதனதெனக்கருதித்
தாழைவெண்மடற்புல்குந்தண்மறைக்காடமர்ந்தார்தா
மாழையங்கயலொண்கண்மலைமகள்கணவனதடியி
னீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. (௪)

அரவம்வீக்கியவரையுமதிர்கழறமுவியவடியும்
பரவநாஞ்செய்தபாவம்பறைதரவருளுவர்பதிதான்
மரவநீடுயர்சோலைமழலைவண்டியாழ்செயுமறைக்காட்
டிரவுமெல்லியும்பகலுமேத்துதல்குணமெனலாமே. (௫)

பல்லிலோடுகையேந்திப்பாடியுமாடியும்பலிதே
ரல்லல்வாழ்க்கையரேனுமழகியதறிவரெம்மடிகள்
புல்லமேறுவர்பூதம்புடைசெலவுழிதர்வர்க்கிடமா
மல்குவெண்டிரையோதமாமறைக்காடதுதானே. (௬)

நாகந்தான்கயிறாகநிர்வரையதற்குமத்தாகப்
பாகந்தேவரொடசுரர்படைகடலளறெழக்கடைய
வேகநஞ்செழவாங்கேவெருவொடிரிந்தெங்குமோட
வாகந்தன்னில்வைத்தமிர்தமாக்குவித்தான்மறைக்காடே. (௭)

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபெருமையையோரான்
மிக்குமேற்சென்றுமலையையெடுத்தலுமலைமகணடுங்க
நக்குத்தன்றிருவிரலாலூன்றலுநடுநடுத்தரக்கன்
பக்கவாயும்விட் டலறப்பரிந்தவன்பதிமறைக்காடே. (௮)

விண்டமாமலரோனும்விளங்கொளியரவணையானும்
பண்டுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான்
கண்டலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்ப
வண்டலங்கமழ்சோலைமாமறைக்காடதுதானே. (௯)

பெரியவாகியகுடையும்பீலியுமவைவெயிற்கரவாக்
கரியமண்டைகையேந்திக்கலலெனவுழிதருங்கழுக்க
ளரியவாகவுண்டோதுமவர்திறமொழிந்துநமமடிகள்
பெரியசீர்மறைக்காடேபேணுமின்மனமுடையீரே. (௧௦)

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமாந்தாரைக்
கையினாற்றொழுதெழுவான்காழியுண்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
பொய்யில்வானவரோடும்புகவலர்கொளவலர்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

---

பண் - சாதாரி. (௩-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

கற்பொலிசுரத்தினெரிகானினிடைமாநடமதாடிமடவா
ரிற்பலிகொளப்புகுதுமெந்தைபெருமானதிடமென்பர்புவிமேன்
மற்பொலிகலிக்கடன்மலைக்குவடெனத்திரைகொழித்தமணியை
விற்பொலிநுதற்கொடியிடைக்கணிகைமார்கவரும்வேதவனமே. (௧)

பண்டிரைபவப்புணரியிற்கனகமால்வரையைநட்டரவினைக்
கொண்டுகயிறிற்கடையவந்தவிடமுண்டகுழகன்றனிடமாம்
வண்டிரைநிழற்பொழிலின்மாதவியின்மீதணவுதென்றல்வெறியார்
வெண்டிரைகள்செம்பவளமுந்துகடல்வந்தமொழிவேதவனமே. (௨)

காரியன்மெலோதிநதிமாதைமுடிவார்சடையில்வைத்துமலையார்
நாரியொருபான்மகிழுநம்பருறைவென்பர்நெடுமாடமறுகிற்
றேறியல்விழாவினொலிதிண்பணிலமொண்படகநாளுமிசையால்
வேரிமலிவார்குழனன்மாதரிசைபாடலொலிவேதவனமே. (௩)

நீறுதிருமேனியின்மிசைத்தொளிபெறத்தடவிவந்திடபமே
யேறியுலகங்கடொறும்பிச்சைநுகரிச்சையரிருந்தபதியா
மூறுபொருளின்றமிழியற்கிளவிதேருமடமாதருடனார்
வேறுதிசையாடவர்கள்கூறவிசைதேருமெழில்வேதவனமே. (ச)

கத்திரிகைதுத்திரிகறங்குதுடிதக்கையொடிடக்கைபடக
மெத்தனையுலப்பில்கருவித்திரளலம்பவிமையோர்கள்பரச
வொத்தரமிதித்துநடமிட்டவொருவர்க்கிடமதென்பருலகின்
மெய்த்தகையபத்தரொடுசித்தர்கண்மிடைந்துகளும்வேதவனமே. (ரு)

மாலைமதிவாளரவுகொன்றைமலர்துன்றுசடைநின்றுசுழலக்
காலையிலெழுந்தகதிர்தாரகைமடங்கவனலாடுமரனார்
சோலையின்மரங்கடொறுமிண்டியினவண்டுமதுவுணடிசைசெய
வேலையொலிசங்குதிரைவங்கசுறவங்கொணரும்வேதவனமே. (சா)

வஞ்சகமனத்தவுணர்வல்லரணமன்றவியவார்சிலைவளைத்
தஞ்சகமவித்தவமரர்க்கமரனாதிபெருமானதிடமாங்
கிஞ்சுகவிதழ்க்கனிகளூறியசெவாயவர்கள்பாடல்பயில
விஞ்சகவியக்கர்முனிவக்கணநிறைந்துமிடைவேதவனமே. (எ)

முடித்தலைகள்பத்துடைமுருட்டுருவரக்கனைநெருக்கிவிரலா
லடித்தலமுன்வைத்தலமரக்கருணைவைத்தவனிடம்பலதுயர்
கெடுத்தலைநினைத்தறவியற்றுதல்கிளர்ந்துபுலவாணர்வறுமை
விடுத்தலைமதித்துநிதிநல்குமவர்மல்குபதிவேதவனமே. (அ)

வாசமலர்மேவியுறைவானுநெடுமாலுமறியாதநெறியைக
கூசுதல்செயாதவமணரொடுதேரர்குறுகாதவரனார்
காசுமணிவார்கனகநீடுகடலோடுதிரைவார்துவலைமேல்
வீசுவலைவாணரவைவாரிவிலைபேசுமெழிலவேதவனமே. (கூ.க0)

மந்தமுரவங்கடல்வளங்கெழுவுகாழிபதிமன்னுகவுணி
வெந்தபொடிநீறணியும்வேதவனமேவுசிவனின்னருளினாற்
சந்தமிவைதண்டமிழினின்னிசையெனப்பரவுபாடலுலகிற்
பந்தனுரைகொண்டுமொழிவார்கள்பயில்வார்களுயர்வானுலகமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசுநாயனார்.

---

### திருநேரிசை. (ச-ம். திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

இந்திரனோடுதேவரிருடிகளேத்துகின்ற
சுந்தரமானார்போலுந்துதிக்கலாஞ்சோதிபோலுஞ்
சந்திரனோடுகங்கையரவையுஞ்சடையுள்வைத்து
மந்திரமானார்போலுமாமறைக்காடனாரே. (க)

தேயனநாடராகித்தேவர்கட்டேவர்போலும்
பாயனநாடறுக்கும்பத்தர்கள்பணியவம்மின்
காயனநாடிகண்டங்கதனுளார்காளகண்டர்
மாயனநாடர்போலுமாமறைக்காடனாரே. (உ)

அறுமையிவ்வுலகுதன்னையாமெனக்கருதிநின்று
வெறுமையின்மனைகள்வாழ்ந்துவினைகளானவிவுணாதே
சிறுமதியரவுகொன்றைதிகழ்தருசடையுள்வைத்து
மறுமையுமிம்மையாவார்மாமறைக்காடனாரே. (௩)

கால்கொடுத்திருகையேற்றிக்கழிநிரைத்திறைச்சிமேய்ந்து
தோலபடுத்துதிரநீராற்சுவரெடுத்திரண்டுவாச
லேல்வுடைத்தாவமைத்தங்கேழுசாலேகம்பண்ணி
மால்கொடுத்தாவிவைத்தார்மாமறைக்காடனாரே. (௪)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கள்விரும்பியோதப்
பண்ணினார்கின்னரங்கள்பத்தர்கள்பாடியாடக்
கண்ணினார்கண்ணினுள்ளேசோதியாய்நின்றவெந்தை
மண்ணினார்வலஞ்செகாண்டேத்துமாமறைக்காடனாரே. (௫)

அங்கையுளனலும்வைத்தாரறுவகைச்சமயம்வைத்தார்
தங்கையில்வீணைவைத்தார்தம்மடிபரவவைத்தார்
திங்களைக்கங்கையோடுதிகழ்தருசடையுள்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (௬)

கீதராய்க்கீதங்கேட்டுக்கின்னரந்தன்னைவைத்தார்
வேதராய்வேதமோதிவிளங்கியசோதிவைத்தா
ரேதராய்நட்டமாடியிட்டமாய்க்கங்கையோடு
மாதையோர்பாகம்வைத்தார்மாமறைககாடனாரே. (௭)

கனத்தினார்வலியுடையகடிமதிலரணமூன்றுஞ்
சினத்தினுட்சினமாய்நின்றுதீயெழச்செற்றார்போலுந்
தனத்தினைத்தவிர்ந்துநின்றுதம்மடிபரவுவார்கு
மனத்தினுண்மாசுதீர்ப்பார்மாமறைக்காடனாரே. (௮)

தேசனைத்தேசன்றன்னைத்தேவர்கள்போற்றிசைப்பார்
வாசனைசெய்துநின்றுவைகலுமவணங்குமின்கள்
காசினைக்கனலையென்றுமகருத்தினில்வைத்தவர்க்கு
மாசினைத்தீர்ப்பர்போலுமாமறைக்காடனாரே. (௯)

பிணியுடையாக்கைதன்னைப்பிறப்பறுத்துய்யவேண்டிற்
பணியுடைத்தொழில்கள்பூண்டுபத்தர்கள்பற்றினாலே
துணிவுடையறக்கனோடியெடுத்தலுந்தோகையஞ்ச
மணிமுடிப்பத்திறுத்தார்மாமறைக்காடனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருநேரிசை. (௪-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

**தேரையுமேல்கடாவத்திண்ணமாத்தெழித்துநோக்கி**
**யாரையுமேலுணராவாண்மையான்மிக்கான்றன்னைப்**
**பாரையும்விண்ணுமஞ்சப்பரந்ததோண்முடியடர்த்துக்**
**காரிகையஞ்சலென்பார்கலிமறைக்காடனாரே.** (௧)

முக்கிமுன்வெகுண்டெடுத்தமுடியுடையரக்கர்கோனை
*நக்கிருந்தூன்றிச்சென்னிநாண்மதிவைத்தவெந்தை
யக்கரவாமைபூண்டவழகனார்கருத்தினாலே
தெக்குநீர்த்திரைகண்மோதுந்திருமறைக்காடனாரே. (௨)

மிகப்பெருத்துலாவமிக்கானக்கொருதேர்கடாவி
யகப்படுத்தென்றுதானுமாண்மையான்மிக்கரக்க
னுகைத்தெடுத்தான்மலையையூன்றலுமவனையாங்கே
நகைப்படுத்தருளினானூர்நான்மறைக்காடுதானே. (௩)

அந்தரந்தேர்கடாவியாரிவனென்றுசொல்லி
யுந்தினான்மாமலையையூன்றலுமொள்ளரக்கன்
பந்தமான் தலைகள்பத்தும்வாய்கள்விட்டலறிவீழச்
சிந்தனைசெய்துவிட்டார்திருமறைக்காடனாரே. (௪)

தடுக்கவுந்தாங்கவொண்ணாத்தன்வலியுடையனாகிக்
கடுக்கவோர்தேர்கடாவிக்கையிருபதுகளாலு
மெடுப்பனானென்னபண்டமென்றெடுததானையேங்க
வடுக்கவேவல்லனூராமணிமறைக்காடுதானே. (௫)

நாண்முடிக்கின்றசீரானடுங்கியேமீதுபோகான்
கோள்பிடித்தார்த்தகையான்கொடியன்மாவலியனென்று
நீண்முடிச்சடையர்சேருநீள்வரையெடுக்கலுற்றான்
றோண்முடிநெரியவைத்தார்தொன்மறைக்காடனாரே. (௬)

பத்துவாயிரட்டிக்கைகளுடையன்மாவலியனென்று
பொத்திவாய்தீமைசெய்தபொருவலியரக்கர்கோனைக்
கத்திவாய்கதறவன்றுகால்விரலூன்றியிட்டார
முத்துவாய்திரைகண்மோதுமுதுமறைக்காடனாரே. (௭)

பக்கமேவிட்டகையான்பாங்கிலாமதியனாகிப்
புக்கனன்மாமலைக்கீழ்ப்போதுமாறறியமாட்டான்
மிக்கமாமதிகள்கெட்டுவீரமுமிழந்தவாறே
நக்கனபூதமெல்லாநான்மறைக்காடனார்க்கே. (௮)

நாணஞ்சுகையனாகிநன்முடிபத்தினோடு
பாணஞ்சுமுன்னிழந்துபாங்கிலாமதியனாகி
நீணஞ்சுதானுணராநின்றெடுத்தானையன்று
வேணஞ்சுகைகள்செய்தாரெழின்மறைக்காடனாரே. (௯)

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கையூடத்
தென்கையான்றேர்கடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கைமாநரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
வங்கைவாளருளினானூரணிமறைக்காடுதானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* "பிக்கிரு" என்றும் பாடம்.

## திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஓதமால்கடல்பரவியுலகெலா
மாதரார்வலங்கொண்மறைக்காடரைக்
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (க)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்கந்தானுடைமாமறைக்காடரோ
வார்க்குங்காண்பரியீரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநும்பணிசெய்யிலே. (உ)

புன்னைஞாழல்புறணியருகெலா
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
வன்னமென்னடையாளையொர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே. (ஙு)

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியு
மிட்டமாகவிருக்குமிடமிதே. (ச)

நெய்தலாம்பனிறைவயல்சூழ்தரு
மெய்யினார்வலங்கொண்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டீரகவர்புன்சடைப்
பைதலவெண்பிறைபாம்புடன்வைப்பதே. (ரு)

துஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
வஞ்சின்றிவலங்கொண்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணர்ந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (சு)

விண்ணுளார்விரும்பியெதிர்கொள்ளவே
மண்ணுளார்வணங்கும்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (எ)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
வுருவினாளுமையாளையொர்பாகமாய்
மருவினாய்கங்கையைச்சென்னிதன்னிலே. (அ)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமார்வலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
யங்கையில்லனலேந்தலழகிதே. (கூ)

குறைக்காட்டான்விட்டதேர்குத்தமாமலை
யிறைக்காட்டியெடுத்தான்றலையீரைந்து
மறைக்காட்டானிறையூன்றலும்வாய்விட்டா
னிறைக்காட்டாயெம்பிரானுனையேத்தவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

திருக்குறுந்தொகை. (ரு-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

*பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (க)

ஈண்டுசெஞ்சடையாகத்துளீசரோ
மூண்டகார்முகிலின்முறிக்கண்டரோ
வாண்டுகொண்டநீரேயருள்செய்திடு
நீண்டமாக்கதவின்வலிநீக்குமே. (உ)

அட்டமூர்த்தியதாகியவப்பரோ
துட்டர்வான்புரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசென்னிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிம்மினே. (௩)

அரியமாமறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே. (௪)

மலையினீடுருக்கும்மறைக்காடரோ
கலைகள்வந்திறைஞ்சுங்கழலேத்தரோ
விலையின்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே. (ரு)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
வார்க்குங்காண்பரியீரடிகேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே. (௬)

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
வந்தமில்லியணிமறைக்காடரோ
வெந்தைநீயடியார்வந்திறைஞ்சிட
விந்தமாக்கதவம்பிணிநீக்குமே. (எ)

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தகுழகரோ
வேறதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே. (அ)

சுண்ணவெண்பொடிப்பூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
வண்ணலாகியணிமறைக்காடரோ
திண்ணமாக்கதவந்திறப்பிம்மினே. (௯)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீரெம்பெருமானீரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

* திருநாவுக்கரசுநாயனாரும், திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் பல ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருமறைக்காட்டை அடைந்து, ஆலயத்துட்சென்று வலம் வந்து, வேதங்கள் அருச்சித்துத திருக்காப்புச்செய்த திருக்கதவுக்கு முன்வந்து பிள்ளையார், நாயனாரைநோக்கி "அப்பரே, நாம் சுவாமியை அபிமுகத் திருவாயில் வழியே சென்று தரிசிக்க திருக்கதவு திறக்கும்படி திருப்பதிகம்பாடும்" என்றார். நாயனார் "பண்ணினேர் மொழியாள்" என்னும் திருப்பதிகம்பாட கதவு திறக்கப்படாமல் தாழ்த்ததுகண்டு, "இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கினார். உடனே திருக்கதவு திறக்கப்பட்டது.

---

திருத்தாண்டகம். (சு-ம. திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

தூண்டுசுடரனையசோதிகண்டாய்
தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய்
காண்டற்கரியகடவுள்கண்டாய்
கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய்
வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்
மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லா
மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௧)

கைகிளரும்வீணைவலவன்கண்டாய்
காபாலிகண்டாய்திகழுஞ்சோதி
மெய்கிளருஞானவிளக்குக்கண்டாய்
மெய்யடியாருள்ளத்துவித்துக்கண்டாய்
பைகிளருநாகமசைத்தான்கண்டாய்
பராபரன்கண்டாய்பாசூரான்கண்டாய்
வைகிளருங்கூர்வாட்படையான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௨)

சிலந்திக்கருண்முன்னஞ்செய்தான்கண்டாய்
திரிபுரங்கடீவாய்ப்படுத்தான்கண்டாய்
நிலந்துக்கநீர்வளிதீயானான்கண்டாய்
நிருபியருபியுமாய்நின்றான்கண்டாய்
சலந்துக்கச்சென்னிச்சடையான்கண்டாய்
தாமரையான்செங்கண்மாறானேகண்டாய்
மலந்துக்கமால்விடையொன்றூர்ந்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௩)

கள்ளிமுதுகாட்டிலாடிகண்டாய்
காலனையுங்காலாற்கடிந்தான்கண்டாய்
புள்ளியுழைமானின்றோலான்கண்டாய்
புலியுரிசேராடைப்புனிதன்கண்டாய்
வெள்ளிமிளிர்பிறைமேற்சூடிகண்டாய்
வெண்ணீற்றான்கண்டாய்நஞ்செந்தின்மேய
வள்ளிமணாளற்குத்தாதைகண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௪)

மூரிமுழங்கொலிநீரானான்கண்டாய்
முழுத்தழல்போன்மேனிமுதல்வன்கண்டா
யேரிநிறைந்தனையசெல்வன்கண்டா
யின்னடியார்க்கின்பம்விளைப்பான்கண்டா
யாரியன்கண்டாய்தமிழன்கண்டா
யண்ணாமலையுறையுமண்ணல்கண்டாய்
வாரிமதகளிறேபோல்வான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௫)

ஆடன்மால்யானையுரித்தான்கண்டா
யகத்தியான்பள்ளியமர்ந்தான்கண்டாய்
கோடியான்கண்டாய்குழகன்கண்டாய்
குளிராரூர்கோயிலாக்கொண்டான்கண்டாய்
நாடியநன்பொருள்களானான்கண்டாய்
நன்மையோடிம்மைமற்றும்மையெல்லாம்
வாடியவாட்டந்தவிர்ப்பான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௬)

வேலைசேர்நஞ்சமிடற்றான்கண்டாய்
விண்டடவுபூங்கயிலைவெற்பன்கண்டா
யாலைசேர்வேள்வியழித்தான்கண்டா
யமரர்கட[illegible]ல்கண்டாய்

பானெய்சேரானஞ்சுமாடிகண்டாய்
பருப்பதத்தான்கண்டாய்பரவைமேனி
மாலையோர்கூறுடையமைந்தன்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (எ)

அம்மைபயக்குமமிர்துகண்டா
யந்தேன்றெளிகண்டாயாக்கஞ்செய்திட்
டிம்மைபயக்குமிறைவன்கண்டா
யென்னெஞ்சேயுன்னிலினியான்கண்டாய்
மெய்ம்மையேஞானவிளக்குக்கண்டாய்
வெண்காடன்கண்டாய்வினைகள்போக
மம்மரறுக்குமருந்துகண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே (அ)

மூலநோய்தீர்க்குமுதலவன்கண்டாய்
முத்தமிழுநான்மறையுமானான்கண்டா
யாலின்கீழ்நால்வர்க்கறததான்கண்டா
யாதியுமந்தமுமானான்கணடாய்
பாலவிருத்தனுமானான்கண்டாய்
பவளத்தடவரையேபோல்வான்கண்டாய்
மாலைசேர்கொன்றைமலிந்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௯)

அயனவனுமாலவனுமறியாவண்ண
மாரழலாய்நீண்டுகந்தவண்ணல்கண்டாய்
துயரிலங்கைவேந்தன்றுளங்கவன்று
சோதிவிரலாலுறவைத்தான்கண்டாய்
பெயரவற்குப்பேரருள்கள்செய்தான்கண்டாய்
பேரும்பெரும்படையோடீந்தான்கண்டாய்
மயருறுவல்வினைநோய்தீர்ப்பான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம் (எ-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

யாழைப்பழித்தன்னமொழிமங்கையொருபங்கன்
பேழைச்சடைமுடிமேற்பிறைவைத்தானிடம்பேணிற்
றாழைப்பொழிலூடேசென்றுபூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங்குண்ணும்மறைக்காடே. (க)

சிகரத்திடையிளவெண்பிறைவைத்தானிடந்தெரியின்
முகரத்திடைமுத்தின்னொளிபவளத்திரளோதத்
தகரத்திடைதாழைத்திரண்ஞாழற்றிரணீழன்
மகரத்தொடுசுறவங்கொணர்ந்தெற்றும்மறைக்காடே. (௨)

அங்கங்களுமறைநான்குடன்விரித்தானிடமறிந்தோந்
தெங்கங்களுநெடும்பெண்ணையும்பழம்வீழ்மணற்படப்பைச்
சங்கங்களுமிலங்கிப்பியும்வலம்புரிகளுமிடறி
வங்கங்களுமுயர்கூம்பொடுவணங்கும்மறைக்காடே. (௩)

நரைவிரவியமயிர்தன்னொடுபஞ்சவடிமார்ப
னுரைவிரவியவுத்தமனிடமுணரல்லுறுமனமே
குரைவிரவியகுலசேகரகொண்டற்றலைவிண்ட
வரைபுரைவனதிரைபொருதிழிந்தெற்றும்மறைக்காடே. (௪)

சங்கைப்படநினையாதெழுநெஞ்சேதொழுதேத்தக்
கங்கைச்சடைமுடியுடையவர்க்கிடமாவதுபரவை
யங்கக்கடலருமாமணியுந்திக்கரைக்கேற்ற
வங்கத்தொடுசுறவங்கொணர்ந்தெற்றும்மறைக்காடே. (௫)

அடல்விடையினன்மழுவாளினனலராலணிகொன்றைப்
படருஞ்சடைமுடியுடையவர்க்கிடமாவதுபரவைக்
கடலிடையிடைகழியருகினிற்கடிநாறுதண்கைதை
மடலிடையிடைவெண்குருகெழுமணிநீர்மறைக்காடே. (௬)

முளைவளரிளமதியுடையவர்முன்செய்தவல்வினைகள்
களைகளைந்தெனையாளல்லுறுகண்டன்னிடஞ்செந்நெல
வளைவிளைவயற்கயல்பாய்தருகுணவார்மணற்கடல்வாய்
வளைவளையொடுசலஞ்சலங்கொணர்ந்தெற்றும்மறைக்காடே. (௭)

நலம்பெரியனசுரும்பார்ந்தனநங்கோனிடமறிந்தோங்
கலம்பெரியனசாருங்கடற்கரைபொருதிழிகங்கைச்
சலம்புரிசடைமுடியுடையவர்க்கிடமாவதுபரவை
வலம்புரியொடுசலஞ்சலங்கொணர்ந்தெற்றும்மறைக்காடே. (௮)

குண்டாடியுஞ்சமணாடியுங்குற்றுடுக்கையர்தாமுங்
கண்டார்கண்டகாரணம்மவைகருதாதுகைதொழுமி
னெண்டோளினன்முக்கண்ணினனேழிசையினனறுகால்
வண்டாடுதண்பொழில்சூழ்ந்தெழுமணிநீர்மறைக்காடே. (௯)

பாரூர்பலபுடைசூழ்வளவயலநவலர்வேந்தன்
வாரூர்வனமுலையாளுமைபங்கன்மறைக்காட்டை
யாரூரனதமிழ்மாலைகள்பாடும்மடித்தொண்டர்
நீரூர்தருநிலனோடுயர்புகழாகுவர்தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திருமறைக்காட்டுத்திருப்பதிகம் - ௧௰.

சுவாமி - வேதாரணியநாதர்.
தேவி - யாழைப்பழித்தமொழியம்மை.

ஆ திருப்பதிகம் - ௩௧௪.

# ௧௨௬. திருஅகத்தியான்பள்ளி.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் - காந்தாரம். (௨-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வாடியவெண்டலைமாலைசூடிமயங்கிரு
ணீடியர்கொள்ளிவிளக்குமாகநிவந்தெரி
யாடியவெம்பெருமானகத்தியான்பள்ளியைப்
பாடியசிந்தையினர்கட்கில்லையாம்பாவமே. (௧)

துன்னங்கொண்டவுடையான்றுதைந்தவெண்ணீற்றினன்
மன்னுங்கொன்றைமதமத்தஞ்சூடினன்மாநக
ரன்னந்தங்குபொழில்சூழகத்தியான்பள்ளியை
யுன்னஞ்செய்தமனத்தார்கடம்வினையோடுமே. (௨)

உடுத்ததுவும்புலித்தோல்பலிதிரிந்துண்பதுங்
கடுத்துவந்தகழற்காலன்றன்னையுங்காலினா
லடர்த்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
றொடுத்ததுவுஞ்சரமுப்புரந்துகளாகவே. (௩)

காய்ந்ததுவுமன்றுகாமனைநெற்றிக்கண்ணினாற்
பாய்ந்ததுவுங்கழற்காலனைப்பண்ணினன்மறை
யாய்ந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னேய்ந்ததுவுமிமவான்மகளொருபாகமே. (௪)

போர்த்ததுவுங்கரியின்னுரிபுலித்தோலுடை
கூர்த்ததோர்வெண்மழுவேந்திக்கோளரவம்மரைக்
கார்த்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
பார்த்ததுவும்மரணம்படரெரிமூழ்கவே. (ரு)

தெரிந்ததுவுங்கணையொன்றுமுப்புரஞ்சென்றுட
னெரிந்ததுவுமுன்னெரிலார்மலருறைவான்றலை
யரிந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
புரிந்ததுவும்முமையாளோர்பாகம்புனைதலே. (சா)

ஓதியெல்லாமுலகுக்கொரொண்பொருளாகிமெய்ச்
சோதியென்றுதொழுவாரவர்துயர்தீர்த்திடு
மாதியெங்கள்பெருமானகத்தியான்பள்ளியை
நீதியாற்றொழுவாரவர்வினைநீங்குமே. (எ)

செறுத்ததுவுந்தக்கன்வேள்வியைத்திருந்தார்புர
மொறுத்ததுவுமொளிமாமலருறைவான்சிர
மறுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
ணிறுத்ததுவுமரக்கன்றன்றோள்களிருபதே. (அ)

சிரமுநல்லமதிமத்தமுந்திகழ்கொன்றையு
மரவமல்குஞ்சடையானகத்தியான்பள்ளியைப்
பிரமனோடுதிருமாலுந்தேடியபெற்றிமை
பரவவல்லாரவர்தங்கண்மேல்வினைபாறுமே. (கூ)

செந்துவராடையினாரும்வெற்றரையேதிரி
புந்தியிலார்களும்பேசும்பேச்சவைபொய்ம்மொழி
யந்தணனெங்கள்பிரானகத்தியான்பள்ளியைச்
சிந்திமினும்வினையானவைசிதைந்தோடுமே. (கo)

ஞாலமல்குந்தமிழ்ஞானசம்பந்தன்மாமயி
லாலுஞ்சோலைபுடைசூழகத்தியான்பள்ளியுட்
சூலநல்லபடையானடிதொழுதேத்திய
மாலைவல்லாரவர்தங்கண்மேல்வினைமாயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - அகத்தீசுவரர்.
தேவி - பாகம்பிரியாளம்மை.

---

ஆ௨ திருப்பதிகம் - ஈ௪௫.

# ௧௨௭. திருக்கோடிக்குழகர்.

## சுந்தரமூர்த்திநாயனர்.

பண் - கொல்லி (௭-ம். திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

கடிதாய்க்கடற்காற்றுவந்தெற்றக்கரைமேற்
குடிதானயலேயிருந்தாற்குற்றமாமோ
கொடியேன்கண்கள்கண்டனகோடிகுழகீ
ரடிகேளுமக்கார்துணையாகவிருந்தீரே (௧)

முன்றான்கடனஞ்சமுண்டவதனலோ
பின்றான்பரவைகருபகாரஞ்செய்தாயோ
குன்றாப்பொழில்சூழ்தருகோடிக்குழகா
வென்றான்றனியேயிருந்தாயெம்பிரானே. (௨)

மத்தம்மலிசூழ்மறைக்காடதன்றென்பாற்
பத்தர்பலர்பாடவிருந்தபரமா
கொத்தார்பொழில்சூழ்தருகோடிக்குழகா
வெற்றாற்றனியேயிருந்தாயெம்பிரானே. (௩)

காடேன்மிகவாலிதுகாரிகையஞ்சக்
கூடிப்பொந்திலாந்தைகள்கூகைகுழற
வேடித்தொண்டர்சாலவுந்தீயர்சழக்கர்
கோடிக்குழகாவிடங்கோயில்கொண்டாயே (௪)

மையார்தடங்கண்ணிபங்காகங்கையாளு
மெய்யாகத்திரிந்தனள்வேறிடமில்லை
கையார்வளைக்காடுகாளோடுமுடனாய்க்
கொயயாரபொழிற்கோடியேகோயில்கொண்டாயே (௫)

அரவேரல்குலாளையொர்பாகமமர்ந்து
மரவங்கமழ்மாமறைக்காடதன்றென்பாற்
குரவம்பொழில்சூழ்தருகோடிக்குழகா
விரவேதுணையாயிருந்தாயெம்பிரானே. (௬)

பறையுங்குழலும்மொலிபாடலியம்ப
வறையுங்கழலார்க்கநின்றாடுமமுதே
குறையாப்பொழில்சூழ்தருகோடிக்குழகா
விறைவாதனியேயிருந்தாயெம்பிரானே. (௭)

ஒற்றியூரென்றவூனத்தினாலதுதானோ
வற்றப்படவாரூரதென்றகன்றாயோ
முற்றாமதிசூடியகோடிக்குழகா
வெற்றாற்றனியேயிருந்தாயெம்பிரானே. (அ)

நெடியானொடுநான்முகனும்மறிவொண்ணாப்
படியான்பலிகொள்ளுமிடங்குடியில்லை
கொடியார்பலர்வேடர்கள்வாழுங்கரைமே
லடிகேளன்பதாயிடங்கோயில்கொண்டாயே. (௯)

பாரூர்மலிசூழ்மறைக்காடதன்றென்பா
லேரார்பொழில்சூழ்தருகோடிக்குழகை
யாரூரனுரைத்தனபத்திவைவல்லார்
சீரூர்சிவலோகத்திருப்பவர்தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமி - அமிர்தகடநாதர்.
தேவி - மைபார்தடங்கண்ணியம்மை.

---

ஆ_ திருப்பதிகம் - ௩௧௬.

---

சோழநாட்டில் காவிரியாற்றுக்குத் தென்கரையிலுள்ள சிவஸ்தலங்கள் நூற்றிருபத்தேழும் முற்றின. இவற்றுள், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த பதிகம், ௧௪௯ - க்குத் தலம் ௧௦௦. திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்த பதிகம், ௧௩௨ - க்குத் தலம் ௬௯. சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த பதிகம், ௩௫ - க்குத் தலம் ௨௭.

சோழநாட்டில் காவிரிக்கு வடகரை தென்கரையில்
உள்ள சிவஸ்தலங்கள் ௧௯௦-க்கு
மூவர் திருப்பதிகம் - ௫௫௫.

உ

திருச்சிற்றம்பலம்

# தேவாரம்.

## ஸ்தலமுறை.

மூன்றாம் பாகம்.

ஈழ முதலிய நாடுஸ்தலங்கள்

## ௧. திருக்கோணமலை.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண் புறநீர்மை (௩-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே (௧)

கடிதெனவந்தகரிதனையுரித்தவ்வுரிமேனிமேற்போர்ப்பர்
பிடியனநடையாள்பெய்வளைமடந்தைபிறைநுதலவளொடுமுடனாய்க்
கொடிதெனக்கதறுங்குரைகடல்சூழ்ந்துகொள்ளமுனித்திலஞ்சுமந்து
குடிதனைநெருங்கிப்பெருக்கமாய்த்தோன்றுங்கோணமாமலையமர்ந்தாரே. ()

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடைவைத்தார்
கனித்திளந்துவர்வாய்க்காரிகைபாகமாகமுன்கலந்தவர்மதின்மேற்
றனித்தபேருருவவிழித்தழனாகந்தாங்கியமேருவெஞ்சிலையாக்
குனித்ததோர்வில்லார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே (௩)

பழித்திளங்கங்கைசடைமுடிவைத்துப்பாங்குடைமதனனைப்பொடியா
விழித்தவன்றேவிவேண்டமுன்கொடுத்தவிமலனார்கமலமார்பாதர்
தெழித்துமுன்னரற்றுஞ்செழுங்கடற்றரளஞ்செம்பொனுமிப்பியுஞ்சுமந்து
கொழித்துவன்றிரைகள்கரையிடைச்சேர்க்குங்கோணமாமலையமர்ந்தாரே

தாயினுநல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள்
வாயினுமனத்துமருவிநின்றகலாமாண்பினர்காண்பலவேடர்
நோயிலும்பிணியுந்தொழிலர்பானீக்கிநுழைதருநூலினர்ஞாலங்
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே (௫)

பரிந்துநன்மனத்தாலவழிபடுமாணிதன்னுயிாமேலவருங்கூற்றைத்
திரிநதிடாவண்ணமுதைத்தவற்கருளுஞ்செமமையாாநமமையாளுடையாா
விரிநதுயாமெளவனமாதவிபுனனைவேஙகைவணசெருநதிசமபகததின்
குருநதொடுமுலலைகொடிவிடுமபொழிலசூழகோணமாமலையமாநதாரே.சு,எ

எடுத்தவன்றருக்கையிழித்தவாவிரலாலேததிடவாததமாமபேறு
தொடுத்தவாசெலவநதோன்றியபிறபபுமிறபபறியாதவாவேள்வி
தடுத்தவாவனபபாலவைத்ததோாகருணைதனனருடபெருமையும்வாழ்வுங
கொடுத்தவாவிருமபுமபெருமபுகழாளாகோணமாமலையமாநதாரே. (அ)

அருவராதொருகைவெணடலையேநதியகநதொறுமபலியுடனபுகக
பெருவராயுறையுநீாமையாசீாமைபபெருநகடலவணணனுமபிரம
னிருவருமறியாவணணமொளளெரியாயுயாநதவாபெயாநதனனமாறகுங்
குருவராய்நினறாாகுரைகழலவணஙககோணமாமலையமாநதாரே (கூ)

நின்றுணுஞ்சமணுமிருநதுணுநதேருநெறியலாதனபுறங்கூற
வெனறுநஞ்சுணணுமபரிசினரொருபானமெலலியலொடுமுடனாகித
துன்றுமொணபவ்வமவ்வலுஞ்சூழ்நதுதாழ்நதுறுதிரைபலமோதிக
குன்றுமொணகானலவாசமவநதுலவுஙகோணமாமலையமாநதாரே. (க0)

குற்றமிலாதார்குரைகடல்சூழ்நதகோணமாமலையமாநதாரைக்
கற்றுணாகேள்விக்காழியாபெருமானகருததுடைஞானசமபநத
னுற்றசெநதமிழாாமாலையீரைநதுமுரைபபவாகேடபவருயாநதோா
சுற்றமுமாகித்தொலவினையடையாாதோனறுவாவானிடைபபொலிநதே. ()

திருசசிறறமபலம.

சுவாமி - கோணேசுரா. தேவி - மாதுமையாள.

## உ. திருக்கேதீச்சரம்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனா.

பண-நட்டராகம (உ-ம திருமுறை )

திருசசிறறமபலம.

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியமபாற
பொருதுமூவெயிலசெறறவனபற்றிநினறுறைபதியெநநாளுங
கருதுகினறவூாகனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோடடங
கருதநினறகேதீச்சரங்கைதொழககடுவினையடையாவே. (க)

பாடல்வீணையர்பலபலசரிதையரெருதுகைததருநட்ட
மாடலபேணுவரமாாகள்வேணடநஞ்சுண்டிருள்கண்டதத
ரீடமாவதுவிருஙகடற்கரையினிலெழிறிகழ்மாதோட்டங்
கேடிலாதகேதீச்சரநதொழுதெழக்கெடுமிடர்வினைதானே. (உ)

பெண்ணொருபாகத்தாபிறைதவழ்சடையினரறைகழலசிலம்பார்க்கச்
சுணணமாதரித்தாடுவாபாடுவாரகநதொறுமிடுபிச்சைக்
குண்ணலாவதோரிச்சையிலுழலபவருயாதருமாதோட்டத்
தணணனணணுகேதீசசரமடைபவாககருவினையடையாவே. (௩)

பொடிகொண்மேனியாபுலியதளரையினாவிரிதருகாரதேர்தும
வடிகொணமூவிலைவேலினாநூலினாமறிகடனமாதோட்டத
தடிகளாதரிததிருநதகேதீசசரமபரிநதசிநதையராகி
முடிகளசாயததடிபேணவலலாதமமேனமொயததெழுமவினைபோமே. (௪)

நலலராற்றவுஞானநனகுடையாதமமடைநதவாக்கருளீய
வலலாபாாமிசைவானபிறபபிறபபிலாமலிகடனமாதோடடத்
தெலலையிலபுகழெநதைகேதீசசரமிராபபகனினைநதேததி
யலலலாசறுததரனடியிணைதொழுமனபராமடியாரே (௫)

பேழைவாாசடைபபெருநதிருமகடனைபபொருநதவைததொருபாக
மாழைபஙகயறகணணிபாலருளியபொருளினாகுடிவாழககை
வாழையமபொழினமநதிகளகளிபபுறமருவியமாதோடடக
கேழலவெணமருபபணிநதநீணமாாபாகேதீசசரமபிரியாரே (௬)

பணடுநாலவருககறமுரைததருளிபபலவுலகினிலுயிாவாழக்கை
கணடநாதனாகடலிடஙகைதொழககாதலிததுறைகோயில
வணடுபணசெயுமாமலாபபொழினமஞைநடமிடுமாதோடடந
தொணடாநாடொறுநதுதிசெயவருளசெயகேதீசசரமதுதானே. (௭)

தெனனிலங்கையாகுலபதிமலைநலிநதெடுததவனமுடிதிணடோ
டனனலஙகெடவடாததவறகருளசெயததலைவனாகடலவாயப
பொனனிலஙகியமுததுமாமணிகளுமபொருநதியமாதோடடத
துனனியனபொடுமடியவாிறைஞசுகேதீச்சரததுள்ளாரே (௮)

பூவுளானுமபபொருகடலவணணனுமபுவியிடநதெழுநதோடி
மேவிநாடிநுனனடியிணைகாணகிலாவிததகமெனனுகு
மாவுமபூகமுஙகதலியுநெருஙகுமாதோடடநனனகாமனனித
தேவிதனனொடுநதிருநதுகேதீசசரததிருநதவெமபெருமானே. (௯)

புததராய்சசிலபுனைதுகிலுடையவாபுறனுரைசசமணாத
ரெததராகினறுணபவரியமபியவேழைமைகேளேனமின
மத்தயானையைமறுகிடவுரிசெய்துபோாததவாமாதோடடத
தத்தாமன்னுபாலாவியினகரையிறகேதீசசரமடைமினனே (௧௦)

மாடெலாமணமுரசெனக்கடலினதொலிகவாமாதோட்டத
தாடலேறுடையணணலகேதீச்சரததடிகளையணிகாழி
நாடுளாக்கிறைஞானசமபநதனசொனவினறெழுபாமாலை
பாடலாயினபாடுமினபத்தாகள்பரகதிபெறலாமே. (௧௧)

திருச்சிறறமபலம.

